# பட்டிணத்தார் பாடல்

## மூலமும்

## ஞானார்த்த தத்வ தீப உரையும்.



விற்குமிடம்

சிவநேசன் அண்ட் கோ:

35. பாரிஸ் வெங்கிடாசல ஐயர் தெரு,

மண்ணடி, சென்னை.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பட்டினத்துப்பிள்ளையார்

அருளிச்செய்த திருப்பாடற்றிரட்டும்,

## புலம்பல் - மூலமும்.

பத்திரகிரியார் புலம்பல் - மூலமும்,

ஞானார்த்த தத்வதீபவுரையும்

அடங்கியிருக்கின்றன.

இதற்கு

மதுரை தமிழ்சங்கத்து மகாவித்வான் சித்தாந்தசரபம்

அஷ்டாவதானம்

பூவை - கலியாணசுந்தர முதலியார்

இயற்றியதை

K. அருணகிரி முதலியாரால்

சென்னை.

'பேபி' அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

1929.

இதன் விலை] [ரூபா 2—0—0

# ரிஜிஸ்தர் அறிவிப்பு.

தவராஜ சிங்கமாகிய பட்டினத்துச்சுவாமிகள் திருப்பாடற்றிரட்டு, புலம்பல் முதலியவற்றிற்கும், திருவருட்பெருஞ் செல்வராகிய பத்திரகிரியார் புலம்பலுக்கும் அவ்வாசிரியர்களின் இருதயத்துண்மை அவர்கள் திருவடித்தியானத்தால் திருவருளை முன்னிட்டுணர்ந்து, சுத்தாத்துவித சித்தாந்தவைதிக சமயவுண்மையினைத் தெரிவிக்கவந்த சிவஞானபோதமாகி மெய்கண்ட சாஸ்திரக் கருத்துக்கிணங்க மதுரைத்தமிழ்சங்கத்து மகாவித்துவான் சித்தாந்தசரபம் அஷ்டாவதானம் பூவை-கலியாணசுந்தர முதலியாரவர்களால் ஞானார்த்த தத்வதீபவுரையென வொன்றெழுதி, சென்னை கன்னிபுத்தூர் - அருணகிரி முதலியாரவர்கட்குச் சுதந்தரமாகக் கொடுக்கப்பட்டது. ஷை கே. அருணகிரி முதலியார் பொருளுதவிச்செய்து அச்சிட்டு 187-வது வருஷத்திய 25-வது ஆக்டின் 20-வது பிரிவின் 6-வது விதியின் பிரகாரம் இந்நூலை இங்கிலீஷ் இலாகாவில் கெவர்மெண்ட்டு சட்டப்படிக்கு ரிஜிஸ்டர் செய்திருக்கின்றனர். ஆகையால் இந்நூலுக்கு உடையவராகிய அவரது உத்தரவின்றி இதை ஒருவரும் அச்சிடலாகாது. அப்படி அச்சிட்டால் அதினாலுண்டாகும் நஷ்டத்தை வசூல் செய்யப்படும்.

இங்ஙனம்:

**கே. அருணகிரி முதலியார்.**

நெ. 31, வடமலை மேஸ்திரி தெருவு,

சௌகார்பேட்டை போஸ்டு, சென்னை.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பட்டினத்துப்பிள்ளையார்

# மான்மிய சங்கிரகம்.

கல்யாண சுந்தரகுண சம்பன்னரான சிவபெருமான் ஒருகாலத்
தில் அளகேசனாகிய தமது தோழன் வேண்டுகோளுக்கிரங்கி, அனாதி
மல பெத்தர்களாகிய ஆன்மகோடிகள் உய்யுமாறு திருவுளங்கொண்டு
தென்தேயநோக்கி. நித்தியமங்கள சொரூபியாகிய பார்வதியாருடன்
தருமவிடைமேலெழுந்தருளி, பற்பலதேவர்கள் சூழ்ந்துவரத் திருக்
கைலாயித்தினை விட்டு நீங்கி, காசி முதலிய தமது திவ்யக்ஷேத்திரங்
களைக் கடைக்கணித்துக்கொண்டு திருக்காவிரிப்பூம் பட்டினத்திற்குச்
சமீபித்தருளினர்.

அப்பட்டினத்தில் நஞ்சமலர்நீல கண்டனுக்குகந்த சைவாசா
ரதுல்யர்கள் நிறையப்பெற்றுச் சிவமணம் வீசிக்கொண் டிருத்தலைக்
கண்ட குபேரன் அப்பட்டினத்தினைவிட்டு நீங்க மனமெழாது திகைக்
கையில் அஃதுணர்ந்த கருணாநிதியாகிய கண்ணுதற்பெருமான்
குபேரனைநோக்கி, "நீ இப்பட்டினத்தில் விருப்புற்றனை யாகலின் நீ
யிவ்விடத்திற் பிறக்கக்கடவாயென்றனர்."

அக்கட்டளையைச் சிரமேற்கொண்டு திடுக்கிட்டு மனங்கலங்கிச் சிவபெருமானை வணங்கி ஐயா! அடியேன் தேவரீர் ஆஞ்ஞையின்படி இப்படினத்திற் பிறந்து வளர்கையில் மேலும் மேலும் பிறவிக்கடலில் ஆழாதவண்ணம் தடுத்தாட் கொண்டருளவேண்டும் என்று கேட்டுக்கொள்ள பெருமான் அங்ஙனமே யாகுகவெனத் திருவாய் மலர்ந்தருளி வெள்ளியங்கிரிக்கு எழுந்தருளினர்.

பின்னர் குபேரன் அப்பட்டினத்துச்சிவநேசச் செல்வராகிய சிவநேசகுப்தருக்கும் ஞானகலை என்பவருக்கும் சற்புத்திரராக அவதாரஞ்செய்து திருவெண்காடர் என்னும் பிள்ளைத்திருநாமம் பெற்று வவர்ந்து வருகையில், தனது ஐந்தாம் வயதில் தந்தையாகிய சிவசாம்பிராச்சிய மடையத் தாயாருடனிருந்துகொண்டு சிறுபிராயத்திற்றானே கல்வித்திரம்பெற்றுச் சிவசாஸ்திரவுணர்ச்சியுற்றுப் பிறவிக்கஞ்சிப் பெரிதும் பெருமானைச் சிந்தித்துக்கொண்டிருக்கையில் ஒருநாள் கண்ணுதற்பெருமான் ஒரு வேதியர் வடிவங்கொண்டு அவர் கனவிற் றோன்றி "குழந்தாய்" நாளையதினம் திருவோண நட்சத்திரமும் பிரதோஷமும் கூடிய சோமவாரச் சுபத்தினமாக விருத்தலின் திருவெண்காட்டினையடைந்து சிவதீட்சை பெற்றுவரக்கடவா" யென்றனர். கனவினின்று நீங்கி எழுந்து தனது கனவினைத் தாயாருக்குத் தெரிவித்து அவ்வம்மையார் சம்மதத்துடன் அவ்வெண்காட்டினையடைந்து ஆலயத்திற் பிரவேசித்தமாத்தில் கனவிற்கண்ட வேதியரே எதிர் வந்து ஆசீர்வதித்து சிவதீட்சை செய்து, விநாயகமூர்த்தியும், ஸ்படிகலிங்கமும் அமைந்த வொருதங்கப் பெட்டகத்தினை யீந்தருளவேற்று அவ்வாசிரியர் கட்டளையின்படி அம்மூர்த்திகளைப் பூசித்து ஆன்மார்த்த மூர்த்திகளாகக்கொண்டு, எண்ணிறந்த சிறனடியார்கட்கு மகேச்சுரபூசைசெய்வித்து அவ்வடியார்கட்கு வேண்டிய திரவி



சிவசருமரும் சுசீலையும சிவபிராஞகிய!குழந்தையைக்காணுதல்.

யமும் அபாரமாகக் கொடுத்துவரப் பின்னர் பொருளின்மையால் அக் குறிப்பைபத்தனது தாயாருக்குத் தெரிவித்து வருந்துகையில், அன்றிரவு அவர் கனவில் சிவபெருமான் எழுந்தருளி "அன்ப! நாமில்லத்தில் வேண்டிய திரவியம் வைக்கப்பட்டிருக்கிறது. அழைப்பித்துநின் குறையை முடிம்பிக்க" என்றமாத்திரத்தில் கனவினின்றும் நீங்கிக் களிப்புற்று அங்ஙனமே பொருளை யழைப்பித்து வேண்டிய வளவுசிவ நேசச்செல் வர்கட்கு அளித்துக் காவிரிப்பூம் பட்டினந் திரும்பிவந்து வாழ்ந்து வருகையில், தனது பதினாறுவது வயதில் அப்பட்டினத்திலேயே தனது மரபினுக்கொத்த சிவசிதம்பர செட்டியாருக்கும் சிவகாமியம் மைக்கும் பிறந்த என்னும்சிவகலை பெண்மணியை விவாகம் செய்து கொண்டு இல்லறதருமத்திலிருந்து தனது குலத்தொழிலை விருத்திசெய்து பட்டினத்துச் செட்டியார் என யாரு மழைக்கத்தகுந்த சிறப்புப்பெயருடன் வாழ்ந்து வருகையில் முப்பது வயது வரையில் புத்திர சம்பத்தின்றி யிருப்பதையுணர்ந்து திருவிடை மருதூர்ப் பெருமானை வணங்கிப் பலவிரத மியற்றி வருவாராயினர்.

இங்ஙதம் நிகழுகையில், திருவிடை மருதூர் நன்முலையாகி சமேதராகிய மருதப்பரானவர் தம்மைப் பூசிக்கும் சிவசருமசிவாச்சாரியர் தரித்திரனை நீக்கியருளும்பொருட்டு அவ்வேதியர்பால் பல வற்புதங்களைக் காட்டிக் கடைசியில் அவவேதியர் கனவினும், அவர் மனைவி சுசீலைகனவினுந்தோன்றி, "அன்புடையீர்! நாம் இத்தலத்தின் காருண்யாமிர்த தீர்த்தக்கரையில் கீழண்டைவில்வவிருட்சத்தின் குழந்தையுருகொண்டு இருப்போம் அச்குழந்தையை நீங்க ளெடுத்துக்கொண்டுபோய்க் காவிரிப்பூம்பட்டினத்தில் புத்திரனின்றிப் பலதவம்செய்துக்கொண்டிருக்கிற திருவெண்காடரிடங் கொடுத்து அக்குழந்தை நிறையெளவு பொன்பெற்று உங்கள் தரித்திரத்தினை நீக்கிக்கொள்வீர்களாக" எனத் திருவாய்மலர்ந்தருளினர் அங்ஙனமே மறுநாள்

சிவசருமர் அக்குழந்தையினைக்கண்டு எடுத்துக் கொண்டுவந்து தனது மனைவி பால்கொடுக்க அவ்வம்மையார் ஏற்று அக்குழந்தையின் வடிவத்தினைக்கண்டு அக்குழந்தையைவிட்டுச் சிறிதும் பிறிதற்கு மனம்வராது வருந்தி ஆயினும் சிவபெருமான் கட்டளைக்கஞ்சி அக்குழந்தையுடன் தானும் தனது நாயகனுமாகக் காவிரிப்பூம் பட்டினத்தை நோக்கி நடந்து அவ்வூரினுக்குச் சமீபத்திலுள்ள ஒருசோலையில் தங்கியிருந்தனர்.

சிவபெருமான் திருவெண்காடர் சிவகலை இவர்களிருவர் கனவினுமெழுந்தருளி "சோலையிலே வந்திருக்கும் பிராமணரிடத்துள்ள குழந்தையினைப் பெற்றுக்கொண்டு அக்குழந்தை நிறையளவு திரவியம் கொடுக்கச்சொல்லி' மறைந்தனர். கண்விழித்தெழுந்த திருவெண்காடர் தன் மனைவியுடன் சோலையிற்சென்று அவ்விருவரையும் தமது வீட்டிற் கழைத்துக்கொண்டுவந்து பல வுபசாரம்செய்து குழந்தையைப் பெற்றுக்கொண்டு அக்குழந்தைக்குச் சரியிடையாகத் திரவியங்கொடுத்தனுப்பிவைத்தனர்.

இங்ஙனம் கிடைக்கப்பெற்ற புத்திரனுக்குத் தாய் தந்தையர்கள் **மருதப்பிரான்** எனத் திருநாமமிட்டுப் புத்திரோற்சவம் கொண்டாடி வளர்த்து வருவாராயினர். மருதப்பிரான் தமது இளவயதிற்றானே சகலகலாவல்லவராகிக் கண்டோர் ஆச்சரிய முறப்பலவற்புத திருவிளையாடல்களைச் செய்து வருவாராயினர். பதினாறுவயதுபூர்த்தியானவுடன் தமது தந்தையிடம் சென்று "ஐயா! நான் தீபாந்திரங்களிற் சென்று வர்த்தகம் செய்து பொருள் சேகரிக்க விரும்புகிறேன் உத்தரவு கொடுத்திடவேண்டும்" எனக் கேட்கத் தந்தையார் தனது



குழந்தையை சுவேதாரண்யனிடத்தில் கொடுத்து பொன்பெறுதல்.

புத்திரனைப்பிரிய மனமில்லையாயினும் தனது குலத்திற்குத்தக்கபடி பொருளீட்டுதல் தருமமென வெண்ணி விடைகொடுக்கப் பெற்று தோழர்பாலருடன் கப்பலேறித் தீவாந்தரம்சென்று தாம்கொண்டு போன சரக்குகளையெல்லாம் விற்றுத் திரவியம் சேகரித்து அவற்றையெல்லாம் சிவகைங்கரியமாக செலவழித்துவிட்டு, எருமுட்டைகளையும், தவிட்டு மூட்டைகளையும் கப்பனிறைய வேற்றிக்கொண்டு தமது தோழருடன் திரும்பிவருகையில், பலவற்புதங்களைக் கடலினடுவிற்காட்டிக் கரைவந்து சேர்ந்தவுடன், திருவெங்காடர் எதிர்கொண்டுபோய் தனது புத்திரர் கப்பலில் எருமுட்டைகளும், தவிடுமூட்டைகளு மிருக்கக்கண்டு தன்து புத்திரனுக்கு எதோ சித்தப்பிரமை கண்டிருப்பதாகத் தீர்மானித்து. அப்புத்திரனை ஒருகாப்பில்வைத்துவிட்டு, எருமூடைகளையும் தவிட்டினையும் சோதித்துப் பார்க்க முறையே மாணிக்கங்களும், பொற்றூளும் இருக்கக்கண்டு ஆச்சரியமுற்று ஓடோடியும்சென்று தன் புத்திரனைப்பார்க்கையில் அவனைக் காணாது மனம் வருந்திநின்றனர். காவலிலிருந்த மருதவாணர் திருவிடைமருதூரில் சிவசருமர் முன்தோன்றி அவரைக் குடும்பத்துடன் ஐயக்கியம்செய்துகொண்டு மகாலிங்கத்திலெழுந்தருளினர்.

திருவெண்காடர் புத்திரசோகத்தால் மிக வருத்தமடைந்துகொண்டிருக்கையில், தனது மனைவியார் ஒரு சிறுபெட்டிகொண்டு வந்து முன்னர்வைத்து "இதனைத் தாங்கள் வந்தவுடன் தங்களிடம் கொடுக்கும்படி நமது புத்திரன் கொடுத்துவிட்டுபோயினன்" என்றனர் திருவெண்காடர் அதனைத் திறந்துபார்க்க அதில் ஒரு காதற்ற வூசியும், "காதற்றவூசியும் வாராதுகாணும் கடைவழிக்கே" என்று எழுதியுள்ள வொருசீட்டும் இருக்கக்கண்டு, அக்கணமேதுறைவடைந்து, தடுத்ததாயாருக்கும் மனைவிக்கும் பல ஆறுதலைசொல்லிவிட்டு, தன

து திரவிய பொக்கிஷத்தினைச் சிவனடியார்கட்குச் சூறையிடும்படி தனது கணக்கப்பிள்ளையாகிய சேந்தனருக்குக் கட்டளையிட்டு வெளியேற அவ்வூர் புறத்திலுள்ள பொதுமண்டபத்திலிருந்து கைப்பிச்சையேற்று உண்டு சிவஞானநிஷ்டைகூடி யிருந்தனர். சிலநாளைக்குப்பின் தனது தாயார் தேகவியோகமடையச் சுற்றத்தினர் அவ்வம்மையாரைச் சுடுகாட்டிற்குக்கொண்டுபோகையில் திருவெண்காடர்கண்டு அச்சுற்றத்தினரைவிரட்டிவிட்டுத் தனதுதாயாரை பச்சைவாழைமட்டையிற் கிடத்திச் சிலவெண்பாக்களைப்பாடித் தகனக்கிரியைமுடித்துப் பின்னர் திருவிடைமருதூர் முதலிய பலத்தலங்கட்குச்சென்று பலபாக்களைபாடித் திருவாரூரடைந்து தன்னிடத்தன்பு பூண்டிருந்து சர்ப்பத்தால் உயிரிழந்த வொருவனை மீண்டுயிர்பெற்றெழச்செய்து, கொங்குநாட்டினையடைந்து வாய்பேசாத மவுனவிரதத்தோடிருக்கையில் ஒருநாள் அர்த்தராத்திரியில் ஒரு மூர்க்கன் வீட்டுத்தலைவாயலிலிருந்து கைதட்ட, அவன் இவரையறியாமல் கள்ளனென்றெண்ணித் தடியெடுத்தடிக்கச் சிவசிவ எனத்திரும்பி இனி இருக்குமிடந்தேடிவந்தாலன்றி அன்னம் புசிப்பதில்லையெனத் தீர்மானித்துக்கொண்டு, வடதேயநாடி உஞ்சேனைமாகாளமடைந்து அவ்வூர்ப்புறத்திலுள்ள கணபதி யாலயமடைந்து சிவஞான நிஷ்டைகூடியிருக்கையில், அவ்வூர் இராஜனை பத்திரகிரியார்வீட்டில் களவு செய்துகொண்டுபோகும் திருடர் தாங்கள்செய்த பிரார்த்தனையின்படி ஒரு ஆரத்தினை அக்கணபதிக்குச் சாத்தவெண்ணி யிருட்டில் அக்கணபதிக்குச்சமீபத்தில் நிஷ்டைகூடியிருந்த திருவெண்காடர் கழுத்திலிட்டுச்சென்றனர். மறுநாள் காவலாளர் அரசன்வீட்டு ஆபரணம் திருவெண்காடர் கழுத்திலிருக்கக்கண்டு இவர் திருடருள் ஒருவரெனத் தீர்மானித்து அரசரிடம் ஒப்புவைத்துப் பலதீங்கு செய்யவும் அவர் சிவசிவ வெனநிற்க இவரைக் கழுமரத்திலேற்றும்படி அரசன்

ஆஞ்ஞாபித்தனன். இவர் கழுமாத்தினுக்குச் சமீபித்தவுடன் அதுபற்றியெரியவரான்கண்டு சுவாமிகள் திருவடியிற்பணிந்துதுறவடைந்தனன். பின்னர்சுவாமிகள் கட்டளையின்படி பத்திரகிரியார்திருவிடைமருதூரடைந்து தான் ஒரு நாயினை வளர்த்தார். அந்நாயிறந்தபின் அது காசிராஜன் புத்திரியாகப்பிறக்க அதுகண்டு தானும் அப்பெண்ணுமாகச் சுவாமிகளைக்கண்டு வணங்கி அப்போது அவ்விடத்துண்டாகிய வொரு சோதியிற் கலத்தருளினர். திருவெண்காடர் மறுபடியும் திருவெண்காடடைந்து, அவ்வூராசனாற் சிறையிற்கிடந்த சேந்தனாரை அவ்வூர் விநாயகரைக்கொண்டு சிறைவிடுவித்து அவ்வூரைவிட்டுப் பல தேயயாத்திரை செந்தமிழ்ப்பாக்கள் பலபாடிக்கொண்டே யுலவிச் சோழநடு கடந்து, தொண்டை மண்டலத்திற் பிரவேசித்தும் பலதலங்களைத் தரிசித்த பின்னர், திருவருட் பெருஞ்செல்வர்களாகியமூவர் பாடல்பெற்றதும், சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கும் சங்கிலிநாச்சியாருக்கும் திருமணம் நடந்தேறியதும், விண்டு, இலட்சுமி, பிரமன் சரஸ்வதி, சந்திரன், ஆதிசேடண, அகத்தியர், வான்மீகி, பாணினி, உரோமசர் வாசுகி, இதவன், தொண்டைமான் முதலியோர் பூசித்ததும், மோட்சபூமியுமாகிய திருவொற்றியூர் என்னும் திவ்விய தலத்தினையடைந்து சமுத்திர தீரமடைந்து அவ்விடத்தில் விளையாடிக்கொண்டிருந்த சிறுபிள்ளைகளுடன் கூடிச்சிலவிநோதங்களைக்காட்டிக் குழியில் மறைகிறதும் மணற்குன்றின்மேல் வருகிறதுமான திருவிளையாட்டினைச் செய்து கொண்டேயிருந்து ஒயுதாம்குர்தித் தன்மீது ஒருசாலைக்கவிழ்க்கச் செய்தனர். சிறிதுநேரத்திற்குப்பின் அச்சிறுபிள்ளைகள் அச்சாலையெடுத்துப்பார்க்கத் திருவெண்காடர் சிவலிங்கத் திருவுருக்கொண் டெழுந்தருளினர், அப்போது அச்சிறுவர்கள் கண்டு வியந்து இவ்வதிசயத்தினை ஊரில் உள்ளவர்கட்கெல்லாமறிவிக்க அவர்களெல்லோரும் திரண்டுவந்து தரிசித்து ஆனந்தித்தார்கள். இதற்குமுன்பே இவர் பத்தினியாராகிய சிவகலையம்மையார் இவர் திருவடியையே

சிந்தித்துக்கொண்டிருந்து சிவபதமடைந்தனர். காவிரிப்பூம் பட்டினத்தில் உள்ள யாவரும் திருவெண்காடரது சிவைக்கிய நிலையைக்கேட்டு அங்கு நின்றும் புறப்பட்டுவந்து திருவொற்றியூரினையடைந்து தரிசித்துப் பல திருத்தொண்டுசெய்து திருவருட்பாங்குக் குரியவரானார்கள். சுபம். சுபம்.

"ஆடியுத்திராட மவிர்பூம் புகார்த் திருவெண்
காடரொற்றித் த்யாகர் கவின்பதியில்—நிடுமண
விற்கோ லியகுகையி லேய்ந்து சிவலிங்கச்
சிற்கோல மான தினம்."

## திருவெண்காடர் மான்மிய சங்கிரகம்

முற்றிற்று.

உ

கணபதி துணை.

---

# பட்டினத்துப் பிள்ளையார்

அருளிச்செய்த

# திருப்பாடற்றிரட்டும்

# ஞானார்த்த தத்வதீபவுரையும்.

## முதலாவது

## கோயிற்றிருவகவல்.

நிலைமண்டிலவாசிரியப்பா.

நினைமின் மனனே! நினைமின் மனனே!
சிவபெருமானைச் செம்பொனம் பலவனை
நினைமின் மனனே! நினைமின் மனனே!

(பொழிப்புரை.) மங்கள சொரூபமாயுள்ள முதல்வனை, மனமே! சிந்தனை செய்வாய், மனமே! சிந்தனை செய்வாய் செம்மையாகிய பொன்மயமாயுள்ள சபையிலுள்ளவனைச் சிந்தனைசெய்வாய் மனமே! சிந்தனை செய்வாய் மனமே.

(குறிப்புரை.) நினைமின் மனனே என்பது இழிவிற் சிறப்பாக வந்த ஒருமையிற் பன்மை மயக்கம், ஈண்டுச் சிவபெருமானென்றது நிஷ்கள சொரூபமாயுள்ள முதல்வனை, அம்பலவனை யென்றது சகல சொரூபமாயுள்ள தில்லை நடராஜ பிரபுவை.

அலகைத்தேரி னலமரு காலின்
உலகப்பொய் வாழ்க்கையை யுடலையோம் பற்க

(பொ-ரை.) பேய்த்தேரினையும், சுழல்காற்றினையு முறையே யொத்த பொய்யாகிய உலக வாழ்வினையும் உடம்பினைப் பாதுகாவா திருப்பாயாக.

(கு - ரை.) உலகம் என்றுகாரியப்பாட்டினை யுடைத்தாயிருத்த லினாலும், உடல் அநித்திய தன்மையைப் பெற்றிருத்தலினாலும் இவ் விரண்டினிடத்து மழுந்தற்கவென்பார் ஓம்பற்கவென்றார். அருஞ் சுரத்தின் முதுவேனிலின் நண்பகற்கடுமை பற்றித்தோற்றிச் சூரிய னின் கிரணம் மேகப்படலத்தின் மறைந்த வழித் தானு மறைந்து போவதாகிய பேய்த்தேர் ஒரு காரணங்காட்டி உலக காரிய மறை ந்து போவதற்கு உவமையாயது. உலகமித்தை யென்பது கருத்தல்ல பொய்யென்றது காரணகாரியப்படுகிற திரிபினைநோக்கியாம். உட லைக்கொண்டு சுற்றிச்சுற்றி யுலகத்தில்லைவதால் காற்றுக்குவமையாக் கினர். உயிரை விசாரியாது உடம்பு காத்தலிலேயே காலங் கழித்தல் கூடாதென்பார் ஓம்பற்கவென்றார். இதனால் உடலைவெறுத்து விட வேண்டுமென்பதன்று. அங்ஙனம் கூறின்“உடம்பினை யானிருந்தோம்புகின்றேனே” என்றதிருமந்திரத்தோடு முறணும்.

பிறந்தன விறக்கு மிறந்தன பிறக்குந்
தோன்றின மறையு மறைந்தன தோன்றும்

பெருத்தன சிறுக்குஞ் சிறுத்தன பெருக்கும்
உணர்ந்தன மறக்கு மறந்தன வுணரும்
புணர்ந்தன பிரியும் பிரிந்தன புணரும்
அருந்தின மலமாம் புனைந்தன வழுக்காம்
உவப்பன வெறுப்பாம் வெறுப்பன வுவப்பாம்
என்றிவை யனைத்து முணர்ந்தனை யன்றியும்.

(பொ-ரை.) (யோனிவாய்பட்டுப்) பிறந்தனயாவும் இறந்துவிடும், இறந்தனயாவும் (மற்றொருகாலத்தில் யோனிவாய்ப்பட்டு) பிறக்கும், உற்பத்தியாவன வெல்லாம் மறைந்துவிடும், மறைந்தன வெல்லாம் மறுபடியும் உற்பத்தியாகும், தூல வடிவினையுடைய வெல்லாம் சூட்சும ரூபத்தினை யடைந்துவிடும் சூட்சுமரூபத்தினை யுடையன திரும்பத் தூலவடிவினையடையும், தெரிந்தனயாவும் மறந்துவிடும், மறந்தனயாவும் பின்பு ஞாபகத்தில் வரும், சேர்ந்திருந்தவைத் தூரவிலகும், தூரமாயிருந்தன பின்வந்து சேரும், உண்ட உணவனைத்தும் மலமாகின்றன, தரித்த ஆடைகளனைத்தும் அழுக்காய்விடும், விரும்பப்படுவன வெறுக்கப்படுகின்றன, வெறுக்கப்படுவன வெல்லாம் விரும்பப்படும் என்று சொல்லப்படுகின்ற இவையனைத்தும் (மனமே) பிரத்தியட்சமாகத் தெரிந்து கொண்டனை அல்லாமலும்.

(கு - ரை.) இதனால் பிரபஞ்சம் எக்காலத்தும் காரியகாரணம் பட்டுக் கொண்டே யிருக்குமன்றி யொருகாலத்து மழிந்து சூனியப் பொருளாவதில்லையென்பார்.சாறிமாறியாவும் வருமென்னும் பிரத்தியட்சமான அனுபவங்களை யெடுத்துக் காட்டினார். இதனால் சித்தாந்தத்தாற் பிரதி பாதிக்கப்படும் சற்காரிய வாதவுண்மைதெரிவித்தவாறு மாயிற்று.

பிறந்தன பிறந்தன பிறவிக டோறும்
கொன்றனை யனைத்து மனைத்துநினைக் கொன்றன
தின்றனை யனைத்து மனைத்துநினைத் தின்றன
பெற்றனை யனைத்து மனைத்துநினைப் பெற்றன
ஓம்பினை யனைத்து மனைத்துநினை யோம்பின
செல்வத்துக் களித்தனை தரித்திரத் தழுங்கினை
சுவர்க்கத் திருந்தனை நரகிற் கிடந்தனை
இன்பமுந் துன்பமு மிருநிலத் தருந்தினை
ஒன்றொன் றொழியா துற்றனை யன்றியும்

(பொ - ரை.) இதுகாறும் அடிக்கடி உலகின்கண்ணே நீ பிறந்துள்ள பிறவிகளனைத்தினும் அனேகமான உயிர்களை நீ கொன்றாய், அவைகளும் உன்னைக்கொன்றன, அவைகளை யெல்லாம் நீதின்றாய் அவைகளும் உன்னைத்தின்றன, யாவற்றையும் நீ பெற்றாய், அவைகளு முன்னைப்பெற்றன, யாவற்றையும் நீ காத்தாய்; அவைகளு முனைக்காத்தன, செல்வமடைந்த காலத்துஆனந்தமுற்றாய், தரித்திரமடைந்தகாலத்துத் துக்கமுற்றாய், புண்ணியஞ்செய்து தெய்வலோகமடைந்தாய், (பாவஞ்செய்து) நிரயத்திற் கிடந்தாய், சுகதுக்கங்களை இப்பெரிய வுலகிலனுபவித்தாய், (கூறியவற்றுள்) ஒவ்வொன்றினின்றும் நீங்காது அனுபவித்தாய். அல்லாமலும்.

(கு-ரை.) அநாதிதொட்டு ஆன்மகோடிகள் அவரவர்கள் கன்மத்திற்குத்தக்கபடி பிரபஞ்சத்தில் போகங்களை யனுபவிக்குந்தோறும் அப்போகங்கள் மாறிமாறி வந்துகொண்டிருந்த வியல்பொன்றதாயிற்று. இருவினையொப்பு மலபரிபாகம் விளையாதவரையில் ஆன்மாக்களுக்கு இச்சுழற்சி நீங்காதென்பதும் குறிப்பால் விளக்கிய வாறாயிற்று.

புற்புதக் குரம்பை துச்சி லொதுக்கிடம்
என்னநின் றியங்கு மிருவினைக் கூட்டைக்
கல்லினும் வலிதாக் கருதினை யிதனுள்
பீளையு நீரும் புறப்படு மொருபொறி
மீளுங் குறும்பி வெளிப்படு மொருபொறி
சளியு நீருந் தவழு மொருபொறி
உமிழ்நீர் கோழை யொழுகு மொருபொறி
வளியு மலமும் வழங்கு மொருவழி
சலமுஞ் சீயுஞ் சரியு மொருவழி
உள்ளுறத் தொடங்கி வெளிப்பட நாறும்
சட்டக முடிவிற் சுட்டெலும் பாகும்
உடலுறு வாழ்க்கையை யுள்ளுறத் தேர்ந்து.

(பொ-ரை.) நீர்க்குமிழினையொத்த சிறுகுடிலை, யாரு மருவருத்துச் துச்சிலென வொதுக்கத்தகுந்த இடமென்னத் தங்கியிருக்கும் நல்வினை தீவினைக் கிருப்பிடமாகிய உடலைக் கருங்கல்லினைக்காட்டிலும் வலிமையினை யுடையதாக நினைத்தனை இவ்வுடலுள் (கண்ணென்னும்) ஒரு பொறியில் பீளையும் நீரும் வெளிப்படும், மறுபடியும் (காதென்னும்) ஒருபொறியில் குறும்பி புறப்படும், (மூக்கென்னும்) ஒரு பொறியில் சளியும் நீரும் இழியும், (வாயென்னும்) ஒருபொறியில் உமிழ் நீரும் கோழையும் ஒழுகும், (பாயுருவென்னும்) ஒரு வழியில் காற்றும் மலமும் உண்டாகும், (உபத்தமென்னும்) ஒருவழியில் சலமும் சீயும் வழியும் (இவையேயன்றி) அவ்வுடலில் உள்ளிருந்து வெளிவரைக்கும் நாற்றமெடுக்கும், கடைசியாக உடல் சுட்டெலும்பாகிவிடும் (இத்தகைய உடலுற்ற வாழ்வினை நன்கு விசாரித்துத் தெரிந்து, இவ்வுடற்பற்று நீங்கி.)

(கு - ரை.) யாவரும் அருவருக்கத்தகுந்த இத்தகைய வஸ்துக்களுடன் கூடிய உடல் மிகுந்த அசுத்தமானதெனக் குறிப்பித்தன திருக்கடைக்காப்பு "என்பினாற் சுழிநிறைத்திறைச்சி மண்சுவ ரெறிந்திது நமில்லம், புன்புலானாறு தோல்போர்த்துப் பொல்லமையான் முகடு கொண்டு, முன்பெலா மொன்பது வாய்தலார் குரம்பையின் மூழ்கிடாதே" என்றதனாற் காண்க.

கடிமலர்க் கொன்றைச் சடைமுடிக் கடவுளை
ஒழிவருஞ் சிவபெரும் போகவின் பத்தை
நிழலெனக் கடவா நீர்மையொடு பொருந்தி
எனதற நினைவற விருவினை மலமற
வரவொடு செலவற விருளற
இரவொடு பகலற விகபர மறவொரு
முதல்வனைத் தில்லையுண் முளைத்தெழுஞ் சோதியை
அம்பலத் தரசனை யானந்தக் கூத்தனை
நெருப்பினி லரக்கென நெக்குநெக் குருகித்
திருச்சிற் றம்பலத் தொளிருஞ் சிவனை
நினைமின் மனனே! நினைமின் மனனே!
சிவபெரு மானைச் செம்பொனம் பலவனை
நினைமின் மனனே! நினைமின் மனனே!

(பொ - ரை.) பரிமளமிகுந்த (பிரணவாகாரமாகிய) கொன்றை மலரினைத்தரித்த சடையினைவாய்ந்த முடியோடுங்கூடிய சிவபெருமானை, நீங்காத மங்களகரமான பெரிய சிவானந்த வின்பத்தினை, (மாத்தைவிட்டு நீங்காத நிழலைப்போல) அதனை நீங்காததன்மையுடன் தங்கி, எனதென்னு மமகாரம் நீங்க, தற்போத வெண்ணம் நீங்கி, நல்வி

ளை தீவினை மும்மல நீங்க, பிறப்பு இறப்பு நீங்க, மாயாமயக்க நீங்க ஆணவவிருளற, இரவுபகலென்னுந் தோற்ற நீங்க இம்மை மறுமைப் (பயன்களின் ஆசை) நீங்க ஒப்பற்ற முதல்வனை, சிதம்பரத்தில் சகளீகரித்தெழுந்த (அருட்பெருஞ்) சோதியை, பொன்னம்பலத்தின் சபாபதியை, ஆனந்தத்தாண்டவ மூர்த்தியை, அக்கினியைக் கண்ட அரக்கினைப்போல நெகிழ்ந்து நெகிழ்ந்துருகி, சிதாகாயமாகிய திருச்சிற்றம்பலத்திலே விளங்குகின்ற சிவபெருமானை, 'மனமே சிந்தனை செய்வாய், மனமே! சிந்தனைசெய்வாய், மங்கள் சொரூபமாயுள்ள முதல்வனை செம்மையாகிய பொன்மயமாயுள்ள சபையிலுள்ளவனை மனமே! சிந்தனைசெய்வாய்! மனமே சிந்தனைசெய்வாய்.

(கு-ரை.) அபரஞான முன்னிட்டுச் சுட்டுபொருள்களி ஞுட்ட மூறும்வரையில் வாசகஞானமேயன்றி வாச்சியஞான நிகழாதாகலின் வேற்றுமையுற்ற வனைத்தினுமுள்ள தற்போத நீங்கப் பரஞானத்தே நின்று அந்த ஞானுதீதனை விளங்கும் சிவத்தினையே தரிசித்துக் கொண்டிருக்க வேண்டுமென்பார், எனதற.............................. நினைமின் மனனே என்றனர். சிவஞான சித்தியார்.

> "பரஞானத் தாற்பரத்தைத் தரிசித்தோர் பரமே
> பார்த்திருப்பார் பதார்த்தங்கள் பாரார் பார்க்க
> வருஞானம் பலஞான மஞ்ஞான விகற்பம்
> வாச்சியவா சகஞானவைந்தவத்தின் கலக்கம்
> தருஞானம் போகஞான திருஞான ஞேயந்
> தங்கியஞானஞ் சங்கற்பனைஞான மாகுந்
> திருஞான மிவையெல்லாங் கடந்தசிவஞான
> மாதலாற் சீவன் முத்தர்சிவமே கண்டிருப்பர்."

என்றதனுற் காண்க.

## இரண்டாவது

# கோயிற்றிருவகவல்.

காதள வோடிய கலகப் பாதகக்
கண்ணியர் மருங்கிற் புண்ணுட னுடுங்
காதலுங் கருத்துமல் லானின் னிருதாட்
பங்கயஞ் சூடப் பாக்கியஞ் செய்யாச்
சங்கடங் கூர்ந்த தமியேன் பாங்கிருந்
தங்கோ டிங்கோ டலமருங் கள்வர்
ஐவர் கலகமிட் டலைக்குங் கானகம்
சலமலப் பேழை யிருவினைப் பெட்டகம்
வாதபித்தங் கோழை குடிபுகுஞ் சீறூர்
ஊத்தைப் புன்றோ லுதிரக் கட்டளை
நாற்றப் பாண்ட நான்முழத் தொன்பது
பீற்றற் றுண்டம் பேய்ச்சுரைத் தோட்டம்
அடலைப் பெரிய சுடலைத் திடருள்
ஆசைக் கயிற்றி லாடும் பம்பரம்
ஓயா நோய்க்கிட மோடு மரக்கலம்
மாயா விகார மரணப் பஞ்சரம்
சோற்றுத் துருத்தித் தூற்றும் பத்தம்
காற்றிற் பறக்குங் கானப் பட்டம்
விதிவழித் தருமன் வெட்டுங் கட்டை

சதுர்முகப் பாணன் றைக்குஞ் சட்டை
ஈமக் கனலி லிடுசில விருந்து
காமக் கனலிற் கருகுஞ் சருகு
கிருமி கிண்டுங் கிழக்கஞ் சருமம்
பலக்கொழுந் தேறுங் கலைக்கொழு கொம்பு
மணமாய் நடக்கும் வடிவின் முடிவிற்
பிணமாய்க் கிடக்கும் பிண்டம் பிணமே
ஊற்ற் கிடக்க வொட்டா வுபாதி
காலெதிர் குவித்த பூளை காலைக்
கதிரை திர்ப் பட்ட கடும்பனிக் கூட்டம்
அந்தரத் தியங்கு மிந்திர சாபம்
அதிரு மேகத் துருவி னருநிழல்
நீர்க் குமிழி நீர்மே லெழுத்து
கண்டுயில் கனவிற் கண்டகண் காட்சி
அதனினும் பொல்லா மாயக் களங்கம்
அமையு மமையும் பிராமை யமையும்
இமய வல்லி வாழியின் றேத்த
ஆனந்தத் தாண்டவங் காட்டி
ஆண்டுகொண் டருள்கைநின் னருளினுக் கழகே.

(பொ-ரை.) உடலானது அங்கும் இங்குமாகச் சுழலுகின்ற (பஞ்சேந்திரியமொன்னும்) ஐந்து கள்வர்கள் கலகம் விளைத்து வருத்துகின்ற காடு, மூத்திரமும் மலமுந்தங்கியபெட்டி, நல்வினை தீவினை நிறைந்த பொய்யிடம், வாதம் பித்தம் சிலேட்டுமம் என்கிற முப்பிணிகளும் வாசஞ்செய்கின்ற சிறியஊர், அழுக்காகிய அற்பத்தோலில் இரா

த்த நிறைந்தவச்சு, துர்நாற்றத்தையுடைய பானை, நாலுமுழ நீளமும் ஒன்பது துவாரங்களுமுள்ள கிழிந்த துண்டுத்துணி, (உண்பதற்கு தவாத) பேய்ச்சுரைக்கொடி பயிராகுந் தோட்டம், (உயிர்களைக் கொன்று தின்கின்றமையால்) சாம்பல்மிகுந்த விலாசமான சுடுகாட்டு மேடு, ஆசைக்கயிற்றால் ஆடுகின்ற பம்பரம், நீங்காத பலநோய்களுக்கு இடம், ஓடுகின்ற கப்பல், மாயாக் காரியங்களையுடைய அழியும் கூண்டு, சோன்றினையூதும் துருத்தி, தூற்றுகின்ற பதர், காற்றினில் பறக்கின்ற காற்றாடி, கன்மத்திற்குத் தக்கபடி எமன் வெட்டுகின்ற கட்டை, நான்கு முகங்களுடன் கூடிய தையற்காரனால் தைக்கப்படும் அங்கி, சுடுகாட்டு நெருப்புக் கிடுகின்ற சிலகரி, காமத்தீயில் கறுகிப் போகின்ற உலர்ந்த இலை, புழுக்கள் குடையும் கிழங்குத்தோல், பாவமாகிய தளிர்படருதற்கான கொழுக்கொம்பு, விவாகக் கோலத்துடன் சஞ்சரிக்கும் வடிவினைவாய்ந்து அந்தியத்தில் பிணமாய்ப் படுக்கும் சவவுருவம், (பிணமாயினபின்) ஊரில் தங்கவொட்டாதபடி (பலராலும் செவ்யத்தகுந்த) உபத்திரவம், காற்றுக்கு முன் குவித்துவைத்த பூளைமலர், காலையிலுதிக்கும் சூரியனுக்கு முன் தோன்ய மிகுதியாகிய நிறைந்த பனி, (மழைக்காலத்தில்) ஆகாயத்திற் றோன்றுகின்ற இந்திரவில், இடிக்கின்ற மேகத்துருவினது நுட்பமாகிய நிழல், நீரிற் றோன்றும் குமிழி, நீரின்மேலெழுதும் எழுத்து, கனவுகாலத்தில் அனுபவிக்கும் காட்சி, அக்காட்சியினும நிலையில்லாத மாகையுடைய களங்கம் (இத்தகையவுடல்) வரும் (எனக்கும்) வரும்! எனது பெருமானே வரும், (இத்தேகம் வாராதபடி) காதுவரையில் நீண்டு கலகத்தைச்செய்யும் பாதகத்தன்மைவாய்ந்த கண்களையுடைய மாதர்கள் சமீபத்தில் துன்பத்துடனுடும் ஆசையும் எண்ணமும் மல்லாமல் தேவரீருடைய இரண்டு திருவடித்தாமரைகளைத்தரிக்கப் புண்ணியஞ் செய்யாத சங்கடம் மிகுந்த அடியேன் பக்கத்திலிருந்து பார்வதியார் வாழ்த்துச்சொல்லித் தோத்தரிக்க சிவானந்தத் தாண்டவத்தினைச்

செய்து (அடியேனை) தடுத்தாண்டு கொண்டருளுதல் தேவரீர் திரு வருளினுக்கு அழகாகும்.

(கு-ண்ர.) பிரானே! பாங்கிருந்து ஆண்டுகொண்டருள்கை நின்னருளினுக்கழகே. என்று அன்வயஞ்செய்து முடித்துக்கொள்ளுக மகளிடத்துக் காதலும் கருத்து மமைப்பது மிகுச்சங்கடமென்பார், காதளவோடிய............கூர்ந்த தமியேன் என்றனர். திருமந்திரம் "கோழை யொழுக்கக் குளமூடு பாசியி, லாழநடுவா ரளப்புறுவர் கீளைத், தாழத்துடக்கித் தடுக்க கில்லாவிடிற், பூழை நுழைந்தவர் போகின்றவாறே" என்றதனாற்காண்க. தேகமானது பலவகைப்பட்ட ஆபாசங்கட்கும் இடமாயதென்பார், அங்கோடிங்கோ............மாயக் களங்க மென்றனர். திருவாசகம் "பொத்தையூன் சுவர்ப்புழுப் பொதிந்துளுத்தசும்பொழுகிய பொய்க்கூறை, யித்தை மெய்யெனக்கருதி நின்றிடர்க்கடற் சுழித்தலைப் படுவேனை" என்றதனாற்காண்க, இங்ஙனம் பெண்ணினிடத்தும் உடலினிடத்து முண்டான பற்றொழித்து ஆனந்தத் தாண்டவத்தையே ஆதாரமாகக் கொள்ளவேண்டு மென்பார், இமையவல்லி.........அழகே என்றனர், திருமந்திரம், "ஒளியாம்பரமு முளதாம்பரமு, மளியார் சிவகாமி யாகுஞ் சமயக், களிவார் பரமும் கருத்துறையந்தத், தெளிவாஞ் சிவானந்த கூட்டத்தின் சித்தியே" என்றதனாற் காண்க.

## மூன்றாவது

# கோயிற்றிருவகவல்.

இணைக்குற ளாசிரியப்பா.

பாற்கடல் கடையப் படுங்கடு வெண்ணெயைத்
திருமிடற் றடக்கிய சிவனே யடைக்கலம்.

(பொ - ரை.) திருப்பாற்கடலை (முதல்வன் ஆணையின்றித் தேவர்களும் அசுரர்களும்) கடைய (அக்காலத்தில்) உண்டாகிய விஷமாகிய வெண்ணெயை அழகிய கண்டத்தின் கண்ணே வைத்த சிவபெருமானே அடைக்கலம்.

(கு - ரை.) அங்ஙனம் திருப்பாற்கடலிற் றோன்றிய விஷத்தாற் சர்வான்மாக்களுந் துன்புறுவகையாகத் தேவர் முனிவர் வேண்டுகோளுக்கிணங்கிப் பானஞ்செய்து அவர்கட்கு அடைக்கலந் தந்தமையின் தானுமடைக்கலமென்றார். பாகவதம் "யேஸமா மந்தரிய பகவாந் பவாநீம் விசுவபாவநா, தத்விஷம் கக்துக ரேபேப்ர பாவஜ்ஞோந்வ மோதத, ததாகாதவீக்ருத்ய வ்யாபிஹாலாஹலம் விஷம், அபக்ஷயம் மகாதேவாக் ருபாயபூதபாவநா, நிசம்யகர்மபிச்சம் போர்வே தேவதேவஸ்யமீடுஷா, ப்ரஜாதாக்ஷாயணீ ப்ரஹ்மாவைகுண்டஸ்சஸஸ. விரே" என்றதனாற் காண்க.

அடங்கலு மடக்கிடுங் கடுங்கொலைக் காலனைக்
காலெடுத் தடக்கிய கடவுணின் னடைக்கலம்.

(பொ-ரை.) யாவற்றினையும் தனது சாமர்த்தியத்தால் அடக்கும் (வல்லமைவாய்ந்த) கொடிய கொலையினைச் செய்யும் இயமனைத் திருவடியைத் தூக்கிக்யெடுத்து (உதைத்து) அடக்கிய கடவுள் நினது அடைக்கலம்.

(கு-ரை.) இயமனை யிடதுகாலா லுதைத்துத்தள்ளித் தன்னைப் பூசித்துவந்த மார்கண்டேய முனிவரைச் சிரஞ்சீவியாக்கி யடைக் கலந்தந்தமையின் தானுமடைக்கல மென்றனா. அரதத்தர் "காலகர்வ பஹத்வாத்தைதே யோவாஸ" எனவும், சங்கா சங்கீதை "மதத்தான் மிக்கான் மற்றிவன் மைந்தனுயிர்வவ்வப், பதைத்தானென்றவுன்னி வெகுண்டான் பதிமூன்றுஞ், சிதைத்தான் வாமச்சேவடி தன்றற் சிறிதுந்தி, யுதைத்தான் கூற்றன் விண்முகில் போன்மண்ணுற வீழ்ந்தான்" எனவும் வருவனவற்றாற் காண்க.

உலகடங் கலும்படைக் குடையவன் றலைபறித்
திடக்கையி லடக்கிய விரைவனின் னடைக்கலம்.

(பொ-ரை.) உலகமனைத்தையு முண்டாக்கினவராகிய (பிரமன து) தலையினைக்கிள்ளி இடது திருக்கரத்தில் வைத்திருக்கிற இறைவனே நினது அடைக்கலம்.

(கு - ரை.) தானே பிரமமெனத் தருக்குற்ற பிரமனது ஐந்தாவது தலையினை நகநுதியாலரிந்து பின்வேண்ட அடைக்கலந்தந்தமையின் தானுமடைக்கலமென்றனர். பிரமாண்டபுராணம் "ஸஸர்வஜஸ் வாத்மநாகிஞ் சித்பைரவம் லோகதாஹகம், ஸ்வயம் ஸரஷ்ரநமகாதேவ க்ஷணத்வை காலபைரவா, சகத்தகநஜாகேரணப் ரஹிமணாபஞ்சமம் விரா" என்றதனாற் காண்க.

செய்யபொன் னம்பலச் செல்வநின் னடைக்கலம்

(பொ-ரை) செம்மையாகிய பொன்னம்பலத்திலே யெழுந்தருளியிருக்கும் செல்வனே நினது அடைக்கலம்.

(கு-ரை.) சிவபெருமா னொருவனே செல்வனென்பது அதர்வசிரசு 'ஸர்வைஸ்வரிய சம்பன்னஸம்பு' எனவும், சுவேதாசுவதாம், 'தமீஸ்வராணாம்பரமம்மஹேஸ்வரம்' எனவும், ஸகலஸய ப்ரபு மீஸநம், எனவும் வருவனவற்றாற் காண்க.

ஐயநின் னடைக்கல மடியனின் னடைக்கலம்

(பொ-ரை) அழகனே உன்னுடைய அடைக்கலம் அடியேன் நினது அடைக்கலம்.

(கு-ரை.) அழகென்னும் பொருளைப்பயக்கும் ஐ என்ற மொழியினடியாக ஐயன் என்ற சொல் பிறந்தமையின் அழகன் எனப் பொருள்கொண்டாம். ஆரியன் என்னும் பதம் ஐயனெனத்திரிந்ததெனப்பொருள்கொள்வார் சிலர் அவர் தமிழ்நயமறியாதவராவர்.

மனவழி யலைந்திடுங் கனவெனும் வாழ்க்கையும்
விழுப்பொரு ளறியா வழக்குறு மனனும்
ஆணவ மலத்துதித் தலைந்தத னுலைந்திடு
நிணவைப் புழுவென நெளிந்திடு சிந்தையும்
படிறும் பாவமும் பழிப்பறு நினைப்பும்
தவறு மழுக்காறு மிவறுபொச் சாப்பும்
கவடும் பொய்யுஞ் சுவடும் பெருஞ்சின
விகலுங் கொலையு மிழிப்புறு புன்மையும்
பகையு மச்சமுந் துணிவும் பணிப்பும்

முக்குண மடமையு மைம்பொறி முயக்கமும்
இடும்பையும் பிணியு மிடுக்கிய வாக்கையை
உயிரெனுங் குருகுவிட் டோடுங் கூம்பையை
எலும்பொடு நரம்புகொண் டிடையிற் பிணித்துக்
கொழுந்தசை மேய்ந்து மொழுக்குவிழுங் குடிலைச்
செழும்பெழு வுதிரச் சிறுபுழுக் குரம்பையை
மலவுடற் குடத்தைப் புலவுடற் புட்டிலைத்
தொலைவிலாச் சோற்றுத் துன்பக் குழியைக்
கொலைபடைக் கலம்பல கிடக்குங் கூட்டைச்
சலிம்புறு வினைப்பல சரக்குக் குப்பையைக்
கோட்சரக் கொழுகும் பீறற் கோணியைக்
கோபத்தீ மூட்டுங் கொல்லன் றுருத்தியை
ஐம்புலப் பறவை யடையும்பஞ் சரத்தை
புலராக் கவலை விளைமரப் பொதும்பை
ஆசைக் கயிற்றி லாடும்பம் பரத்தை
காசிற் பணத்திற் சுழலுங்காற் றாடியை
மக்கள் வினையின் மயங்குந் திகிரியைக்
கடுவெளி யுருட்டிய சகடக் காலைப்
பாவச் சரக்கொடு பவகடல் புக்குக்
காமக் காற்றெடுத் தலைப்பைக்
கெடுவழிக் கரைசேர் கெடுமரக் கலத்தை
இருவினை விலங்கொடு மியங்குபுற் கலனை
நடுவன்வந் தழைத்திட நடுங்கிடும் யாக்கையைப்
பிணமெனப் படுத்தியான் புறப்படும் பொழுதுநின்
னடிமலர்க் கமலத்துக் கபயநின் னடைக்கலம்
வெளியிடை யுருமிடி யிடித்தென வெறித்தெழுங்
கடுநடை வெள்விடைக் கடவுணின் னடைக்கலம்
இமையா நாட்டத் திறையே யடைக்கலம்

அடியார்க் கெளியா யடைக்கல மடைக்கலம்
மறையவர் தில்லை மன்றுணின் றாடிக்
கருணைமொண் டலையெறி கடவுளே யடைக்கலம்
தேவரு முனிவருஞ் சென்றுநின் றேத்தப்
பாசிழைக் கொடியொடு பரிந்தருள் புரியும்
எம்பெரு மானின் னிணையடிக் கபயம்
அம்பலத் தரசே யடைக்கல முனக்கே.

(பொ - ரை.) மனம்போன வழியிலேயே சென்று (என்னை) அலக்கழிக்கும் கனவினுக்கு நிகரான இப்பிரபஞ்சவாழ்வும், (திருவருளென்னும்) மேன்மையான பொருளினையறியாது குற்றமுடைய மனமும், ஆணவமலத்திற்பிறந்து அதிற்கலந்து உபத்திரவப் பட்டுக் கொழுப்பிற்புழுவென்ன அசையும் சிந்தையும் வஞ்சகமும் பாவமும் வாய்ந்த (யாவரும்) பழிக்கத்தகுந்த நினைப்பும், குற்றமும், பொறாமையும், ஆசையும், மறதியும், கபடமும், பொய்யும், தந்திரமும், அதிகக் கோபத்தால் விளையும் போரும், கொலையும், இழிவாகிய சிறுமையும், விரோதமும், பயமும், திடனும், நடுக்கமும், மூர்க்குணத்தால் விளைந்த அறியாமையும், பஞ்சேந்திரியங்களின் செயலும், இல்லாமையும், நோயும், தங்கிய தேகத்தினை, உயிரென்றழைக்கப் படும், பட்சி நீங்கியோடும் கூட்டினை, எலும்புடனே நரம்பினைக் கொண்டு (ஆங்காங்கு ஒன்றிற்கொன்று பொருந்திய) இடங்களிற் கட்டி, கொழுப்புடன்கூடிய தோலினால் மூடி யொழுக்குண்டாகும் குடிசலினை, செழுப்பில் மிகுந்த உதிரத்துடன் கூடிய சிறு புழுக்கள் தங்கிய கூண்டினை, மலப்பொருள் நிறைந்த பாண்டத்தினை, ஊனிறைந்த கூடையினை, நீங்காத சோற்றினை (யடைக்கும்) துன்பமயமான பள்ளத்தினை, கொலைசெய்யத்தகுந்த ஆயுதங்கள் எண்ணிலவிருக்கும் தூணியினை, வெறுக்கத்தகுந்த பல வினைகளென்னும் பண்டங்களாகிய குப்பையினை, பழிமொழிகளாகிய சரக்குகள் சிந்தும் கந்தற் கோணியை கோபாக்கினியை யுண்டாக்கும் கொல்லனுடைய துருத்தியினை, பஞ்சேந்திரியப்

பட்சிகள் அடைத்திருக்கும் கூண்டினை நீங்காத' கிலேசங்கள்வளரும் மரப்பொந்தினை, ஆசைக்கயிற்றாற் சுழலும்பம்பரத்தினை, காசு (சம்பாதிப்பதிலும்) பணம் (சம்பாதிப்பதிலும் சுழன்று திரிகின்ற காற்றாடியினை, ஆன்மாக்கள் செய்யும் கன்மத்திற்குத்தக்கபடி மயங்கி (எக்காலமும்) சுற்றிவரும் சக்கரத்தினை, (பிரபஞ்சமாகிய) வெட்டவெளியில்யுருட்டிவிட்ட தேர்ச்சக்கரத்தினை, பாவமாகியபண்டங்களையேற்றிக்கொண்டு பிறப்பாகிய கடலிற்புகுந்து, காமமென்னுங்காற்றுமோதியலைக்க, தீயவழியென்னும் கரையிற்போய்ச் சேர்ந்து கெடுகின்ற கப்பலை, இரண்டுவினைகளாகிய விலங்குடன் சஞ்சரிக்கும் உடலினை, இயமன் வந்து அழைத்திட நடுக்கங்கொள்ளும் தேகத்தினை சவமாகக் கிடத்திவிட்டு )ஆன்மாவாகிய) யான் வெளிப்படுகையில் தேவரீரது திருவடித்தாமரையினிடத்து அபயமாக அடைக்கலம் (புகுந்தேன்) ஆகாயத்தில் அச்சத்துடன் இடியிடித்தாலென்ன ஆவேசத்துடன் எழுகின்ற வேகமான நடையினைவாய்ந்த வெள்ளை இடபத்தின்மேல் எழுந்தருளும் கடவுளே தேவரீருக்கு அடைக்கலம். இமைக்கெட்டாத திருநேத்திரங்களையுடையஇறைவனே அடைக்கலம். அன்பர்கட்கு எளியவனே யடைக்கலம்அடைக்கலம் தீட்சித பிராமணர்கள் வாழுகின்றதில்லையம்பதியில் கனகவம்பலத் திலெழுந்தருளி ஆனந்தநிர்த்தனஞ்செய்து, திருவருளினை முகந்து வீசுகின்ற கடவுளே யடைக்கலம், தேவர்களும் முனிவர்களும் தினஞ்சென்றிருந்து தோத்தரிக்க, பசுமையாகிய ஆபரணங்களை தரித்த கொடிபோன்ற சிவகாமியுடன் விரைந்து அருள்புரியும்' எமது பெருமானே தேவரீரது இரண்டு திருவடிகட்கபயம். பொன்னம்பலத்துச் சபாபதியே தேவரீருக்கே யடைக்கலம்.

(கு - ரை.) உடலையுற்று நோக்கிவிசாரிக்கின்ற காலத்து எவ்வகையினும் பிரயோசனப் படுவதாகத்தோன்றுவதற்கேது இன்மையின் இவ்வுடற்பற்றைவிட்டு அம்பலத்தரசனையே யடையவேண்டு

2

வதே தகுதியெனக்குறிப்பித்தனர். திருக்கடைக்காப்பு. "பிணங்குடர் தோனரம்பென்பு சோக்கைதானிலாயதன்றூற், குணங்களார்க்கல் லது குற்ற நீங்காதெனக்குலுங்கினேயே, வணங்குவார் வானவர் தான வர் வைகலு மணங்கொண்டேத்து, மணங்கனூர் தொழுதியலா மையல் கொண்டஞ்சனெஞ்சே" என்றதனாற் காண்க.

நான்காவது

## கோயிற்றிருவகவல்.

திருமால்பயந்த திசைமுகனமைத்து
வருமேழ்பிறவியு மானிடத்துதித்து
மலைமகள் கோமான் மலரடியிறைஞ்சிக்
குலவியசிவபதங் குறுகாதவமே
மாதரைமகிழ்ந்து காதல்கொண்டாடும்
மானுடர்க்கெல்லாம் யானெடுத்துரைப்பேன்
விளிவெளிமாக்க டெளிவுறக்கேண்மின்.

(பொ - ரை.) நாராயண மூர்த்தியானவர் பெற்ற சதுர்முகப் பிரமன்படைத்தவரும் எழுபிறவிகளிலும் மனிதசென்மமாகப்பிறந் து, பார்வதியாருடைய தலைவனுகிய சிவபெருமானது தாமரை மலரைப்போன்ற திருவடியினை வணங்கி விளங்குகின்ற சிவபதவியினை அடையாமல் வீணாக மாதர்களை (எண்ணிச்) சந்தோஷித்து ஆசை பூண்டு கொண்டாடுகின்ற மாந்தர்களுக்கெல்லாம் நான் (சில உண்மை கள்) எடுத்துச்சொல்வேன்! சாதலுக்குரிய எளிமையினை வாய்ந்தமாந் தர்கள் தெளிவடையகேளுங்கள் (அவைவயென்னையோ வெனின்.)

(கு - ரை.) பூர்வசென்மத்தில் மாடு முதலியவைகளாயிருந்து புண்ணியமிகுதியால் அடுத்த சன்மமனிதப் பிறவி யெடுத்தவர்கட்கு அதுமுதல் இரண்டொரு சென்மம் வரையில் மலத்தடிப்பு அதிகமா கையால் அவர்களறிவிற்குச் சிவபெருமானுண்மை விளங்காது என் பது சகஜம். ஏழுதரம் மனிதர்களாகப் பிறந்தவர்கட்கு அம்பலத் தடிப்பிராதாகலின் இத்தகையினரும் சிவபெருமான் உண்மை தெரி யாதிருக்க அவர்பாலிறங்கி, எழ்பிறவியும் ... ... ... குதுகாது என்றனர்,எடணைகள் மூன்றில் மண், பொன் இரண்டினையும்விட்டு "மாதரை மகிழ்ந்து" என்று பெண்களை மாத்திரம்குறித்த தென்னை யோவெனில்? பொன்னைவிரும்புவதும் மண்ணைவிரும்புவதுங்காதல் கொண்டுள்ள பெண்ணினைப்பற்றியே யாகலானென்க, இங்ஙனம் முதல்வனை மறந்து மாதர்மயலில் மயங்குவார்மிருகத்தினை யொத்தா ரென்பார் மக்களென்னாது மாக்களென்றார்.

முள்ளுங்கல்லு முயன்று நடக்கும்
உள்ளங்காலைப் பஞ்சென வுரைத்தும்
வெள்ளெலும்பாலே மேவியகணைக்கால்
துள்ளும்வராலெனச் சொல்லித்துதித்தும்
தசையுமெலும்புந் தக்கபுன்குறங்கை
விசையுங்கதலித் தண்டெனவியம்பியும்
நெடுமுடைநாங்கி நின்றிடுமிடையைத்
துடிபிடியென்று சொல்லித்துதித்தும்
மலமுஞ்சலமும் வழும்புத்திரையும்
அலையும்வயிற்றை யாலிலையென்றும்
சிலந்திபோலக் கிளைத்துமுன்னெழுந்து
திரண்டுவிம்மிச் சீப்பாய்ந்தேறி

உகிராற்கிற வுலர்ந்துள்ளுருகி
நகுவார்க்கிடமாய் நான்றுவற்றும்
முலையைப் பார்த்து முளரிமொட்டென்றும்
குலையுங்காமக் குருடர்க்குரைப்பேன்.

(பொ - ரை.) முள்ளினும் கல்லினும் முயற்சித்து நடக்கும் உள்ளங்காலினைச் செம்பஞ்சென்னச் சொல்லியும், வெண்மையான எலும்புகளினாலே பொருத்தப்பட்டிருக்கின்ற கணைக்காலினைத் துள்ளுகின்றவரால் மீனென்னப் புகழ்ந்தும்,மாமிசமும் எலும்பும்பொருத்தமாகவுள்ள அற்பத்துடையினையிசைவாகிய வாழைத்தண்டென உரைத்தும், நீண்ட உடலினைச் சுமந்துகொண்டிருக்கும் இடையினை உடுக்கைபோன்றதென்றும், பிடியளவானதென்றும் கூறிப்புகழ்ந்தும், மலமும்நீரும்கொழுப்பும் மடிப்பும் அலைந்துகொண்டிருக்கின்ற வயிற்றினை ஆலிலையென்றும், சிலந்திப்புற்றினைப் போலக் கிளம்பி முன் வளர்ந்து உருண்டு புடைத்துச்சீவடிந்து நிகத்தால்கிள்ள உலர்ந்து உள்ளுருகிச் (சில காலத்திற்குப்பின்) கண்டவர் சிறிப்பதற்கேற்றதாய் தொங்கி வற்றிப்போகும் தனத்தினைநோக்கித் தாமரைமொக்கென்றும் (நாய்போன்று) குலைக்கும்மோகாந்த காரத்தில் முழுகிக்கிடக்கும் அந்தகர்கட்குச்சொல்லுவேன்.

(கு - ரை.) நாயானது பசையற்ற எலும்பினைக் கடித்துகொண்டிருந்து ஓயாது குலைத்துகொண்டிருப்பதுபோல மாந்தர் பிரயோசனமற்ற மாதரையனுபவித்துக்கொண்டு காலமனைத்தும் புகழ்ந்துகொண்டேயிருப்பவரென்பார் குலையும் என்றனர் குருடர் என்றதனால் அறிவாகிய கண்ணைக்கொண்டு சிவத்தினையறியாது காமாந்தகாரத்தில் மூழ்கி யறிவுமயங்கிக் கிடப்பாரை. அன்றியும், வயதினாலும், உணவினாலும், கழுவுவதினாலும், ஆபரணங்கள் அணிதவினாலும், ஆடை உடுத்தவினாலும், மாதர்கள் அவயவங்கள் மேனோக்கில் கண்

களுக்கு ரம்மியமாகத் தோன்றிக் காமுகர்களைக் கவரச் செய்யினும், அறிஞர்கள் உற்று நோக்கில்அவையனைத்தும் மிக அருவருக்கத் தகுந்தவைகளால் ஆகியதெனவும், நாற்றமடிக்கத் தகுந்தவை சேரத் தக்கனவு மாயிருப்பனவற்றை உவமானவாயிலாக வாயாரப் புகழ்ந்து காலங்கழித்த லென்னப்பிரயோசன மென்பார், "காமக்குருடர் என்றனர்.

நீட்டவுமுடக்கவு நெடும்பொருள் வாங்கவும்
ஊட்டவும்பிசையவு முதவியிங்கியற்றும்
அங்கையைப்பார்த்துக் காந்தளென்றுரைத்தும்
வேர்வையுமழுக்கு மேவியகழுத்தைப்
பாரினிலினிய கமுகெனப்பகர்ந்தும்
வெப்பு மூத்தையு மேவியவாயைத்
துப்புமுருக்கின் றாய்மலரென்றும்
அன்னமுங்கறியு மசைவிட்டிறக்கும்
முன்னியபல்லை முத்தெனமொழிந்து
நீறுஞ்சளியு நின்றுநின்றொழுகும்
கூரியமூக்கைக் குமிழெனக்கூறியும்
தண்ணீர்பீளை தவிராதொழுகும்
கண்ணைப்பார்த்துக் கழுநீரென்றும்
உள்ளுங்குறும்பி யொழுகுங்காதை
வள்ளைத்தண்டின் வளமெனவாழ்த்தியும்
கையுமெண்ணெயுங் கலவாதொழியில்
வெய்யவதரும் பேனும்விளையத்
தக்கதலையோட்டின்முளைத்தெழுந்த

சிக்கின்மயிரைத் திரண்முகிலென்றும்
சொற்பலபேசித் துதித்துநீங்கள்
நச்சிச்சொல்லி நரகவாசல்

(பொ - ரை.) (ஒருபொருளையெடுக்க) நீட்டுதற்கும், (எடுத்த பின்) முடக்குதற்கும், மிகுந்த திரவியத்தினைவாங்குதற்கும், (உணவுமுதலியவற்றை) ஊட்டுதற்கும். (யாதாமொன்றை)பிசைவதற்கும், உபகாரங்களை யிவ்விடத்துச் செய்யானின்ற உள்ளங்கையினை நோக்கிக் காந்தள்புட்பமென்று கூறியும், வியர்வினையும் அழுக்கினையும் பொருந்திய கழுத்தினை உலகினிலினிமையான பாக்குமரமெனச் சொல்லியும், வெப்புநாற்றத்தினையும் ஊத்தையினையும் பொருந்திய வாயினைச்சிவந்த முருக்கமரத்தின் சுத்தமான புட்பமென்றும் சாதத்தினையும் பதார்த்தத்தினையும் மென்று யென்று(வயிற்றில்) இறக்குகின்ற முன்னேயுள்ள பல்லினை முத்தெனவியம்பியும், ஜலமும்சளியும் தங்கியிருந்து ஒழுகும் குவிந்த முக்கினைக் குமிழம்பூவென வியம்பியும், தண்ணீரும் பீளையும் நீங்காது ஓடிவரும் கண்ணினை நோக்கிச் செங்கழுநீர் புட்பமென்றும், உள்ளே குறும்பிதங்கி வழிகின்ற காதினை வள்ளைத்தண்டிழை கினையொத்ததெனப் புகழ்ந்தும், கையினால் எண்ணெயைகொண்டு தடவாதிருக்கின் கொடிய புழுதியும் பேனுமுண்டாகத் திரண்டமேகமென்றும், பலமொழிகளைப் பேசிப் புகழ்ந்து (மாந்தர்களாகிய) நீங்கள் விரும்பிப் போகின்ற நரகவாசல் (எத்தகையதென்னில் இயம்புதும்.)

(கு - ரை.) "வையமிசை மாரிபொய் கொண்டலோபசியசைவலமோகருங்குழல், நுதல்வளரிளம் பிறையொமதனன் கைச்சிலையோ, மதர்த்துமாண்மருள் மிகுந்து மையணிந்தையரி படர்ந்தகண் கடிநாவிமலர்த்தடத்தில் வளரிளஞ்சேலோவாடவர்மனஞ் சூறைகொள்ளும் வேலோ, செய்யபவளக்கடிகை யோவிதழிலங்கு நகைசெப்பு

வெண்டாளவடமோ, தீஞ்சொல்மாங் குயிலோசையோகிள்ளை மொழியோ தெவிட்டாத தெள்ளமுதமோ, திகழ்வதன மோராயிரந் திங்களொளியினைச்சேர்த்தே யமைத்திட்டதோ, செம்பொனஞ் சிறைய னங்குலவுதேன் வாவியிற் செழித்தகம் போதிகழ்களம், அய்யமணி மார்பிடங்கொண்டு பூரித்துச்சுணங்கு பூத்தொளிமிகுங்கத், தூரி குங்குசந்தனச் சாந்தணிதிலகுதுணை முலைவெண்முளரி முகையோ குதோரகட ற்குமிழியோ கூவிளங்கனோ சொல்லரிய ஹிமயகிரியோ, சொர்ணகிணங்க ளோரும் பமோ சிற்றிடைதூய மலர்வாளி யென்மேல் எய்யுமதனே, விண்ணிடைத்தோன் றுமின்னலோ விதழ்வில் பூங்கொடியோம்முன். இல்லெனச்சொல்லு நல்லல் குலரவோ தொடைபிலங்கு மிளவாழையோ பொன், இணையிலடிபங்கயப் போதோ மற்றேதோவியம் புதற்கயனனந்தன், இல்ரகட்கு மரிதென்னிலன்ன னே நின்னழகையாவருரை செய்வர்மாதோ'' எனப்புலவர் வியந்து பாடுவதுவழக்க மாகலின் "சொற்பலபேதித்துதித்து'' என்றனர்.

தோலுமிறைச்சியுந் துதைந்துசீப்பாயும்
காமப்பாழி கருவிளைகழனி
தூமைக்கடைவழி தொளைப்பெறுவாசல்
எண்சாணுடம்பு மிழியும் பெருவழி
மண்பாற் காமங் கழிக்கு மறைவிடம்
நச்சிக்காமுக ஞய்த்தாளென்றும்
இச்சித்திருக்கு மிடைகழிவாயில்
திங்கட்சடையோன் றிருவருளில்லார்
தங்கித்திரியுஞ் சவலைப்பெருவழி
புண்ணிதுவென்று புடவையமுடி

உண்ணீர்பாயு மோசைச்செழும்புண்
மால்கொண்டறியா மாந்தர்புகும்வழி
நோய்கொண்டொழியா நுண்ணியர்போம்வழி
தருக்கியகாமுகர் சாரும்படுகுழி
செருக்கியகாமுகர் சேருஞ்சிறுகுழி
பெண்ணுமாணும் பிறக்கும்பெருவழி
மலஞ்சொரிந்திழியு வாசற்கருகே
சலஞ்சொரிந்திடியுந் தண்ணீர்வாசல்

(பொ-ரை.) தோலும், மாமிசமும் நெருங்கிச்சீவடிகின்ற காமக்குகையாம் கருவோற்பத்தியாகும் கழனியாம், சூதகம் வழிகின்ற துவாரத்தினையுடைய வாயலாம், எட்டுச்சாணுடலிருக்கும் உடல்வெளிவரும் பெரியவழியாம், உலகத்தில் (ஆன்மாக்களின்) இந்திரியத்தினையொழித்தற்கேற்ற மறைந்த இடமாம், அத்தகைய இடத்தினை விரும்பிக்காமாந்தகாரனல் தானெக்காலத்தும், ஆசைகொண்டிருக்கும் உடலின் மத்தியிலுள்ள பெரியவாசலாம், சந்திரனை சடாபாரத்தினுடைய பெருமான் திருவருளினையடையாதவா இருந்து திரிகின்ற மெலிவான பெரியவழியாம், இது புண்ணுக்குச் சமானமென்று புடைவையைக்கொண்டு மூடியும் உள்ளேயிருந்து நீரினையூற்றும் ஓசையுடன் கூடியசிவந்தபுண்ணும், காமவாசைகொண்டு (சிவபெருமான் திருவருளினை) யறியாத மாந்தர்கள் நுழைகின்ற வழியாகும், காமநோய்பெற்றுஅது நீங்காத வற்பர்கள் போகும் வழியாகும் கருவம்கொண்டகாமிகள்நெருங்கும்படுகுழியாம். செருக்கினையுடைய காமிகள் சேருகின்ற சிறியகுழியாம், பெண்ணும் ஆணும் பிறப்பதற்கேதுவாகிய பெரியவழியாம், மலமானது வழிந்து இறங்குந் தண்ணீர் வாசலாம்.

இத்தைநீங்க ளினிதெனவேண்டா
பச்சிலையிடினும் பத்தர்க்கிரங்கி
மெச்சிச்சிவபத வீடருள்பவனை
முத்திநாதனை மூவாமுதல்வனை
அண்டரண்டமு மனைத்துள புவனமுங்
கண்டவண்ணலைக் கச்சியிற்கடவுளை
ஏகநாதனை யிணையடியிறைஞ்சுமின்
போகமாதரைப் போற்றுதலொழிந்தே.

(பொ - ரை.) இத்தகைய (நிதம்பத்தினை) நீங்கள் சுகமான தென்று விரும்பாமல், 'பொதுமகளிரைப் புகழ்தலின்று நீங்கி (வெறும்) பச்சிலையிடினும் அடியார்களுக்கு (மனம்) இறங்கி வியந்து (பாராட்டித் தமது) சிவபதமாகிய மோட்சவீட்டினைப் பாலிக்கின்ற பெருமானை மோட்சத்தினுக்குத் தலைவனை, நித்தியமாயுள்ள முதல்வனை அண்டகிபரண்டங்களையும் பதினான்குபுவனங்களையும் காரியப் படுத்திய தலைவனை, காஞ்சிமாநகரத்தில் எழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனை, தன்னந்தனியனை, (அவனது) இரண்டுதிருவடிகளையும் தொழுமின்கள்.

(கு - ரை.) இதுகாறுமெடுத்துக் கூறியதக்கவர்களாலே யருவருக்கத்தகுந்த அங்கத்தினுக்காசைப்படா திருக்கவேண்டு மென்பார் "இனிதெனவேண்டா' என்றனர்.வெறும்பச்சிலையினைப்பறித்துப்பரமனையருச்சிக்கினும் பத்தருக்குருப்பரிந்தருள், செய்வானென்பார், "பகிலையிடினும் பத்தர்கிறங்கி என்றனர்- தாயுமானவர், "கல்லாலெறிந்துங் கைவில்லாலடித்துங் கனிமதுரச், சொல்லாற்றுதித்து கற்பச்சிலை தூவியுந்தொண்டரின, மெல்லாம்பிழைத்தனரான் பற்ற கானினியேது செய்வேன், !கொல்லாவிரதியர்நேர்நின்ற முக்கட்கு

ருமணியே'' என்றதனுற்காண்க போகமாதரென்றது விலைமகளிரை. இவர்கள் பெய்மைக்குறித்துச் சொல்லவே, இல்லறத்திலிருந்து நற்புடைய மனைவியுடன் வாழ்ந்து இல்லறநெறிதவறாது, சிவசிந்தனையுடனிருக்கின்றவறில்லையென வேற்பட்டது. பின்னும் திருவெண்காட்டடிகள் மாதரையடிக்கடி வைவது பொருட்பெண்டிரை நோக்கியேயாம்.

# திருவேகம்பமாலை.

அறந்தா னியற்று மவனிலுங் கோடி யதிகமில்லந்
துறந்தா னவனிற் சதகோடி யுள்ளத் திறவிடையோன்
மறந்தா னறக்கற் றறிவோ டிருந்திரு வாதனையற் [பனே.
றிறந்தான் பெருமையை யென்சொல்லுவேன் கச்சியேகம்

(பொ-ரை.) காஞ்சீபுரத்தி லெழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனே! தருமஞ்செய்பவனைப்பார்க்கிலும் வீட்டை நீங்கித் துறவியானவன் கோடிபங்கு உயர்ந்தவன், இத்துறவியினைப் பார்க்கினும் மனத்துறவு அடைந்தவன் நூறுகோடிபங்கு உயர்ந்தவன், கோபமுழுவதனையு நீங்கி அறிவுமயமா யிருந்து சகலகேவல மற்றுத்தற்போதமொழிந்தவன் பெருமையினை நான் என்னவென்று சொல்லி (மதிப்பேன்.)

(கு-ரை.) அறமியற்றுபவன் இல்லறத்தான், இல்லந்துறந்தான் வானப்பிரஸ்தன், உள்ளத்துறவுடையோன் சந்நியாசி, இருவாதனையற்றிறந்தான் ஞானி பிரபஞ்சமுகமாகச் செல்லும் வாசனையையொடுக்கிக்கொண்டு சிவமயமாயிருந்து பிறவிக்கேதுவாகிய தற்போத

மொழிந்தவனே பெரியோ னென்பார் "என்சொல்லுவேன்" என்றனர். பதிபசுபாசவிளக்கம். "அறிவிலறிவாய கண்டிதமாய நந்தாநந்தமயமாகிச் செறியும்பரம சிவந்தன்னைத்தன்னுட்கண்டு தியானித்துக் கறவையருந்தப்பால் சுரருக்குங்காலமேனுங் கடைப்பிடிப்போர், பிறவிக்கடலைக் கடந்தோர்களவரேயுளகிற் பெரியோரே" என்றதனுற் காண்க.

கட்டி யணைத்திடும் பெண்டிரு மக்களுங் காலத்தச்சன்
வெட்டிமுறிக்கு மரம்போற் சரீரத்தை வீழ்த்திவிட்டாற்
கொட்டி முழங்கி யழுவார் மயானங் குறுயப்பா
லெட்டியடி வைப்பரோ விறைவாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! காஞ்சீபுரத்தி லெழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனே! ஆசைமிதியினாலே, இருகரங்களால்) சேர்த்து, (மார்புடனே) யணைக்கத் தகுந்தமனைவியரும் புத்திரரும். தச்சனாகிய இயமன் மரம்போன்ற சரீரத்தினை வெட்டி முறித்து கீழே மரம்போலத் தள்ளிவிட்டால் அவர்கள் சாப்பறையடிப்பித்து வாத்தியமுழக்குவித்துப் புலம்புவார் சுடுகாடுவரையில் வந்து (திருப்பிவந்து விடுவார்) அப்புறத்தில் ஓரடியாயினு வைப்பாரோ (வையார்.)

(கு-ரை.) பெண்டிரைக் கட்டியணைத்தல் காமமிகுதியால், மக்களைக்கட்டியணைத்தல் அன்புமிகுதியால், ஆன்மாக்களின் காலவரையறையுணர்ந்து வருபவனாகலின் இயமன்காலனென்னப்பட்டான், தச்சன் மரங்களை வெட்டிக்கீழே தள்ளுதல்போல இயமனும் உடலைக்கீழே தள்ளுபவனாகையால் தச்சனென்றார், மனைவியரும் புத்திரரும் மயானத்திற்கு அப்புறம் வாாரெனவே, செய்துள்ள புண்ணியபாவங்கள் சூக்குமவுடல் செல்லு முலகத்திற்கும் வருமென்பதாயிற்று.

கைப்பிடிநாயகன்றூங்கையிலேயவன் கையையெடுத்
தப்புறந்தன்னிலசையாமன் முன்வத் தயன்வளவி
லொப்புடன்சென்று துயினீத்துப்பின்வந்துறங்குவளை
யெப்படிநானம்புவே னிறைவாகச்சி யேகம்பனே.

(பொ-ரை.) இறைவனே! காஞ்சீபுரத்திலெழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனே! (விவாககாலத்தில் பலரறிய) கைம்பிடித்தகணவன் கையினை (மெள்ளத்தூக்கி அப்புரத்தில் சிறிது மசையாதபடி முன்னேவைத்துவிட்டு வேறு வீட்டிற்குத் தன்சம்மதத்துடன் சென்று தூக்கமின்றி (அன்னிய நாயகனொருவனுடன்சுகித்திருந்து) திரும்பிவந்து (தனது சொந்தநாயகன் பக்கத்தில் 'பழையபடி நித்திரை செய்பவளை இவ்வுலகத்தில் எவ்வாறு நம்புவேன்.

(கு-ரை.) "கைப்பிடிநாயகன் என்றது விலைமகளிரேயன்றி குலமகளிரும் இன்ன நடவடிக்கை யுடையாரெனக் குறித்ததற்கு. எப்படி நம்புவேன் என்றதனல் மாதர்கள் உள்ளத்தினையறிவதுகஷ்டமென்பதாயிற்று. "அத்திமலருமருங்காக்கை வெண்ணிறமுங் கத்துபுனமீன்பாதங்கண்டாலும். பித்தரே, காணரறிவுடையோர்க் கடவுருளங்காண்பரோ, மாணர் விழியார் மனம்" என்றதனற் காண்க.

நன்னாரிற்பூட்டிய சூத்திரப்பாவை நன்னார் தப்பினற்
றன்னுலுமாடிச் சலித்திடுமோவந்தத் தன்மையைப்போ
லுன்னாலியானுந் திரிவதல்லான் மற்றுனைப்பிரிந்தா
லென்னாலிங் காவதுண்டோ விறைவாகச்சி யேகம்பனே.

(பொ-ரை.) இறைவனே! காஞ்சீபுரத்தி லெழுந்தருளி யிருக்கும் ஏகாம்பரநாதனே; நல்ல நாரினல் கட்டப்பட்டிருக்கிற சூத்திர

ப்பதுமை (ஆடிக்கொண்டிருக்கிற சமயத்தில்) அந்தநக்கலநார் அறுக்துவிட்டால் பதுமையேயாடிசையுமோ (அசையாது) அந்தத்தன்மையைப்போல தேவரீரால் யானும் (இந்த வுலகத்தில்) சஞ்சரிப்பதல்லால், தேவரீரைப்பிரிந்தால் அடியேனால் இவ்வுலகில் ஆகும் காரிய (எதாவது) உண்டோ, (ஒரு சிறியதுமில்லை)

(கு - ரை.) ஆன்மா சுதந்தர வீனனாய்த்தனக்கெனவொரு செயலின்றியாயும் முதல்வன் செய்விக்க செய்பவனாகலின் 'என்னாலிங்காவதுண்டோ என்றனர். சிவஞான சித்தியார், 'உலகினி லென் செய்லெல்லாமுன்விதியே நீயே யுன்னின்றுஞ் செய்வித்துஞ் செய்கின்றாயென்று, நிலவுவதோர் செயலெனக்கில்லேனுன் செயலென்று நினை வார்க்கு வினைகளெல்லாம் நீங்குந்தானே'' என்றதனாற்காண்க. பதுமையினை யொருவன் ஆட்டுவிக்க ஆடுவதுபோல ஆன்மாவும் முதல்வன் ஆட்டுவிக்கவாடுமென்பார், 'தன்னாலுமாடிச் சலித்திடுமோ என்றனர். தேவாரம் "ஆட்டுவித்தாலா ரொருவராடாதாரே என்றதனாற் காண்க.

நல்லாரிணக்கமு நின்பூசைநேசமு ஞானமுமே
யல்லாதுவேறு நிலையுளதோவக மும்பொருளு
மில்லாளுஞ்சுற்ற முமைந்தரும் வாழ்வு
மெல்லாம்வெளிமயக்கே யிறைவாகச்சி யேகம்பனே.

(பொ-ரை.) இறைவனே' காஞ்சீபுரத்தி லெழுந்தருளி யிருக்கும் ஏகாம்பரநாதனே' நல்லவர்களுடைய சினேகமும், தேவரீர் சிவபூசையில் விருப்பதும், ஞானமும் அல்லாமல் வேறொன்று (ஆன்மாவிற்கு) உறுதியைகொடுக்கு நிலையுள்ளதான பொருள் உண்டோ (இல்லை) வீடும், திரவியமும், மனைவியும், உறவினரும் புத்திரரும், உலகவாழ்

க்கையும், அழகிய உடலும் இவையெல்லாம் புறம்பே யிருந்து மயக்க த்தக்கவைகளேயாம்.

(கு-ரை.) நல்லாரிணக்கமென்றது சங்கமவழிபாடு, நின்பூசை நேசம் என்றது இலிங்கவழிபாடு, ஞானமுமே என்றது ஆசாரியனை யடைதற்கேதுவாகிய ஞானவழிபாடு. இம்மூன்றுமே யொருவனுக்கு இன்றிமையாத உருதிப்பயனைக் கொடுத்தற்கேது வென்பார் "வேறு நிலையுளதோ' என்றனர். அகமுதல் உடம்பு ஈருகக்கூறப் பட்டன வெல்லாம்நம்மை யேமாற்றத்தக்கனவேயன்றி அவற்றாற்பிரயோசன மில்லை யென்பார், 'எய்லாம் வெளிமயக்கே' என்றனர். உபதேச காண்டம், "மக்களைநிதியைப் பேதைமகளிரை மருங்கு சூழ்ந்த, வொக்கலைநோக்கி யேமாந்துறுகதி நோற்கலாராய், மிக்கிழி நரகத்தாழ்வர் மேன்சிறு பறவைகண்டந்தோ, தக்கவெஞ் சுழனுக் கண்டை கொண்டு விண்டுயலாதன்றே" என்றதனுற் காண்க.

பொல்லாதவினைறி நில்லாதவனைப் புலன்கடமை
வெல்லாதவின்கல்வி கல்லாதவன்மெய் யடியவர்பாற்
செல்லாதவனுண்மை சொல்லாதவனின் திருவடிக்கன்
பில்லாதவன்மண்ணி லேன்பிறந்தேன் கச்சி யேகம்பனே.

(பொ-ரை.) காஞ்சீபுரத்திலெழுந்தருளி யிருக்கும் ஏகாம்பரநாதனே! (அடியேன்) கொடியன், நல்லவழியி னடவாதவன், பஞ்சேந்திரியங்களை யடக்காதவன் (கற்கவேண்டிய கல்வியினைக் கற்காதவன், உண்மையடியாரிடம் சிநேகியாதவன்! மெய்யென்பதுரையாதவன், தேவரீர் திருவடியினிடத்து அன்பியில்லாதவன் (இத்தகையன்) பூமிக்குப் (பாரமாக) ,ஏன்பிறந்தேன்.

(கு - ரை.) யாவருக்கும் நல்லவனும், தருமவழியில் நடப்பவனும் இந்திரியங்களின் வழியே மனத்தினை விடாதவனும், கண்டநூல்களைக் கற்றவனும், சிவனடியார் கூட்டுறவினை யுடையவனும், சத்தியவிரதனும், சிவநேசமுடையவனு மிருப்பவனே உலகத்தில் பிறந்ததனாலடைய வேண்டிய பெரும்பிரயோசனத்தையடைவனென்பதாம்.

பிறக்கும்பொழுது கொடுவந்த தில்லைப்பிறந்து மண்மே
லிறக்கும்பொழுது கொடுபோவ தில்லை யிடைநடுவிற்
குறிக்குமிச்செல்வஞ் சிவன்றந்ததென்று கொடுக்கறியா
திருக்குங்குலாமருக்கென்சொல்லுவேன் கச்சியேகம்பனே

(பொ-புரை.) காஞ்சீபுரத்திலெழுந்தருளி யிருக்கும் ஏகாம்பரநாதனே! (ஒருவன் உலகத்தில்) பிறக்கின்றகாலத்து (யாதொன்றையும் தன்னுடன்) கொண்டுவந்ததில்லை. பிறந்து (வாழ்ந்து) உலகில் இறக்குங்காலத்து (தானிதுகாறுஞ்சம்பாதித்த பொருள், திக்களிலொன்றினையும்) கொண்டுபோவதில்லை, பிறப்பிற்கும் இறப்பிற்கும்) மத்தியகாலத்தில் (அதாவது உலகில் வாழுங்காலத்தில் கிடைக்குஞ் செல்வம் சிவபெருமா னமக்குக் கொடுத்ததென்று எண்ணி இறப்பவர்க்குக்) கொடுக்காமல் இறந்துபோகும் பிரபஞ்ச அடிமைகட்கு நான் என்னவென்றெடுத்துரைப்பேன்.

(கு - ரை.) பூர்வ சென்மத்திற் புண்ணிய பலனுக்குத்தக்கபடி இச்சென்மத்தில் சிவபெருமான் வேண்டியசெல்வங் கொடுத்திருக்க இச்செல்வத்தினைக்கொண்டு இப்போது தானதருமங்களைச் செய்து அடுத்த சென்மத்தினு மிங்ஙனமே செல்வனாக வாழவேண்டுமென்று கருதாது சிறிதும் செலவழியாமலிருக்கும் உலோபர்கட்கு எடுத்துச் சொல்லியும் [illegible]ளாரென்பார், 'என்சொல்வேன்' என்றனர்.

அன்னவிசார மதுவேவிசாரமது வொழிந்தாற்
சொன்னவிசாரந் தொலையாவிசாரம் தோகையரைப்
பன்னவிசாரம் பலகால்விசாரமிப்பாவிநெஞ்சுக்
கென்னவிசாரம் வைத்தாயிறைவா கச்சியேகம்பனே.

(பொ-ரை.) இறைவனே! காஞ்சீபுரத்தி லெழுந்தருளி யிருக்கும் ஏகாம்பர நாதனே! அடியேனுக்கு முதலுண்டாவது) உணவு சம்பந்தமாக வுண்டாகும் துக்கம் அதுவே யெப்போது நீடித்த துக்கம், அதுநீங்கிய காலத்தில் திரவியந்தேடவேண்டு மென்னுந் துக்கம் நீங்கா துக்கம். (அது நீங்கியகாலத்தில்) மாதர்களை நெருங்கி வாழ வேண்டுமென்னுந்துக்கம் (இங்ஙனம்) எக்காலத்தும் துக்கமே, இத்தீய மனத்திற்கு என்ன துக்கம் வைத்தனை (இத்துக்கங்களி னின்று நீங்கும் காலம் எக்காலமோ அறிகிலேன்.)

(கு-ரை.) சிவபெருமான் திருவருளினை யடைதற்கேதுவாகிய சாதனங்களிற் சிறிதும் புத்தியைச் செலுத்தாது, உடலைக் காத்தலி னும் போகங்களை யனுபவித்தலினும், சிற்றின்பம் நுகர்தலினும் சாதனமாயுள்ள வற்றிலேயே காலங்கழிக்கின் உய்வதெங்ஙன மென்பார் 'என்ன விசாரம் வைத்தாா் என்றனர்.

கல்லாப்பிழையுங் கருதாப்பிழையுங் கசிந்துறுகி
நில்லாப்பிழையு நினையாப்பிழையுநின்னஞ்செழுத்தைச்
சொல்லாப்பிழையுந் துதியாப்பிழையுந்தொழாப்பிழையு
மெல்லாப்பிழையும் பொருத்தருள்வாய் கச்சியேகம்பனே.

(பொ-ரை.) காஞ்சீபுரத்தி லெழுந்தருளியிருக்கும் ஏகாம்பர நாதனே! கற்கவேண்டிய நூல்களை) கற்காத குற்றத்தினையும் அங்

நூல்களை விரும்பாத குற்றத்தினையும், மனங்கசிந்து உருகியவ்வழி நில்லாத குற்றத்தினையும் தேவரீரது பஞ்சாக்ஷரத்தைச் செபியாக் குற்றத்தினையும், தோத்தரியாத குற்றத்தினையும் (மற்று மெனையறியாது செய்யும்) எல்லாக்குற்றங்களையும் மன்னித்துத் திருவருள் புரிந்தருளவேண்டும்.

(கு-ரை.) கற்றல், கேட்டல், சிந்தித்தல், தெளிதல் உபாய நிஷ்டை இவற்றிலொன்றேனும் செய்யவில்லை யென்பார் முறையே "கல்லாப்பிழையும்.........சொல்லாப்பிழையும் என்றனர்" இந்நான்கினுந்தேர்ந்த பரமஞானிகளாய் விளங்குபவரும் சிவபெருமானைத் தோத்தரித்து வணங்கவேண்டுவது அவசியமென்பார். "துதியாப்புழையும் தொழாப்பிழையுமென்றனர்" தன்னையறியாமலும் சில சிவாபராத மூண்டாமென்பார் "எல்லாப்பிழையும் பொறுத்தருள்வாயென்றனர்."

மாயநட்போரையு மாயாமலமெனு மாதரையும்
வீயவிட்டோட்டி வெளியேபுறப்பட்டு மெய்யருளாந்
தாயுடன்சென்றுபின் றாதையைக்கூடிப்பின் றாயைமறந்
தேயுமதேநிட்டை யென்றானெழியிற் கச்சியேகம்பனே.

(பொ-ரை.) அழகினைவாய்ந்த காஞ்சீபுரத்திலெழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனே! (அடியேனைத் தடுத்தாட் கொண்டகுருநாத) மாயையென்னும் சினேகரையும், ஆணவமலமென்னும்மாதர்களையும், தன்னிடத்திருந்தும் அப்புறப்படுத்திச் சந்நியாசமடைந்து உண்மையான திருவருளாகும் தாயாருடன் தொடர்ந்து தந்தையாகிய சிவபெருமானை யடைந்து பின்னர்தாயினைமறந்து பொருந்தியிருப்பதே நிஷ்டையெனத்திருவாய் மலர்ந்தருளினன்.

(கு - ரை.) கன்மத்தினை எங்ஙனமாயினும் அனுபவித்தே தீர வேண்டுமாதலினால் மாயாகாரியங்களிடத்துப்பற்றும் ஆணவமலத்தடிப்பும் நீங்கவே இதுகாறுமலத்துடன் விரவியிருந்த திரோதானசத்தி அருட்சத்தியாக விளங்க அவ்வருட்சத்தி மூலமாக முதல்வனுடனிரண்டறத்தியானிக்கும் சமயத்தில் திருவருட்டோற்றும் மூணந்து தோன்று தாகலின் அந்தநிலையே நிற்விகற்ப சிவராஜயோக சமாதியென்றனர்.

வரிக்கோலவேல்விழி யாரனுராக மயக்கிற் சென்று
சரிக்கோதுவேனெழுத் தஞ்சுஞ்சொலேன்றமியேனுடல
நரிக்கோகழுகு பருந்தினுக்கோவெய்ய நாய்தனக்கோ
வெரிக்கோவிரை பெதுக்கோ விறைவாகச்சியேகம்பனே.

(பொ - ரை.) இறைவனே காஞ்சீபுரத்திலெழுந்தருளி யிருக்கின்ற ஏகாம்பரநாதனே! செவ்வண்டினையொத்த அழகிய வேலாயுதம் போன்றமாதர்களுடைய ஆசையென்னும் மயக்கிற்சிக்கி (அவர்கள்) அழகினை வர்ணித்துக்கொண்டிருப்பேன். பஞ்சாச்சரமகாமந் திரத்தினைச்செபியேன் (இத்தகையனுடைய) உடல்நரியினுக்கோ, கழுகினுக்கோ, பருந்தினுக்கோ, கொடியநாயினுக்கோ, அக்கினிக்கோ, மற்றெவற்றிற்கோ இரையாய் விடும்.

(கு - ரை.) வேதவிருதயமாய் மந்திராத்தினமாக விளங்கும்பஞ்சாட் சரதியானத்தினைக்கை விட்டுமாதர்மயக்கிற் கட்டுப்பட்டிருப்பவர்கள் உருவசித்தி, அருவசித்தி, அருவுருவசித்தி, மூன்றிலொன்றையடையாது தங்கள் தேகத்தினை நரிமுதலிய வற்றிற்கு இரையாகும்படிச் செய்வார்கள்'

காதென்று மூக்கென்றுகண்ணென்றுகாட்டியென்கண்ணெ
மாதென்றுசொல்லி வருமாயைதன்னை மறலிவிட்ட[திரே
தூதென்றெண்ணமற் சுகமென்றுநாடுமிந்ததுர்ப்புத்தியை
யாதென்றெடுத்துரைப்பே னிறைவாகச்சி யேகம்பனே.

(பொ - ரை.) இறைவனே! காஞ்சீபுரத்திலெழுந்தருளி யிருக்கும் ஏகாம்பா நாதனே! காதுகளெனவும், மூக்கெனவும், கண்களெனவும் என்கண்முன்னேகாட்டி (இவையனைத்தையுமுடைய) பெண்ணென்று சொல்லிவருகின்ற மாயையாகிய வடிவினை எமன் என்முன்னனுப்பிய தென்று நினையாமல் இன்பங்கொடுக்கத்தகுந்த உருவமென விரும்பும் எனக்குண்டாகி யிருக்கும் கெடுதலையான புத்தியின்றன்மையை யென்னவென் றெடுத்துரைப்பேன்.

(கு - ரை) பேரின்பத்தினையடை வதற்கேதுவாயுள்ள விடயங்களில் மனத்தினைச்சிறிதுஞ் செலுத்தாமல், சிற்றின் பத்தினையடைவதற்கேதுவாயுள்ள மாதரிடத்துப் புத்தியினைச் செலுத்தியதிலழுந்திகிடக்கின் இயமன் தூதுவர் அஞ்சாதுவந்து இலேசாக அழைத்துக் கொண்டுபோய்விடுவ ரென்பதாம்.

ஊருஞ்சதமல்ல வுற்றார் சதமல்ல வுற்றுப்பெற்ற
பேருஞ்சதமல்ல பெண்டீர்சதமல்ல பிள்ளைகளுஞ்
சீருஞ்சதமல்ல செல்வஞ்சதமல்ல இத்தேசத்திலே
யாருஞ்சதமல்ல நின்றாள் சதங்கச்சி யேகம்பனே.

(பொ - புரை.) காஞ்சீபுரத்திலெழுந்தருளி யிருக்கும் ஏகாம்பர நாதனே! ஊரும் நித்தியமன்று, சுற்றத்தாருநித்தியமன்று விரும்பிப் பெற்றெடுத்ததாய் தந்தையரும் நித்தியமன்று, மனைவியரும்நித்திய

மன்று, புத்திரர்களும் உலகத்திலனுபவிக்கும் சிறப்புகளும் நித்திய மன்று, திரவியமும் நித்தியமன்று இவ்வுலகிலே எத்தகையருநித்தி தியமன்று (எல்லாமனித்தியமே) தேவரீர் திருவடியே நித்திய மா னது.

(கு - ரை.) ஈண்டுகுறித்தவற்றுள் ஆன்மாக்கள் யாரும் இறப் பிலும் பிறப்பிலும் கட்டுப்பட்டுக்கிடத்தலினாலும், பதார்த்தங்கள்யா வும் மாயாகாரியங்களாயிருத்தலினாலும் இவையெல்லாம் சதமல்ல வென்றார். இறப்பினும் பிறப்பினுங்கட்டுப்படாது என்று நித்தியனா யுள்ளவன் சிவபெருமா னொருவனேயாகலின் அவன் திருவடியே சத மென்றனர்.

சீறும்வினைய து பெண்ணுருவாகித்திரண்டுருண்டு
கூறுமுலையு மிறைச்சியுமாகிக் கொடுமையினால்
பீறுமலமு முதிரமுஞ்சாயும் பெருங்குழிவிட்
டேறுங்கரைகண்டிலே னிறைவாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! காஞ்சீபுரத்தி லெழுந்தருளியிருக் கும் ஏகாம்பர நாதனே! கொடுமையினை விளைவிக்கும் வினையானது ஒருபெண்ணின்வடிவினையெடுத்து (அப்பெண்ணினிடம்) திரண்டு உருண்டுகுவித்த நுனியும் மாமிசத்திரட்சியினாலு (மமைந்தஸ்தனத் தின்) கொடுமையினையும், மலம்வரும் (குதத்தினுக்குச் சமீபத்தில் உதிரம் வழியும் (நீச்சக்குழியாகிய) பெரியகுழியினையும்விட்டு நீங்கி யடையும் கரையொன்றினையும் கண்டேனில்லை.

(கு - ரை.) பிரபஞ்சமூகமாக மனத்தினைச் செலுத்தியுள்ள எத்தகையினரையும், மாதர்கள் அங்கங்களுக்குள் சிறந்துவிளங்கித் தம வயமாக விழுத்துத்தங்களிடத்து மயங்கச்செய்வன, தனமும்நீச்ச

விஷயமாயிருத்தலினால் அவையிரண்டினையு மாத்திரங்குறித்தனர்.

பொருளுடையோரை செயலினும் வீரரைப் போர்க்
களத்துந், தெருளுடையோரை முகத்தினுந்தேர்ந்து தெ
ளிவதுபோ, லருளுடையோரைத் தவத்திற் குணத்திலரு
ளிலன்பி, லிருளறுசொல்லினுங் காணத்தகுங்கச்சியே
கம்பனே.

(பொ ரை.) காஞ்சீபுரத்திலெழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனே செல்வமுடையவர்களை அவர்களுடைய (தருமச்) செய்கைகளாலும், வீரமுடையவர்களை அவர்களுடைய (தீர) யுத்தத்தினாலும் அறிவுடையோர்களை அவர்களுடைய (நல்ல) மூகக்குறியினாலும் தேர்ந்து தெளிந்து கொள்வது போல, திருவருளுடைய பெரியோர்களை அவர்கள் தவத்தினாலும், குணத்தினாலும், கிருபையினாலும், அன்பினாலும், குற்றமற்ற வசனத்தாலும் தெரிந்து கொள்ளலாம்.

(கு - ரை.) உலகில் ஒவ்வொருவரும் தாங்கள் தாங்கள் செய்யுங் காரியங்களைக் கண்டு அக்காரியங் கட்குக்காரணமாயுள்ள கருத்தாக்களின் உண்மைத்தன்மையை கண்டு தெரிந்துகொள்ளலாம் என்றனர்.

பருத்திப் பொதியினைப் போலேவயிறுபருக்கத்தங்க
டுருத்திக்கறுசுவை போடுகின்றார் துறந்தோர்தமக்கு
வருத்தியமுதிடமாட்டா ரவரையிம் மாநிலத்தி
லிருத்திக்கொண்டே னிருந்தாயிறைவாகச்சியேகம்பனே.

(பொ - ரை) இறைவனே! கஞ்சீபுரத்திலெழுந்தருளி யிருக்கும் ஏகாம்பரநாதனே! பஞ்சின் முட்டையினைப் போலுள்ளவயிறுநா

ளுக்கு நாள்தொப்பை யிட்டு அதிகப்பட (ஒவ்வொருவரும்) தங்கள் தோற்பைக்குஅறு சுறையுடன் கூடியபண்டங்களை யிடுகின்றார் (இங்ஙன மின்றி,) துறவிகட்கு(அன்புடன்வலிய)வரவழைத்து அன்னம் படைக்கமாட்டார் அத்தகைய உலோபர்களை இப்பெரிய பூமியில் என்வைத்துக் கொண்டிருக்கின்றனை. யாதொரு பிரயோசனமில்லை என்பதாம்.

(கு. ரை.) "இல்வாழ்வானென்பானியல் புடைய மூவர்க்கு நல்லாற்றினின்றதுணை" என்றதரும நூலுக்கு விரோதமாக நடக்கின்றவன் உலகிலிருந்தால் அவன்பழக்கத்தால் பலருங்கெடுவராகலின் அத்தகையினரைச்சீக்கிரம் இவ்வுலகத்தினின்றும் அப்புறப்படுத்த வேண்டுமென்றனர்.

பொல்லாவிருளகற் றுங்கதிர்கூகைக்கென் புட்கண்ணினுங்
கல்லாயிருந்திடு மாறொக்குமே யறிவோருளத்தில்
வல்லாரறிவா ரறியார்தமக்கு மயக்கங்கண்டா
யெல்லாம் விழிமயக்கே யிறைவாகச்சி யேகம்பனே.

(பொ-ரை.) இறைவனே! காஞ்சீபுரத்திலெழுந்தருளி யிருக்கும் ஏகாம்பரநாதனே! அதிகமான இருளையகற்றும் சூரியன்கிரணம் கூகையென்று சொல்லப்படுகின்றபட்சியின் கண்ணுக்குஇருளாகவே யிருந்திடுந்தன்மையினையொக்கும். அறிவாளிகள் தமது உள்ளத்தில் அகவிழிகொண்டு பார்க்கவல்ல வராகலின் அவர்கள்தம் கண்ணால் (ஞானசூரியனை) அறிவதும் அறியாதவர்கட்கு (அறியாமையாகிய) மயக்கம் காரணமாயிருப்பதும் (ஆலோசிக்குமிடத்து) இவையனைத்தும் கண்மயக்கேயாம்.

(கு-ரை.) பூதசூரியன் எல்லார்கண் களுக்கும் உபயோகமாகவிருக்கினும் கூகையின் கண்களுக்கு உபயோகப்படுமாறில்லை போல

ஞான சூரியன் எல்லார் உள்ளங்களினும் பிரகாசிக்கினும் அறியாமை வாய்ந்தார் உள்ளத்தில் பிரகாசியா னென்பதாம்.

வாதுக்குச்சண்டைக்குப் போவார்வருவர் வழக்குரைப்பர்
தீதுக்குதவியுஞ் செய்திடுவர் தினந்தேடி-யொன்று
மாதுக்களித்து மயங்கிடுவார் விதிமாளுமட்டு
மேதுக்கிவர்பிறந்தா யிறைவாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! காஞ்சீபுரத்திலெழுந்தருளி யிருக்கும் ஏகாம்பரநாதனே! (இவ்வுலகினர்) தங்கள் ஆயுள்நாள்பரியந்தம் வீண்தருக்கம் புரிபவும் போர்புரியவும் போவதும் வருவதுமா யிருப்பர்கள் (வீண்) வழக்குத் தொடுப்பார் தீமையானகாரியங் கட்கு, வேண்டிய உதவி புரிவார்கள்'' பிரதிதினமு மலைந்து (திரவியஞ் சேகரித்து) ஒரு பெண்ணுக்குக் கொடுத்து மயங்கியிருந்திடுவர், எதன் பொருட்டு இவ்வுலகிலிவர், பிறந்தார்.

(கு-ரை.) சாகிறவரைக்கும் பகிர்முகமாயுள்ள விவகாரங்களிற் பிரவேசித்து வீணாள்கழித்து ஒருபயனையுமடையாது போகின்றனரேயன்றி அந்தர்முகமாக விருந்து மறுமைக்கடைய வேண்டிய புண்ணிய சாதனங்களி லொன்றையும் சேகரித்துக் கொண்டாரில்லையென்றனர்.

ஓயாமற்பொய்சொல்வர் நல்லோரைநிந்திப்ப ருற்றுப்பெ
தாயாரைவைவர் சதியாயிரஞ்செய்வர் சாத்திரங்க [ற்ற
ளாயார்பிறர்க்குபகாரஞ்செய்யார் தம்மையண்டினர்க்கொ
ன், நீயாரிருந்தென்னபோயென்னகாண்கச்சியேகம்பனே

(பொ-ரை.) காஞ்சீபுரத்திலெழுந்தருளி யிருக்கும் ஏகாம்பரநாதனே! (உலகத்திற் பெரும்பாலோர் எப்போது பொய்பேசிக்

கொண்டேயிருப்பர், நல்லவர்களை தூஷிப்பர் அனேக தவங்களைச் செய்து பெற்றெடுத்ததாயினை நிந்தைசெய்வார் அனேகமான வஞ்சகங்களைச் செயவர், உண்மைச் சாத்திரங்களை ஆராயார், அந்நியர்கட்கு பகாரம் செய்யார், தம்மையடுத்து யாசித்தவர்கட்கு ஒருசிறிது மீளார் (இத்தகையினர்) உலகத்தில் வாழ்ந்தென்ன இறந்தென்ன இரண்டு மொன்றே.

(கு - ரை.) தாங்கள் தீமையினைச்செய்து கொண்டிருப்பதன்றி, தங்கட்குயாதொருசம்பந்த மில்லாரைருவதலும், பலபிரகாரத்தாலும் தமக்குநன்மை செய்தாரைநிந்திதலும், தாமடையவேண்டியவற்றை யடையாமலும் ‘இப்பிரகாரமாக எவ்விதத்திலு நன்மைசெய்யாது தீமையினையே செய்து கொன்டிருப்பவர் உலகிலிருந்து வாழ்தலி லும் இறத்தலே நன்றென்றார்.

அப்பென்றும்வெண்மையாதாயினுமாங்கந்நிலத்தியல்பால்
தப்பின்றியேகுண வேற்றுமைதான்பல சார்தலினாற்
செப்பிலபக்குவம் பக்குவமாயுள்ள சீவனிலு
மிப்படியேநிற்ப னெந்தைபிரான் கச்சியேகம்பனே.

(பொ - ரை.) எமது தந்தையாகிய பெருமானும்! காஞ்சிபுரத்தி லெழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனுமானவனே நீரானது எக்காலத்தும் வெண்மை நிறத்தினையுடையதாயினும் உலகில் பூமியின் சம்பந்தத்தால் தன்னிடத்திலே குற்றமின்றி அடுத்தநிலத்தின் சார்பால் பலநிறத்தினைப் பெறுதலைப்போல, ஆராயுங்கால் பக்குவம் அபக்குவமான வேற்றுமையுள்ள சீவன்களிடத்தும் அவ்வாறேயிருப்பன்.

(கு - ரை) சிவபெருமான் சர்வவியாபகனாய் ஆன்மாக்களோடும் இரண்டறக்கலந்து எக்காலத்து மிருக்குந் தன்மையுடையனாய்

னும், அவன் திருவருள் பக்குவரிடத்து வெளிப்பட்டும், அப்பக்குவரி டத்து மறைந்தும் சீவத்தன்மைகளுக்குத் தக்கவாறு விளங்குவனென் றனர்.

நாயாப்பிறந்திடி னல்வேட்டையாடி நயம்புரியுந்
தாயார்வயிற்றி னராய்ப்பிறந்துபின் சம்பன்னராய்க்
காயாமரமும் வறளாங்குளமுங் கல்லாவுமென்ன
ஈயாமனிதரை யேன்படைத்தாய் கச்சியேகம்பனே.

(பொ-ரை.) காஞ்சீபுரத்தி லெழுந்தருளி யிருக்கும் ஏகாம்பர நாதனே! நாய்ச்சென்மமாகப் பிறந்திட்டால் தக்க வேட்டையினைச் செய்து (தன் எசமானனுக்கு) நன்மையினை செய்யும், தாயினது வயிற்றில் மனிதர்களாகப் பிறந்து பிறகு செல்வர்களாய் (வாழ்ந்து) காய்காய்க்காத மரத்தினைப்போலவும், சலம் வற்றிய குளத்தினைப் போலவும், கல்லினாற்செய்த பசுவினைப்போலவும், (தன்னை யடுத்த தர்க்கு ஒன்று) கொடாதாரை யேனுண்டாக்கினை.

(கு-ரை.) காயா மரமும், வறண்ட குளமும், கல்லாவும் யாருக்கு முபயோக மில்லாதவாறு உலோபிகளா லியாதும் பிரயோசனமில்லை யென்பதாம். திருமந்திரம். "எட்டிபழுத்த விருங்கனி வீழ்ந்தன வொட்டிய நல்லறம் செய்யாதவர் செல்வம், வட்டி கொண்டாட்டியே மண்ணின் முகந்திடும், பட்டப் பதகா பயனறியாரே" என்றதனாற் காண்க, உலோபிகள் ஏழைகள் வந்தால் நாய்போலக் குலைப்ப ரென்பார் நாயினைக்குறிப்பாற் கூறினர்.

ஆற்றிற்கறைந்த புளியாக்கிடாமலென் னன்பையெல்லாம்
போற்றித்திருவுளம் பற்றுமையா புரமூன்றெரித்துக்
கூற்றைப்பணிகொளுந் தாளுடையாய்குன்றவில்லுடையா
யேற்றுக்கொடியுடையா யிறைவாகச்சி யேகம்பனே.

(பொ-ரை.) இறைவனே ! காஞ்சீபுரத்தி லெழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனே ! திரிபுரங்களையும் தகித்தும், இயமனை யடிமை கொளும் திருவடிகளை யுடையானே ! மேருமலையினை வில்லாகவுடையானே ! இடபக்கொடியை யுடையவனே ! (தேவரீர் இடத்து அடியேன் வைத்திருக்கும்) அன்பனைத்தையும் ஆற்றிலே கரைத்துவிட்ட புளியினைப்போலச் செய்திடாமல் காத்து (அடிமையாக்கிக்கொள்ள) சித்தம் வைக்கவேண்டு மையனே.

(கு - ரை.) ஆற்றிலே கரைத்த புளியினால் நீருக்கு யாதொரு பிரயோசன மில்லாதவாறுபோல, தேவரீர் திருவருளாகிய நதியிற் கலக்கும் அடியே னன்புபிரயோசன மற்றுப் போகாதபடி அன்பிற் குத்த குந்த அருள் செய்யும்படி கருணைவைத்தல் வேண்டுமென்பதாம்.

பெண்ணாகிவந்தொரு மாயப்பிசாசம்பிடித்திட்டென்னைக்
கண்ணால்வெருட்டி முலையான்மயக்கிக் கடிதடத்துப்
புண்ணாங்குழியிடைத்தள்ளியென்போதப்பொருள்பறிக்க
வெண்ணாதுனைமறந்தே னிறைவாகச்சி யேகம்பனே.

(பொ - ரை.) இறைவனே ! காஞ்சீபுரத்திலெழுந்தருளி யிருக்கும் ஏகாம்பர நாதனே ! மாயையென்று சொல்லப்படுகின்ற பேயானது பெண்ணுருவெடுத்துவந்து என்னைப் பிடித்துக்கொண்டு அதன் கண்களினாலே மருள்செய்து, தனங்களால் மயங்கச்செய்து, மிக விசாலமான புண்ணென்று சொல்லும்படியான (நீச்சம்) என்னும் பள்ளத்தில் தள்ளி என்னுடைய அறிவினைக் கிரகித்துக்கொள்ளத் தேவரீரை நினையாது மறந்து விட்டேன்.

(கு-ரை.) மாதர்கள் மையலாகிய மருளிலே மயக்குண்டார் சிந்தை தெளிவதில்லையாகலின் 'உனைமறந்தே' என்றனர் திருமந்திரம் "பொருள் கொண்ட கண்டனும் போதகையாரும், மிருள் கொண்ட பின்வெளிகொண்டு நின்றோரு, மருள்கொண்ட மாதர் மயமுறுவார்கள், மருள்கொண்ட சிந்தையை மாற்றகில்லாரே." என்றதனாற் காண்க.

நாவாரவேண்டும் விதஞ்சொல்லுவாருனை நான்பிரிந்தாற்
சாவேனென்றேயிருந்தொக்கவுண்பார்கள் கைதாண்வரண்
போய்வாருமென்றுநடுத்தலைக்கேகுட்டும்பூவையருக்[டாற்
கீவார்தலைவிதியோ விறைவாகச்சி யேகம்பனே.

(பொ-ரை.) இறைவனே! காஞ்சீபுரத்தி லெழுந்தருளி யிருக்கும் ஏகாம்பர நாதனே! ஒருவனிடத்தில் செல்வமிருக்கும்பொழுது (விலைமாதர்கள்) நாவினால் நல்லவார்த்தைகளனைத்தையும் சொல்லுவார்கள் உன்னைவிட்டுப் பிரிந்துவிடின் உடனே இறந்து விடுவேனென்று உடனிருந்து கலந்துண்பார்கள், செல்வம் குறைந்துவிட இவ்விடம் விட்டுப் போய்வாருமெனச் சிரசிற் குட்டியனுப்பும் மாதர்கட்குத் (திரவியம்) கொடுப்பது அவர்கட்குத் தலைவிதியோ! (அறியேன்.)

(கு-ரை.) விலைமாதர்கள் சொல்வதனைத்தும் பொருள் பறிக்கின்ற வார்த்தை யென்பார் 'குட்டும் பூவையர்' என்றனர் 'வெம்புவாள் விழுவாள் பொய்யே மேல்விழுந் தழுவாள் பொய்யே, தம்பலம் தின்பாள் பொய்யே சாகிறேனென்பாள் பொய்யே, அம்பினுங் கொடியகண்ணா ளாயிரஞ் சிந்தையாளை, நம்பினபேர்களெல்லா நாயினுங் கடையாவாரே. என்றதனாற் காண்க.

கல்லார்சிவகதை நல்லோர் தமக்குக் கனவிலுமெய்
சொல்லார்பசித்தவர்க் கன்னங்கொடார் குருசொன்னபடி
நில்லாரறத்தை நினையார் நின்னை நினைவிற்சற்று
மில்லாரிருந்தென் னிறந்தென்புகல்கச்சி யேகம்பனே.

(பொ-ரை.) காஞ்சீபுரத்தி லெழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனே! சிவபெருமான் சரித்திரங்களைப் படியார், நல்லவர் தமக்குக் கனவினிடத்தும் உண்மையினைப் பேசார், பட்டினி கிடப்பார்க்கு அன்னங் கொடார், 'ஆசரியர் சொன்னபடி நில்லார்' தருமஞ் செய்ய எண்ணார் தேவரீருடைய திருநாமத்தினை நெஞ்சினினையார் (இத்தகையினர் உலகில்) இருந்தென்ன இறந்தென்ன.

(கு-ரை.) சிவபுராணங்களைப் படித்தலும், சிவனடியாரிடத்து உண்மை பேசுதலும், சிவனடியார்க் கன்னமிடுதலும், சிவதருமங்களைச் செய்தலும், சிவநாமங்களை யுச்சரித்தலும், ஆசாரியர்கட்டளையிற் கட்டுப்படுதலும் மனிதசென்ம மெடுத்தலினாலுண்டாம் பிரயோசன மென்றனர்.

வானமுதத்தின் சுவையறியாதவர் வண்கனியின்
றேனமுதத்தின் சுவையெண்ணல்போலத் தனித்தனியே
தேனமுதத்தின் றெளிவாயஞானஞ் சிறிதுமில்லார்க்
கீனமுதச்சுவை நன்றல்லவோ கச்சியேகம்பனே.

(பொ-ரை.) காஞ்சீபுரத்தி லெழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனே! தேவாமிர்தத்தின் சுவையினைத் தெரியாதவர்கள் வண்மை பொருந்திய பழத்தினுடைய சுவையினை நாடுதல்போல, தனித்தனியாகத் தேன் சுவையினும் பாலின் சுவையினும் மிகுந்துள்ள (சிவ) ஞானச் சுவையினைச் சிறிது மறியாதவர்கட்கு (கடல்) ஈந்த அமுதச் சுவை நன்றாகத் தோன்றுமல்லவா?

(கு - ரை.) நரைதிரையினைப் போக்கடிக்கத்தகுந்த தேவாமிர்தத்தினை நாடாது சிலர் பழங்களை நாடித் திருப்தியடைதல் போல, முதல்வனுடன் இரண்டறக்கலந்து அனுபவிக்கும் சிவானந்தத்தினை நடாதவர் தேவாமிர்தத்தினை நாட எண்ணுவர். எனவே கனியினை நோக்க அமுதஞ் சிறந்ததாயினும், ஞானத்தினைநோக்க அமுதம் தாழ்ந்ததேயாம்.

ஊற்றைச்சரீரத்தை யாபாசக்கொட்டிலை யூன்பொதிந்த
பீற்றற்றுருத்தியைச் சோறிடுந்தோற்பையைப் பேசரிய
காற்றிற்பொதிந்தநிலையற்றபாண்டத்தைக்காதல்செய்தே
யேற்றுத்திரிந்துவிட்டே னிறைவாகச்சி யேகம்பனே.

(பொ - ரை.) இறைவனே! காஞ்சீபுரத்திலெழுந்தருளி யிருக்கும் ஏகாம்பரநாதனே! நாறுகின்ற உடலினை, பொய்நிறைந்த ஒதுக்கிடத்தினை, மாமிசம் தங்கிய கிழிந்துள்ள துருத்தியினை, சாதத்தினை கிடைக்கும் தோற்பையினை, சொல்லற்கரிய காற்று நிறைந்துள்ள நிலையில்லாப் பாண்டத்தினை விரும்பங்கொண்டே தாங்கி யுலவினேன்.

(கு-ரை.) எவ்விதத்தும் சிறிதுங் கௌரவமில்லாத உடலினைத் தாங்கி வாழுதலிலென்ன பிரயோசன மென்றனர். "ஒன்றுமலச் செடிலொன்பது பீறல்வொன்பதிலு, நின்றுமலச் செடில் வீசுமெந் நேரமு நீர்வட்டன்றைக் கன்று துடைப்பினும் போகாது பாழ்த்த வருவருப்பை, யென்று துடைப்பனுல கேநாகமிதிலு நன்றே" என்றதனாற் காண்க.

சொல்லால்வருங்குற்றஞ்சிந்தனையால்வருந்தோடஞ்செய்த
பொல்லாததீவினை பார்வையிற்பாவங்கள் புண்ணியநூ

லல்லாதகேள் வியைக்கேட்டிடுந்தீங்குகளாயவுமற்
றெல்லாப்பிழையும் பொருத்தருள்வாய்கச்சி யேகம்பனே.

பொ - ரை.) காஞ்சீபுரத்தி லெழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனே! நான் வார்த்தை சொல்லும்போது சொற்களால் நேரிடுங் குற்றங்களையும், எண்ணும்போது மனத்தால் நேரிடுங் குற்றங்களையும், உடலாற் காரியங்களைச் செய்யும்போது விளைந்த குற்றங்களையும், கண்ணால் விளைந்த குற்றங்களையும், பாபநூல்கள் படித்தலினால் வருங் குற்றங்களையும் முதலியவற்றோடும், மற்றும் பற்பல வகையால் நேரிடுங் குற்றங்களையும் பொறுத்தருளவேண்டும்.

(கு-ரை ) சொல், சிந்தனை தீவினை என்றதனால் மனம் வாக்குக் காயங்களால் நேரிடுங் குற்றங்கள் புண்ணிய நூலென்றதுபதி நூலினை அல்லாத கேள்வியென்றது பசுபாசநூல்களை, குற்றங்கள் அறிந்தும் அறியாமலும் செய்வது ஆன்ம சுபாவமாகலின் பொறுத்தருளவேண்டுமென்றனர்.

முட்டற்றமஞ்சளை யெண்ணெயிற்கூட்டி முகமினுக்கி
மெட்டிட்டுப்பொட்டிட்டுப் பித்தளையோலைவிளக்கியிட்டுப்
பட்டப்பகலில் வெளிமயக்கேசெய்யும் பாவையர்மே
லிட்டத்தை நீதவிர்ப்பா யிறைவாகச்சி யேகம்பனே.

(பொ - ரை.) இறைவனே! காஞ்சீபுரத்தி லெழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனே! நல்ல மஞ்சலினை நல்லெண்ணெயுடன் கலந்து முகத்திற் பூசிக்கொண்டு மினுக்கி (கால்களிலென்றும்) மோதிரந் தரித்து, (முகத்தில்) திலதமிட்டு, காதில்) பித்தளைச்சுருளைத் துலக்கிப் பூண்டு, பகற்காலத்திலேயே வெளிமயக்கத்தை யுண்டாக்கும் மாதர்கள்மேல் வைத்திருக்கும் ஆசையினைத் தேவரீர் தவிர்த்தருளவேண்டும்.

(கு - ரை.) பெண்ணொருந்தி குரூபியாக விருந்திடினும் தன்னை யுலங்கரித்துக் கொண்டு அவ்வேடத்தால் பகர்காலத்திலேயே விடநாயகர்களை மயக்குவதுண்மையின் அவர்பால் நேசம்வைத்தல் தகாதென்பர், 'இடத்தை நீதவிர்ப்பா யென்றனர்.'

பிறந்துமண் மீதிற் பிணியேகுடிகொண்டு பேரின்பத்தை
மறந்துசிற்றின்பத்தின் மேன்மயலாகிப்புன் மாதருக்குட்
மறந்துழன் றேதடு மாறிப்பொன் றேடியப் பாவையர்க்கீந்
திறந்திடவோ பணித்தாயிறைவாகச்சி யேகம்பனே.

(பொ - ரை.) இறைவனே! காஞ்சீபுரத்திலெழுந்தருளி யிருக்கும் ஏகாம்பரநாதனே! இவ்வுலகில் பிறந்து பல நோய்களையு மனுபவித்துப் பேரானந்தத்தை மறந்து, சிற்றின்பத்தில் மயக்குண்டு அற்பமாதர் கூட்டத்திற்சென்று திரிந்து தடுமாறி அவர்பொருட்டுத் திரவியம் சம்பாதித்து அம்மாதர்கட்குக் கொடுத்து (வீணாய்) இறந்து விடத்தானோ கட்டளையிட்டனை.

(கு - ரை.) பிறந்தநாள் முதலாக இருக்கும்நாள் வரையில் அனுபவமாக அனுபவித்தயாவும் சிறிது பிரயோசன முடையனவாகாமலும் இவற்றைக்கொண்டு அடையும் பலனு மொன்றுமில்லாதிருந்தவிடத்திலும் இத்தகையவற்றில் காலத்தை வீணாகக் கழித்தேனென்பார், 'இறந்திடவோ பணித்தாய்' என்றனர்.

பூதங்களற்றுப் பொறியற்றுச்சாரைம் புலன்களற்றுப்
பேதங்குணமற்றுப் பேராசைதானற்றுப் பின்முனற்று

காதங்கரணங் களுமற்றவானந்தக் காட்சியிலே
யேதங்களைந்திருப்பே னிறைவாகச்சி யேகம்பனே.

(பொ - ரை.) இறைவனே! காஞ்சீபுரத்தி லெழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனே! ஐம்பொறி நீங்கி, பொருந்திய ஐம்புலன்கள் நீங்கி, மாறுபட்ட குணங்கள் நீங்கி, பேரவா நீங்கி, கேவலசகலம் நீங்கி, மயக்கும் அந்தக்கரணங்கள் நீங்கி, முடிவில் தோன்றும் சிவானந்த தரிசனத்தில் குற்றமின்றி வாழ்வேன்.

(கு - ரை.) பூதமுதலியற்று என்றதனால் அவ்வவ் தத்துவங்கள் பிரபஞ்சமுகமாகச் செலுத்தும் காரியங்களினின்றும் ஒடுங்கி என்பதாம், பின் மூன் என்றது மறைப்பு நினைப்பாகிய சகல கேவலத்தினை, ஏதங்களென்றது மலகாரியங்களை, தத்துவச் சேஷ்டைக ளொடுங்கிய அவசரத்து அகமுதத்திலே விளைவது சிவானந்த மாகலின் ஆனந்தக்காட்சி என்றனர்.

நல்லாயெனக்கு மனுவொன்றுந்தருண் ஞானமிலாப்
பொல்லாவெனைக்கொன்றுபோடும் பொழுதியல் பூசைசெ
சொல்லாற்நற்கோயி னியமம்பலவகைத் தோத்திரமு| பஞ்
செல்லாமுடிந்தபின் கொல்லுகண்டாய்கச்சி யேகம்பனே.

(பொ - ரை.) காஞ்சீபுரத்தி லெழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனே! நல்ல தாய்போன்றவரே! எனக்கு விண்ணப்பமொன்றுளது அது.கொடுத்தருளவேண்டும் (அதாவது) ஞானமின்மையால் பொல்லாதவனாயிருக்கின்ற அடியேனைக் (கன்மத்திற்குத்தகுந்தபடி (கொல்லும்போது அழகிய சிவபூசை, பஞ்சாட்சரசெபம், புகழ்வாய்ந்த நல்ல சிவாலயத்தில் தெய்வவழிபாடு, பலவகையான தோத்திரங்கள் யாவு முடிவாயின பின்னர் கொல்லுதல் வேண்டும்.

(கு - ரை.) பலவகைத் தோத்திரமாயின பன்னிரு திருமுறை களிலுள்ளவை. பூசையாதி தொழில்கள் விவகாரத்திற் கன்றிப்பார மார்த்திகத்தில் வேண்டுவதில்லை யென்பாரை. மறுத்து, எக்கால த்தும் வேண்டுமென்பார் சர்வசங்கம் பரித்தியாக முற்ற பரமஞா னியாகிய திருவெண்காடரே 'எல்லாமுடிந்தபின் சொல்லுகண்டா ய், என்றதனால் சாம்பரியந்தம் சிவதானங்களை விடப்படா தென்ப தாயிற்று.

சடக்கடத்துக்கிரை தேடிப்பலவுயிர் தன்னைக்கொன்று
விடக்கடித்துக்கொண் டிருமாந்திருந்து மிகமெலிந்து
படக்கடித்தின் றுழல் வார்கடமைக்கரம் பற்றிநம
னிடக்கடிக்கும்பொழு தேதுசெய்வார்கச்சி யேகம்பனே.

(பொ-ரை.) காஞ்சீபுரத்திலெழுந் தருளியிருக்கும் ஏகாம்பர நாதனே! உடலாகிய பாண்டத்திற்கு ஆகாரம் தேடிப்பற்பல உயிர் களைக்கொன்று (அவற்றின! மாமிசங்களை அன்னத்துடன்) பதார்த் தமாகக் கொண்டு கருவித்து வாயில்வைத்த மாமிசம் மாமிசம்மிருதுவா கும்படி (பற்களினால்) கடித்துத் (தின்று) இக்காலத்தில் அலைகின்ற வர் களின் கைகளைப் பிடித்துக்கொண்டு இயமன் முரட்டுத்தனமாக அடிக்கும்போது என்னசெய்வர். (பாவம்.)

(கு - ரை.) உயிரைக்கொன்று தின்னும் பாவிகளை அவசியம் இயமன் கட்டாயமாக வந்து பிடித்துத் தண்டிப்பானென்பார் 'கரம் பற்றிநமனிடக்கும்,என்றனர். என்றனர். எத்தகையபாவஞ்செய்வா ரைக் காட்டிலும், புலாலுண்பாரைமாத்திரம் அதிகமாகத் துன்பம்செ ய்வா னென்பார் 'இடக்கடிக்கும்' என்றனர். சிவஞானதீபம். "எவ் வுயிரும் யிராமென்றுநோக்கி இரங்காது கொன்றருந்து மிழிவிலோ

ரை, வவ்வியமாருந் தண்டஞ்செய்து வல்லிரும்பையுருக்கி யவர்வாயி ல்வார்த்துச், செவ்விய தீயெழுநாகில் வீழ்த்தி மாறுவேதனைகள் செய்வரென வேதமோதும்'' என்றதனாற்காண்க.

நாறுமுடலை நரிப்பொதிச்சோற்றினை நான்றின்முஞ்
சோறுங்கறியு நிரப்பிய பாண்டத்தைத் தோகையர்தங்
கூறுமலமு மிரத்தமுஞ்சேருங் குழியில் விழா
தேறும்படியருள்வா யிறைவாகச்சி யேகம்பனே.

(பொ-ரை) இறைவனே! காஞ்சீபுரத்தி லெழுந்தருளியிருக்கும் ஏகாம்பர நாதனே! நாற்றமெடுக்கின்ற தேகத்தை, நரியுண்ணத்தகுந்த மிகுதியான சோறடைக்கத்தகுந்ததனை! நான் தினந்தோறும் சோற்றினையும் பார்த்தத்தினையும் போட்டு அடைத்தபாண்டத்தினை, மாதர்களுடைய மலமும் இரத்தமும் சேர்தற்கேதுவான பள்ளத்தில் விழுந்திடாதமல் (முத்தியங்கரை) ஏறும்மல் கிருபை செய்வாய்.

(கு - ரை.) "தோழியென்பாய்ச்சீக் குழியையன்று சிறுநீரா ழியென்பவருக்கென்னேருதியே" என்றதற்கேற்பமாதர் நிதப்பத்தினைக் குழியென்றனர்.

சொக்கிட்டரமனைப்புக்குட்டிருடிய துட்டர்வந்து
திக்குற்றமன்னரைக் கேட்பதுபோற்சிவ நிந்தைசெய்து
மிக்குக்குருலிங்க சங்கமநிந்திந்து விடிச்சிக்கு
மெக்குப்பெருந்தவர்க் கென்சொல்லுவேன்கச்சி யேகம்பனே

(பொ - ரை.) காஞ்சீபுரத்தி லெழுந்தருளியிருக்கும் ஏகாம்பர நானே! அரசன் அரண்மனைப்புகுந்து மயக்கமிட்டுத் திருடியதுஷ்

டார்கள் (மறுபடியும்) எட்டுத்திக்கும் கீர்த்திபெற்ற அரசரையாசக ங்கேட்டபதுபோல, சிவபெருமானை நிந்தித்து ! அறிவிற்சிறந்த குரு லிங்க சங்கமர்களைவைது பின்னர் மோட்சவீட்டிற்கும் இச்சிக்கும் வயிறு பெருத்தவர்க்கு என்னவென்று சொல்லுவேன்.

(கு-ரை) சிவபெருமானை ஆன்மாவாகிய தானேயென்றும் குருலிங்க சங்கமங்கள் விவகாரத்தில் மாத்திரம் வழிபடத்தக் கவர்க ளென்று கூறித்திரிந்து மறுபடியும் சிவாலயத்திற் சென்று மோட்ச மடைய விருப்புவாரடையுங்கதி நரகமாகலின் 'அவர்க்கென் சொல் கேன்' என்றனர்.

விருந்தாகவந்தவர் தங்களுக்கன்ன மிகக்கொடுக்கப் [நித்த
பொருந்தார்வளம்பெறவாழ்வார் நின்னாமத்தைப் போற்றி
மருந்தா மூலைபங்க ரென்னாரப்பாதக ரம்புவியி
விருந்தாவதேதுகண்டா யிறைவாகச்சி யேகம்பனே.

(பொ-ரை.) இறைவனே! காஞ்சிபுரத்தி லெழுந்தருளி யிருக் கும் ஏகாம்பரநாதனே ! வீடுதேடி அதிதியாக வந்தவர்களுக்கு அன் னம் வேண்டிய அளவுகொடுக்க மனங்கொள்ளார், (தாங்கள் மாத்திரம் செல்வமிகவுண்டாக வாழ்ந்துவருவர், தேவரீர் திருப்பெயரினைச் சொ ல்லி உண்ணாமலைப்பாகத்தி லெழுந்தருளியிருக்கும் அண்ணாமலை யானே என்னார் அத்தகைய பாவிகள் உலகத்தில் வாழ்ந்துவருதலினா லென்ன பிரயோசனம்.

(கு - ரை.) திருக்குறள் 'விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா மருந்தெனினும் வேண்டற்பாற்றன்று' திருமந்திரம், "சிவசிவவென் கிலர் தீவினையாளர்" என்றவற்றிற்கு மாறுப்பாவிகள் விருந்தினையு மோம்பார் சிவநாமமுஞ் சரியார் இத்தகையினர் தாங்களும் பிரயோ

சனமடையாது உலகிற்கு முபயோக மல்லாதிருப்பாராகலின் அம்பு லியிலிருந்தாவ தேதுகண்டாய், என்றனர்.

எல்லாமறிந்து படித்தேயிருந்தெமக் குள்ளபடி
வல்லானறிந்துள னென்றுணராது மதிமயங்கிச்
சொல்லான் மலைந்துறு சூழ்விதியின்படி துக்கித்துப்பின்
னெல்லாஞ்சிவன்செயலே யென்பர்காண் கச்சியேகம்பனே.

(பொ - ரை.) காஞ்சீபுரத்தி லெழுந்தருளியிருக்கும் ஏகாம்பர நாதனே! எல்லா நூல்களையும் தெரிந்துபடித்தேயிருந்தும் நமக்கேற் பட்டிருக்கின்ற அளவினை எல்லாம் வல்ல சிவபெருமான் தெரிந்து கொண்டிருக்கிறா னென்பதனை யறியாது புத்திகெட்டு, இலவுகிகச் சொற்களால் மருண்டு, உற்றவிதியின்படி துக்கமடைந்து பின்னர் எல்லாம் சிவன் செயலென்று தேர்வர் (இஃதென்ன அறியாமை.)

(கு - ரை.) எவ்வளவு கற்றவர்களாயிருக்கினும் அவரவர்கள் கன்மத்திற்குத் தகுந்தபடியச் சிவபெருமான் கூட்டிவைப்பதல்லது நமது முயற்சியாலியாது நடப்பதன்றெனத்தோராது செல்வச் செருக் கால் மறந்து வாழ்ந்து, தரித்திரமுற்றபின் யாவும் சிவன் செயலாலே வருமென வறிவர்.

பொன்னை நினைந்து வெதுவாகத்தேடுவர் பூவையன்றே
டன்னைநினைந்து வெகுவாயுருவர் தாரணியி
லுன்னைநினைந்திங் குனைப்பூசியாத வுலுத்தரெல்லா
மென்னையிருந்துகண்டா யிறைவாகச்சி யேகம்பனே.

(பொ - ரை.) இறைவனே! காஞ்சீபுரத்தி லெழுந்தருளியிருக் கும் ஏகாம்பரநாதனே! திரவியத்தின் மேலாசையை வைத்து அ

த்தைச் சேகரிக்கப் பெருமுயற்சிசெய்து சம்பாதிப்பார், இலக்குமிக் குச்சமான வாழ்கைவாய்ந்த பெண்ணினை எண்ணி அதிகமாக மனமுருகுவர் பூமியின் கண்ணே தேவரீரைத் தியானித்துத் தேவரீரைப் பூசியாத இலோபிகளாகிய இவரெல்லா உலகிலிருந்து என்ன பிரயோசனம்.

(கு - ரை.) உலகத்தில் பகிர்முகமாக அனுபவிக்கவேண்டிய இன்பங்கட்கேதுவாயுள்ள அநித்திய சாதனங்களில் நாட்டங்கொண்டிருக்கிறார்களே யன்றி அந்தர் முகமாக அனுபவிக்கவேண்டிய பேரின்பத்திலுங் கேதுவாகவுள்ள நித்தியசாதனங்களில் நாட்டங் கொண்டிலரென்பதாம்.

கடுஞ்சொல்லின்வம்பரையீனரைக்குண்டரைக்காமுகரைக்
கொடும்பவமேசெயு நிர்மூடர்தம்மைக் குவலயத்து
நெடும்பனைபோல வளர்ந்துநல்லோர் நெறியறியா
விடும்பரையேன்வகுத்தா யிறைவாகச்சி யேகம்பனே.

(பொ - ரை.) இறைவனே! காஞ்சீபுரத்தி லெழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனே! (எங்ஙனமும்) கடிந்துபேசுகின்ற வம்புவார்த்தையுடையவரை சீலம் சிறிது மில்லாரை, கோட்சொல்பவரை, காமாந்தகாரரை, கொடியபாவச் செயல்களையே செய்யும் புத்தியில்லாதவரை (இத்தகையரை) இவ்வுலகில் நீண்ட பனைமரம்போல் வளர்ந்து நல்லவர்களுடைய நன்னெறியினைச் சிறிதுமறியாத செருக்கினரை என் மனிதவகுப்பிலுண்டாக்கினை.

(கு - ரை.) மனிதசென்மமெடுத்து நீதிநூல்களிற் கூறிவைத்த நன்னெறியிற் சிறிதும் நடவாது முற்றுமாறாக நடந்து தன்னை யடுத்த அனேகருக்குத் தீங்குகளையே விளைவிப்பவர் உலகத்தில் யாதொரு பிரயோசனமுமில்லை யென்பார், இடும்பரையேன் வகுத்தாய் என்றனர்.

கொன்றேனனேகமுயிரை யெல்லாம்பின்புகொன்றுகொன்
றின்றேனதன்றியுந்தீங்குசெய்தேனதுதிர்கவென்றே நான்
நின்றேனின் சன்னிதிக் கேயதனாற்குற்ற நீபொறுப்பா
யென்றேயுனைநம்பினே னிறைவாகச்சி யேகம்பனே.

(பொ - ரை.) இறைவனே! காஞ்சீபுரத்தி லெழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனே! எண்ணிலாவுயிர்களை (ஆகாரத்தின் பொருட்டுக்) கொன்றேன், அவற்றை யெல்லாம் இம்சைசெய்து இம்சை செய்து புசித்தேன், அல்லாமலும் (அனேகவுயிர்கட்குத்) தீங்கு செய்தேன், இப்பாவமனைத்தையும் போக்கடித்துக் கொள்ள வேண்டித்தேவரீர் சன்னிதானத்தி லிருந்தேன் ஆகலின் தேவரீர் எனது குற்றங்களைப் பொறுத்தருள்வாயென்றெண்ணித் தேவரீரை நம்பினேன்.

(கு - ரை.) சொல்லுதலினாலேயும் அவற்றைத் தின்னுதலினாலேயும் பெரும்பாவம் விளையுமென அறியாக்காலத்தி லெல்லாம் இங்ஙனம் செய்துவந்தேன். நூலாராய்ச்சியாலும் நல்லோர்சார்பாலும் பாவமென வறிந்தபின் தேவரீர் கோயிலையடைந்தேன், பாவத்தினைப் போக்கியாள வேண்டுமென்பதாம்.

ஊரிருந்தென்ன நல்லோரிருந்தென் னுபகாரமுள்ள
பேரிருந்தென்பெற்றதாயிருந்தென்மடப்பெண்கொடியாள்
சீரிருந்தென்னநற் சிறப்பிருந்தென்ன வித்தையத்தினி
லேரிருந்தென்வல்லவா விறைவாகச்சி யேகம்பனே.

(பொ-ரை.) இறைவனே! காஞ்சீபுரத்திலெழுந்தருளி யிருக்கும் ஏகாம்பரநாதனே! இவ்வுலகில் ஒரு ஊர் சொந்தமாக விருந்தென்ன, நல்லவர்களிருந்தென்ன உபசரிக்கும் பேரிருந்தென்ன, என்

றதாயிருந்தென்ன, அழகினைவாய்ந்த கொடிபோன்ற பெண்ணும் அவர் கொண்டுவந்த சீதனமிருந்தென்ன, நல்ல புகழ்ச்சி யிருந்தென்ன, அழகு மிருந்தென்ன, எல்லாம் வல்லவனே (தேவரீர் அருள் சிறிதுமில்லையே.)

(கு - ரை.) உலகின்கண்ணே யனுபவிக்கவேண்டிய போகங்கட்குரித்தான சுகமனைத்தும் ஏராளமாயிருக்கினும் சிவபெருமான் திருவருளில்லாதபோது ஒன்றும் பிரயோசனமில்லையென்பதாம்.

வில்லாலடிக்கச் செருப்பாலுதைக்க வெகுண்டொருவன்
கல்லாலெறியப் பிரம்பாலடிக்கக் களிவண்டுகூர்ந்
தல்லார்பொழிற்றில் யம்பலவாணர்க்கோ ரன்னைபிதா
வில்லாததாலல்லவோ விறைவாகச்சி யேகம்பனே.

(பொ - ரை.) இறைவனே! காஞ்சீபுரத்தி லெழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனே! ஒருவன் வில்லினல் அடிக்கவும், ஒருவன் செருப்பினலுதைக்கவும், ஒருவன் கோபித்துக் கல்லாலெறியவும், ஒருவன் பிரம்பினலடிக்கவும் (நேர்ந்ததெல்லாம்) மதுவையுண்ணும் வண்டுகள் தங்கி, மேகங்கள் தவழப்பெற்ற சோலைசூழ்ந்த திருந்தில்லையம்பதியிலே கனகசபையிலே நிர்த்தனம் பண்ணும் பெருமானுக்குத் தாய்தந்தைமாரிருந்து கேளாததினலல்லவா.

(கு - ரை.) வில்லாலடித்தவன் அருச்சுனன், செருப்பாலுதைத்தவன் கண்ணப்பநாயனர், கல்லாலெறிந்தவன் சாக்கியநாயனர், பிரம்பாலடித்தவன் அரிமர்த்தனபாண்டியன், சிவபெருமான் தாய்தந்தையரில்லாது நித்தியனுயுள்ளவனகலின் இங்ஙனம் அடியார்க்கெளியனயிருந்து இங்ஙனம் பாடுபட்டு அடியார்களை யாட்கொண்டு

தமது சர்வஞ்ஞத்துவத்தை நிறுத்தினர். தாய்தந்தையரை வாய்ந்த மற்றைய தேவர்களிங்ஙனம் செய்யாரென்பதாம்.

## எண்சீர் விருத்தம்.

அன்னையெத்தனை யெத்தனை யன்னையோ
வப்பனெத்தனை யெத்தனை யப்பனோ
பின்னையெத்தனை யெத்தனை பெண்டிரோ
பிள்ளையெத்தனை யெத்தனை பிள்ளையோ
முன்னையெத்தனை யெத்தனை சென்மமோ
மூடனாயடியேனு மறிந்திலே
னின்னமெத்தனை யெத்தனை சென்மமோ
வென்செய்வேன் கச்சி யேகம்ப நாதனே.

(பொ - ரை.) காஞ்சீபுரத்திலெழுந்தருளி யிருக்கும் ஏகாம்பரநாதனே! (இதுகாறு மெடுத்த கோடானகோடி சென்மங்களில் வாய்ந்த) தாய்மார்கள் எத்தனை பெயர்களோ, தந்தையர்கள் எத்தனை பெயர்களோ, மனைவிமார்கள் எத்தனை பெயர்களோ, புத்திரர்கள் புத்திரிகள் எத்தனை பெயரோ இதற்கு முன்போந்த சென்மங்கள் எத்தனையோ, மூடனாகிய சிறியேனுந் தெரிந்தேனில்லை, இனிமேல்வரும் சென்மங்கள் எத்தனையோ, இவற்றை யொழித்தற் கென்ன உபாயஞ் செய்வேன்.

(கு - ரை.) இதுகாறு மெடுத்துள்ள எண்ணில்லாத சென்மங்களினும், இனி யெடுக்கும் அளவில்லா சென்மங்களினு மேற்படுஞ் சுற்றத்தினர்கட்கு இவ்வளவெனத் தொகை தெரிந்துகொள்வது கூடாதாகலின் எத்தனை எத்தனை யென்றனர். இனியேனுமொரு தாய்வயிற்றிற் பிறவாதபடி செய்தருள வேண்டுமென்பது குறிப்பு.

# திருத்தில்லை.

காம்பிணங்கும்பணைத் தோளார்க்கும்
பொன்னுக்குங் காசினிக்குந்
தாம்பிணக்கும்பல வாசையும்விட்டுத்
தனித்துச் செத்துப்
போம்பிணந்தன்னைத் திரளாகக்கூடிப்
புரண்டினிமேற்
சாம்பிணங் கத்துதையோ
வென்செய்வேன் றில்லைச்சங்கரனே.

(பொ-ரை.) திருத்தில்லையில் எழுந்தருளியிருக்கும் சங்கரனே! மூங்கிலினையொத்த பெருத்த தோளையுடைய மாதர்கட்கும், பூமிக்கும் தாம் நெருங்கும் பற்பல அவாவினையும் நீங்கித் தனியாக இறந்து போகின்ற பிணந்தன்னைச் (சூழ்ந்து) கூட்டமாகச் சேர்ந்து மேல்விழுந்து புரண்டு இனிமேல் சாகப்போகிற பிணங்கள் புலம்புகின்றன அந்தோ இந்த (வறியாமைக் கென்செய்வேன்.)

(கு-ரை.) மரணம் நிச்சயமாகலினாலும், இறந்து பட்டவர்கள் போலவே நாமும் சிற்சிலநாளி லிறக்கவேண்டியது திண்ணமாகலினாலும். ஆண்டாண்டுதோறு மழுதுபுரண்டாலு மாண்டார்வருவாரில்லையாகலாலும் அறியாமையால் வீணே கூக்குரலிடுவதினா லென்ன பயன் என்று இரங்கிக் கூறுவார் 'என்செய்வேன்' என்றனர்.

சோறிடுநாடு துணிதருங்குப்பை கொண்டன்பரைக்கண்
டேறிடுங்கைகளிறங்கிடுந்தீவினை யெப்பொழுது

நீறிடுமேனியர் சிற்றம்பலர் நிருத்தங்கண்டா
லூறிடுங்கண்க ளுருகிடுநெஞ்சமென் னுள்ளமுமே.

(பொ-ரை.) எக்காலத்தும் திருநீறு பூத்த திருமேனியாய் சிற்றம்பலத்திலே செய்தருளும் ஆனந்த நிர்த்தனத்தினைத் தரிசித்தால், உலகத்தினர் அன்னமளிப்பர், குப்பை வஸ்திரங் கொடுக்கும், சிவத்தொண்டு செய்யும் அடியாரைக்கண்டு இரண்டு கரங்களும் கூப்பும், தீவினைகளொழியும், கண்களினின்றும் (ஆனந்தக்) கண்ணீர் ஊற்றெடுக்கும், என்னெஞ்சமும் உள்ளமும் நைந்துருகும்.

(கு-ரை.) தில்லைச் சிற்றம்பலத்திலே ஆனந்த நிர்த்தனமிடும் நடராஜப்பிரபுவினைத் தரிசித்த மாத்திரத்தில் உடலினுக்கு வேண்டியன பிறர்தாட்சன்னியமின்றிக் கிடைப்பதுடன் சிவபத்தி விளைவதற் கேதுவாகிய சாதனங்களும் நிகழுமென்பதாம்.

அழலுக்குள்வெண்ணெ யெனவேயுருகிப்பொன்னம்பலத்
நிழலுக்குணின்று தவமுஞற்றுமனிட்டரேமின்னார் [தார்
குழலுக்கிசைந்த வகைமாலைகொண்டு குற்றேவல்செய்து
விழலுக்குமுத்துலை யிட்டிறைத்தேனென் விதிவசமே.

(பொ-ரை.) பொன்னம்பலத்திலே தாண்டவம் செய்தருளும் பெருமானாது திருவருணிழல் பரவும் சிதம்பராலயத்திலே இருந்து அக்கினியிற்பட்ட வெண்ணெயென மனமுருகித் (திருத்தொண்டாகிய) தவத்தினைச் செய்யாமல், கொடுமைவார்த்தைகளைப் பேசுபெண்களின் கூந்தலுக்கு பொருந்தியவிதமான புட்பமாலைதந்து அவர்கட்கு வேண்டிய சிறிய வேலைகளைச்செய்து, விழற்புல் விளைவதற்கு மூன்று துலா வைத்துச் சலமிறைத்தவனை நிகர்த்தேன் என் தலைவிதியே.

(கு-ரை.) மோட்ச வீட்டிற்கு வேண்டியபேரின் பத்தையனுப விக்கத் தகேதுவசாவுள்ள சிவாலயத்தொண்டினைச் செய்து காலத்தை வீணாய்க்கழித்தே னென்பார் 'விழலுக்குமுத்துலை யிட்டிறைத்தேன் என்றனர்.

ஓடாமற்பாழுக் குழையாமலோர் முரைப்பவர்பாற்
கூடாமனல்லவர் கூட்டவிடாமல் வெங்கோபநெஞ்சி
னூடாமனன்மை வழுவாமலின்றைக்கு நாளைக்கென்று
தேடாமற் செல்வந் தருவாய்சிதப்பர தேசிகனே.

(பொ-ரை) சிதம்பரத்தி லெழுந்தருளியிருக்கின்ற (ஆசா ரியமூர்த்தியாகிய) பெருமானே! (வயிற்றினிமித்தம் அங்குமிங்கும்) ஓடாமல், பிரயோசனமற்ற காரியங்கட்கு உழைக்காமல் வஞ்சகவார்த் தைப் பேசுபவர்பால் நேசியாமல், அடியார்க்கூட்டம் பிரியாமல், கொடிய கோபத்தினைமனத்தில் வையாமல், நின்மைகளைச்செய்யாமல், இன்றைக்கென்செய்வதுநாளைக்கென் செய்வதென்று (துக்கித்துத் திரவியம்தேடாமல் (நினது திருவருட்) செல்வம் தந்தருளு வாயாக.

(கு-ரை.) உலகத்தின்கண்ணே உடலைகாத்தலின் பொருட்டு எத்தனை யோவிதமாக முயச்சிசெய்யவேண்டி யிருக்கின்றது. செய் யமா லிருதற்கும் கூடவில்லை. தேவரீர் திருவருட்செல்வம்படைத்து விடும் பட்சத்தில் இம்முயற்சி யனைத்தும் தாமேநழுவி விடுமெ ன்பதாம்.

பாராமலேற்பவர்க் கில்லை யென்னாமற் பழுதுசொல்லி
வாராமற்பாவங்கள் வந்தணுகாமல் மனமயர்ந்து

போாமற்சேவை பிரியாமலன்பு பெருதவரைச்
சேராமற்செல்வந் தருவாய்சிதம்பர தேசிகனே.

(பொ-ரை.) சிதம்பரத்தி லெழுந்தருளியிருக்கும் (ஆசாரிய மூர்த்தியாகிய) பெருமானே! உயர்வுதாழ்வு பாராமல், பிச்சையெனவந்தவர்கட்கு இல்லை யென்று சொல்லாமல், பிறர்க் குற்றஞ்சொல்லித் திரியாமல், பாவத்துக்கேதுவான செயல்கள்செய்யாமல். மனமானது (நல்லமுயற்சியில்) சோர்வடைந்துபிறழாமல், சிவதரிசனம் விடாமல், சிவனிடத்து அன்பில்லாதவரைச்சேராமல் இருக்கும் படியான திருவருட் செல்வத்தினை தந்தருளுவாய்.

(கு-ரை.) பிரபஞ்சத்தில் திரவியம் சேகரித்துச் செலவு செய்யாதிருக்கவேண்டிய முயற்சியில் மனமெவ்வகையிற் போமோ அவைகளை யெல்லாந்தடுத்து, திருவடிச்செல்வம் அடையவேண்டிய முயற்சிலேயே யிருக்கவேண்டு மென்பதாம்.

கொல்லாமற்கொன்றதைத் தின்னமற்குத் திரங்கோள்களவு
கல்லாமற் கைதவரோடிணங்காமற் கனவிலும்பொய்
சொல்லாமற்சொற்களைக் கேளாமற்றோகையர்மாயையிலே
செல்லாமற்செல்வந் தருவாய்சிதம்பர தேசிகனே.

(பொ-ரை.) சிதம்பரத்தி லெழுந்தருளியிருக்கும் (ஆசாரிய மூர்த்தியாகிய) பெருமானே! (ஒரு வுயிரையும்) கொல்லாமல் (அங்ஙனம்) கொன்றதனைப் புசியாமல், வஞ்சனை, புறங்கூறல், திருட்டுக் கற்றுக்கொள்ளாமல் வஞ்சகருடன் கூடாமல் மனதிலேனும் பொய் சொல்லாமல் பிறர்ப்பொய்ச் சொற்களைக் கேளாமல், மயில் போன்ற சாயையுடைய மாதர்கள் மயக்கத்திலே சிக்காமல் (தேவரீர்திருவருட் செல்வந்தருள வேண்டும்.

(கு-ரை) இவ்வுலகில் தீமையான காரியங்கள் எவ்வளவோ அவ்வளவு மென்னைவிட்டு விலகவேண்டுமாயின் தேவரீது திருவருட் செல்வம் கிடைத்தாலல்லது வேறுவழி யினீங்காதாகலின் திருவருள் புரிய வேண்டுமென்றனர்.

முடிசார்ந்தமன்னரு மற்றுமுள்ளோரு முடிவிலொரு
பிடிசாம்பராய்வெந்து மண்ணாவதுங்கண்டு பின்னுமிந்த
படிசார்ந்தவாழ்வை நினைப்பதல்லாற்பொன்னி னம்பலவ
ரடிசார்ந்துநாமுய்ய வேண்டுமென்றேயறி வாரில்லையே.

(பொ-புரை.) முடிதரித்த அரசர்களும், மற்று மனேகமான உயர்ந்தபதவியிலுள்ள அவர்களும் (இறந்து சுடுகாட்டி லெறிகிறபோது) ஒருகைப்பிடி சாம்பலாகி வெந்து பின்னர் மண்ணாகிறதை (பிரத்தியட்சமாகப்) பார்த்திருந்தும், மேலும் இவ்வுலகத்தின் வாழ்வினையே நாடுவதல்லாமல் பொன்மயமாகிய அம்பலத்தி லெழுந்தருளி யிருக்கும் பெருமான் திருவடியினை யடைந்து நாமனைவரும் பிழைக்க வேண்டுமென்று தெரிந்து கொள்ளுவாரில்லை.

(கு-ரை.) இவ்வுலகில் எத்தகையினரும் முடிவில் சாம்பலாகி விடுவதனைப் பிரத்தியட்சமாகத் தெரிந்திருந்தும் அங்ஙனமே யழிதற் கேது வாகவுள்ள பிரபஞ்சவாழ்வினை நாடிமலைகின்றனரே யன்றிச் சாம்பலகாது வாழநின் திருவடியை நாடுகின்றார்களில்லையே என் செய்வ னென்பதாம்.

காலையுபாதி மலஞ்சலமாமன்றிக் கட்டுச்சியிற்
சாலவுபாதி பசிதாகமாமுற் சஞ்சிதமா
மாலையுபாதி துயில்காமமாமிவை மாற்றிவிட்டே
யாலமுதந்தரு லம்பலவாவென்னை யாண்டருளே.

(பொ - ரை.) ஆலகாலவிஷத்தினை விரும்பிவுண்டருளியபொன்னம்பல நாதனே! (ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருநாளும்) காலையிலுண்டாகின்ற உபத்திரவம் மலசலப்பிரவர்த்தியாம் அல்லாமல் நடுப்பகலில் மிகுந்த உபத்திரவம் பசியெடுத்தலும் தாகம் வேண்டுதலுமாம், மாலைக்காலத்தின் உபத்திரவம் பூர்வவினைக்குத் தகுந்தபடி தூக்கமும் பெண்போகமுமாம்-இவற்றை நீக்கியாண்டருள வேண்டும்.

(பொ-ரை.) எழுந்தது முதல் தூங்கும் வரையில் பற்பல இன்றியமையாத துன்பங்களிற் கட்டுப்பட்டிருத்தலினால் இவற்றினின்று நீங்கி நிருவிகற்பகமாதியிலிருந்து நித்தியானந்த சுகமனுபவிக்கும் தன்மையை யளித்தருள வேண்டுமென்பதாம்.

ஆயும்புகழ்த்தில்லை யம்பலவாண ரருகிற்சென்றாற்
பாயுமிடபங் கடிக்குமரவம்பின் பற்றிச்சென்றாற்
பேயுங்கணமும பெருந்தலைப்பூதமும் பின்றொடர
போயென்செய்வாய்மனமே பிணக்காடவர் போமிடமே.

(பொ - ரை.) மனமே! எவராலும் ஆராயப்படுகின்ற புகழினை வாய்ந்த திருத்தில்லை யம்பலநாதர் சமீபத்திலடைந்தால் மாடொன்று முட்டவரும், பாம்பு கடிக்கவரும், பின்பாகத்திற் சென்றாலோ பேயும் வேதாளம்மும், பெரிய தலைபினையுடைய பூதமும் நின்றுபின்னே தொடர்ந்து (மருட்டும்) அவர்போகும் இடமெல்லாம் பிணங்கள் நிறைந்த காடாக விருக்கும் (அத்தகையரிடத்து) நீ போயென்ன செய்குவை.

(கு-ரை.) இத்திருச்செய்யுள் நிந்தாத்துதி மாடுதரும சொரூபமெனவும், பாம்பு மாயை சொரூபமெனவும், பேய் முதலிய தெய்வ

சொரூபங்களெனவும், பிணக்காடு சர்வசங்காரகாலத்திலுக மிருக்குந் தன்மையெனவும் உணரப்பெறாத அறிவிலிகட்குச் சமான்ய மாடு போலவும் பாம்புபோலவும், பேய்முதலியபோலவும் இடுகாடுபோல வும் தோன்றுமாகலின் இத்தகையினர் கோயிலிற்குச் சென்று என்ன பிரயோசன மென்பார், பேரயென் செய்வாய்' என்றனர்.

ஓடுமெடுத்தோ ளாடையுஞ்சுற்றி யுலாவிமெள்ள
வீடுகடோறும் பலிவாங்கியேவிதி யற்றவர்போ
லாடுமருட்கொண்டிங் கம்பலத்தேநிற்கு மாண்டிதன்னைத்
தேடுங்கணக்கென்ன காண் சிவகாம சவுந்தரியே.

(பொ-ரை.) (சிதம்பரத்தி லெழுந்தருளி யிருக்கும்) சிவகாம சவுந்தரியே! (பிச்சையெடுக்கும்பொருட்டு) ஓடும்தாங்கி, மேற்போர் வைக்கு) தோலாடையும் பூண்டு, இங்குமங்குந் திரிந்து மெதுவாக வீடுகள் தோறும் பிச்சைவாங்கி, திக்கற்றவர்போல மருட்சிவாய்ந்து வெட்ட வெளியினிற்கும் ஆண்டியினை நாடும்வித மென்னவோ(அறி கிலேன்.)

(கு - ரை.) சிவபெருமான் ஓடு எடுத்தது பிரமன் சிரச்சேதன த்தையும், தோலாடை கொண்டது, கஜயுத்தத்தையும், பிச்சைவாங் கியது, தாருவனக்கிரீடா விலாசத்தையும், அம்பலத்தே நிற்பது சதா நிருத்தத்தினையுமாகலின் இவ்வுண்மை சிவகாம சௌந்தரியேயறிவா ளாகலின், 'தேடுங்கணக்கென்னகாண்' என்றனர்.

ஊட்டுவிப்பானு முறங்குவிப்பானுமிங் கொன்றோடொன்
மூட்டுவிப்பானு முயங்குவிப்பானு முயன்றவினை [றை
காட்டுவிப்பானு மருவினைப்பாசக் கயிற்றின்வழி
யாட்டுவிப்பானு மொருவனுண்டே தில்லையம்பலத்தே.

(பொ-ரை.) (ஆன்மகோடிகளை) உண்பிக்கிறவனும், தூங்குவிக்கின்றவனும், ஒருபொருளுடன் மற்றொரு பொருளைச் சேர்ப்பிக்கின்றவனும், தொழில் செய்விப்பவனும், அதன் பிரயோசனத்தைக் காட்டுவிப்பவனும், பாசக்கயிற்றின் வழியாட்டுவிப்பவனும் தில்லைச் சிற்றம்பலத்தே சிவபெருமானொருவனுண்டு.

(கு-ரை.) ஆன்மாக்கள் சுதந்தர வீனராகலின் தாங்களே பாசத்தைப் பற்றாராகலினாலும், பாசம் சடமாகலின் தானே ஆன்மாக்களைச் சேராவாகலும், ஆனால் கன்மத்திற்குத் தக்கபடி ஆன்மாக்கள் பாசத்தினை யனுபவிக்கவேண்டியது அவசியமாகலினாலும் பசுபாசங்களைக் கடந்த வொருபதியாகிய சுதந்தரன் சந்நிதானத்திலேயே யாவும் நிகழுமாகலின், ஒருவனுண்டே' என்றனர். தில்லையம்பலமென்று குறித்தனால் அவ்வம்பலத்தில் நடராஜப்பிரபு ஆடப்பிரயஞ்ச மனைத்தும் போகத்தில் ஆடும்என்பதாயிற்று, திருமந்திரம், 'தத்துவமாடச் சதாசிவந்தாடை, சித்தமுமாடச் சிவசத்தி தாடை, வைத்த சாரசரமாட மறையாட, வைத்தனு மாடினானந்தக் கூத்தே'' என்றதனாற் காண்க

அடியார்க்கெளியவ ரம்பலவாண ரடிபணிந்தால்
மடியாமற்செல்வ வரம்பெறலாம்வைய மேழளந்த
நெடியோனும் வேதனுங் காணாதநித்த நிமலனருட்
குடிகாணிநாங்க ளவர்காணுமெங்கள் குலதெய்வமே.

(பொ.-ரை.) (சிவபெருமான்) சிவனடியார்கட்கு எளியத்தன்மை வாய்ந்தவர் பொன்னம்பலத்திலே நடனஞ் செய்பவர், அவர் திருவருட் பனிந்தால் அழியாமல் திருவருட் செல்வமனுபவிக்கும்படியான வரத்தினைப்பெறலாம், ஏழுலகத்தினையும் திருவடியா

லாந்த நெடுமாலும் பிரமாவும் கண்டறியாத நித்தியனாகிய நின்மல னுடைய திருவருளையனுபவிக்கும் நாம் அவர்க்கு அடிமையாகிய குடி கள், அவர் எங்கட்கு ஆண்டானாகிய குலதெய்வமாம்.

(கு - ரை.) தங்கட்கெனவொரு சுதந்தரமில்லாது உடல் பொ ருள் ஆவி மூன்றினையும் ஆசாரியனிடமொப்புவித்த சிவனடியார்கள் வேண்டியவற்றைச் சிவபெருமான் வலியவந்தளித்து ஆட்கொள்வ னென்பார், 'அடியார்க்கெளியவர்' என்றனர். "அடியார்க்கெளியவன் சிற்றம்பலவன்" என்றதனாற் காண்க. திருவடியால் வரம்பெறலா மென்பது "திருவடிஞான மேதிண் சித்திமுத்தியே" எனுந்திருமந் திரத்தாலும், ஆண்டானடிமையென்பது "எல்லாமுன்னடிமையே எல்லாமுன்னுடைமையே எல்லாமுனதுசெயலே" எனும் தாயுமான வர் திருவாக்கானுமறிக.

தெய்வச்சிதம்பர தேவாவுன் சித்தந் திரும்பிவிட்டாற்
பொய்வைத்தசொப்பனமாமன்னர்வாழ்வும் புவியுமெங்கே
மெய்வைத்த செல்வமெங்கே மண்டலீகர்தம் மேடையெங்
கைவைத்த நாடகசாலையெங்கேயிது கண்மயக்கே. [கே

(பொ-ரை.) தெய்வத்தன்மைவாய்ந்த சிதம்பரத்திலெழுந்தரு ளியிருக்கும் தேவனே! தேவரீர் மனமானது ஆன்மாக்களிடத்திராது சிறிது திரும்பிவிடில் நிலையில்லாததும் கனவுபோன்றதுமான அர சர்கள் வாழ்வும் அவர் ஆளும்பூமியும் என்னவாகும், உண்மையென் று நம்பியுள்ளசெல்வமென்னவாகும், சக்கிரவர்த்திகளின்உப்பரிகையெ ன்னவாகும், அலங்கரித்துள்ள நடனசாலைகள் என்னவாகும், இவை யனைத்தும் கண்களுக்குண்டாகும் காட்சியேயாகும்.

(கு-ரை.) சிதம்பரேசன் பிரபஞ்சமுகமாகச்சிருஷ்டி, திதி திரோபவம், அனுக்கிரகமென்னும் நான்கு கிருத்தியங்களை நடத்து கிறகாலத்தில் மாத்திரம் பிரபஞ்சவாழ்வனைத்தும் உண்டு போலத் தோன்றுமேயன்றிச் சங்கார முகமாகத் திரும்புகிறகாலத்தில் வாழ் வனைத்தும் கண்மயக்காக முடியுமேயல்லது வேறில்லையென்பதாம்.

உடுப்பானும்பாலனமுண் பானுமுய்வித்தொருவர்தம்மைக்
கெடுப்பானுமேதென்றுகேள்விசெய்வானுங்கெதியடங்கக்
கொடுப்பர்னுந்தேகியென்றேற்பானுமேற்கக்கொடாமனி
ன்று, தடுப்பானுநீயல்லையோ தில்லையானந்தத் தாண்ட
வனே.

(பொ-ரை.) தில்லைச்சிற்றம்பலத்தின்கண்ணே ஆனந்தத்தா ண்டவம்புரிந்தருளுபவனே! ஆடையுடுப்பவனும் பாலுடன அன்னங் கலந்து உண்பவனும், பிழைப்பித்து ஒருவரைக் கெடுப்பவனும் என்ன வென்று வினவுபவனும், திருப்தியாய்க்கொடுப்பவனும் இல்லையென யாசிப்பவனும், யாசிக்கக் கொடுக்கவொட்டாமல் தடுப்பவனுந் தேவ ரீரேயல்லவோ.

(கு - ரை.) ஆன்மாக்களின் உள்ளும் புறம்புமாகக்கலந்து அத் துவிதமாகவிருந்து அவரவர்கள் கன்மத்திற்குத்தக்கபடி பிரேரிப்ப வன் சிவபெருமானே யாகலின் 'நீயல்லையோ' வென்றனர். காரைக் காலம்மையார் "அறிவானுந்தானே, யறிவிப்பான்றானே, யறிவாயறி கின்றான்றானே—யறிகின்ற மெய்ப்பொருளுந்தானே விரிசுடர்பாரா காச, மப்பொருளுந்தானேயவன்" என்றதனுற்காண்க.

வித்தாரம்பேசினுஞ் சோங்கேறினுங்கம்ப மீதிருந்து
தத்தாவென்றோதிப் பவுரிகொண்டாடினுந் தம்முன்றம்பி

யொத்தாசைபேசினு மாவதுண்டோதில்லையுண்ணிறைந்த
கர்த்தாவின்சொற்படி யல்லாதுவேறில்லை கன்மங்களே.

(பொ-ரை.) மகாவிற்பன்னமாகப் பேசினும், மரக்கலமேறி னும், மூங்கிலின் மீதிருந்து தாதாவெனக்கூறிக் கூத்தாடினும், தம் முடைய தமையன் தம்பி துணையாகப்பேசினும், ஏதாவதுண்டாகு மோ, சிதம்பரத்தி லெழுந்தருளியிருக்கிற நடராஜப்பிரபு செய்விக்கும் செயற்படியல்லா செயல்களொன்றுமில்லை.

(கு-ரை.) ஆன்மாக்கள் தங்கள் சுதந்தரங்கொண்டு எவ்வகை முயற்சி செய்யினும் அது கூடிவருவது சிவபெருமான் திருவருளிருந் தாலல்லது காலத்திரயத்தும் கூடிவராதென்பார், 'சொற்படியல்லாது வேறில்லை,என்றனர் "அவரவருக்குள்ளபடி யீசனருளாலே யவரவ ரைக் கொண்டியற்று மாறு-லவரவரை, நல்லார் பொல்லா ரென்று நாடுவதே னெஞ்சமே, யெல்லாஞ்சிவன் செயலென்றெண்" என்ற தனாற்காண்க தாதாவென்றது எதுகைநோக்கித் தத்தாவென்றாயது.

பிறவாதிருக்க வரந்தரல்வேண்டும் பிறந்துவிட்டா
லிறவாதிருக்க மருந்துண்டுகாணிது வெப்படியோ
வறமார் புகழ்த்தில்லை யம்பலவாண ரடிக்கமல
மறவாதிருமனமே யதுகாணன் மருந்துனக்கே.

(பொ-ரை.) மனமே! உலகத்திலே பிறவாதிருக்கும்படி சிவ பெருமான் வரமளித்தல் வேண்டும் அங்ஙனம் பெறாது உலகில் பிற ந்துவிடில் மறுபடி இறவாதபடி யிருக்கமருந்தொன்றுண்டு அது எப் படியோவெனில் தருமம் வளராநின்ற புகழோடுங் கூடியதில்லை யம்

பலத்திலே வாழ்கின்ற நடராஜப்பிரபுவின் திருவடிக் கமலத்தினைமற வாமலிரு அதுவே நல்ல மருந்து உன்றனக்காம்.

(கு-ரை.) சிவபெருமான் திருவடி மருந்தாகி ஆன்மாக்களுக் குண்டாகும் பிறவிப்பிணியைதீர்க்கத் தகுந்ததாகலின் 'அதுகாணன் மருந்துனக்கே' என்றனர். தேவாரம் "மருந்தாய்ப்பிணி தீர்க்கவல் லவடி" என்றதனுற்காண்க.

தவியா திருநெஞ்சமே தில்லைமேவிய சங்கரனைப்
புவியார்ந் திருக்கின்ற ஞானகரனைப்புராந்தகனை [தாற்
யவியாவிளக்கைப்பொன் னம்பலத்தாடியை யைந்தெழுத்
செவியாமனீசெவித்தாற் பிறவாமுத் திசித்திக்குமே.

(பொ-ரை.) மனமே அலையாமலிரு, சிதம்பரத்தி லெழுந்த ருளி யிருக்கின்ற சிவபெருமானை, உலகமுழுதும் வியாபித்திருக்கி ன்ற ஞானசொரூபனை, திரிபுரமெரித்தவனை, என்றுங்கெடாததீபம் போன்றவனை பொன்னம்பலத்திலே நிர்த்தனம் பண்ணுபவனை பஞ் சாட்சர மந்திரத்தினுல் வாயால் செபியாதபடி மனத்தாலாவது செபி த்துவந்தால் பிறவாத முத்தியானது உண்டாகும்.

(கு - ரை.) ஒவ்வொருவரின் பிறப்பினை யொழித்தற் கேது வாக விருப்பது பஞ்சாக்கரமகா மந்திரமானதால் 'பிறவாமுத்தி சித் திக்குமே' என்றனர். திருக்கடைக் காப்பு "வீடு பிறப்பைவறுத்து மெச்சினர், பீடைகெடுப்பன பின்னை நாடொறு, மாடுகொடுப்பன மன்னுமாடை, மாடியுகப்பனவஞ் செழுத்துமே" என்றதனுற் காண்க செபியாமற் செபித்தலாவது தற்போத முன்னிட்டுச் செபிக்காமல் அருட்போத முன்னிட்டுச் செபிக்கவேண்டுமென்பது மொன்று.

நாலின் மறைப்பொரு ளம்பலவாணரை நம்பியவர்
பார்லிலொருதரஞ் சேவிக்கொணுதிருப் பார்க்கருங்கல்
யேலிலெடுத்தவர் கைவிலங்கைத்தைப்பர் மீண்டுமொரு
காலினிறுத்துவர் கிட்டியந்தாம்வந்து கட்டுவரே.

(பொ - ரை.) நான்குவேதங்களிலும் உட்பொருளாய் விளங்கும் பொன்னம்பலத்திலே எழுந்தருளியிருக்கும் நடராஜபிரபுவை (அவரே தெய்வமென) நம்பி அவர் சந்நிதானத்தில் ஒருதரமாகிலும் வணங்காதிருப்பவர்கட்கு என்னகதியெனில்) கருங்கல்லினை யவர்மேல் வைத்து இருகரங்கட்கும் விலங்கிடுவர், மறுபடியும் ஒற்றைக்காலினிற்கும்படி செய்வர், மறுபடியும் நெருங்கியவர் மற்றைய உறுப்புக்களையும் கட்டிடுவார்.

(கு - ரை.) சிவபெருமானைத் தமது ஆயுட்குள் ஒருதரமாகிலும் வணங்காது இறந்தவர்களை எமலோகத்தில் பலவகையாகப் பல துன்பங்களினைச்செய்வர். எனவே சிவநாமங்களை ஏகதேசம் ஒருதரம் சொல்லினும் ஒருதரம் தரிசிக்கினும் புண்ணியமுண்டென்பதாம்.

ஆற்றோடுதும்பை யணிந்தாடுமம்பல வாணர்தம்மைப்
போற்றாதவர்க்கடை யாளமுண்டேயிந்தப் பூதலத்திற்
சோற்றுவிபற்றுச் சுகமற்றுச்சுற்றத் துணியுமற்றே
யேற்றாலும்பிச்சை கிடையாமலேக்கற் றிருப்பவர்களே.

(பொ - ரை.) கங்காநதியுடனே தும்பைமலரினைத் தரித்து நிர்த்தனஞ்செய்யும் பொன்னம்பலவாணரைத் தோத்திரம் செய்யாதவர்கட்கு அடையாளங்களுண்டு அவையென்னவென்றால் இவ்வுலகிலே சோறுவாசனையுங்கிடையாமல், நன்மைகளையிழந்து, உடுக்க வஸ்

திரமின்றி, வீடுந்தோறும் போய் கை ஏற்றாலும் பிச்சை யிடுவாரின்றித் தாழ்ந்திருப்பார்கள்.

(கு - ரை.) ஆன்மாக்களுக்கு வேண்டிய போகங்களனைத்தையும் கூட்டிவைப்பவன் சிவபெருமானேயென்று நன்றியினை நினைந்து அவனை வணங்கி வாழ்பவர்க்கே சோறுமுதலிய எல்லாநலனுந் தடையின்றி இம்மையிலும் அனுபவிக்க நேரிடுமென்பதாம். "திருப்பாட்டு இம்மையேதரும் சோறும் கூறையுமேத்தலாந் துயர்கெடலுமாம்" என்றதனாற் காண்க.

அத்தனைமுப்பத்து முக்கோடிதேவர்க் கதிபதியை
நித்தனையம்மை சிவகாம சுந்தரி நேசனையெங்
கத்தனைப்பொன்னம் பலத்தாடுமையனைக் காணக்கண்க
ளெத்தனைகோடி யுகமோதவஞ்செய் திருக்கின்றனவே.

(பொ - ரை.) நமது தந்தையை, முப்பத்து முக்கோடி தேவர்கட்குந் தலைவனாகிய மகாதேவனை, நித்தியமாயுள்ளவனை, நமது தாயாகிய சிவமாக சுந்தரியினிடத்தில் நேசமுடையவனை, எம்முடைய கருத்தனை, பொன்னம்பலத்தில் நிர்த்தனம் செய்யுமையனைத் தரிசிக்க (நம்முடைய) நேத்திரங்கள் எண்ணிலாதகாலம் தவம்செய்திருக்கின்றன.

(கு - ரை.) அனேக சென்மாந்தரங்களில் செய்த புண்ணியத்தாலன்றி நடராஜதரிசனம் கிடையாதாகலினாலும், கண்களாற் காண்டற்குரியபலன் அவன்றிருவடிதரிசனமே யாகலினாலும், "காணக் கண்களெத்தனையோ கோடியுகமோ தவஞ்செய்திருக்கின்றனவே" என்றனர். தேவரம் "பொருவிடையொன்றுடைப் புண்ணியமூர்த்தி புலியதள, னுருவுடையம்மலை மங்கைமணாளனுலகுக்

கெல்லாந், திருவுடையந்தணர் வாழ்கின்ற தில்லைச் சிற்றம்பலன் றிருவடியைக் கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்றே" என்றதனாற் காண்க.

## திருச்செங்காடு.

நெருப்பானமேனியர் செங்காட்டி லாத்தி நிழலருகே
யிருப்பார்திருவுள மெப்படியோவின்னமென்னையன்னைக்
கருப்பாசயக்குழிக் கேதள்ளு மோகண்ணன் காணரிய
திருப்பாதமே தருமோ தெரியாது சிவன்செயலே.

(பொ - ரை.) அக்கினிப் பிழம்புபோன்ற திருமேனியினையுடையவர், திருச்செங்கோடெனுந் தலத்தில் ஆத்திமரத்தினிழலில் எழுந்தருளியிருப்பவர் (இவர்) திருவுளப்பாங்கு எத்தன்மைத்தோ? இனிமேலும் அடியேனை யொருதாயின் வயிற்றினிடைத் தள்ளுவரோ (அல்லது) நாரணன் காண்டற்கரிய திருவடியினையே தந்துவிடுமோ அறியேன் (எல்லாம்) சிவன் செயலேயாம்.

(கு - ரை.) பிறப்பதும் மோட்சமடைவதும் ஆன்மாகளின் இச்சைவழி யல்லவாகையாலும், அவரவர்கள் கன்மத்தின்வழி நடக்கு மாகையாலும், அக்கன்மத்தை யூட்டுவிப்பவன் கடவுளேயாகையாலும் 'சிவன்செயலே' என்றனர். தாயுமானவரும் "சிவன்செயலாலே யாதும வருமெனத்தேரேன் நாளும்" என்றனர்.

## திருவொற்றியூர்.

ஐயுந்தொடர்ந்து விழியுஞ்சொருகி யறிவழிந்து [யான்
மெய்யும்பொய்யாகி விடுகின்றபோதொன்று வேண்டுவன்

செய்யுந்திருவொற்றி யூருடையீர்திரு நீறுமிட்டுக்
கையுந்தொழப்பண்ணி யைந்தெழுத்தோதவுங் கற்பியுமே.

(பொ - ரை.) எல்லாஞ்செய்யவல்ல திருவொற்றியூரி லெழுந்தருளியிருக்கும் பெருமானே! சிலேட்டுமமேலிட்டு, கண் விழிகள் உள்ளடங்கி, அறிவுகெட்டு, மெய்யாகியதேகம் பொய்யென்று சொல்லும் படியான நிலையினையடைந்தபோது யான் ஒரு காரியத்தை விரும்புகிறேன் (அஃதென்னவெனில்) என்னுடைய நெற்றியின்கண்ணே) விபூதிதரித்து, இரண்டு கரங்களும் அஞ்சலியாக விருக்கப்பண்ணி, பஞ்சாட்சரத்தைச் செபிக்கவும் செய்வித்தருளவேண்டும்.

(கு - ரை.) தேகத்தைவிடுகிற காலத்தில் சிவசாதனங்களும் சிவத்தியானமும் கொண்டிருக்கவேண்டுமென்பதாம். பற்றற்ற பரம ஞானியாகிய பட்டினத்தடிகள் தான் சிவலிங்கவடிவாக விளங்கும் திருவருளைப் பூரணமாகவடைந்திருந்தும் உலகத்தினைவிட்டு மறையுமளவும் திருநீறு முதலிய சாதனங்களுடனிருக்க வேண்டுமென விரும்புவாராயின், தற்காலத்துச் சிலர் தாங்கள் ஞானிகளாய்விட்டோம் விபூதி முதலிய வேண்டியதில்லையெனப் பேசி வுழறித்திரிபவர்களடையும்கதி யென்னமோ அறியகில்லோம்.

சுடப்படுவாரறிவார்புரமூன்றையுஞ் சுட்டபிரான்
றிடப்படுமாமதிற் றென்னொற்றியூரன் றெருப்பரப்பி
னடப்பவர்பொற்பத நந்தலைமேற்பட நன்குருண்டு
கிடப்பதுசாண்மனமே விதியேட்டைக் கிழிப்பதுவே.

(பொ - ரை.) மனமே! முப்புரங்களையும் எரித்தபெருமானாகிய வலிமைபொருந்திய பெரிய மதில்களாற் சூழப்பட்ட அழகிய

திருவொற்றியூரானுடைய விசாலமான வீதியில் நடப்பவர்களது அழகிய திருவடி நம்முடைய தலையின் மேற்படும்படி நல்லபடி யுருண்டு கிடைப்பதுவே, பிரமனால் எழுதப்பட்டு (நமக்கெனவேற்பட்டுள்ள) எட்டினைக் கிழிக்கத்தக்கதாம். எரிக்கப்பட்டுப்போகும் சாமான்னியர்களிவ்வுண்மை யறியார்.)

(கு - ரை) திருவொற்றியூர் மோட்சபூமியாகலின் அத்தலத்தினை நாடிவந்து அவ்வீதியிலுலவும் உத்தமச் சிவனடியார்கள் திருவடிப்பரிசத்தால் மோட்சமுண்டா மென்றார். திருவொற்றியூர் வீதி சிறந்ததென்பது "ஆதிமாலகழ்ந்து மண்ணை யறிவரும் செய்யதாளாற், நீதிலாவொற்றியூரிற் நீண்டுதற்சறிய பெம்மான், ஓதி நேரிழைபாற்றூதங் குலகுய்ய நடந்தாலந்த, வீதியின் பெருமைதன்னை யாவர் தாம் விளம்பவல்லார்" என்றதனாற் காண்க.

## திருவிடைமருதூர்.

காடே திரிந்தென்ன காற்றேபுசித்தென்ன கந்தைசுற்றி
யோடே யெடுத்தென்ன வுள்ளன்பிலாதவ ரோங்குவிண்
நாடே யிடைமருதீசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால்[னோர்
வீடேயிருப்பினு மெய்ஞ்ஞான வீட்டின்ப மேவுவரே.

(பொ-ரை) (சிவபெருமானிடத்து உள்ளபடி) அன்பிலாதவர்கள் காட்டினிடத்தே சஞ்சாரம் செய்தென்ன, காற்றினையுணவாகக்கொண்டென்ன, கந்தற்றுணிகளைத் தரித்து ஓடுகொண்டு பிச்சை யெடுத்தென்ன, ஒரு பிரயோசனமுமில்லை ஓங்கிய தேவர்கள் நாட்டினை யொத்த திருவிடைமருதூர் பெருமானுக்கு மெய்யன்பை யுடையார் மாதர்களுடன் வீட்டிலேயிருந்துகொண்டிருந்தாலும் உண்மை ஞானத்தால் விளையும் மோட்சானந்தம் அடைகுவர்.

(கு - ரை.) இல்லறத்திருக்கினும், துறவறமடையினும் அன்பு காரணமாகத் திருவருளுண்டாமன்றி வேறு ஆசிரமங்களால் பிரயோசனமில்லை யென்பார், 'அன்பர் மேவுவரே' என்றனர். தாயுமானவர். "மத்தமதகரிமுகிற் குலமென்ன நின்றிலகுவாயிலுடன் மதியகடுதோய் மாடகூடச் சிகரமொய்த்த சந்திர காந்தமணி மேடையுச்சிமீது. முத்தமிழ் முழக்கமுடன் முத்தநகையார்களொடு முத்துமுத்தாய்க்குலாவி மோகத்திருந்து மென்யோகத்தினிலை நின்று மூச்சைப்பிடித்தடைத்துக், கைத்தலநகம்படை விரித்தபுலி சிங்கமொடு கரடிநுழை நூழைகொண்ட, கானமலையுச்சியிற் குகையூடிருந்து வென்காதலாமலகமென்னச் சத்தமறமோன நிலைபெற்றவர்களுய்வார்காண் சனகாதி துணிவிதன்றோ, சர்வபரிபூரண வகண்ட சச்சிதானந்தசிவமே." என்றதனுற் காண்க.

தாயும்பகைகொண்ட பெண்டிர்பெரும்பகை தன்னுடைய
சேயும்பகையுற வோரும்பகைசிச் செகமும்பகை
யாயும்பொழுதி லருஞ்செல்வநீங்கிலிங் காதலினுற்
றேயுநெஞ்சேமரு தீசர்பொற்பாதஞ் சுதந்திரமே.

(பொ-ரை) பிரபஞ்சத்தி லழுந்திக்கிடக்கும் மனமே! ஆராயுங் காலத்தில் அருமையான செல்வம்நம்மைவிட்டு நீங்கிவிடில், அருமையாகப்பெற்றெடுத்த அன்னையும் பகையாவள், விவாகஞ் செய்துகொண்டமனைவியும் பெரிய பகையாவள், தனது பிள்ளைகளும் பகையாவர் சுற்றத்தினரும் பகையாவர் இவ்வுலகத்தினரும் பகையாவர் ஆகையால் இவ்விடத்தில் திருவிடைமருதூர் பரமசிவன் அழகிய திருவடியே நமக்குச் சுதந்தரமாகும்.

(கு-ரை.) செல்வமுற்ற காத்தில உடனிருந்து சகல நன்மைகளையும் அனுபவித்து வாழ்ந்தார் எத்தகையினரும் அச்செல்வம் நீங்

கிய காலத்தில் நெருங்கிய வாழ்தலின்றிப் பகையினையும் கொள்வார் என்பாரியாரும் பகை என்றார் ஔவையார். "கல்லானேயாயிடினுங் கைப்பொரு ளங்குண்டாயின், எல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வர் இல்லானை, இல்லாளும் வேண்டாள் ளீன்றெடுத்த தாய்வேண்டாள், செல்லாதவன் வாயிற்சொல்" என்றதனாற்காண்க.

## திருக்கழுக்குன்றம்.

காடோ செடியோ கடற்புறமோ கனமேமிகுந்த
நாடோ நகரோ நகர்நடுவோநலமே மிகுந்த
வீடோ புறந்திண்ணையோ தமியேனுடல் வீழுமிட
நீடோய்கழுக்குன்றி லீசாவுயிர்த்துணை நின்பதமே.

(பொ-ரை.) உயர்ந்திருக்கின்ற திருக்கழுக்குன்றத்தி லெழுந்தருளியிருக்கும் வேதாசலனே! அடியேனது தேகம் விழுமிடம் வனத்திலோ, மரத்தடியிலோ, சமுத்திர தீரத்திலோ, மேகந்தவழும் நாட்டினிலோ, பட்டணத்திலோ, அப்பட்டணத்தின் மத்தியிலோ நன்மை மிகுந்த வீட்டிலோ, வெளித்திண்ணையிலோ (அறியேன்) தேவரீர் திருப்பதமே (அக்காலத்தில்) என்னுயிருக்குத் துணையாக விருத்தல் வேண்டும்.

(கு-ரை.) மரணமடைவது நிச்சயம் அது இன்னகாலத்தில் இன்னவிடத்திலென அறியவாராதாகலின் அக்காலத்தில் அறிவு நிலை இங்ஙனமிருக்குமென அறிதலில்லை ஆகையினால் அவ்வமயம் என் மனத்தின் கண்ணே தேவரீர் திருவடிக்காட்சிக் கொடுத்தருள வேண்டுமென்பதாம்.

## திருக்காளத்தி.

பத்தும்புகுந்து பிறந்து வளர்ந்து பட்டாடைசுற்றி
முத்தும்பவளமும் பூண்டோடியாடி முடிந்தபின்பு
செத்துக்கிடக்கும் பிணத்தருகேயினிச் சாம்பிணங்கள்
கத்துங்கணக்கென்ன காண்கயிலாபுரிக் காளத்தியே.

(பொ-ரை.) கயிலையென்று சொல்லும்படியான காளத்தியி லெழுந்தருளியிருக்கும் சிவபெருமானே? (தாயின்வயிற்றில்) பத்து மாதம்வரையிலிருந்து, உலகில் வெளிவந்து, வயதடைந்து, பட்டு முதலியவஸ்திரங்கள் உடுத்து, முத்தாபரணங்களும் பவளமாலைகளும் தரித்து அங்குமிங்கு மோடி விளையாடி (உலக அனுபவமுழுதும்) அனுபவித்த பின்பு இறந்து பூமியில் கிடக்கும் சவத்தின் சமீபத் திலே இனி இறக்கும் பிணங்கள் சூழ்ந்துகொண்டு அழும்காரண மென்னையோ.

(கு-ரை.) தம்முளொருவனுகவிருந்தான் மாண்டு பிரத்தியட் சமாகக்கிடப்பதைக்கண்டு தாமுமிவ்வாறு மாளவேண்டியது நிச்சய மாகலின் இனியடையவேண்டியவற்றை யடைவதற்குப்பிரயத்தனம் செய்வோமென எண்ணுது வாளாசூழ்ந்து அழுதலின்பிரயோசன மென்னவென்பார் 'கத்துங்கணக்கென்னகாண்' என்றனர்ஔவையார் "ஆண்டாண்டுதோறு மழுதுபுரண்டாலு, மாண்டார் வருவரோ மாநி லத்தில்—வேண்டாம், நமக்குமதுவழியே நாம் போமளவும், எமக்கெ ன்றிட்டுண்டிரு" என்றதனுற் காண்க.

பொன்னுர்பிரயோஜனம் பொன்படைத்தார்க்குண்டு
பொன்படைத்தோன்

தன்னாற்பிரயோசனம் பொன்னுக்கங்கேதுண்டத்
தன்மையைப்போ
லுன்னாற்பிரயோசனம் வேணதெல்லாமுண்
டுணைப்பணியு
மென்னாற்பிரயோசன மேதுண்டுகாளத்தி
யீச்சுரனே.

(பொ - ரை.) காளத்தியிலெழுந் தருளியிருக்கும் சிவபெரு மானே! பொன்னினாலடைய வேண்டிய பிரயோசனம் பொன்னினையுடையாருக்குண்டு, பொன் தன்மையினைப்போல, தேவரீரால் பிரயோசனம் அடியேனுக்கு அனேகமாகவுண்டு, தேவரீரை வணங்கும் அடியேனால் பிரயோசனம் தேவரீருக்கென்னவுண்டு (ஒன்றுமில்லை.)

(கு - ரை.) பொன்னினை யொருவன் போற்றி வருவோனேயானால் அப்பொன்னினால் அவனுக்கு இன்மையிலனுபவிக்க வேண்டிய போகமனைத்துக்கும் ஏதுவாக விருந்து வெகு புகழினையும் உண்டாக்கும் அப்பொன்னுக்கு அவனாலனுபவிக்க வேண்டிய தொன்றுமில்லை யதுபோல திருவருளினை யொருவன் போற்றி வருவானேயானால் அத்திருவருளினால் அவனுக்கு மறுமையிலனுபவிக்க வேண்டிய சிவபோக மனைத்திற்கும் ஏதுவாக மோட்சத்தினைப் பயப்பிக்கும் அத்திருவருளினுக்கு அவனாற்செய்ய வேண்டிய தொன்றுமில்லை என்பதாம்.

வாளான்மகவரிந் தூட்டவல்லேனல்லன் மாதுசொன்ன
சூளாலிளமை துறக்கவல்லேனல்லன் றொண்டுசெய்து

நாளாறிக்கண்ணிடந் தப்பவல்லேனல்ல ஞானினிச்சென்
ருளாவதெப்படியோ திருக்காளத்தி யப்பருக்கே.

(பொ-ரை.) வாளைக்கொண்டு (தாயுந் தந்தையும் சம்மதித்துத் தமது) பிள்ளையினை யறுத்துப் படைத்ததுபோல செய்வேனல்லேன், மனைவி சொன்ன ஆணையிற் கட்டுப்பட்டு யௌவனப்பருவத்தைக்கழித்ததுபோல செய்வேனல்லேன், சிவப்பணி ஆறுநாள்வரையிற்செய்து கண்ணையகழந்து அப்பியதுபோலச் செய்வேனல்லேன் இத்தகையயான் திருக்காளத்திப் பெருமானுக்கு அடிமையாகும் விதம் எப்படி.

(கு-ரை.) வாளான் மகவரிந்தவர் சிறுத்தொண்டநாயனார், இளமை துறந்தவர் திருநீலகண்ட நாயனார், கண்ணிடந்தப்பியவர் கண்ணப்பநாயனார். செயற்கரிய செயல்களைச்செய்து மூத்தியைப்பெற்ற நாயன்மார்களிலொருவரை யொத்துவாழாத நான் கடைத்தேறுவதெப்படி யென்பார் ஆளாவதெப்படியே என்றனர்.

முப்போதுமன்னம் புசிக்கவுந்தூங்கவு மோகத்தினாற்
செப்போதிளமுலையாருடன் சேரவுஞ் சீவன்விடு
மப்போதுகண்கலக் கப்படவும்மமைத் தாயைய்யனே
யெப்போது காணவல்லேன் றிருக்காளத்தி யீச்சுரனே.

(பொ-ரை.) திருக்காளத்தியி லெழுந்தருளியிருக்கும் சிவபெருமானே! ஒரு நாளைக்கு மூன்றுவேளைச் சாப்பிடவும், பின்புதூங்கவும்,பின் காமவிச்சையால் செப்புக்கிண்ணத்தினை யொத்த சிறுதனத்தியருடன் அணையவும் (காலங்கழித்து) உயிர்விடுந்தருணத்தில் கண் கலங்கியழவும் செய்தனை (இத்தகையயான்) ஐயனே! எக்காலத்திலுனைத் தரிசிக்க வல்லவனவேன்.

(கு - ரை.) பிரபஞ்ச போகமே நித்தியமெனவெண்ணி உண்ணுவதிலேயும், உறங்குவதிலேயும், ஊடலிலேயும் மாணத்தருவாயில் அந்தோ வாணாளை வீணாகக்கழித்துவிட்டோமேயென ஊளையிடுதலிலேயுமாக விருக்கும்படி எனக்குக் கன்மத்தினை யூட்டிவைப்பாயேல், தேவரீரைத் தரிசித்து உய்யும் வண்ணம் எங்ஙனம் என்பார் 'எப்போது காணவல்லேன்' என்றனர்.

இரைக்கேயிரவும் பகலுந்திரிந்திங் கிளைத்துமின்னு
ரரைக்கேயவலக் குழியருகே யசும்பார்ந்தொழுகும்
புரைக்கேயுழலுந் தமியேனையாண்டருள பொன்முகலிக்
கரைக்கேகல்லா நிழற்கீழமர்ந்தருள் காளத்தியே.

(பொ - ரை) பொன்முகலி நதிதீரத்திலும், கல்லாலவிருட்சத்தின் நீழலிலும் எழுந்தருளியிருக்கும் திருக்காளத்தி நாதனே! ஆகாரத்தின் பொருட்டே இரவுகாலத்திலேயும் பகற்காலத்திலேயும் அலைந்து வாடி மின்னற்கொடிபோன்ற மாதர் அரையினிடத்து அப்பிரயோசனமான பள்ளத்தின் சமீபத்தில் வழுக்கு நிலம்போன்ற இடத்தினின்று (நீர் முதலிய) வடிவும் குழிப்புண்ணுக்கே (நாடித்)திரியும் அடியேனைத் தடுத்தாண்டருளவேண்டும்.

(கு - ரை.) பகற்காலமாத்திரமேயன்றி, இரவுகாலத்திலேயும் வயிற்றினிமித்தம் ஓடியுழன்று அதனால் தேகயிளைத்தும், மாதர்கள் நிதம்பத்திலேயே நாட்டத்தையுமுடையவனாகிப் பிரபஞ்சமுகமாக விருக்கின்றவென்னை, குருமூர்த்தியாக எழுந்தருளி அனேகரை முந்தியகாலத்தி லாண்டுகொண்டதுபோல அடியேனையும் தடுத்தாண்டுகொண்டருளவேண்டுமென்பார், 'ஆண்டருள் கல்லாநிழற்கீழமர்ந்தருள் காளத்தியே' என்றனர்.

நாறுங்குருதிச் சலதாரை தோற்புரை நாடொறுஞ்சீ
யூறுமலக்குழி காமத்துவார மொளித்திடும்புண்
டேறுந்தசைப்பிளப் பந்தரங்கத்துள சிற்றின்பம்விட்
டேறும்பதந்தருவாய் திருக்காளத்தி யீச்சுரனே.

(பொ-ரை.) திருக்காளத்தியி லெழுந்தருளியிருக்கும் நாதனே நாற்றத்தினை வாய்ந்த இரத்தம் ஓடிக்கொண்டிருக்கிற நீர்க்கால், தோலால் அமைந்த புண்குழி, பிரதிதினமும் சீழ்ததும்பும் மலநிறைந்த பள்ளம், ஆசைவழி (புடவையில்) மறைந்திருக்கும் இரணம் மதர்த்த தசையுடன் கூடியபிளப்பு, இரகசியமாக வனுபவிக்க வேண்டிய அற்ப இன்பம் இத்தகையதனை நீங்கிமுத்தியடைதற்கேதுவுள்ளதிருவடியினைத் தந்தருளுவாய்.

(கு - ரை.) விரும்புதற்கேதுவான ஒரு சிறிது நன்மையின்றி முற்றும் அருவருக்கத்தகுந்த நிலையுடன கூடிய நீச்சம் ஆகிய கடலில் தடுமாறுமடியேன் முத்தியென்னுங் கரையினையடைய தேவரீர் திருவடியாகிய புணையைத் தந்தருளவேண்டுமென்பார்.

## கைலாயம்.

கான்சாயும் வெள்ளிமலைக்கரசே நின்கழனம்பினே
னூன்சாயுஞ் சென்மமொழித்திடுவாய் கரவூரனுக்காய்
மான்சாயச் சொல்கைமருவலஞ்சாய வனைந்தகொன்றைத்
தேன்சாயநல்ல திருமேனிசாய்ந்த சிவக்கொழுந்தே.

(பொ-ரை.) சிவமணம் வீசும் வெள்ளிமலையி லெழுந்தருளியிருக்கும் தலைவனே! மாமிசம் பொருந்திய (அடியேன்) பிறவியினை

நீக்கிடுவாய், திருக்காவூர்ச் சிவசருமரின் பொருட்டு அழகிய, இடது காத்திலுள்ள மான்சாயவும், வலதுகாத்திலுள்ள மழுசாயவும் பிரணவம்போலும் வளைந்தகொன்றையிலுள்ள தேன்சொட்டவும் அழகிய திருமேனிசாய்த்த சிவக்கொழுந்தே.

(கு - ரை.) காவூர் என்பது திருவிருஞ்சிபுரம் அத்தலத்தில் திருமஞ்சனஞ் செய்கையில் திருமுடி எட்டாததுபற்றிக் குந்திக்குந்தி வருந்திய சிவசருமரென்னும் ஆதிசைவச் சிறுவர்க்காக சிவபெருமான் திருமுடியை வளைத்தருளினார். இவ்வருமைச்சரித்திரம் ஷை விரிஞ்சைத் தலபுராணத்தில் பாலனுக்குத் திருமுடிவளைத்த சருக்கத்தானுணர்க.

இல்லந்துறந்து பசிவந்தபோதங் கிரந்து தின்று
பல்லிங் கறையற்றுவெள்வாயுமாயொன் றிற் பற்றுமின்றிச்
சொல்லும்பொருளு மிழந்து சுகானந்தத் தூக்கத்திலே
யல்லும் பகலுமிருப்பதென்றோ கயிலாயத்தனே.

(பொ - ரை. திருக்கையிலையி லெழுந்தருளியிருக்கும் சிவபெருமானே! இல்லறத்திலிருந்து நீங்கி, பசியெடுத்தகாலத்தில் பிச்சையெடுத்துப் புசித்துபல்லுகளில் (தாம்பூலந் தரித்தலா லுண்டாகிய) கறையின்றி வெண்மையானவாயாகி ஒருபதார்த்தத்திலும் பற்று மில்லாமல், சொல்லினும் அச்சொல்லின் பொருளினும் விசாரமில்லாமல் சுகத்தினையே கொடுப்பதான சிவானந்த நித்திரையிலே எக்காலமும் தங்கிவாழ்த லெக்காலமோ (அறியகிலேன்.)

(கு - ரை.) தேகமுள்ளளவும் பசிப்பிணியுண்டாகுமாகலின் அப்பிணியை நிவிர்த்திசெய்றதற்கு மாத்திரம் வேண்டியவொரு சிறிய முயற்சிசெய்துகொண்டு மற்றைய வெத்தகைய விவகாரங்களிலும்

செல்லாது சுகத்தினையனுபவித்துக் கொண்டிருக்க வேண்டுமென்பதாம்.

சினந்தனையற்றுப் பிரியமுந்தானற்றுச் செய்கையற்று
நினைந்ததுமற்று நினையாமையுமற்று நிர்ச்சிந்தனாய்த்
தனந்தனியேயிருந் தானந்தநித்திரை தங்குகின்ற
வனந்தலிலென்றிருப்பே னத்தனே கயிலாயத்தனே.

(பொ - ரை.) தந்தையே! திருக்கைலையி லெழுந்தருளியிருப்பவனே! கோபநீங்கி, ஆசைநீங்கி, செயல்நீங்கி, நினைவுநீங்கி, மறைவுநீங்கி, யாதொரு எண்ணமு மில்லாமல், தனித்தவிடத்திலே தங்கி சிவானந்த நித்திரையாகிய உறக்கத்திலே வாழ்ந்து கொண்டிருப்பேன்.

(கு - ரை.) அனர்த்தத்திற்கு ஏதுவாகவுள்ள எந்த விஷயங்களிலும் மனத்தினைச் செலுத்தாமல் ஏகாந்த ஸ்தானத்தி லிருந்துகொண்டு சிவானுபவமாக விருந்துகொண்டிருப்ப னென்பதாம்.

கையாரவேற்றுநின் றங்ஙனந்தின்று கரித்துணியைத்
தையாதுடுத்துநின் சந்நிதிக்கேவந்து சந்ததமு
மெய்யாரநிற்பணிந்துள்ளே யுரோமம்விதிவிதிர்ப்ப
வையாவென்றேல மிடுவதென்றோ கயிலாயத்தனே.

(பொ-ரை.) திருக்கைலையி லெழுந்தருளியிருப்பவனே! கையினைநீட்டிப் பிச்சையெடுத்து அப்படியேபுசித்துக் (குப்பையிற்கிடக்கும்) கரித்துணியிலுள்ள (கிழித்தலைத்) தையாது தரித்துச் சிவாலயத்தையடைந்து எப்போதும், தேகம் பூமியிற்படும்படிப் பணிந்

மனத்துள்ளே (விளையுமானந்தத்தினாலே) மயிர்ச்குச்செறிய ஐயனே என்றே யழுது கூப்பிடுவதென்நாளோ.

(கு-ரை.) அன்னத்திற்கும் ஆடைக்கும் பிரயாசையெடாது ஐயமேற்றும் ஆருமிச்சியாத யாடையுடைத்தும் வாழுநிலையினை யடைந்திடினும் சிவாலயம் செல்லுதலிலும் சாஷ்டாங்கமாகப் பணிதலிலும், ஆனந்தமுறுதலிலும், தோத்திரம் செய்தலிலும் நீங்கக்கூடாதென்றனர்.

நீறார்த்தமேனி யுரோமஞ்சிலிர்த்துள நெக்குநெக்குச்
சேறாய்க்கசிந்து கசிந்தே யுருகிநின்சீரடிக்கே
மாறாத்தியானமுற் றானந்தமேற்கொண்டு மார்பிற்கண்ணீ
ராறாய்ப்பெருகக் கிடைப்பதென்றோ கயிலாயத்தனே.

(பொ-ரை.) திருக்கைலையி லெழுந்தருளி யிருப்பவே! விபூதியணிக்கப்பட்ட தேகமானது மயிர்க்கூச்செறியவும், மனம் நெகிழ்ந்து சேற்றினைப்போல வுருகித்தளர்ந்து தேவரீர் திருவடியிலே மாறுபடாத தியானம்வைத்துச் சிவானந்தமேற்கொண்டு மார்பினிடத்தே கண்களினின்றும் ஆற்றினைப்போலவெள்ளம் பெருகவே நடப்பது எந்நாளோ.

(கு-ரை.) விபூதிபூசிக் கண்ணீருங் கம்பலையுமாகநின்று சிவத்தியானமூடன் வாழும் பத்திநிலையே சிறந்ததென்பார் 'கிடைப்பதென்றோ' என்றனர்.

செல்வரைப்பின்சென்று சங்கடம்பேசித் தினந்தினமும்
பல்லினைக்காட்டிப் பரிதவியாமற் பரானந்தத்தி
னெல்லையிற்புக்கிட வேகாந்தமாயெனக் காமிடத்தே
யல்லலற்றென்றிருப்பே னத்னே கயிலாயத்தனே.

(பொ - ரை.) தந்தையே! திருக்கைலையி லெழுந்தருளி யிருப்பவனே! திரவியமுடையார். பின்னாலே போய்த்தனக்குண்டாயிருக்கும் கஷ்டங்களை யெடுத்துச் சொல்லிப் பிரதிதினமும், பல்தெரியும்படிக் கெஞ்சித்தவியாதபடிச் சிவானந்த மனுபவிக்குமிடத்தில் புகுந்துதன்னந்தனியனாய் எனக்குரிய இடத்திலே கவலையற்று என்றிருப்பேன்.

(கு - ரை) வயிற்றினிமித்தம் பிறர்பாற்சென்று அவதிப்படாமல் அந்தர்முகமாக விருந்தானந்தங் கொண்டிருப்ப தெந்நாளென்றனர்.

மந்திக்குருளையொத் தேனில்லை நாயேன் வழக்கறிந்துஞ்
சிந்திக்குஞ்சிந்தையை யாலென்செய் வேனெனைத் தீதகற்றி
புந்திப்பரிவிற் குருளையை யேந்திய பூசையைப்போ
லெந்தைக்குறியவன் காணத்தனே கயிலாயத்தனே.

(பொ - ரை.) தந்தையே! திருக்கைலையி லெழுந்தருளியிருப்பவனே! யான் தாயாகிய குரங்கினை வலிய அதன்மடியைத் தாவிப் பிடித்துக்கொள்ளும் அதன் குட்டியினை யொத்திருப்பே னல்லன், நாயினேன் அப்பியாசத்தினைத் தெரிந்திருந்தும் (வாகியமான) விஷயங்களையே யெண்ணிக்கொண்டிருக்கும் மனத்தினைத் (தடுக்க) யான் என்ன செய்திடுவேன் அடியேனைத் தீமையினின்று நீக்கி எனது புத்தியான ஆசையினால் தனது குட்டியினை வலியத்தாவுகின்ற பூனையினைப்போல வாட்கொள்ள என்றந்தையாகிய நினக்கு உரியவனாக விருக்கின்றேன்.

(கு - ரை.) மர்க்கட நியாயத்தின்படி நானே தேவரீரை வந்து பற்றிக் கொள்வதற்குச் சத்தனல்லனாகலினாலே, மார்ச்சாலநியாயப்

படி தேவரீரே வலியவந்து என்னைத் தடுத்தாட்கொள்ள வேண்டும் என்றனர்.

வருந்தேன்பிறந் திறந்துமயக்கும் புலன்வழிபோய்ப்
பொருந்தேனரகிற் புகுகின்றிலேன் புகழ்வாரிடத்தி
லிருந்தேனினியவர் கூட்டம்விடேனிய லஞ்செழுத்தா
மருந்தேனருந்துவ னின்னருளாற் கயிலாயத்தனே.

(பொ - ரை.) திருக்கைலைமலையி லெழுந்தருளியிருப்பவனே! தேவரீர் திருவருளினாலே இனி இறப்பினிலும் பிறப்பினிலும் வருந்தமாட்டேன், மயங்குகின்ற பஞ்சேந்திரியங்களின் வழியாகத்தங்கேன். நரகினிற்சேரேன், தேவரீரையே தோத்தரிப்பாரிடத்தில் சேர்ந்தேன் அத்தகையார் கூட்டத்தினின்றும் விலகேன், அழகுபொருந்திய பஞ்சாட்சரமாகிய அரியதேனினையுண்பேன்.

(கு - ரை.) திருவருளினை வாய்க்கப்பெற்றார்க்குச் சனனமரணமும், பஞ்சேந்திரிய சேட்டையும், நிரயத்துன்பமும் நீங்கப்பெற்றுச் சிவனடியார்க் கூட்டுறவும் பஞ்சாட்சரத்தியானமும் உண்டாமென்பதாம்.

## மதுரை.

விடப்படுமோவிப் பிரபஞ்சவாழ்க்கையை விட்டுமனந்
திடப்படுமோநின் னருளின்றியே தினமேயலையக்
கடப்படுமோவற்பர் வாயிலிற்சென்று கண்ணீர்ததும்பிப்
படப்படுமோசொக்க நாதாசவுந்தர பாண்டியனே.

(பொ-ரை) சொக்கலிங்கப் பெருமானே! சோமசுந்தரப்பாண்டியனே தேவரீருடைய திருவருளினை யடைதலில்லாமலே, இவ்

வுலகவாழ்க்கையானது என்றால் நீங்கமுடியுமோ, அங்ஙனம் விடினும் மனந்தானுறுதிப்படுமோ இல்லை. ஆகலின் நான் எந்நாளும் அங்குமிங்குமலைதலையின்றி நீங்குவனே, அறிவில்லார் தெருவாயலிலே சென்று கண்ணீர்வடியத் துன்ப மனுபவிக்க முடியுமோ (முடியாது ஆட்கொள்ளுவாயாக.)

(கு - ரை.) சிவபெருமானுடைய திருவருள் கிடைத்தாலல்லாமல் பிரபஞ்சவாசனை நீங்காது, மனமொருவழிப்படாது அது கிடையாதலினாலே வயிற்றினிமித்தம் கண்ணீர்த்ததும்ப அற்பர்கள் வீடு தோறும் சென்று கெஞ்சிப்பிழைக்க வேண்டுமென்பதாயிற்று.

## பொது.

உடைகோவணமுண் டுறங்கப்புறந்திண்ணை யுண்டுணவிங்
கடைகாயிலையுண் டருந்தத்தண் ணீருண் டருந்துணைக்கே
விடையேறுமீசர் திருநாமமுண் டிந்தமேதினியில் [றைக்கே
வடகோடுயர்ந்தென்ன தென்கோடு சாய்ந்தென்ன வான்பி

(பொ - ரை.) இவ்வுலகிலே, உடுத்தற்குக் கவுபீனமுளது, நித்திரைசெய்ய வெளித்திண்ணைகளுளது, உண்ணுவதற்கு இலேசாக அடையத்தகுந்த காய் இளயுள குடிக்கத்தண்ணீருளது அரியமோட்ச வழிக்குச்சாதனமாக இடபவாகனத்தின் மேலெழுந்தருளும் சிவபெருமான் திருப்பெயருளது (ஆகலின்) ஆகாயத்திலுலாவும் சந்திரனுக்கு வடக்குமுனை உயர்ந்தென்ன தென்முனைசாய்ந்தென்ன இரண்டுமொன்றே.)

(கு - ரை.) உலகத்தின்கண்ணே யின்றியமையாது ஒருவன் அனுபவிக்கவேண்டியன மானத்தைத்காத்தலும், நித்திரைசெய்த

லும், ஆகாரமுண்ணுதலுமாகலின் இவற்றின் பொருட்டு விலையுயர்ந்த பீதாம்பர முதலிய வாடைகளையும், பஞ்சணையிட்ட மஞ்சமும் கிருத குள பாயாசான்னமும் நாடாமல் ஒருகோவணத்துண்டும், தெருத்திண்ணையும், சருகு முதலியவும் போதுமென்றனர் "சிவசிவவென்னச் சிவகதிதாமே" எனத் திருமந்திரங்கூறுதலினால் துணைக்கே திருநாம முண்டு என்றனர். சந்திரனுனிவட திசையுயரின் உலகத்தினுக்கு க்ஷேமமும், தென்றிசைதாழின் உலகத்தினுக்கு க்ஷாமமுமாம், உலகத்தினைக் கருதாதார்க்கு அக்குறி என்ன பிரயோசனமென்றனர் மணிவாசகர் 'எங்கெழிலென்ஞாயிறெமக்கே லோவாம்பாவாய்'' என்றது மிக்கருத்துக் கொண்டேயாம்.

வீடுநமக்குத் திருவாலங்காடு விமலர்தந்த
வோடுநமக்குண்டு வற்றாதபாத்திர மோங்குசெல்வ
நாடுநமக்குண்டு கேட்டதெல்லாந்தர நன்னெஞ்சமே
யீடுநமக்குச் சொலவேயொருவரு மிங்கில்லையே.

(பொ-ரை.) நல்லமனதே! நமக்கு மோட்சவீடு திருவாலங்காட்டுத்தலம், என்றுங் குறைவுபடாத பாத்திரம் சிவபெருமான் தந்த ஓடு, விரும்பினவற்றையெல்லாம் கொடுக்கச் செல்வமிருந்த பட்டின முண்டு, நமக்குச் சமூத்தவமான வரைச்சொல்ல இவ்வுலகி லொருவரில்லை.

(கு-ரை.) ஒருவன் அத்தியாவசியமாக அனுபவிக்க வேண்டியபலன்கள் மறுமைக்குச் சிவபோகமும். இம்மைக்குச் சீவபோகமுமாம். சிவபோகத்திற்குக்காடும், சீவபோகத்திற்கு ஓடும் நாடு பிரத்தியட்சமாகவும் இலேசாகவும் இருத்தலின் அவற்றையே நாடியிருப்பவர் தன்னைவிட வேறொருவரில்லையாகலின் 'ஒருவரும் மில்லை யென்றனர். மோட்சவீடாகத் திருவாலங்காட்டினைக்குறித்ததென்னை

யோவெனின்? இவ்வுலகில் இதுகாறுமியாறும் மோட்சமடைந்து சிவ போகமனுபவித்துக் கொண்டிருத்தல் அவ்வுலகிலேயே அது அப் பிரத்தியட்சம். நம் காரைக்காலம்மையார் சிவபோக மனுபவிப்பது இவ்வுலகில் திருவாலங்காட்டிலேயே இது பிரத்தியட்சம் ஆகலின் இத்தலத்தினைக் குறித்தா ரென்க.

நாடிக்கொண்டீசரை நாட்டமுற்றாயிலை நாதரடி
தேடிக்கொண்டாடித் தெளிந்தாயிலை செகமாயைவந்து[றும்
மூடிக்கொண்டோமென்றுங்காமாயுதங்கண்முனிந்தவென்
பீடிப்பையோநெஞ்சமே யுனைப்போலிலைப் பித்தர்களே.

(பொ - ரை.) மனமே பிரபஞ்சமாயையானது நம்மிடம் வந்து நம்மை மூடிக்கொண்டன வென்றும், மன்மதபாணங்கள் நம்மை பீடிக்கின்ற வென்றும் இரங்கிப் பேசுகின்றனை (இவையுண்டாகாத படி சிவபெருமானைத் தேடி விசாரித்து அவர்பால் எண்ணம் வைத் தாயில்லை, அப்பெருமானுடைய திருவடியினைநாடிச் சந்தோஷித்துத் தெரிவினை யடைந்தாயில்லை அந்தோ! உன்னைப்போலப் பித்தம் பிடி த்தவர்கள் (உலகில்) இல்லை.

(கு - ரை.) பிரபஞ்ச மாயா காரியங்களா லுண்டாகிற பற்றும் மாதர் மயக்கால்வரும் இச்சையுமாகிய பாசம்சிவபெருமானை யடைய வேண்டிய கதியினை விசாரித்துத் தேர்ந்தார்க்குத் தாக்காதென்பதனை யறிந்தாயில்லை யென்பார் 'நெஞ்சமே யுனைப்போலிலைப் பித்தர்களே' என்றனர் திருமந்திரம் "பிரிந்தேன் பிரமன் பினித்தோர்பாசம் தெரி ந்தேன் சிவகதி செல்லு நிலையை யரிந்தேன் வினையை யயில்மண் வாளன், முரிந்தேன் புரத்தினை முந்துகின்றேனே" என்றதனற் காண்க.

கையொன்றுசெய்ய விழியொன்றுநாடக் கருத்தொன்றெண்ண, பொய்யொன்று வஞ்சகநாவொன்று பேசப் புலால்கமழ, மெய்யொன்றுசாரச் செவியொன்றுகேட்க விரும்புமியான், செய்கின்றபூசையெவ்வாறு கொள்வாய் வினைதீர்த்தவனே.

(பொ - ரை.) (அடியார்களுடைய) தீவினையையொழித்த சிவபெருமானே! கைகளானவை (புட்பங்களைக்கொண்டு சிவபெருமானையருச்சிக்கின்ற காலத்தில்) நேத்திரமானவை (அப்பெருமானைப் பாராது) வேறு பதார்த்தங்களைப் பார்க்கவும், மனமானது (அப்பெருமானைச் சிந்தியாது) யாதாமொரு விஷயத்தினை யெண்ணிக்கொண்டிருக்கவும், திருவோடு கூடிய வஞ்சகமாகிய நாவானது (அப்பெருமான் திருநாமங்களைச் சொல்லிக்கொண்டிராமல் (வேறு வீண்வார்த்தைகளைப் பேசவும், புலால் நாற்றத்தினையுடைய தேகமானது (தனித்திருக்காமல் சாமான்யருடன்) பரிசித்துக் கொண்டிருக்கவும், காதுகளானவை (தாம் சொல்லு மந்திரங்களைக் கேளாமல் அந்நியர் வார்த்தைகளைக் கேட்கவும் விரும்பிச் செய்கின்ற சிவபூசையினைத் தேவரீர் எங்ஙன மேற்றுக்கொள்வீர்.

(கு - ரை.) சிவபூசை செய்கின்ற காலத்தில் அகக்கரணங்களும் புறக்கரணங்களும் ஒத்திருந்தாலன்றிப் பூசையால் விளையும் புண்ணியம் கைகூடாதென்பதும், பெரியபுராணம் "ஐந்துபேரறிவுங் கண்களே கொள்ளவளப்பருங் கரணங்களானகுஞ், சிந்தையே யாகக் குணமொரு மூன்றுந் திருந்து சாத்துவிகமேயாக, இந்து வாழ்சடையானாடுமானந்த வெல்லையிறனிப்பெருங் கூத்தின், வந்தபேரின்ப வெள்ளத்துட்டிளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்" என்றதனாற் காண்க.

கண்ணுண்டுகாணக் கருத்துண்டுநோக்கக் கசிந்துருகிப்
பண்ணுண்டுபாடச் செவியுண்டுகேட்கப் பல்பச்சிலையா
லெண்ணுண்டுசாத்த வெதிர்நிற்கவீச னிருக்கையிலே
மண்ணுண்டுபோகுதையோ கெடுவீரிந்த மானிடமே.

(பொ - ரை.) (செகத்தீரே) சிவாலயத்தி லெழுந்தருளி யிரு க்கும் சிவலிங்கப்பெருமானைத்) தரிசனஞ் செய்திடற்குக் கண்ணு ண்டு, தியானிக்க மனமுண்டு, (தேவார திருவாசகங்களை) மனமுரு கிப் பாடப்பண்களுண்டு, அவற்றைக் கேட்கச் செவிகளுண்டு, அப் பெருமான் திருவடியி லருச்சிக்கப் பச்சிலைகளுண்டு, (இவ்வளவும் செய்யச் சந்தோஷித்தும்) பிரத்தியட்சமாகச் சிவபெருமானிருந்து கொண்டிருக்கையில் (இவற்றிலொரு காரியமும் செய்யாமல்) இந் தத்தேகம் (மடிந்து) மண்ணாகிப் போகின்றது ஐயோ! கெட்டுப்போ வீர்கள்.

(கு - ரை.) மானிடப்பிறப்பு வாய்ந்தார்க்கு இந்திரியங்களெனத் தும் சுகமாகவிருக்கவும், பூசைக்கு ஏற்ற சாதனங்கள் இலேசாகக் கிடைக்கத்தக்கனவைகளாக விருக்கவும் இவற்றைக்கொண்டு சிவ பூசைசெய்யப் பிரத்தியட்சமாகப் பெருமானைத் தரிசியாது வீணாக் மடிந்துபோகின்றார்களென்பார் 'மண்ணுண்டு போகுதையோ' என்ற னர். தேவாரம் "புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு அண் ணலாரது கண்டருள் செய்யாநிற்கும், எண்ணிலிபாவிகளீணதுராம லே நண்ணி வீணாக நழுவுகின்றாரே" என்றனுற் காண்க.

சொல்லினுஞ்சொல்லின் முடிவிலும்வேதச் சுருதியிலு
மல்லிலுமாசற்ற வாகாயந்தன்னிலு மாய்ந்துவிட்டோ
ரில்லிலுமன்ப ரிடத்திலுமீச னிருக்குமிடங்
கல்லிலுஞ்செம்பிலுமோவிருப்பானெங்கள் கண்ணுதலே.

(பொ-ரை.) எம்முடைய திரிநேத்திரதாரியாகிய சிவபெருமான் சிலையிலும் விக்கிரகத்திலு மாத்திரந்தானோ எழுந்தருளியிருப்பான் (அங்ஙனமன்று அவற்றில் மாத்திரமேயல்லாமல்) மந்திரமொழியிலும், அம்மந்திரமொழியின் சித்தியிலும், வேதங்களிலும், (ஆணவமலத்தினைக் காரியப்படுத்தலின்) அவ்வாணவமாகிய இருளிலேயும், (சுத்தமாயையினைக் காரியப்படுத்தலின்) அவ்வாணவமாகிய வாகாய வெளியிலும், (மெய்கண்ட சாத்திரங்களை) ஆராய்ந்து (பிரபஞ்சப்பற்றினை) நீங்கினோர் வீட்டிலும், அடியாரிருதயத்திலும் சிவபெருமானிருக்கும் இடங்களாகும்.

(கு-ரை.) ஒகார இடைச்சொற்குரிய எட்டுவகைப்பொருள்களில் ஈண்டு வினாவுதற்பொருளைத் தந்தது. முதல்வன் உருவமேயெனச் சாதிப்பாரையும் அருவமேயெனச் சாதிப்பாரையும் மறுத்து அருவமாயும் உருவமாயுமிருப்பனென்றும் உண்மையினை வித்திருச்செய்யுள் விளக்கியது. சிலர் இத்திருச்செய்யுளைக்கொண்டு விக்கிரக வாராதனையை மறுக்க முன்வருவர் அந்தோ! அவர்கள் நெற்றியிலே கண்ணினையுடைய திருவுருவத்தினைத் தெரிவிக்கும் கண்ணுதல் என்னும் அரியபெரிய பிரயோகத்தினை யறியாதவரேயாவர், இத்தகையர் பொருட்டேயன்றோ ஆசிரியர் அத்தகைய பிரயோகம் செய்து வைத்தனர். அன்றியும் அவர்கள் முன்னுள்ளனவும் பின்னுள்ளனவுமாகிய செய்யுள் சம்பந்தங்களை யாராயாது லீடாலீட நியாயமாகப் பேசிச் சருவ வியாபகலட்சணந் தேராதவராவர்.

வினைப்போகமேயொருதேகங்கண்டாய் வினைத்தானொழிந்
தினைப்போதளவு நில்லாதுகண்டாய் சிவன்பாதநினை[தாற்
நிலைப்போரைமேவு நினையாரைநீங்கிந் நெறியினின்று
லுனைப்போலொருவருண்டோ மனமேயெனக்குற்றவரே.

(பொ-ரை) மனமே! இத்தேகமானது (கன்ம) வினையின் காரியத்தாலாகியது அக்கன்மத்தினை யனுபவித்து ஒழிந்தால் பின்னர் அத்தேகம் ஒரு சிறிது நேரமுமிராது (இங்ஙனமானதால்) சிவபெருமானினுடைய திருவடியினைத் தியானம்செய், அங்ஙனம் செய்வாருடன் கூடியிரு, அங்ஙனம் செய்யாரைவிட்டு விலகு, இச்சன்மார்க்க வழியில் நடப்பையேல் எனக்குரியத் துணையாவார் உன்னைப்போலொருவ ரெனக்குக் கிடைப்பரோ? (கிடையார்.)

(கு-ரை.) பிராரத்துவவினையினை யனுபவிப்பதற்கே இத்தேகமோருருவாகி வந்திருக்கின்றது. அவ்வினை யனுபவித்து முடியின் தேகம் நழுவிவிடும் அங்ஙன நழுவுதற்கு முந்தியே அடுத்த செனனத்திற்குப் பிராரத்துவமாகவரும் ஆகாமியமேறுதபடி சிவத்தியானமும் சிவனடியார் கூட்டுறவுங் கிடைக்கப்பெறின் மறுசெனனமுண்டாகாதென்பதாம்.

பட்டைக்கிழித்துப் பருவூசிதன்னைப் பரிந்தெடுத்து
முட்டச்சுருட்டியென் மொய்குழலாள்கையில்முன்கொடுத்துக்
கட்டியிருந்த கனமாயக்காரிதன் காமமெல்லாம் [துக்
விட்டுப்பிரியவென்றோ விங்ஙனேசிவன் மீண்டதுவே.

(பொ-ரை) பட்டுவஸ்திரத்தினைக் கிழித்து (அதிலொருதுண்டெடுத்துக்கொண்டு) ஒருபெரிய ஊசியினையாவலுடனெடுத்து (அத்துண்டினில்) பொருந்தச்சுருட்டி என்னுடைய நெருங்கிய கூந்தலினையுடைய (மனைவியின்) கரத்திலேதந்து, சம்பந்தித்திருந்த பெருத்த மாயாசத்தியின் இச்சையனைத்தும் என்னைவிட்டு நீங்கவேண்டுமென்றோ இப்பிரகாரம் சிவபெருமான் எழுந்தருளிவந்தது.

(கு-ரை.) மருதவாணர் திருவெண்காட்டடிகட்குப் புத்திரராகவிருந்து வளர்ந்து வருகையில் அவருடைய பரிபக்குவம் கண்டு



காதற்ற ஊசியைக்கண்ட சுவேதாரண்யர் துறவியாய்ப்போதல்.

அவர் துறவடையும்படி குறிப்பாகத் தெரிவிக்கும்பொருட்டுக் காதற்றவூசியினைப் பட்டிற்சுருட்டிக்கொடுத்து மறைந்தபோது திருவாய் மலர்ந்தருளிய திருச்செய்யுளீது.

ஆறற்றகொங்கையு மாதர்கலவியுஞ் சூழ்பொருளும்
போதுற்றபூசலுக் கென்செயலாஞ் செய்தபுண்ணியத்தாற்
றீதற்றமன்னவ னிந்தையினின்று தெளிவதற்கோ
காதற்வவூசியும தந்துவிட்டானென்றன் கைதனிலே.

(பொ - ரை.) சொக்கட்டான் காயையினையொத்த தனமும், பெண்களுடைய ஆலிங்கனமும், சூழ்ந்துள்ள (பிரபஞ்ச) பதார்த்தங்களும் எப்போதும் செய்துகொண்டிருக்கிற துன்பத்திற்கு என்ன செய்வது? )பூர்வசென்மத்திற்செய்த புண்ணிய வசத்தினால் மாசற்ற மருதவாணன் (எனது) மனத்தினின்றும் (உண்மை) தெரிந்துகொள்ளும் பொருட்டோ காதொடிந்த ஊசியினை எனது கரத்தினில் கொடுத்துவிட்டனன்.

(கு - ரை.) சொல்கேட்டான் என்னும் பதங்கள் சொக்கட்டானெனத்திரிந்து வழங்குகிறது. காதற்றவூசியானது நூலினைக்கொண்டு ஆடையைத் தைப்பதற்கு உபயோகப் படாததுபோல மாயாகாரியமாகிய பிரபஞ்சப்பொருளும் அப்பொருளால்வரும் போகமும் ஒரு நன்மையினையு மடையாது பிரயோசனப் படாதென்பதாயிற்று.

வாதுற்றதிண்புய ரண்ணாமலையர் மலர்ப்பதத்தைப்
போதுற்றெப்போதும் புகலுநெஞ்சேயிந்தப் பூதலத்திற்
றீதுற்றசெல்வமென் றேடிப்புதைத்த திரவியமென்
காதற்றவூசியும் வாராதுகாணுங் கடைவழிக்கே.

(பொ - ரை.) யுத்தம் செய்யத்தகுந்த வலிமைபொருந்திய புய த்திணைவாய்ந்த திருவண்ணுமலைக்கடவுள் தாமரைப்போன்ற திருவடி யினைப் புட்பங்களைக்கொண் டருச்சித்து எக்காலமும் தோத்தரிக்கும் மனமே! இவ்வுலகினில் குற்றமுறுதற் கேதுவாகிய செல்வத்தினு லென்ன பிரயோசனம். அச்செல்வத்தினைச் சம்பாதித்துப் புதைத் துவைத்துப் பிரயோயனமென்ன? சாகிறகாலத்தில் காதுடைந்த ஒரு ஊசியும் உடன்வாராது.

(கு - ரை.) தனக்கென எவ்வளவோ கஷ்டப்பட்டுத் தேடும் திரவியமும் அப்படித்தேடிய திரவியத்தைப் பத்திரப்படுத்த வேண் டுமெனும் பாதுகாப்பும் ஆகிய முயற்சியனைத்தும் அப்பிரயோசன மாகி இறந்துபோகும் காலத்தில் ஒரு சிறிதும் கொண்டுபோவதற்கு அச்செல்வத்தி லுபயோகப்படாதென்பதாம்.

வேதத்தினுட்பொருண்மண்ணுசைமங்கையைவிட்டுவிடப்
போதித்தவன்மொழி கேட்டிலையோசெய்தபுண்ணியத்தா
லாதித்தன்சந்திரன் போலேவெளிச்சம தாம்பொழுது
காதற்ற வூசியும் வாராதுகாணுங் கடைவழிக்கே.

(பொ - ரை) பூமியில் வைத்த விருப்பமும், பெண்களின்மீது வைத்த விருப்பமும் ஒழித்து விடுதலே வேதத்தினுட் கருத்தென்ன உபதேசஞ்செய்த ஆச்சாரியமூர்த்தியின் வார்த்தையினைக் கேட்டதி ல்லையோ? பூர்வத்திற்செய்த புண்ணியவிசேஷத்தால் சூரியப்பிரகா சத்தினையும் ஒத்தூ உயிர்விளங்குகிற கிரணகாலத்தில் காதுமுறிந்த ஊசியும் உடன்வாராது.

(கு-ரை.) மண்பெண்ணுதிய பற்றிலுள்ள மோகத்தினை யொழி த்தாலன்றிப் புண்ணியஞ் சித்தியாதென வுபதேசித்த ஆசாரியமூ

ர்த்தியின் வார்த்தையிற் கட்டுப்படின் தேகம் நீங்கியகாலத்தில் ஆதா வாகவிருப்பது தருமமேயன்றிப் பிரபஞ்ச பதார்த்தத்திலொருசிறிது மில்லையென்பதாம். இருளிலும் ஒளியிலும் சட்டுப்பட்டுக்கிடந்த ஆன் மாத்தேகத்தினின்று நீங்குகிறகாலத்தில் மாறுதலின்றி ஒரே வெளி ச்சமாகத் தோன்றுவது சுபாவசித்தமாகலின் 'ஆதித்தன் சந்திரன் போலே வெளிச்சம்' என்றனர். புண்ணியத்தாலென்றதனால் இத்த கைய வெளிச்சம் புண்ணியம்செய்து வாழ்ந்தாருக்கேயன்றிப் பாவம் புரிந்து வாழ்ந்தார்குத் தோன்றாதென்பதுமாம்.

மனையாளுமக்களும் வாழ்வுந்தனமுந்தன் வாசன்மட்டே
யினமானசுற்ற மயானமட்டே வழிக்கேதுணை
தினையாமளவெள் ளளவாகினுமுன்பு செய்ததவந்
தனையாளவென்றும் பரலோகஞ்சித்திக்குஞ் சத்தியமே.

(பொ-ரை.) (இரந்தபின் தேகத்தைப் பிறர்தாங்கிசசெல்லுகின்ற காலத்தில்) மனைவியும், புத்திரர்களும், போகமும், செல்வமும் தன் னுடைய வீட்டிலேயே யிருந்துவிடும், இனமாகிய சுற்றத்தினர்கள் மயானம்வரையில் வருவர், உயிர்போம் வழிக்கு என்ன துணையுண்டு (ஒன்றுமில்லை) ஒரு தினையளவாவது ஒரு எள்ளளவாவது பூர்வம் செய்த தவத்தினை யனுபவிக்க அது சிவலோகத்தையடைய கைவல் யமாம் இது சரதமாம்.

(கு-ரை.) மனைவியும், புத்திரரும், போகமும், செல்வமு உடலுக்கு ஆனந்தத்தினை விளைவித்துக்கொண்டு அதற்குபகாரமாக விருந்தனவேயன்றி ஆன்மாவிற்கன்று ஆன்மாவினுக்கு உற்றதுணை யாகவிருந்து புண்ணியத்தினை யூட்டுவித்துப் பெரும்பிரயோசனத்தி னை விளைவிப்பது தவமொன்றேயாகும்.

அத்தமும்வாழ்வு மகத்துமட்டேவிழி யம்பொழுக
மெத்தியமாதரும் வீதிமட்டேவிம்மி விம்மியிரு
கைத்தலமேல்வைத் தழுமைந்தருஞ்சுடு காடுமட்டே
பற்றித்தொடரு மிருவினைப் புண்ணிய பாவமுமே.

(பொ-ரை.) திரவியமும், போகமும் வீட்டளவிலேயே, கண்களினின்றும் நீர்சிந்த புலம்பும் மெல்லியமாதர் தெருவாயாற் படியிலேயே, தேம்பித்தேம்பி இரண்டு கரங்களையும் தலைமேல் வைத்துக்கொண்டு துக்கிக்கும் புத்திரர்கள் சுடுகாட்டு வரையிலேயே (நின்று விடுவர்) துணையாகவருவது இரண்டு வினைகளாகிய புண்ணியமும் பாவமுமாம்.

(கு-ரை.) ஒருவன் இவ்வுலகில் புண்ணியஞ்செய்து கொண்டிருப்பானுயின் அவனிறந்தபின் அப்புண்ணியம் அவனுயிருடன் சென்று தெய்வலோகத்தில் சேர்க்கும், பாவஞ்செய்து கொண்டிருப்பானுயின் அப்பாவம் அவனுயிருடன்சென்று நாகலோகத்தில் சேர்க்கும், இவ்விரண்டிற்கு அன்னியமாக விசுவாசித்திருந்தயாவும் வீட்டளவு சிலவும், வீதியளவு சிலவும், சுடுகாட்டளவு சிலவும் தங்கிவிடும்.

சீயுங்குருதிச் செழுநீர்வழும்புஞ் செறிந்தெழுந்து
பாயும்புடவையொன் றில்லாதபோது பகலிரவா
யீயுமெறும்பும் புகுகின்ற யோனிக் கிரவுபகன்
மாயுமனிதரை மாயாமல்வைக்க மருந்தில்லையே.

(பொ-ரை.) (மாதர்கட்குப்) புடவை மாத்திரமில்லா திருக்கின் சீயும், இரத்தமும், நிறைந்த மூத்திரத்துடன் அழுக்கும் தங்கி வழிந்து ஓடவும். எப்போதும் (அவற்றின் துர்நாற்றத்தினைக் கண்டு ஈயும் எறும்பும் நுழைகின்ற நிதம்பத்திற்குச் சதாகாலமும் (மோகம்

வைத்து) மாளும் மனிதர்களை (அங்ஙனம்) மாயாமல்வைக்க மருந் தொன்றில்லையே.

(கு - ரை.) சிவபெருமான் திருவருளாகிய அவிழ்தம்கிடைத் தாலன்றி மாதர்மயக்கம் தீராதென்பதாம். மாதரை ஆசிரியர் இங்ங னமிழித்துக் கூறியது என்னையோவெனின்? சாத்திர ஆராய்ச்சி சிறிதுமில்லாத சிலமந்தமதிகள் இதுபோன்ற திருச்செய்யுள்களைப் படித்தபின்னராயினும் சிறிது ஆலோசித்து மாதர்களின் அங்கங்களில் வைத்திருக்கும் மயக்கத்தினின்று நீங்குவரென்னும் காருண்ணியத் திருவுளமேயாம்.

சீதப்பனிக்குண்டு சிக்கெனக்கந்தை தினமிரந்து
நீதுய்க்கச்சோறு மனைதோறுமுண்டு நினைவெழுந்தால்
வீதிக்குணல்ல விலைமாதருண்டிந்த மேதினியி
லேதுக்குநீசலித்தாய் மனமேயென்றும் புண்படவே.

(பொ - ரை.) நெஞ்சமே! குளிர்ந்த பனியினை (நீக்கிக்கொள்ளு வதற்கு) இலேசாகக் கந்தையுண்டு, பிரதிதினம் யாசித்து நீ சாப்பிட சாதம் வீடுதோறுமுண்டு, காமவிச்சை எழுந்தால் தெருவில் நல்ல பொதுமகளிருண்டு, (ஆகையால் இவ்வுலகில் எதன்பொருட்டு மனம் புண்படும்படிச் சலிக்கின்றனை.

(கு - ரை.) குளிருக்குக் கந்தையும், வயிற்றிற்குச் சோறும், காம விச்சைக்கு மாதரும் இலேசாககிடைக்கக்கூடியவைகளாத் விருக்கக் கவலையெற்றுக் கென்பதாம். தேகமுள்ள அளவும் அத்தேகத்தின் இந்திரியங்கட்குச் சுபாவமாக அமைந்துள்ள அழுக்கினை நீக்கிக்கொள் ளவேண்டுவது தருமமாகவிருத்தலினால், கண்ணினின்றும் பீளையினை

யும், காதினின்றும் குறும்பினையும், மூக்கினின்று சளியினையும், வாயினின்று எச்சிலையும், குறியினின்று நீரினையும், குதத்தினின்றி மலத்தினையும் நீக்கிக்கொள்ளுதல்போல சுக்கிலத்தினையுமொழித்துக்கொள்ளவேண்டுமென்பார் விலைமாதருண்டு என்றார் இம்மாதர்கள் ஒருவர் சுதந்திரத்தி லில்லாமல் யாவருக்கும் பொதுவாகவிருந்து விலைக்குத் தகுந்தபடிப் பிறர் சுக்கில உபத்திரவத்தை யொழிப்பவர்களாகலின் அம்மாதரைக் குறிப்பித்தார், நல்லவிலைமாதர் என்றது வேசிகளினின்றும் பிரிக்க, துறவிக்கு இங்ஙன நிகழ்ச்சியுண்டாதல் தருமமோவெனின் இந்நிகழ்வுமாதரைப்புணர்ந்து இன்பம் அனுபவிக்கவேண்டுமென்னும் கருத்துக்கொண்டன்று தேகத்திலியற்கையாக வுண்டாகும் சேஷ்டையினை நிவிர்த்தித்துக்கொண்டு நிஷ்டைக்குப் பங்கம் வராதிருக்கவேண்டுமென்பதே, மாதரைக்கொண்டேயன்றி வேறுவகையாக நிவர்த்திசெய்துகொள்ளக்கூடாதோ வெனின், பெரியோர் சுக்கிலம் அப்பிரயோசனமாகப் படாதென்பது தருமம் துறவிகட்கு இங்ஙனம் இச்சைநிகழ்தலில்லை, ஒருக்கால் தேக தருமமாத்திரமாக நிகழின் இங்ஙனம் பரிகரித்துக்கொள்ளலா மென்பதாயிற்றி.

ஆறுண்டுதோப்புண் டணிவீதியம்பலந்தானுமுண்டு
நீறுண்டுகந்தை நெடுங்கோவணமுண்டுநித்தநித்த
மாறுண்டுலாவி மயங்குநெஞ்சேமனை தோறுஞ்சென்று
சோறுண்டுதூங்கிப்பின் சும்மாவிருக்கச் சுகமுண்டே.

(பொ - ரை.) பிரதிதினமும் விகாரங்கொண்டு சஞ்சரித்து மயங்குகின்ற மனமே! (குளிக்க) நதியுண்டு, (விடாய்தீர) தோப்புண்டு (தங்கியிருக்க) அழகியதெருக்களில் பொது இடமுண்டு, (தரித்துக் கொள்ள) விபூதியுண்டு, (உடுக்க) நீண்ட கந்தையாகிய கவுபீனமுண்டு



பட்டினத்தார் கழுமரம் பற்றச்செய்தல் அரசனை புனிதனாக்குதல்.

(புசிக்க) வீடுகள்தோறும் சோறுண்டு, இவ்வளவும் அனுபவித்தபின் தூங்கியெழுந்து பின் நிஷ்டைகூடியிருக்கச் சுகமுமுண்டே.

(கு - ரை.) இன்றியமையாது வேண்டிய தேகசுகத்திற்குப் பல வற்றைவருந்தித்தேடாமல் இலேசாக யாவற்றையும் அனுபவிக்கலா மென்பதாயிற்று யாவற்றையு மனுபவித்தபின்னர் தன்னந்தனியாக விருந்து சிவயோகநிஷ்டையிலும் கூடிச்சுகமனுபவிக்கலா மென்பார் 'சும்மாவிருக்கச் சுகமுமுண்டே' என்றனர். சிவபோகசாரம், "அரு ளறிந்து தானு மறிவந்தே யாங்குப் பொருளறிந்து தானடங்கிப்போ தலிருளகல, விம்மாதிருந்து விகற்பமற வொன்றாகிச், சும்மாவிருக்கச் சுகம்" என்றதனாற் காண்க. இத்திருச்செய்யுள் சர்வசங்க பரித்தியா கமுற்ற சந்நியாசியாயினும் திருநீற்றினை விடப்படாதெனவும் ஞானி க்கு விபூதிவேண்டுவதில்லையென்றும் ஏகான்ம வாதியரை மறுத்துக் கூறிற்று.

உடுக்கக்கவிக்கக் குளிர்காற்று லொடுங்கி தந்தாற்
றடுக்கப்பழைய வொருவேட்டியுண்டு சகமுழுதும்
படுக்கப்புறந் திண்ணையெங்கெங்குமுண்டு பசித்துவந்தாற்
கொக்கச்சிவனுண்டு நெஞ்சேநமக்குக் குறைவில்லையே.

(பொ - ரை.) மனமே! தரித்துக்கொள்வதற்கும், போர்த்துக் கொள்வதற்கும், குளிர்ந்த காற்றினுக்கும் வெய்யிலினுக்கும் வருந்தி வந்தால் அவற்றை நீக்கிக்கொள்ள பழமையான ஒரு வஸ்திரமுளது படுத்துக்கொள்ளவேண்டுமானல் உலகமுழுவதும் வெளித்திண்ணை கள் எவ்வெவ்விடங்களிலுமுண்டு, பசியுடன்வந்திடில் சோறுகொடுப் பிக்கச் சிவபெருமானுண்டு, நமக்கு வேறுவிதமான குறையொன்று மில்லையே.

(கு-ரை.) உடலைக்காத்திடற்கு இன்றியமையாத ஒரு பழைய வஸ்திரமே போதுமென்பார் 'ஒரு வேட்டியுண்டு' என்றனர். இப்புண்ணிய தேயங்களில் தாங்கள் தாங்கள் வீடுகட்டுங்காலத்திலேயே அனுதரவுடைய அன்னியர் படுக்கவே தெருத்திண்ணையமைப்பது சாம்பிரதாயமாகலின் அத்திண்ணையைக்குறித்தனர். இப்பெருந்தருமம் வடதேயத்திலுல்லாமலே யிருப்பது பெருங்குறை. "ஊட்டுவித்தா லாரொருவருண்ணாதாரே" என்ற தேவாரத்திருவாக்கினுக் கேற்பக் 'கொடுக்கச்சிவனுண்டு என்றனர்.

மாடுண்டுகன்றுண்டு மக்களுண்டென்று மகிழ்வதெல்லாங்
கேடுண்டெனும்படி கேட்டுவிட்டோமினிக் கேண்மனமே
யோடுண்டுகந்தையுண்டுள்ளேயெழுத்தைந்துமோதவுண்டு
தோடுண்டகண்ட னடியார்நமக்குத் துணையுமுண்டே.

(பொ-ரை.) மாடு கன்று இருக்கின்றன மக்களிருக்கிறார்கள் என்று சந்தோஷிப்பதெல்லாம் (ஒருகாலத்தில்) கேட்டினையடையுமெனப் (பெரியோர்களால்) தெரிந்துக்கொண்டோம். (ஆகையால்) இனிச் சொல்கின்றேன் மனமே! கேட்பாயாக, பிச்சையெடுக்க ஓடு உளது உடுத்துக்கொள்ள கந்தையுளது, மனதிலே தியானிக்கப் பஞ்சாட்சரமுளது, குண்டலமணிந்த் நீலக்ண்டருடைய அடியார்கள் நமகு உதவியுமுண்டு இவைக் கேட்டினையடியா.

(கு-ரை.) முன் குறித்ன இம்மையில் நிலையுற்றனவு மன்று அவற்றால் மறுமைக்கு உதவிசெய்வனவுமன்று பின்குறித்தன இம்மையில் நிலையுற்றன இவற்றால் மறுமைக்கு உதவியுண்டென்பதாம் பற்றற்ற பரம சந்நியாசியாயினும் பஞ்சாட்சரசெபம் விடப்படாதெனவும் அச்செபம் மனதில் தியானமாக உபாம்ஸஜெபம் செய்யவேண்டுமெனவும் இத்திருச்செய்யுள் விளக்கியது. விவகாரத்திலன்றிப் பார



பத்திரகிரியார் சேவகர் பட்டினத்தாரை திருடனெனக் கட்டிப்போதல்.

மார்த்திகத்தில் செபமுதலிய வேண்டாமென்னும் ஏகான்மவாதியரை மறுத்துக்கூறியது.

மாத்தானவத்தையு மாயாபுரியின் மயக்கத்தையு
நீத்தார்தமக்கொரு நிட்டையுண்டோநித்தனன்புகொண்டு
வேர்த்தாற்குளித்துப்பசித்தாற்புசித்து விழிதுயின்று
பார்த்தாலுலகத் தவர்போலிருப்பர் பற்றற்றவரே.

(பொ - ரை.) பெரிய பிரபஞ்சத்தால் விளையும் அவதையினையும் மாயையினால் காரியப்பட்ட உடலால் விளையும் அத்தனையும் நீங்கினவர்கட்குச் சதா செய்துகொண்டிருக்கவேண்டிய நிஷ்டையொன்றுளதோ, வேண்டுவதில்லை நித்தியனாயுள்ள சிவபெருமானிடத்து அன்புபூண்டு வியர்த்தபோது ஸ்நானஞ்செய்து, பசியெடுத்தபோது அன்னமுண்டும், நித்திரைவந்தபோது தூங்கியும் பார்க்கின்றவர்கட்கு உலகத்தினரைப்போலவே வாழ்ந்துவருவர் பிரபஞ்ச பற்றில்லாதவர்கள்.

(கு - ரை.) "நெக்குநெக்குள்ளுருகி யுருகிநின்று மிருந்துங்கிடந்துமெழுந்து, நக்கு மழுதுந்தொழுதும் வாழ்த்தி நானாவிதத்தாற் கூத்துநவிற்றிச் செக்கர்போலுந் திருமேனித்திகழநோக்கிச் சிலிர்சிலிர்த்துப், புக்குநிற்பதென்று கொல்லோவென் பொல்லாமணியைப் புணர்ந்தே" என்ற திருவாசகத்தின்படி 'உலகத்தவர்போலிருப்பர் பற்றற்றவரே' என்றனர்.

ஒன்றென்றிருதெய்வமுண்டென்றிருவுயர் செல்வமெல்லா
மன்றென்றிருபசித் தோர்முகம்பார்நல் லறமுநட்பு
நன்றென்றிருநடு நீங்காமலே நமக்கிட்டபடி
யென்றென்றிருமனமே யுனக்கேவுப தேசமிதே.

(பொ-ரை.) மனமே! தெய்வமானது ஒன்றெனவே யெண்ணியிரு, அத்தெய்வம் எந்நாளுமுண்டெனவே யெண்ணியிரு, மிகுந்த செல்வமனைத்தும் நிலையற்றதென வெண்ணியிரு, பசித்து வந்தவர் முகத்தைப்பார்த்து (அன்னமிடு) நல்ல தருமமும் சிநேகமும் நன்மையென லெண்ணியிரு, நடுவுநிலைமையினின்றுங் கோணமல் நமக்குப் (பூர்வசென்மத்தில்) விதித்தபடிக் (கிடைக்கு) மென்றிரு, இதுவே யுனக்கு உபதேசமாம்.

(கு - ரை.) திருவாசகம் "தெய்வமென்பதோர் சித்தமுண்டாகிய" என்றபடி தெய்வமென்பதுண்டு எனக்கொள்வது துல்லபமாகலின் 'தெய்வமுண்டென்றிரு' எனவும், அங்ஙனம் கொள்ளினும் இரண்டு மூன்று தெய்வங்களென்னுது, "ஏகோருத்ரோ நத்வீதியா" என்ற அதர்வசிகோபநிடதத்தின்படி ஒரேதெய்வமெனக் கொள்வது அதிகத்துல்லபமாகலின், 'ஒன்றென்றிரு' எனவும், "வாழ்வாவது மாயமது மண்ணவது திண்ண" மென்றபடி, "உயிர்செல்வமெல்லா மன்றென்றிரு" எனவும், "அறஞ்செய விரும்பு" "பெரியாரைத் துணைக்கொள்" என்றபடி, 'நல்லறமுநட்பு நன்றென்றிரு' எனவும், "ஓரஞ்சொல்லேல்" என்றபடி, 'நடுநீங்காமலே' எனவும், சென்மாந்தர வினையை யனுபவிக்க வேண்டுவது கட்டாயமாகலின் 'நமக்கிட்டபடியென்றென்றிரு' எனவும் கூறிப்போந்தனர்.

நாட்டமென்றேயிரு சற்குருபாதத்தை நம்புபொம்ம
லாட்டமென்றேயிரு பொல்லாவுடலை யடர்ந்த சந்தைக்
கூட்டமென்றேயிரு சுற்றத்தை வாழ்வைக் குடங்கவிழ்நீ
ரோட்டமென்றேயிரு நெஞ்சேயுனக்குபதேசமிதே.

(பொ - ரை. மனமே சற்குருவின் றிருவருளடைவதற் கிலக்கென்றிரு, உபயோகமற்ற தேகத்தை வீணாக நம்புகின்ற பொம்மைக் கூத்தென்றிரு, சுற்றத்தினரை நெருங்கிய சந்தைக் காலத்தில் மாத்திரம் கூடிபிரிந்து போய்விடும் கூட்டமெனவிரு, (பிரபஞ்ச) வாழ்வினை நீர்ப்பாண்டம் கவிழ்தலால் ஓடுகின்ற நீரோட்டமெனவிரு இதுவே யுனக்குபதேசமாகும்.

(கு-ரை.) உபதேசகாண்டம், "மங்களை நிதியைப்பேதைமகளிரை மருங்கு சூழ்ந்து, வொக்கலை நோக்கி யேமாந்துறுகதிநோற்கலாராய், மிக்கிழி நகரத்தாழ்வார் மென்சிறு பறவைகண்டந்தோ, கக்கவெஞ்சுழ லுக்கண்டைகொண்டு விண்டுயலாதென்றே" என்றதற்கேற்ப உடல், சுற்றம், வாழ்வுயாவும் நிலையல்லன வென்றார். திருமந்திரம் "குருவே சிவமெனக்கூறின நந்தி, குருவே சிவமென்பது குறித்ததோரார், குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும், குருவே யுரைபுணர்வற்ற தோர்கோவே" என்றதனால், நாட்டமென்றேயிரு சற்குருபாதத்தை, என்றனர்.

என்செயலாவ தியாதொன்றுமில்லை யினித்தெய்வமே
யுன்செயலேயென் றுணரப்பெற்றேனிந்த வூனெடுத்த
பின்செய்ததீவினை யாதொன்றுமில்லைப் பிறப்பதற்கு
முன்செய்ததீவினையோ விங்ஙனேவந்து மூண்டதுவே.

(பொ-ரை.) (இவ்வுலகில்) சுதந்தரமாக என் செயலினாலே காரியம் விளைவது சிறிதுமில்லை, இனிமேல் கடவுளே! (எல்லாம் விளைவது) தேவரீர் செயலினாலேயே என்று தெரிந்துகொண்டேன், இந்தத்தேகம் எடுத்தபிற்பாடு (இவ்வுலகில் நான்) செய்த பொல்லாவினை யாதொன்றுங்கிடையா (தென்பதனை நானறிவேன்) பிறப்பதற்கு

முன் (பூர்வ சென்மத்தினில் செய்துகொண்ட பாவகர்மமோ என்னைக் கழுவிலேற்றும்படி) இந்தப்பிரகாரம் விளைந்துவிட்டது.

(கு-ரை.) பத்திரகிரி யரசனின் யந்திரி யேவியபடி வெண்காடரைக் காவலாளர்கள் கழுவேற்ற அக்கழு மரத்தினைச் சயிபித்தபோது திருவாய்மலர்ந்தருளிய திருச்செய்யுளீது, ஆன்மாபாதந்திரனும் பரமான்மா சுதந்திரனுமாகலான் தன்செயலின்றி எல்லாம் அவன் செயலென்றனர் "சிவன் செயலாலே யாதும் வருமெனத்தேரேனும் என்றனர் தாயுமானவரும்.

திருவேடமாகித் தெருவிற்பயின்றெனைத் தேடிவந்து
பரிவாகப்பிச்சை பகருமென்றானைப் பதம்பணிந்தேன்
கருவாகுமேதக்கடற்கரைமேவக் கருதுமென்னை
யுருவாக்கிக் கொள்ளவல்லோ லிங்ஙனே சிவனுற்றதுவே.

(பொ-ரை) சிவவேடங்கொண்டு வீதியிலுலவி அடியேனை விசாரித்துவந்து ஆசையாகப் பிச்சைகேட்ட வொருவனது திருவடியினைப் பணிந்தேன். பிறப்பென்னும் துன்ப சமுத்திரத்தில் விழவெண்ணியிருக்கு அடியேனை அடிமையாக்கிக்கொள்ள வன்றோ சிவபெருமான் (அங்ஙனம்) வந்ததுவே.

(கு-ரை.) தன்னைப்பிறவிக்கடலினின்று மெடுத்து ஆட்கொள்ளும் பொருட்டோ சிவனடியார் வேடங்கொண்டுவந்து தன்பாலிரந்தனனென்பார் 'இங்ஙனே சிவனுற்றதுவே' என்றனர்.

விட்டேனுலகம் விரும்பேனிருவினை வீணருடன்
கிட்டேனவருரை கேட்டுமிரேன்மெய் கெடாதநிலை

தொண்டேன் சுகதுக்க மற்றுவிட்டேன்றொல்லை நான்மறைக்கு
மெட்டேனெனும்பரமென்னிடத்தேவந்திங்கெய்தியதே.

(பொ-ரை.) உலகப்பற்றினை நீங்கினன், நல்வினை தீவினையிரண்டினையும் விரும்பேன், (சிவநாமமல்லாத) வீண்வார்த்தைகளைப் பேசுவாருக நெருங்கேன், அவர் வார்த்தைகளைச் செவியிற்கேட்டுத் தரியேன், தேகமழியாத சித்தியினை யடைந்தேன், இன்ப துன்பங்களையிழந்தேன், பழமையாகிய நான்கு வேதங்கட்கு எட்டிதலில்லையென்று சொல்லும்படியான சிவம் என்னிடத்தடைந்தது.

(கு-ரை.) மலத்தடிப்பால் மறைந்துகிடந்த சிவம் என்னிடத்து வெளிப்பட்டமாத்திரத்துப் பிரபஞ்சமுகமாக வறியவேண்டியவாகிய விஷய மனைத்திலும் இனி மனம் செல்லுதலில்லையாம்.

அட்டாங்கயோகமு மாதாரமாறு மவத்தையைந்தும்
விட்டேறிப்போன வெளிதனிலே வியப்பொன்று கண்
வட்டாகிச்செம்மதிப் பாலூரண்டு மகிழ்ந்திருக்க | டேன்
வெட்டாதபேரின்ப மென்னைவிழுங்கி யிருக்கின்றதே.

(பொ-ரை.) எட்டுவித அங்க யோகங்களையும், ஆறுவகையான ஆதாரங்களையும், ஐந்துபேதமான அவத்தைகளையும் கழித்து கடந்து மேலேசென்ற திருவருள் வியாபகத்திலே ஒரு பொருளினைத்தரிசித்தேன். 'அவ்விடத்தில்' திரட்சியாகிய செவ்விய சந்திரனிடத்துண்டாகும் ஞானமிர்தமுண்டு களித்திருக்க (ஒருவரும்) கிட்டுதற்கரிய சிவானந்த வின்பமென்றனை யுட்கொண்டு இருக்கின்றது.

(கு - ரை.) யோகம் எட்டாவன:—இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சாமாதி, ஆதாரம்

ஆறுவன:—மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை. அவத்தை ஐந்தாவன:—சாக்கிரகம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம். இவற்றைக்கடந்தோர் திருவருண் மயமாகச் சிவராஜயோக நிஷ்டையிலிருந்துகொண்டு ஞானமிர்த முண்டிருப்பரென்பதாம்.

எரியெனக்கென்னும்புழுவோவெனக்கெனுமிந்தமண்ணுஞ்
சரியெனக்கென்னும் பருந்தோவெனக்கெனுந்தான் புசிக்க
நரியெனக்கென்னும் புன்னாயெனக்கென்னு மிந்நாறுடலைப்
பிரியமுடன்வளர்த்தே னிதனாலென்ன பேறெனக்கே.

(பொ-ரை.) (உயிரினின்று நீங்கியவுடனே) நாற்றத்திற் கேது வாயுள்ள இச்சரீரத்தினை நெருப்புக்கொளுத்திவிடும், புழுக்களுண் டாகி மேயும், மண்தின்றுவிடும், பருந்து கொத்தும், நரி பிடுங்கும், அற்ப நாய் கடிக்கும் (இவையனைத்தும் தனதெனப் பாராட்டும் இத்த கையதனை) அன்புடன் காத்துவந்தேன் இதனால் நானடைந்த இலாப மென்னையோ (ஒன்றுமில்லை.)

(கு - ரை.) திருமந்திரம், உடலாரழியி லுயிராரழிவர் திடம்படு ஞானம் சேரவுமாட்டா, என்றபடி ஆன்மா ஞானமடைதற்குத்தேகமு மொருசாதனமாகவிருக்க இங்ஙனங் இழித்துச்சொற்றதென்னையோ வெனின்? தேகமெடுத்தலினால் அடையவேண்டிய இலாபத்தினை யடையாதார உடலினைக்குறித்துக் கூறியபடியேயாம். அங்ஙனமாயின் தன்மேலேற்றிக் கூறியதென்னை யெனின்? இது சிவஞானிகள் வழக்கு.

அண்ணலன்வீதி யரசிருப்பாகு மணிபடையோர்
நண்ணெருநாலொன்ப தாமவரேவலு நண்ணுமிவ்வூர்

துன்னெண் பசிக்கு மடைப்பள்ளியான சுகமுமெல்லா மெண்ணிலிகால மவமேவிடுத்தன மெண்ணிரிதே.

(பொ - ரை.) பொருந்திய (உடலாகிய) இவ்வூரில் ஆன்மாவாகிய அரசன் (இருதயத்தினை) அரசிருக்கையாகப் பெற்று (மூலாதாரமுதல் ஆஞ்ஞைவரையில் உலவும்) வீதியாகக்கொள்ள முப்பத்தாறு தத்துவங்களும் ஏவற்படைகளாக விருக்கக்கொண்டது, (அன்றியும் ஆன்மாவினுக்குப்) பசியுண்டானகாலத்து அதை நிவிர்த்திக்கத்தகுந்த சமையல்வீடு. இச்சுகங்களை நோக்கி அளவற்றகாலம்வீணே கழித்தனன் அவற்றையெல்லாம் திரும்பவும் நினைத்துப்பார்க்க வருமையாகும்.

(கு - ரை.) ஆன்மவனுபவித்தற் கேதுவாயுள்ள சுகங்களைப் பெரிதாகவெண்ணி யவற்றிலேயே யழுந்திக் கிடந்ததன்றி ஆன்மவனுபவத்திற் கன்னியமாக வோர் சிவானுபவத்தில் இலேசமும் பெற்றேனில்லை யென்பார் 'எண்ணிலிகாலமவமே இலேசமும்பெற்றேனில்லை யென்பார் 'எண்ணிலிகாலமவமே விடுத்தனம்' என்றனர்.

என்பெற்றதாயாருமென்னைப் பிணமென்றிகழ்ந்துவிட்டார், பொன்பெற்றமாதரும் போவென்றுசொல்லிப் புலம்பிவிட்டார், கொன்பெற்றமைந்தரும் பின்வலம்வந்து குடமுடைத்தா, ருன்பற்றொழிய வொருபற்றுமில்லை யுடையவனே.

(பொ-ரை.) என்னை (யருமையாகப்) பெற்றெடுத்த தாய்மாரும் என்னை (யாதொருவுபயோகத்திற்கும் வாராத) சவமென நீக்கிவிட்டனர். (இதுகாறும்) திரவியம் (என்னை) லனுபவித்துவந்த பெண்டிரும் விலகிப்போவெனக் கூறியழுதுவிட்டார், வலிமையுடைய புத்திரர்களும் பின்பு சுற்றிவந்து நீர்க்குட முடைத்துவிட்டனர்.

இனிமேல் தேவரீ ரிடத்துவைத்த அன்பேயன்றி வேறுபதார்த்தங் களில் அன்புகிடையாது என்னை யடிமையாக வுடையவனே.

(கு-ரை.) ஏதோவொரு காரணம்பற்றி என்பால் அதிகவிசுவாசம்வைத்தவ ரனைவரும் அக்காரணத்திற் கேது என்பால் நிகழாமைகண்டு முற்றும் வெறுத்துவிட்டனர். தேவரீரைமறந்து அவர்பால் வைத்திருந்த பற்றானது இப்போது நீங்கிவிடவே நினைவந்தடைந் தேன் ஆட்கொள்வாயாக வென்பார், 'உன்பற்றொழிய வொரு பற்று மில்லை' என்றனர் தாயர், மாதர், மைந்தரெனப் பன்மையிற் கூறினமையின் முன் சென்மங்களினடந்தவற்றை விளக்கினாராயிற்று.

கறையற்றபல்லுக் கரித்துணியாடையுங் கள்ளமின்றிப்
பொறையுற்றநெஞ்சமும் பொல்லாதவூணும் புறந்திண்ணை
தரையிற்கிடப்பு மிரந்துண்ணு மோடுஞ் சகமறியக் [புக்
குறைவற்றசெல்வமென்றே கோலமாமறை கூப்பிடுமே.

(பொ-ரை) (தாம்பூலம் தரித்தலால் விளையும்) கறையில்லாதபல்லும், அழுக்குத்துணியும், பொறுமைவாய்ந்த மனதும், சுவையில்லாத உணவும், வெளித்தெருத் திண்ணையும், பூமியின்மீது படுக்கையும், யாசித்து உண்ணுதற்கேற்ற மண்ணோடும் (இவையனைத்தும்) உலகப்பிரசித்தமாக யாதொருகுறைவுமில்லாத செல்வமென்றே அழகியவேதங்கள் முறையமிடுவன.

(கு-ரை.) முற்றத்துறந்த பெரியோர்கள் தாங்கள் இன்றியமையாது அனுபவிக்கவேண்டியவை இலேசாகக் கிடைத்தற்குரிய பதார்த்தங்களாகவே யிருக்கவேண்டுமென்றிப் பிரயாசைப்பட்டுச் சேகரித்தற் குரியவைகளாக விருக்கப்படாதெனவும் அவையே சிறந்தவை யெனவும் கூறுவார் 'குறைவற்ற செல்வமென்றே' என்றனர்.

எட்டுத்திசையும் பதினாறுகோணமு மெங்குமொன்றாய்
முட்டித்ததும்பி முளைத்தோங்குசோதியை மூடரெல்லாங்
கட்டிச்சுருட்டித்தங்கக்கத்தில்வைப்பர் கருத்தில்வையார்
பட்டப்பகலை யிரவென்றுகூறிடும் பாதகரே.

(பொ-ரை.) எட்டுத் திக்குகளினும், பதினாறு கோணங்களினும் எவ்விடத்தும் ஒரே தன்மைவாய்ந்து வியாபகமாகவிருந்துயர்ந்த அருட்பெருஞ் சோதியினை, அறிவீனர்யாவரும் (அப்பெருமானைப் பற்றிச் சொல்லும் நூல்களை) கயிற்றாற்கட்டிச் சுருட்டித் தங்கள் கக்கத்தில் வைப்பரேயல்லாமல் மனத்தில்வைக்கமாட்டார்கள் அத்தகையர் பட்டம்பகலை இரவென்னச் சாதிக்கும் பாவிகளே யாவர்கள்.

(கு-ரை.) சதாகாலமும் சாத்திரங்களைப் படித்து அவற்றைக் கையில் வைத்துக்கொண்டு மூடர்கள் திரிவரேயன்றி அச்சாஸ்திரங்களில் சிவபெருமான் சர்வவியாபகமாகவுள்ள தன்மையினைத்தெரிந்து மனத்துட்கொள்ளாது அப்பெருமான் ஏகதேசியெனவே சாதிப்பர் என்பதாம்.

வாய்நாறுமூழன் மயிர்சிக்குநாறிடு மையிடுங்கண்
பீநாறுமங்கம் பிணயவடிநாறும் பெருங்குழிவாய்
சீநாறும்யோனி யழனாறுமிந்தியச் சேறுசிந்திப்
பாய்நாறுமங்கையர்க் கோவிங்ஙனேமனம் பற்றியதே.

(பொ-ரை.) வாயில் (ஊத்தை) நாற்றமெடுக்கும், சிக்குண்ட மயிரினில் (அழுக்கு) நாற்றமெடுக்கும், மைதீட்டிய கண்களில் (பீளை)நாற்றமெடுக்கும், தேகத்தில் பிணநாற்றமெடுக்கும், பெரியபள்ளமாகிய நீச்சக்குழியில் சீநாற்றமெடுக்கும், குறியில் வெண்மை நாற்

றமெடுக்கும். அன்றியும் அதில் சுரோணிதம் சிதறியோடி நாற்றமெடுக்கும் இத்தகைய அங்கங்களைவாய்ந்த மாதர்களிடத்திலேயோ அடியேன்' மனமானது இச்சைகொண்டது.

(கு - ரை.) புபூட்சுக்கள் பகிர்முகநோக்கமுடையார் முமூட்சுக்கள் அகமுகநோக்குடையார் ஆகலின் மாதர்கள்மேல் கொண்ட அலங்காரத்தால் மயங்கி அவர் பாலாசையுற்று வேறு சிந்தையின்றி மயங்கிக் கிடக்கின்றனர் புபூட்சுகள். அகமுகவிசாரணையில் வேடத்தால் மயங்காது அவ்வேடத்தினைக் கொண்டிருக்கிற தேகத்தின் அங்கங்களொன்றினையும் விசாரித்து அவற்றிலுள்ள குற்றங்களை நாடி வெறுப்பர்கள் முமூட்சுகள். ஆகவே 'மங்கையர்க் கோவிங்ஙனே மனம் பற்றியதே.' என்றனர்.

உரைக்கைக்குநல்ல திருவெழுத்தைந் துண்டுரைப்படியே
செருக்கித்தரிக்கத் திருநீறுமுண்டு தெருக்குப்பையிற்
றரிக்கக்கரித்துணி யாடையுமுண் டெடந்தச் சாதியிலு [யே.
மிரக்கத்துணிந்துகொண் டேன் குறைவேது மெனக்கில்லை

(பொ-ரை.) வாயாரச்செபித்தற்கு நன்மையான மகாபஞ்சாக்கர மந்திரமுளது. வேதத்தில் சொல்லியபடியே சந்தோஷித்துத் தரித்துக்கொள்ள திருநீறுளது, தரித்துக்கொள்ள வீதிக்குப்பைகளில் அழுக்குத்துண்டான ஆடையுண்டு, எத்தகைய சாதியினும் யாசிக்க தைரியங்கொண்டேன் இனி யாதொரு குறைவுமில்லை என்றனக்கு.

(கு - ரை.) ஒவ்வொருவரும் மனோவாக்குக் காயங்களைச் சுத்தி செய்துகொண்டால் அடையவேண்டிய சிவசாம்பிராச்சியமாகிய திருவருளினையடைந்து விடலாம். அங்ஙனம் சுத்திசெய்வதற்கு இரண்டரிய பதார்த்தங்களைத் தெரிவித்தனர். மந்திரநாயகமாகியபஞ்

சாட்சர மகாமந்திரத்தினை மனத்தாலெண்ணி வாக்கால் செபிக்கவே மனமும் வாக்கும் சுத்தியாய்விட்டன. காயத்தில் வேதபடிதமாயுள்ளவிபூதிதரிக்கவே காயம் சுத்தியாய்விட்டது. ஆகவே 'திருவெழுத்தைந்துண்டு,' 'திருநீறுமுண்டு' என்றனர் இன்றியமையாது தரிக்க வேண்டிய கௌபீனத்திற்குக் கரித்துணியைக் குறிப்பித்தனர். 'சாதியிரண்டொழிய வேறில்லை' என்ற பூலோக சரஸ்வதியின் வாக்கியத்தினை மேற்கொண்டு 'எந்தச்சாதியிலுமிரக்கத்துணிந்துகொண்டேன் என்றனர்.'

ஏதப்பட்டாயினி மேற்பாட்டையி தென்றறிந்து
போதப்பட்டாயில்லை நல்லோரிடஞ்சென்று புல்லறிவால்
வாதைப்பட்டாய்மட மாதர்க்கலவி மயக்கத்திலே
பேதைப்பட்டாய்நெஞ்சமே யுனைப்போலில்லைபித்தருமே.

(பொ - ரை.) மனமே! உலகத் துன்பினையடைந்தாய், பெரியோரிடம் நாடி இனிமேலடையப்போகும் துன்பங்களை யின்னதெனத் தெரிந்துகொண்டு அறிவிற்கொண்டாயில்லை. அற்பவறிவினால் துக்கமடைந்தனை, அறியாமையினையுடைய மாதர்கள் சையோக மயக்கத்திலேலே பேதையாயினை பித்தர்களுள் உன்னைபோலொருவனுமில்லை,

(கு - ரை.) அறியாமையால் இதுகாறும் அனுபவித்த துன்பங்களத்தனையும் போக இனிமேலாகிலும் துன்பங்களடையாதிருக்க வேண்டியதற்குப் பரிகாரம் பெரியோரையடுத்துத் தெரிந்துகொள்ளாமல் இன்னமும் மாதர் மயலில் மடக்குண்டு கிடக்கின்றாயாகலின் உனைப்போலில்லை பித்தருமே' என்றனர்.

சுரப்பற்றுவல்வினை சுற்றமுமற்றுத் தொழில்களற்றுக்
கரப்பற்றுமங்கையர் கைபிணக்கற்றுக் கவலையற்று
வரப்பற்றுநாதனை வாயாரவாழ்த்தி மனமடங்கப்
பரப்பற்றிப்பதன்றோ பரமாபர மானந்தமே.

(பொ-ரை.) பெருமானே! (நானிவ்வுலகில்) வீண்வார்த்தை பேசுதலில்லாமல், தீயவினைகளடைதலில்லாமல, உறவினர் (நெருக்கம்) இல்லாமல், வஞ்சகமில்லாமல், மாதர்கள் சினேகமில்லாமல், சஞ்சலமில்லாமல், அளவுகடந்து சிவபெருமானை வாய்நிரம்ப வாழ்த்துதலைச்செய்து மனமொடுங்கி அவாவில்லாமல் இருக்குந்தன்மையல்லவோ விசேஷ ஆனந்தநிலை.

(கு-ரை.) மாயாகாரிய ரூபமாகிய போகமனைத்தும் பிரபஞ்சத்தில் நழுவவிட்டாலன்றிச் சிவபெருமானை வாயாரவாழ்த்தி எத்துதற்கு அனுக்கூலமுண்டாகாதெனவும் அங்ஙனம் எத்துதலினாலேதான் பெருமானந்த மூண்டாமெனவும் விளக்கினாராயிற்று.

பேய்போற்றிரிந்துபிணம்போற்கிடந்திட்டபிச்சையெல்லா
நாய்போலருந்தி நரிபோலுழன்றுநன் மங்கையரைத்[லிச்
தாய்போற்கருதித் தமர்போலனைவர்க்குந் தாழ்மைசொல்
சேய்போலிருப்பர்கண்டீ ருண்மைஞானந்தெளிந்தவரே.

(பொ-ரை.) மெய்ஞ்ஞானம் உணர்ந்தவர்கள் போய்பிடியுண்டவனைப்போலச் சஞ்சரித்து, சவம்போல அசைவின்றிகிடந்து, அந்நியர்கொடுக்கும் பிச்சையினை நாயினைப்போலுண்டு, நரியினைப்போல வலைந்து, கற்புடையமாதர்களை யன்னையவர்போலெண்ணி, சுற்றத்தினரைப்போல எவருக்குமிதம்பேசி, புத்திரனைப்போல, விருந்துக்கொண்டிருப்பர்.

(கு - ரை.) தனக்கென ஒருபயனை நாடாத பெரியோர் கண்ட கண்டவிடங்களிற் றிரியினுந்திரிவர், அசைவற்றிருப்பினு மிருப்பர், உண்ணினும் உண்பர், உண்ணாதிருப்பினுமிருப்பர், பேசினும் பேசுவர் பேசாதிருப்பினுமிருப்பர், பிதாவைப்போலிருப்பினு மிருப்பர் புத்திரனைப்போலிருப்பினுமிருப்பரென்பதாம் (ஒரு தன்மைகூறவே அதற்கினமான வேறு தன்மையினையும் கூட்டியுரைத்தல் சம்பிரதாயமாம்.

விடக்கைபருந்தின் விருந்தேகமண்டல வீணனிட்ட
முடக்கைபுழுவந் துறையிடமேநல முற்றுமிலாச்
சடக்கைகருவி தளர்ந்துவிட்டாற்பெற்ற தாயுந்தொடாத்
தொடக்கையுனைச்சுமந் தேனினி யேது சுகமெனக்கே.

(பொ - ரை.) மாமிசபிண்டமே! பருந்துண்பதற்கேற்ற விருந்தே! கமண்டலத்தினையேந்திய வீணனாகியபிரமன் சிருட்டித்தவளைவே! கிருமிகள்வாசம் செய்யுமிடமே! நன்மையென்பது சிறிதுமில்லா வுடலே! நரம்புதளர்ந்து பிணமாய் விடில் ஈன்றெடுத்த அன்னையும் நெருங்காத சம்பந்தமுடையபொருளே! உன்னை யிதுகாறுந் தாங்கினேன் உன்னாலேது சுகமெனக்குண்டு.

(கு - ரை.) உலகிலெலாவ்வொருவரும் ஒருபொருளைப்பரிப்பது அப்பொருளால் பின்னொருகாலத்தில் ஒரு நன்மையினை யடையலாமெனக்கருதியேயாம், உடலாகிய நீ உனக்குரிய மனம் வாக்கு காயங்களால் இன்றியமையாது செய்யவேண்டிய சிவத்தியானமும்சிவதோத்திரமும் சிவபூஜையுமுறையே செய்யாது வாழ்ந்தாயாகலின் உன்னைச்சுமந்து திரிந்ததலினாலே என்னப்பிரயோசனங் கண்டேனென்பார். 'நினினியேது சுகமெனக்கே' என்றனர்.

அழுதாற்பயனென்ன நொந்தாற்பயனென்ன வாவதில்லை
தொழுதாற்பயனென்ன நின்னையொருவர் சுடவுரைத்த
பழுதாற்பயனென்ன னன்மையுந்தீமையும் பங்கயத்தோ
னெழுதாப்படிவருமோ சலியாதிரென்னேழைநெஞ்சே.

(பொ-ரை) அறியாமையினியுடையமனமே! (ஒருதுன்பம்வந்தடைந்தகாலத்தில்) அழுதலினாலே என்னப்பியயோசனம், அப்போது துதித்தலினாலே யென்னப்பிரயோசனம், உன்னைவேறொருவர் மனநோகச்சொல்லினும் குற்றத்தைச் சிந்திப்பதிலென்ன இவற்றாலாவது ஒன்றுமில்லை. பிரமனெழுதிய தலைவிதிப்படி யல்லாது விளையுமோ இவற்றிலொன்றினுக்கும் சலிபவேண்டுவதில்லை.

(கு-ரை.) அவரவர்கள் பூர்வகன்மத்திற்குத் தக்கபடி, சிவாஞ்ஞையை மேற்கொண்டு பிரமன் விதித்தவற்றை யநுபவித்துத் தீரவேண்டுமேயன்றி அதுபற்றி விசனமுதலிய அடைதலினால் சிறிது பிரயோசனமில்லையென்பர் 'ஆவதில்லை' என்றனர்.

ஊரீருமக்கோ ருபதேசங்கேளு முடம்படங்கப்
போரீர்சமணைக் கழுவேற்றுநீற்றைப் புறந்திண்ணையிற்
சாரீரனந்தலைச் சுற்றத்தைநீங்கிச் சுகநகைக்க
வேரீருமக்கவர் தாமேதருவ ரிணையடியே.

(பொ - ரை) (ஓ ஊரிலுள்ளவர்களே! உங்கட்கொரு உபதேசம் செய்கிறேன் (கவன்மாய்க்) கேளுங்கள், (உங்களுடைய) தேகமுழுவது (மதுரையின் வண்ணே) சமணர்களைக்கழுவிலேற்றிய திருநீற்றிணைப்பூசிக் கொள்ளுங்கள், (உங்களுடைய) சுற்றத்தினர்களுடன் பிரிந்து (பொதுவாயுள்ள) வெளித்திண்ணைகளில் சிவயோகநிற்

திரைசெய்துகொண்டிருப்பீர், உலகம் சிரிக்கச் சிவவேடமாகிய அழ கினைக் கொள்வீர் (இங்ஙனம்செய்யின்) அப்பரமசிவமே அவருடைய இரண்டு திருவடிகளைத் தந்திடுவர்.

(கு - ரை) திருவெண்காடர் தாமனுபவித்துவரும் சாதனத்தி னை உலகத்தாருக்கு தெரிந்து உய்யும்பொருட்டுக் கருணை மிகுதியால் உபதேசித்தருளினர். மதுரையின்கண்ணே கூன்பாண்டியனுக்குச் சுரநோயுண்டாக அது அப்பாண்டியன் ஆசிரியர்களாகிய சமணமுனி வர்கள் பெரும்பிரயத்தனத்தால் தீராதிருக்க, திருஞானசம்பந்தமூர் த்தி சுவாமிகள் எழுந்தருளி "மந்திரமாவதுநீறு" என்ற திருப்பதிகத் தைப்பாடி விபூதியிட்டு அச்சுரநோயைத்தீர்த்து அப்பாண்டியனையும் சைவனாக்கினர் தோல்வியடைந்த சமணர்களைப் பாண்டியன் கழுவேற் றினன். அக்குறிப்பினைவிளக்கி விபூதியின்மகிமையினை விளக்குவான் 'சமணைக்கழுவேற்றுநீற்றை' என்றனர்.

நீற்றைப்புனைந்தென்ன நீராடப்போயென்ன நீமனமே
மாற்றிப்பிறக்க வகையறிந்தாயில்லை மாமறைநூ
லேற்றிக்கிடக்கு மெழுகோடிமந்திர மென்னகண்டா
யாற்றிற்கிடந்துந் துறையறியாம லலைகின்றதே.

(பொ - ரை.) மனமே! விபூதியினைத் தரித்தென்ன, (கங்கை முதலிய ஆறுகளில்) தீர்த்தமாடுதற்குப்போயென்ன, (எடுத்தவுடலை) மாற்றிஞானவானாய்ப் பிறக்க நல்லவகைதெரிந்து கொண்டாயில்லை பெரிய வேதங்களில் எழுதிக்கிடக்கும் அனேக கோடானகோடி மந் திரங்களின் (உண்மையினை) என்னவென்று தெரிந்தாய், (பிரபஞ்ச) நதியிலேவிருந்து (திருவருளின்) துறைதெரிந்துகொள்ளாமல் அலை கின்றனை.

(கு-ரை) பிரபஞ்சத்தின்கண்ணே மாயாபோக விஷயங்களிற் கட்டுண்டு அதிலேயே யழுந்திக்கிடப்பவர்கட்கு, விபூதியினாலும், புண்ணிய தீர்த்தங்களினாலும் பிரயோசனமென்றனர். ஆகவே சாதனங்களை அன்புடனே செய்யவேண்டுமென்பதாம்.

ஓங்காரமாய்நின்ற வத்துவிலேயொரு வித்துவந்து
பாங்காவுழுளைத்த பயனறிந்தாற்பதி னாலுலகு
நீங்காமனீங்கி நிறைபாநிறைந்துபதி னாலுலகு
யாங்காரமானவர்க் கெட்டாக்கனிவந் தமர்ந்திடுமே.

(பொ-ரை) பிரணவசொரூபமாகிய பொருளினிடத்தே ஒப்பற்ற (நாதமென்னும்) விதையானது அழகாக உற்பவித்த பிரயோசனத்திலே யிருக்கினும் அறிவிலே தோனாறுதபடி நீங்கி, (மாயாவிஷயங்களில்) நிறையாமல் (திருவருளி) னிறைவில் நிறைந்து வியாபகமாய் அகங்காரசொரூபிகட்கு எட்டாத சிவமாங்கனியானது கிடைக்கப்பெறும்.

(கு-ரை.) பிரணவத்தின் கண்ணே நாதமாத்திரமா யெழு முன்னையிடணே விசாரித்தால் பிரபஞ்சசொரூபம் தோன்றாது அந்நாதத்திற்குக் காரணமாகிய சிவபெருமான் வெளிப்பட்டருளுவனென்பதாம். சுதந்தரவீனமுடையார்க்கே இப்பேறு உண்டாமென்பர் 'ஆங்காரமானவர்க்கெட்டா' என்றனர்.

விதிபார்படைப்பு மரியாரளிப்பும் வியன்கயிலைப்
பதியார்துடைப்புநம் பாலணுகாது பரானந்தம்மே
கதியாகக்கொண்டுமற் றெல்லாந்துயிலிற் கனவெனநீ
மதியா திருமனமே யிதுகாணன் மருந்துனக்கே.

(பொ - ரை.) மனமே! பிரமனுடைய சிருட்டிப்பும், விண்டுவி னுடைய இரட்சிப்பும், பெருமைபொருந்திய கயிலைப்பெருமான் சங் காரமும் நம்மிடத்து நிகழாது சிவானந்தமேதுணையாகப்பெற்று, மற் றப்பிரபஞ்சபோகமனைத்தும் தூக்கத்திற்கண்ட கனப் பொருள்களைப் போலக் கருதாமலேயிரு இதுவே உனக்கு நல்லமருந்தாகும்.

(கு - ரை.) பிரபஞ்சகாரியங்களைத் துச்சமெனக்கழித்துத் திரு வருளையே ஆதாரமாகக்கொண்டு சிவானந்தத்தினை நாடியிருப்பவர்கள் முத்தொழிலிற் கட்டுப்படார்கள். அங்ஙன முத்தொழிலிற்கட்டுபடுதற் கேதுவாயுள்ள வினை நோயை நீக்குதற்கு இச்சாதனமே மருந்தாம்.

நாய்க்குண்டு தொண்டு நமக்குண்டுபிச்சை நமனைவெல்ல
வாய்க்குண்டுமெந்திர பஞ்சாட்சரமதி யாமல்வரும்
பேய்க்குண்டுநீறு திகைப்புண்டுநின்ற பிறவிப்பிணி [கே.
நோய்க்குண்டுதேசிகன் றன்னருணோக்கங்க ணோக்குதற்

(பொ ரை.) நாயானது (வீடுதோறும் பொருக்கித்தின்பதற்கு) இலைக்கட்டு உளது, நமக்கு (ஊராரிருக்கின்ற)பிச்சைச்சோறு உளது, இயமனைஜெயிப்பதற்குப் பஞ்சாட்சரமகாமந்திரம் வாயிலுள்ளது, மதி யாமல் (எதிர்த்துவருகின்ற) பேயினுக்கு அதையோட்ட விபூதியுள து பிரமிப்பையடைந்து, உள்ளசென்மநோயாகியபிணிக்கு ஆசிரிய னுடைய திருவருள்நோக்கமானது நம்மை நோக்குதற்கு உளது.

(கு ரை) நாய்க்கு எச்சிலைவீதிகடோறும் இலேசாகக்கிடப் பதுபோலப் பிச்சைச்சோறும் நமக்கு கிடைக்குமென்பார் நாயைக் குறித்தனர். பஞ்சாட்சரமகாமந்திரம் செபத்தாலன்றி இயமபயம் நீங்காதென்பார். 'நமனைவெல்லவாய்க் குண்டுமெந்திர பஞ்சாட்சர

மென்றனர்' சாட்சி மார்க்கண்டேயர் ஔவையார். "சிவாயநமவென்று சிந்தித்திருப்போர்க்கு, அபாயமொருநாளுமில்லை—உபாயம், இது வேமதியாகுமல்லாதவெல்லாம், விதியேமதியாய்விடும்" என்றதனுங் காண்க. எத்தகைய சமயத்தினரும் பேயாற்பிடியுண்டார்க்கு விபூதிப் பிரயோகமே செய்யவேண்டுமென்பார் 'பேய்க்குண்டுநீறு' என்றனர் எனவே சிவனடியார்கட்குப் பேய்ப்பிடிப்பும் இயமபயமு மிராதென் பதாயிற்று.

நேமங்கணிட்டைகள் வேதங்களாகம நீதிநெறி
யோமங்கடர்ப்பணஞ் சந்திசெபமந்திர யோகநிலை
நாமங்கள்சந்தனம் வெண்ணீறுபூசி நலமுடனே
சாமங்கடோறு மிவர்செய்யும்பூசைகள் சர்ப்பனையே.

(பொ - ரை.) நியமங்களை யனுஷ்டித்தல்களும், தியானம் கூடுத லும், வேதங்களைப் பாராயணம் செய்தலும், ஆகமங்களை யோதுதலும் (இந்நூல்கள் சொன்னபடி, நியாயவழியிலிருத்தலும், ஓமங்கள்வளர்த் தலும், தர்ப்பணம்புரிதலும், சாந்திநடத்தலும், செபம்பண்ணுதலு ம், மந்திரம்செபித்தலும், யோகநிலைகூடுதலும், தெய்வப்பெயர்களைச் சொல்லுதலும், சந்தனம் விபூதிதரித்தலும், நன்மையாகவே நாள்மு ழுவதும் இத்தகையர்புரியும் பூசைகளும் வஞ்சனையாகவே முடியும்.

(கு-ரை.) மனத்தினை யொருவழிப்படுத்தி வேறுசிந்தனைச் சிறி துமின்றி மேற்சொன்னவற்றைச் செய்யின்பலனுண்டாமேயன்றி மனத்தினைப் பலவழியிலலையவிட்டு என்ன செய்யினும் சிறிதும் பிர யோசனமில்லையென்பார் 'சர்ப்பனையே' என்றனர். இவ்வாசிரியரே கையொன்றுசெய்ய விழியொன்றுநாடக் கருத்தொன்றெண்ணப், பொய்யொன்று வஞ்சகநாவொன்றுபேசப் புலால்கமழும் மெய்யொன்



மருதப்பிரான் வாணிபஞ்செய்ய கப்பலிற் செல்லல்.

ஞசார செவியொன்று மெய்கேட்க விரும்புமியான், செய்கின்றபூசை
யெவ்வாறு கொள்வாய் வினை தீர்த்தவனே, என்றதனுற்காண்க.

நாமெனத்தனைபுத்திசொன்னாலுங்கேட்டிலை நன்னெஞ்சமே
யேனிப்படிக்கெட் டுழலுகின்றாயினி யேதுமிலா
வானத்தின்மீனுக்கு வன்றூண்டிலிட்ட வகையதுபோற்
போனத்தைமீள நினைக்கின்றனையென்ன புத்தியிதே.

(பொ-ரை.) நல்லமனமே! நான் எத்தனை அறிவுகளைச்சொல்லிடினும் கேட்டுத்தெரிந்தாயில்லை, காரணமென்ன? இவ்வகையாக விபரீதப்பட்டுப் (பிரபஞ்ச) விடயங்களில் திரிகிறாய், ஆகாயத்திலுள்ள விண்மீனாகிய நட்சத்தரங்கட்கு தூண்டில் எறிந்த (அறிவில்லாத) வகையைப்போல இனி யாதொரு சம்பந்தமுமில்லாமல் நீங்கிய பொருளினை விரும்புகின்றனை இது எவ்வகையான அறிவு.

(கு - ரை.) உலகிலொருவன், சென்ற விஷயங்களைப்பற்றி மறுபடியும் எண்ணி எண்ணித் துக்கித்தல் ஆகாயத்திலுள்ள விண்மீனைப் பிடிக்கவேண்டுமெனக்கருதிப் பூமியிலிருந்தபடி தூண்டுமுள்ளைப்போடக் கருதும் அறிவீனத்தினையொக்குமென்பதாம்.

அஞ்சக்கரமெனுங் கோடாலிகொண்டிந்த வைம்புலனும்
வஞ்சப்புலக்கட்டை வேறரவெட்டி வளங்கள்செய்து
விஞ்சத்திருத்திச் சதாசிவமென்கின்ற வித்தையிட்டுப்
புன்செய்க்களை பறித்தேன்வளர்த்தேன்சிவபோகத்தையே

(பொ - ரை.) பஞ்சாட்சரமென்று சொல்லப்படும் கோடாலியினால் இவ்வைம்புலன்களுந்தோன்றுகிய வஞ்சகத்தையுடைய கட்டை

யை மூதலறும்படி வெட்டிஅங்கிலத்தினைக் கொழுமையாக்கி அதிக மாகத் திருத்தஞ்செய்து சதாசிவம் என்று சொல்லப்படுகின்ற விதை யைநட்டுக் கூட்டமாகிய களைகளைப்பறித் தேனுகிய சிவபோகமென் னும் பயிரை வளர்த்தேன்.

(கு-ரை.) ஒருவனுக்குப் பஞ்சாட்சரத்தியானமந்திரம் இருந்து கொண்டிருக்குமாகில் ஐம்புல சேஷ்டைகள் ஒடுங்கிப்போகும் அவை யொடுங்கவே மனநிலையுறும், நிலையுறவே சதாசிவத் தியானத்திற் கேதுவாகும், எதுவாகவே சிவபோகம் விளையுமென்பதாம்.

தாயாருஞ்சுற்றமும் பெண்டிருங்கைவிட்டுத் தாழ்ந்திடுநா
ணீயாருநாறு னெனப்பகர்வாரந்த நேரத்திலே
நோயாரும்வந்து குடிகொள்வரேகொண்ட நோயுமொரு
பாயாருநீயுமல்லாற் பின்னையேதுநட் பாமுடலே.

(பொ-ரை.) உடம்பே! (உன்னை வருந்திப்பெற்றெடுத்த தாயா ரும் உன்னைச் சூழ்ந்துகொண்டிருந்த (உறவினரும், உன்பால் நேசம் வைத்திருந்த) மனைவியரும் (உனக்கெனவொரு) செயலில்லாமலிருக் கும் மரணகாலத்தில் நீயார் நானுர் எனப் பேசுவார்கள், அக்காலத் திலே வியாதியும்வந்து தலையெடுக்கும் (கடைசியாக) நிலையுற்ற நோயும் படுத்தபாயும் நீயுமல்லாது வேறு எந்தபொருளு வுன்னேடு பிரியா சிநேகமாயிருக்கும்.

(கு-ரை.) சகலசம்பத்துடன் சௌக்கியமாகச் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்ற காலத்தில் எல்லாரும் வலியவந்து உறவாகுவர் (நோயும் பாயுமாகக்கிடக்கிற) மரணகாலத்தில் ஒருவரு நெருங்கார்.

ஆயும்பொழுது மயிர்க்கால்கடோறு மருங்கிருமி
தோயுமலக்குட்டை யாகியகாயத்தைச் சுட்டுவிட்டாற்

பேயுநடன மிடுங்கடமாமென்று பேசுவந்தை
நீயுமறிந்திலையோ பொருடேட நினைந்தனையே.

(பொ-ரை.) (ஓ மனமே) ஆராயுங்காலத்தில் ஒவ்வொருமயிர்க்காலினும் மிகச்சிறிய புழுக்கள் படிந்துள்ள மலநிறைந்த குட்டையாகிய இத்தேகத்தைச்சுட்டால்பேய்களும் (மேலேறிக்) கூத்தாடுகின்ற (இத்தேகமானது) குடமாகும் (இங்ஙனமென) அறிவுடையோர் பேசுவதை நீயுங்கேட்டு அறிந்தாயில்லையோ (இந்நிலையைக்கருதாது) பொருளைத்தேட நினைத்தாயே இது ஆச்சரியம்.

(கு - ரை.) இவ்வுடலின் நிலையாமையினைப்பற்றி அறிஞர்கள் நன்கு சொல்லியிருந்தும் அதனை சிறிதும் கவனியாது அவ்வுடலினைப் போற்றிவளர்க்கப் பொருளைத் தேடியலைதல் அறியாமை யென்பதாம்.

பூணும்பணிக்கல்ல பொன்னுக்குத்தானல்ல பூமிதனைக்
காணும்படிக்கல்ல மங்கயர்க்கல்லநற் காட்சிக்கல்ல
சேணுங்கடந்த சிவனடிக்கல்லவென் சிந்தைகெட்டுச்
சாணும்வளர்க்கவடியேன் படுந்துயர் சற்றல்லவே.

(பொ - ரை.) தரித்துக்கொள்ளும் ஆபரணங்களைக் குறித்தல்ல, பொன்னினைக்குறித்தல்ல, நிலத்தினைக்கண்டு சந்தோஷிக்கும்படியல்ல, மாதர்கள் நிமித்தமல்ல, நன்மையாகிய சிறப்பினை நினைத்தல்ல ஆகாயத்தினையும் கடந்த சிவபெருமானுடைய திருவடிக்கல்ல, என்மனமானது தன்னிலையினின்றும் கெட்டுவயிறாகிய சாண்உறுப்பினையும் பசியாறச்செய்ய அடியேன் அனுபவிக்கும் துன்பம் சிறிதல்ல அபாரம்.

(கு-ரை.) திருவெண்காட்டடிகள் கொங்குதேயத்தில் வாசஞ் செய்துகொண்டிருக்குங் காலத்தில் மவுனநிலையுற்றிருந்தாராகலின் ஒருநாள் ஒருவீட்டின் தலைவாயினின்று கைதட்டிப் பிச்சையேற்க அவ்வீட்டுமூடன் அவரைக் கள்வனெனவுன்னிப் புடைக்குஞ்சமயத்தி லயலாரோடிவந்து கண்டு சிவயோகியென்றுணர்ந்து வேண்டிய உபசாரஞ் செய்தபோது பாடியதிருச்செய்யுளீது. பசிநோய் யாவற்றினுங் கொடியதென்பார் 'படுந்துயர் சற்றல்லவே, என்றனர், ஔவையார் "மானங்குணங்கல்வி வண்மையறிவுடைமை, தானந்தவமுயற்சி தாளாண்மை—தேனின், கசிவந்த சொல்லியர் மேற்காமுறுதல் பத்தும், பசிவந்திடப்பறந்துபோம், என்றதனுற்காண்க.

வெட்டாதசக்கரம் பேசாதமந்திரம் வேறொருவர்க்
கெட்டாதபுட்ப மிறையாததீர்த்த மினிமுடிந்து
கட்டாதலிங்கங் கருதாதநெஞ்சங் கருத்தினுள்ளே
முட்டாதபூசையன்றோ குருநாதன் மொழிந்ததுவே.

(பொ-ரை.) செப்புத்தகட்டிலே செதுக்காதயந்திரமும், வாயினாலே செபியாத மந்திரமும், மற்றவாகட்கு எட்டியறுக்கக்கூடாத மலரும், தருப்பணஞ்செய்யாத தீர்த்தம், பெட்டகத்தில் கட்டிவையாதலிங்கமும், 'தற்போத முன்னிட்டு, நினையாதமனமும், உள்ளத்தில் காலவரையல்லாத பூசை அல்லவோ ஆசாரியன் உபதேசித்தது.

(கு-ரை.) புறப்பூசைகட்கு இடம்பொருளேவல் இன்றியமையாது வேண்டியிருந்தலினாலும், ஒவ்வொருகாலத்தில் அவைகட்கு முட்டுப்பாடு வருமானபடியாலும் அங்ஙனநேர்ந்தகாலத்தில் திருவுளக்கேடு உண்டாமாகலினாலும் இத்தகையபூசை இல்லறத்தினர்பாட் கே யனுகூலமாகவிருக்கு மானபடியாலும், துறவியாகிய தனக்கு

அத்தவையசாதனம் நீங்கி அந்தர் முகபூசை எக்காலத்தும் இடையூறி ன்றி நடத்தும்படி தனதாசிரியர் உபதேசித்தருளினரென்பார், 'குரு நாதன் மொழிந்ததுவே' என்றனர்.

எருமுட்டைபிட்கி னுதிர்த்திடுஞ்செல்லுக் கெவரழுவார்
கருமுட்டைபுக்குக் கழலகன்றீர்கன துக்கமதாய்ப்
பெருமுட்டுப்பட்டவர் போலெழும்பேதையிற்பேத்துகிறீ
ரொருமுட்டும்வீட்டு மரனுமமென்றைக்கு மோதுமினே.

(பொ-ரை.) 'ஜெகத்தீரே!' தாயினுடைய கருப்பமாகிய முட் டையுள்ளே பிரவேசித்துச் 'சிவபெருமானுடைய, திருவடிகளை நீங் கினீர், இந் நீக்கத்துக்காகத் துக்கப்படாமல் இவ்வுடல் நீங்கியதின் பொருட்டு மிகுந்த துன்பமுடையவர்களாய் பெரிய இடரையடைந்த வர்போல அழுகின்ற மூடர்களே! 'என்' கலக்கம்கொள்ளுகிறீர், ஒரு குறைவும் வாராதபடி செய்யும் பரமசிவன் திருநாமங்களை எக்கால மும் தோத்திரம் செய்யுங்கள். எருமுட்டையினைப் பிதிர்த்தால் அதி லிருந்து உதிர்கின்றசெல்லுக்கு எவர் அழுபவர்கள் ஒருவரும்அழார்

**(கு-ரை.)** இறந்துபட்ட பலதேகங்கள் எருமுட்டைப் புழுக் களுக்குச் சமானமாகும் ஆகலின் சென்ற பிறப்புகளை எண்ணி எண் ணித் துன்பப்படுதலில் சிறிதும் பிரயோசனமில்லை, சிவபெருமானை திருவடியினை மறந்தோமேயென வேக்கங்கொண்டிருக்கின் அதனல் பெரும் பிரயோசனம் விளையுமென்பதாம்.

மையாடுகண்ணியு மைந்தரும்வாழ்வு மனையுஞ்செந்தீ
யையாநின்மாயை யுருவெளித்தோற்ற மகிலத்துள்ளே
மெய்யாயிருந்தநாட்செலநாட்செலவெட்டவெறும் | வே.
பொய்யாய்பழங்கதையாய்க் கனவாய்மெல்லப்போனது

(பொ-ரை.) சிவந்த தீயினைக் கரத்திலேந்திய ஐயனே! மையினைத்தீட்டிய கண்களைவாய்ந்த மனைவியும், புத்திரரும், பிரபஞ்சவாழ்வும், வாழ்க்கைவீடும் தேவரீருடைய மாயாகாரியங்களாம், இவ்வுலகிலே முதலில் சத்தியாகத் தோன்றியது காலங்கழியக் கழிய முழுவதும் பொய்யாகிப் பழமையானக் கட்டுக்கதைகளாய் கனவுகண்டது போலாகி மெதுவாக நீங்கியது.

(கு-ரை.) பிரபஞ்சசோதனை பண்ணாது பகிர்முக நாட்டத்துடனே வாழுகிற காலத்தில் எல்லாம் நிலையுள்ள சத்தியப்பொருளாகவே தோன்றின. நாளுக்குநாள் தத்துவசோதனைப்பண்ணிக்கொண்டுவருகிற காலத்தில் அவரவர்கள் கன்மத்தினுக்குத் தக்கபடி சிவபெருமான் மாயையினின்றும் காரியப்படுத்திவைத்த பதார்த்தங்களாகவே தோன்றுதலும் அவற்றினிடத்துப் பற்று நீங்கவே அவைமறுபடியும் சத்தியமாகத் தோன்றுத லில்லையாகலின் 'மெல்லப்போனதுவே' என்றனர்.

ஆயாப்பயிகலை யாய்ந்திடுந்தூய வருந்தவர்பாற்
போயாகிலுமுண்மை யைத்தெரிந்தாயில்லை பூதலத்தில்
வேயார்ந்ததோளியர் காமவிகாரத்தில் வீழ்ந்தழுந்திப்
பேயாய்விழிக்கின் றனைமனமேயென்ன பித்துனக்கே.

(பொ-ரை.) மனமே! பாலவாகிய சாஸ்திரங்களை விசாரியாய், விசாரித்தறிந்த பரிசுத்தம்பொருந்திய தவத்தில் மிகுந்தவரிடத்துச் சென்றாயினும் உண்மை யின்னதெனத் தெரிந்துகொண்டாயில்லை, உலகின்கண்ணே மூங்கிலினையொத்த தோளைவாய்ந்த மாதர்களின் காமவிகாரமாகிய சமுத்திரத்தில் விழுந்து முழுகிப் பேய்போலவிழிக்கின்றனை, உனக்கென்ன பித்தநோயிது.

(கு-ரை.) மெய்கண்ட சாத்திரங்கள் பலவற்றைக்கற்றலும் கேட்டலுமாகிய இருஞானம் கிடைக்கப்பெறின் தெளிதலும்நிட்டை கூடுதலுமாகிய இருஞானம் இலேசாகக் கிடைக்குமாகலின் முன்னிரண்டினைமாத்திரம் குறித்தனர். மெய்கண்ட செல்வரிடம்போய் அடுத்தே கேட்கவேண்டுமென்பார் போயாகிலு மென்றனர்' மாதர்மயக்கிற் பட்டார்கட்குச் சாஸ்திர ஆராய்ச்சி கிட்டாதென்பார். 'என்னப்பித் துனக்கே' என்றனர். ஈண்டு உண்மை யென்றது ஆன்மாவின் பெத்தநிலையாகிய பொதுவினை விசாரியாது ஆன்மதரிசனம் சிவதரிசனமாகவுள்ள விசேடங்களை யறிகை. பொது இலக்கணம் கூறுவது வேதம் உண்மையாகிய சிறப்பு இலக்கணங்களைக் கூறுவது ஆகமம் ஆகவே ஆகமங்களை விசாரித்தாயில்லை யென்பார்'உண்மையைத்தெரிந்தாயில்லை யென்றனர், சிவஞானசித்தியார். "ஆரணநூற் பொதுச் சைவமருஞ் சிறப்புநூலாம்." என்றதனாற் காண்க.

அடியாருறவு மரன்பூசைநேசமு மன்புமன்றிப்
படிமீதில்வேறு மயனுளதோபங் கயன்வகுத்த
குடியானசுற்றமுந் தாரமும்வாழ்வுங் குயக்கலங்கள்
தடியாலடியுண்ட வாறிருக்குமென்றினஞ் சார்ந்திலரே.

(பொ-ரை.) சிவனடியார்கள் சினேகமும், சிவபூசையில்விருப்பமும், பத்தியுமில்லாமல் இவ்வுலகில் (ஒருவனுக்குப்) பயன்கொடுக்கும் செயல் வேறுண்டாமோ பிரமன் சிருஷ்டித்த குடியிற்பிறந்த உறவினரும், மனைவியும், பிரபஞ்ச வாழ்க்கையும், குயவனாற்செயயப்பட்ட பாண்டங்கள் தடியினாலடிபட்ட வகையாக ஒத்திருக்குமென்னவெண்ணி (மேற்படி) சிவனடியாராகிய இனத்தினைச் சார்ந்தாரில்லையே.

(கு - ரை.) ஒருவன் இன்றியமையாது அனுபவிக்க வேண்டிய பெரும்பயன் அடியார் உறவும், அரன்பூசையும், அன்பும் ஆகிய இவ் ற்றாலன்றி வேறுவிதத்தால் முடியாதென்பார். வேறுபயனுளதோ, என்றனர். சிவபெருமான் தொண்டர்களிடத்தும் சிவலிங்கத்தினிட த்தும் எழுந்தருளியிருப்பது சத்தியமாகலின் 'அடியாருறவும் அரன் பூசையும்' வேண்டுமென்றனர். அந்நேசமும் பூசையும் மனங்கசியச் செய்யவேண்டு மென்பார் அன்பும் என்றனர். சிவப்பிரகாசம் "தொ ண்டர்களிடத்தும் வானோர் தொழுந்திரு மேனிதானும், மண்டருங் கண்டிலாத வண்ணலேயென வணங்கி, வெண்டாளங்கள்சிந்த வழி மொழி குழறிமெய்யே, கண்டுகொண்டிருப்பர் ஞானக் கடலமுதருந் தினோரே." என்றதனாற் காண்க,

ஆங்காரப்பொக்கிஷங் கோபக்களஞ்சிய மாணவத்தா
னீங்காவரண்மனை பொய்வைத்த கூடம்விண் ணீடிவளர்
தேங்கார் பெருமதிற் காமவிலாசமித் தேகங்கந்தல்
பாங்காயுனைப்பணிந் தெப்படிஞானம் பலிப்பதுவே.

(பொ-ரை.) அகங்காரத்தினுக்கு ஒரு பொக்கிஷமாயும், கோ பத்தினுக்கு ஒரு களஞ்சியமாகவும், ஆணவமானது என்று மொழியா த காவல்வீடாயும், பொய், அமைந்துள்ள கூடமாயும், ஆகாயத்தினை யோங்கி வளர்ந்து நிறைந்துள்ள கூடமாயும், ஆகாயத்தினை யோங்கி வளர்ந்து நிறைந்துள்ள பெரியமதில் சூழ்ந்த காமசபையாயும், (உள்ள நவத்துவாரங்களை வாய்ந்த தேகக்கந்தலே! பக்குவமாக வுன்னை உப சரித்து வந்தால் எந்தவிதமாக ஞானங் கைகூடிவரும்.

(கு-ரை.) அகங்காரம், கோபம், ஆணவம், பொய், காமம் ஆகி யவற்றிற்கு இடமாயுள்ள தேகத்தினைப் போஷித்து வருதலிலேயே

காலத்தைக்கழித்துவரின் ஞானம் சித்தியாதென்பார் எப்படி ஞானம் பலிப்பதுவே, என்றனர். இதனுல், அகங்காராதிகளை யொழிக்கவே ஞானமடைதற்குத் தேகம் சாதனமாக விருக்குமாகலின். அப்போது உடலைப்பேணி வருதலினுல் கெடுதலில்லை யென்பதாம்.

ஒழியாப்பிறவி யெடுத்தேதங்கியேங்கி யுழன்றநெஞ்சே
யழியாப்பதவிக் கவுடதங்கேட்டிய ஞதியனை
மழுமான்கரத்தனை மால்விடையானை மனத்திலுன்னி
விழியாற்புனல்சிந்தி விம்மியழுநன்மை வேண்டுமென்றே.

(பொ - ரை) நீங்குதலில்லாத எண்ணிலாத சென்மங்களை யெடுத்து அழுது அழுது அலைந்த மனமே! எக்காலத்திலும் அழியாத மோட்சவீட்டிற்கு மருந்து (சொல்வேன்) கேட்பாயாக, என்று முள்ளவனை, மழுவினையும் மானினையும் ஏந்திய கரங்களையுடையானை, பெருமாள் மாட்டையுடையானை, அழியாத பதவி வேண்டுமென்று மனத்தே தியானித்து கண்களில் ஆனந்தக்கண்ணீர் சிந்தித் தேம்பியழு (இதுவே மருந்தாம்.)

(கு - ரை.) அழியாத பதவிக்கு அழியாத தெய்வத்தை வணங்க வேண்டுமென்பார் அழியாப்பதவி, அனுதியனை என்றனர். கண்ணீரும் கம்பலையுமாக நின்றவர்க்கே நன்மையுண்டாகுமாகலின் 'விம்மியழு என்றனர். திருவாசகம் "மெய்தானரும்பி விதிர்விதிர்த்துன் விரையார்கழற்கென், கைதான்றலைவைத்துக் கண்ணீர்ததும்பி வெதும்பி," எனவும், "அழுதாலுன்னைப்பெறலாமே" எனவும் வருவனவற்றுற் காண்க.

நாய்க்கொருசூலு மதற்கோர் மருத்துவ நாட்டிலுண்டோ
பேய்க்கொருஞானம் பிடிபடுமோ பெருங்காஞ்சிரங்கா

யாக்குவாரா ரருந்துவாரா ரதுபோலுடம்பு
தீக்கிரையாவதல்லா லேதுக்காமிதைச் செப்புமினே.

(பொ - ரை.) நாயினுக்கு ஒரு கருப்பமும் அக்கருப்பத்தினுக்கு ஒரு வைத்தியமும் இவ்வுலகிலுளதோ, பேயினுக்கு ஒரு ஞானம் பற்றுபோ, பெரிய எட்டிக்காயை வளர்ப்பவர் யாவர், அக்காயினை யுண்பவர் யாவர், அதுபோல இத்தேகம் நெருப்பினுக்கு இரையாய் விடுவதல்லாமல் எதற்குப் பிரயோசனம் சொல்லுங்கள்.

(கு-ரை.) பத்திரகிரியார் தன்னைவணங்கி நின்றபோது அவர்க் கோ ருறுதியுண்டாகும்படி அருளிச்செய்த திருச்செய்யுளீது. நாயினுக்கு மருத்துவம்செய்ய யாரும் எற்படார்போலப் பேய்போல அலைபவுனுக்கு ஞானம் போதியாரெனவும், காஞ்சிரங்காயாருக்கும் உபயோகப்படாததுபோலத் தேகமும் பிரயோசனமில்லை யென்ற னர். இதனல் கயப்பினைத்தரும் மரத்தினை நீக்கி உரிசியைத்தரும் மரத்தினை வளர்த்துவருதல் வழக்கத்திலிருத்தல்போல, பாவத்தினுக் கேதுவாகிய உடலினைப் போஷியாது புண்ணியத்திற் கேதுவான உடலினைப் போஷித்தல் நலமென வேற்பட்டது.

கச்சிற்கிடக்குங் கனதனத்திற்கடைக் கண்கள்பட்டே
யிச்சித்திருக்கின்ற பேதைநெஞ்சே யிமவான்பயந்த
பச்சைப்பசங்கொடி யுண்ணுமுலைபங்கர் பாதத்திலே
தைச்சுக்கிடமனமே யொருகாலுந் தவறில்லையே.

(பொ - ரை.) இறுக்கிக்கட்டிய கச்சியினுக்குள் தங்கியிருக்கும் பெருத்ததனங்களிலே உன்னுடைய கடைக்கண்பார்வை பட்டதினுலே, அத்தனத்தினைவாய்ந்த மாதர்களிடத்து ஆசைவைத்துக்கிடக் கின்ற அறியாமையுடைய மனமே! மலையரசன் பெற்றெடுத்த மிகவும் பசுமையாகிய பூங்கொடியை ஒத்தவளாசிய உண்ணுமுலைத் தே

வியினை வாமபாகத்தில் உடையாரது திருவடிகளிலே ஊன்றியிரு மனமே ஒருகாலத்தினும் எனக்குத்தவறுதல் உண்டாகாது (சிவகதி கிடைக்கும்.)

(கு - ரை.) மாதர்கள் தன்மயலில் மாந்தர்கள் சிக்குண்டு கிடப்பது சகசமாகலின் 'தனத்தில்—இச்சித்திருக்கின்ற வேழைநெஞ்சே என்றனர். பயேபதாப்பத்து, "மைந்தர்கள் மனஞ்சூறையிட்டு" என்றதனாற் காண்க. திருவடிஞானமே சிவகதிக்கு ஏதுவாகலின் 'பாதத்திலே தைச்சுக்கிட, என்றனர். திருமந்திரம் "திருவடியே சிவமாவது தேரிற், றிருவடியே சிவலோகஞ் சித்திக்கிற், றிருவடியே செல்கதியது செப்பிற், றிருவடியே தஞ்சமுட்டெளிவார்க்கே" என்றதனாற் காண்க.

மாதார்விழியைக் கடந்தேறிவந்தனன் வாழ்குருவுங்
கோனாகியென்னைக்குடியேற்றிக்கொண்டனன்குற்றமில்லை
போனாலும்பேறிருந் தாலுநற்பேறிது பொய்யன்றுகா
ணானாலுமிந்த வுடம்போடிருப்ப தருவருப்பே.

(பொ-ரை.) மாதர்களுடைய கண்ணாகிய வலையினைக் கடந்து வந்தனன், சிவானந்தத்தில் வாழ்கின்ற ஆச்சாரியனும் நாயகனாகி அடியேனைத் தனது திருவருட் பூமியில் குடியாக ஏற்றுக்கொண்டனன் இனியெனக்கு யாதொருகுற்றமில்லை (இனி) இவ்வுடல் நீங்கினாலும் இலாபமுண்டு, உலகிலேயே வாழ்ந்தாலும் நல்ல இலாபமுமது இது சத்தியம்' ஆனாலும் இந்த உடலுடனிருப்பதுமாத்திரம் அருவருக்கத்தக்கதாகும்.

(கு - ரை.) அதிகத்துன்பத்திற் கேதுவாகிய மாதர்கள் மோகத்தினின்று நீங்கி யடையவேண்டிய குருகடாட்சம் யடைந்துவிட்ட

படியால் இனி உடல் இறங்கினும் நன்மையேயாம். ஆயினும் திருவருட்பெருதவரையில் உடற்பற்றுற் யாதொரு பிரயோசனமு மில்லையென்பர். 'உடம்போடிருப்ப தருவருப்பே' என்றனர்.

சற்றுகிலுந்தனைத் தானறியாய்தன்னை யாய்ந்தவரை
யுற்றுகிலுமுரைக் கப்பொருந்தாயுனக் கானநிலை
பற்றுய்குருவைப்பணியாய்பரத்தையர்பாலிற்சென்றென்
பெற்றுய்மடநெஞ்சமே யுனைப்போலில்லை யித்தனுமே.

(கு - ரை.) சிறிதேனும் உன்னிலைமையினை நீயறியமாட்டாய், தன்னை விசாரித்துத் தேர்ந்தவரை அடைந்தாயினும் அவர்கள் (நல்ல விஷயங்களை யெடுத்து) சொல்ல (அவற்றைக்கேட்கப்) பொருந்த மாட்டாய், உனக்கு தகுந்த நிலையானது இன்னதெனக் கைக்கொள்வாய், ஆசாரியரை வணங்காய், வேசிகளிடத்தில்போய் என்ன இலாபமடைந்தாய் அறியாமையினை வாய்ந்த மனமே! உன்னைப்போல வொருபித்தன் (இவ்வுலகில்) இல்லை.

(கு - ரை.) தன்னைத்தானறிதலாவது ஆன்மா சுதந்தரனல்லனென்றும், எந்நாளும் ஆண்டவனுக்கு அடிமையென்றும், கன்மத்திற்குத் தக்கபடி முதல்வனறிவித்தாலன்றி யொன்றையு மறியாதென்றும் தெரிந்துக்கொள்ளுதல். தனையாய்ந்தவர் என்பது ஆன்மவிசாரம் செய்தவர், உனக்கான நிலையென்பது திருவருளைப்பற்றிக்கிடத்தல் குருவைப் பணியாய் என்றது இவையனைத்தும் தேர்தற்கு காரணமாயிருப்பது ஆசாரிய வழிபாடு என்பதாம்.

உளியிட்டகல்லையுமொப்பிட்டசாந்தையுமுத்தையறப்[வே
பிளியிட்டசெம்பையும் போற்றுகிலேனுயர்பொன்னென

யொளியிட்ட தாளிரண்டுள்ளேயிருத்துவதுண்மையென்று
வெளியிட்டடைத்துவைத்தே னினிமேலொன்றும் வேண்டிலனே.

(பொ-ரை.) இரும்பு உளியினால் செதுக்கப்பட்ட கற்சிலையினை யும், அங்கங்கள் ஒழுங்குறவமைந்த சுன்னச்சாந்தினாற் செய்யப்பட்ட உருவத்தையும், புளியிட்டுத்துலக்கிய செம்புவிக்கிரகத்தையும் துதித்து வணங்கேன், உயர்ந்தபொன்னுக்குச் சமானமெனவே பிரகாசியாநின்ற )சிவபெருமானுடைய) இரண்டு திருவடிகளை மனத்தினுள்ளே வைப்பது (கூடுமான) நன்னிலையென்றுசொல்லித் தியானத்தில் வைத்துக்கொண்டேன் இனிமேலென்றைக்கும் ஒருபொருளும் வேண்டியதில்லை.

(கு-ரை.) பகிர்முகத்தில் கற்சிலையினையும். சாந்துருவத்தினையும், ருபாற்சிலையினையும் தரிசிக்கிறகாலத்தில் அவ்வவ்வுருவங்களாகத் தோன்றுவதேயன்றித் தெய்வவடிவாகக் கிரகிப்பதற்குப் பக்குவமில்லேனாகலின் அப்பாவனையால் அபசாரப்படாது, அந்தர்முகத்தில் சிவபெருமான் திருவடிகளைத் தியானித்துய்வேனென்றனர் விக்கிரகங்களைத் தெய்வமாகப்பாவியாது தெய்வத்தை விக்கிரமாகப் பார்க்கவேண்டுமாகலினாலும், அது அதிதீவிரப் பக்குவமுடையார்க்கே விளங்குமாகலினாலும், அங்ஙனப்பக்குவம் விளையாதவழி மனத் தியானத்திலேயே திருப்தியடையவேண்டியதாகலினாலும், 'இனிமேலொன்றும் வேண்டிலனே' என்றனர். இங்ஙனம் பொருள்கொள்ளாது சிலர் ஆசிரியர் விக்கிரகாராதனையை மறுத்துக்கூறினரென்பார். அந்தோ அவர்கள் 'தாளிரண்டு' எனத் திருவடியைக்குறித்த உண்மையைத் தேராதவராவர். தாள்' உருவத்திற்கன்றி அருவத்திற்கின்றென்பது யாருமறிந்ததே, 'தாள்' என்பதற்கு வேறு பொருள்கூறி இடர்ப்படுவாருமுளர். அவர்கள் லீலாலீடநியாயமாக உரைகொள்பவரேயாம்.

கல்லாலெறியுண்டுங் காலாலுதையுண்டுங் காலைகையில்
வில்லாலடியுண்டு முன்னாள்விடமுண்டு வேலிளித்துப்
பல்லாற்புரமெரி யேகம்பவாணர் பதாம்புயத்தின்
சொல்லார்செவியினிற்கேளா திருந்ததென் றொல்வினையே.

(பொ-ரை.) கல்லினாலே யெறிப்பட்டும், காலினால் உதைபட்டும், (ஒரு) ஆண்மகன் கை வில்லாலடியுண்டும், பூர்வத்தில் விஷத்தினையுட்கொண்டும் அதற்குமேல் சிரித்துப் பல்லினால் திரிபுரத்தினை யெரித்த ஏகாம்பரநாதர் திருவடித்தாமரையின் தோத்திரத்தினை (என்) காதாரக் கொள்ளாதிருந்ததற்குக் காரணம் என்னுடைய பண்டைய வினையேயாம்.

(கு-ரை.) கல்லாலெறிந்தவர் சாக்கியநாயனார், காலினாலுதைத்தவர் கண்ணப்பநாயனார், வில்லாலடித்தவர் அருச்சுனன், விஷம் சாப்பிட்டது தேவர்கள் க்ஷேமார்த்தம், திரிபுரமெரித்தது சிவபூசையினின்றும் வழுவியனிமித்தம். காஞ்சி ஏகாம்பரநாதன் பெரும்புகழ் தனது காதினுக்கெட்டாதிருந்தது தொல்வினையே காரணமென்றனர்.

ஒருநான்குசாதிக்கு மூவகைத்தேவர்க்கு மும்பருக்குந்
திருநாளுந்தீர்த்தமும் வேறுளதோவத் திசைமுகனால்
வருநாளில்வந்திடு மந்தக்கண்ணாளன் வகுப்பொழியக்
குருநாதனைக்கண்டீர் பின்னையேதிக் குவலயத்தே.

(பொ-ரை.) (உலகில் நிகழும்) ஒருநான்காகப் பிரிந்துள்ளசாதியில் (வந்தபெரியோர்கட்கும்) மூன்றுவகைப்பட்ட தேவர்கட்கும் தேவர்களுக்கும் உண்டாயிருக்கின்ற திருவிழாக்களும், தீர்த்தங்களும், (சிவபெருமானுக்கு அன்னியமாக) வேறுயுண்டோ இல்லை

நான்முகனால் வகுக்கப்பட்ட நாள்களில் வருவன வந்துவிளையும், அந்தத்தலைவனாகிய பிரமன் விதித்த கிரமங்களை யனுபவித்தொழிந் தால் ஆசாரியன் கட்டளையுண்டாம் இவ்விரண்டினுக்கும் வேறு ஏதுண்டு இவ்வுலகின்கண்ணே.

(கு ரை.) சிவானுக்கிரகம் பெற்றவரையே உலகம் கொண்டாடி மகிழுமாகலின் அப்பெருமானுக் கன்னியமாக வேறொன்றுமில்லை யென்பார். 'வேறுளதோ' என்றனர் அவரவர்கள் கன்மத்திற்குத் தகுந்தபடி பிரமன் விதித்துள்ள போகங்களை யனுபவித்தொழிந்த பின்னரே திருவருள் பதியக் குருகடாட்சமுண்டாகலின் பிரபஞ்சா னுபவத்தில் திருவருளனுபவமும், திருவருளனுபவத்தில் பிரபஞ்சா னுபவமும் விளையாதென்பதாம்.

எண்சீர் விருத்தம்.

நாப்பிளக்கப்பொய்புரைத்து நவநிதியந்தேடி
நலமொன்றுமறியாத நாரியரைக்கூடிப்
பூப்பிளக்கவருகின்ற புற்றீசல்போலப்
புலபுலெனக்கலகலெனப் புதல்வர்களைப்பெறுவீர்
காப்பதற்கும்வகையறியீர் கைவிடவுமாட்டீர்
கவட்டுத்தொலமரத்துளைபிற் காலுழைத்துக்கொண்
ஆப்பதனையசைத்துவிட்ட குரங்கதனைப்போல [டே
வகப்பட்டீர் கிடந்துழல வகப்பட்டீரே.

(பொ - ரை.) நாவானது பிளந்து போகும்படிப் பொய்வார்த் தைகளைப் பேசி நல்லதிரவியத்தைச் சம்பாதனைசெய்து நன்மை

யென்பது சிறிதுமில்லாத பெண்களைப் புணர்ந்து, பூமியாது பிளந்துபோம்படி எழுகின்ற புற்றிலிருந்துவரும் ஈசலினைப்போலப்புலபுலவெனவும் கலகலவெனவும் பிள்ளைகளைப்பெற்றிடுவீர் அப்பிள்ளைகளைக்காப்பாற்றுதற்கும் வகையேதுமறியீர் அவர்களைக் கைவிட்டிருக்கவுமாட்டீர் கிளையுடன்கூடிய பழைய வொருமரத்தின் பிளவில் காலைத்துறுத்துக்கொண்டு (அப்பிளவினுக்குத் தச்சன் வைத்துப்போன) ஆப்பினையசைத்து பிடுங்கிவிட்டபின் (தனது காலைமாட்டிக்கொண்டு துன்பப்படும்) குரங்கினைப்போல இப்பிரபஞ்சத்தில் அகப்பட்டுக்கொண்டீரே.

(கு-ரை.) திருவாரூரில் தன்னையடுத்து மிகுந்த விசுவாசத்துடனிருந்த ஒருவனுக்கு விவாகம் நடந்தகாலத்தில் அவன் வேண்டுகோளுக்கியைந்து அவன் மணப்பந்தலுக்குச் சென்று அவனுக்கு இனி நேரிடுங் காரியத்தை கூறவேண்டி இச்செய்யுளைப் பாடிச் சேஷையிட்டு ஆசிர்வதித்துச்சென்றனர் தச்சனொருவன் ஒருநெடுமரத்தினை வாளால் சிறிதுதூர மறுத்து அப்பிளவிற்கு ஆப்புவைத்துவிட்டுப் போனசமயத்தில் குரங்கோடிவந்து அப்பிளவில் காலைவிட்டு ஆப்பினைப்பிடுங்கப் பின்கால் மாட்டிக்கொண்டு துன்பமுற்றதுபோல, உலகமின்னதெனச் சிறிது மாராயாது அப்பிரபஞ்சமயமாய் விவாகம் முடித்துக்கொண்டு பின் திண்டாடப் பெறுவரென்பதாம்.

## அறுசீர் விருத்தம்.

மத்தளை தயிருண்டானு மலர்மிசைமன்னினானும்
நித்தமுந்தேடிக்காணா நிமலனே நீயின்றேகிச்
செய்த்தலைகயல்பாய்நாங்கூர் சேந்தனைவேந்தனிட்ட
கைத்தளை நீக்கியென்முன் காட்டுவெண்காட்டுளானே.



பட்டினத்தடிகள் தாயாருக்கு, தகனகிரியை முடித்தல்.

(பொ - ரை.) மத்தினாலே கடையப்பட்ட தயிரினைத் திருவடி யுண்டவனாகிய கிருஷ்ணனான நாராயணனும், தாமரைமலரின்மேல் நிலைபெற்றவனாகிய பிரமனும் பிரதிதினமும் தேடியும் அவர்கட்குக் காணப்படாதுநின்ற மலராகிதனே தேவரீர் இன்றையதினம்சென்று கழனிகளிடத்தில் கயற்கண்டைகளோடியுலவும் நாங்கூர் சேந்தன் என்பவனை அரசன் போட்டுவித்த கைவிலங்கினைத் தறித்து எனக்கு முன்னே அவனைக்காட்டவேண்டும் திருவெண்காட்டிலிருப்பவனே.

(கு - ரை.) திருவெண்காடர் துறவடைந்தபின் தனது காரியஸ்தரை அரசன் சிறையிட்டிருப்பதனைக் கேள்வியுற்று அவனை விலங்கினின்றும் நீங்கித் தன்முன்னே கொண்டுவரும்படி பாடிய திருச்செய்யுளீது.

## தாயாருக்குத்
## தகநகிரியைச் செய்கையிற்பாடிய
### வெண்பா.

ஐயிரண்டு திங்களா வங்கமெலா நொந்துபெற்றுப்
பையலென்றபோதே பரிந்தெடுத்துச்—செய்யவிரு
கைப்புறத்தி லேந்திக் கனகமுலை தந்தாளை
யெப்பிறப்பிற் காண்பே னினி.

(பொ - ரை ) பத்துமாதங்களாக (வயிற்றிற்) சுமந்து உடம்பு முழுவதும் நொந்து பெற்றெடுத்த (அயலிலுள்ளவர்கள்) ஆண்குழந்தையென்றவுடனே, ஆசையுடனெடுத்துச் செவ்விய இரண்டு கைகளினுமேந்திக்கொண்டு பொன்மலைபோன்ற முலையினின்றும் பாலினையுண்பித்தவளை இனி யெந்தச்சென்மத்தில் காணப்போகிறேன்.

(கு-ரை.) ஒருவள் தனது பிரசவக்காலத்தில் எவ்வளவு துன்பமடைந்து மூர்ச்சித்திருக்கினும் பிறந்தது ஆண்குழைந்தை யென்ற மாத்திரத்து அத்துன்பமனைத்தையும் ஒருபொருட்டாக மதியாது அப்பிள்ளையினிடத்து மிக அன்புபாராட்டுவாளென்பதாம். பெண் குழந்தையினிடத்து அவ்வளவு அன்புநிகழாது என்பது குறிப்பால் விளங்குகிறது.

முந்தித்தவங்கிடந்து முந்நூறு நாள்சுமந்தே
யந்திபகலாச்சிவனை யாதரித்துத்—தொந்தி
சரியச்சுமந்துபெற்ற தாயார்தமக்கோ
வெரியத் தழன் மூட்டுவேன்.

(பொ - ரை.) (கருப்பம்வாய்ப்பதற்கு) முன்னே அனேகமான விரதங்களையெல்லாம் அனுஷ்டித்து, (கருப்பம் வாய்ந்தபிறகு) முந்நூறுநாள்கள்வரையில் இரவும் பகலும்) (தனது கருப்பத்தினுக்கு யாதொரு பங்கமும் வாராதபடி) சிவபெருமானை வழிபட்டு வயிறு சரியச் சுமந்தீன்ற (என்னுடைய) தாயினுக்கோ நெருப்பெரிய மூள்விப்பேன்.

(கு - ரை.) தனது அன்னை இறந்தவுடன் தனது சுற்றத்தினர் சுடுகாட்டிற்குத் தூக்கிக்கொண்டுவர அவர்களைக் கல்லாலெறிந்து துரத்திவிட்டுத் தானே தன்தாயினை யெடுத்துக்கொண்டுபோய் பச்சைவாழை மரங்களின்மீது வளர்த்தித் துன்பமுற்றுப் பாடிய திருச்செய்யுள்கள் முந்தியது முதல் பின்னேழும்.

வட்டிலிலுந் தொட்டிலிலு மார்மேலுந் தோண்மேலுங்
கட்டிலிலும் வைத்தென்னைக் காதலித்து—முட்டச்

சிறகிலிட்டுக் காப்பாற்றிச் சீராட்டுந்தாய்க்கே
விறகிலிட்டுத் தீமூட்டுவேன்.

(பொ - ரை.) வஸ்திரத்தினாற் செய்யப்பட்ட ஏணையிலும், மரத்தொட்டிலிலும், தனது மாரின்பேரிலும், தோளின்மீதும், மஞ்சத்திலும், என்னைவளர்த்தி விரும்பி முழுதும் இடுப்பில்வைத்துக் காப்பாற்றிச் சிறப்புச்செய்யும் தாயாரையோ விறகின்மீதிட்டு நெருப்பை மூள்விப்பேன்.

(கு - ரை.) குழந்தைகள் அழுகிறகாலத்தில் அக்குழந்தைகளின் நோக்கத்தினைத் தெரிந்துகொள்வதற்குக் கூடாமல் அவ்வழுகையினை மாற்றவும், சுகமாக நித்திரைசெய்யவும் பலவிடங்களில் வைத்து வைத்துச் சுகப்படுத்துவது தாய்மார் வழக்கமென்பதாம்.

நொந்து சுமந்துபெற்று நோவாம லேந்திமுலை
தந்துவளர்த் தெடுத்துத் தாழாமே—யந்திபகல்
கையிலேகொண் டென்னைக் காப்பாற்றுந் தாய்தனக்கோ
மெய்யிலே தீமூட்டுவேன்.

(பொ-ரை.) (அதிகப்) பிரயாசையுடன் வயிற்றில் (பத்துமாதம் வரையில்) தாங்கிப் பின்பெற்றெடுத்து வளர்த்து விருத்தியடைவித்து (எனைத்தனியே) விட்டுத் தங்கியிராமல் இரவும் பகலும் தனது கையினிடத்தே யேந்திக்கொண்டு என்னைக் காப்பாற்றின தாயினுக்கோ உடம்பின்கண்ணே நெருப்பை மூட்டுவிப்பேன்.

(கு-ரை.) தான் எனது நிமித்தம் எவ்வளவு துன்பமடையினும் அதனைப் பாராட்டாது எனக்கொரு சிறிது துன்பமும் வாராதபடி பாதுகாத்துவந்த அருமைத்தாயின் உடலில் அக்கினிபடும்படி எங்ஙனம் மனந்துணிவே னென்றனர்.

அரிசியோநானிடுவே னாத்தா டனக்கு
வரிசையிட்டுப் பார்த்துமகிழாமல்—லுருசியுள்ள
தேனே யமிர்தமேசெல்வத் திரவியப்பூ
மானே யெனவழைத்த வாய்க்கு.

(பொ - ரை.) அன்னையினுக்கு வரிசைவைத்துபார்த்து சந்தோஷிக்காமல் சுவைவாய்ந்த தேனே, தேவாமிர்தமே, செல்வச்சம்பத்தினை வாய்ந்த மகனே, என (அன்புடனே) அழைத்துவந்த வாயினுக்கு நான் அரிசியினையோ போடுவேன்.

(கு - ரை.) பற்பல இனிய சொற்களினால் அன்புடனே எனையழைத்துவந்த எனது அன்னையின் வாயினுக்கு அத்தகைய இனிமையான பதார்த்தங்களைக்கொடுத்து சன்மானிக்காமல் அவ்வாயில் வாய்க்கரிசி போடும்படி நேரிட்டது என் தலைவிதியோ வென்றனர்.

அள்ளியிடுவ தரிசியோ தாய்தலைமேற்
கொள்ளிதனை வைப்பேனோ கூசாமல்—மெள்ள
முகமேன்முகம்வைத்து முத்தாடியென்றன்
மகனே யெனவழைத்த வாய்க்கு.

(பொ-ரை.) (ஆசைமிதியாய்) மிருதுவாக என் முகத்தின்மீது தன் முகத்தினைவைத்து முத்தமிட்டு எனது மகனே யென்றழைத்த வாயினுக்கு வாய்க்கரிசையையோ அள்ளிப்போடுவது தாயினுடைய சிரசின்மேலே கைகூசாமல் கொள்ளியினை யிடுவேனோ.

(கு - ரை.) பேரானந்தத்துடனணைத்து முத்தமிட்ட எனது அன்னையின் சிரசில் அக்கினியையும், மிகுந்த உரக்கமுடன் என் மகனே என்றழைத்த வாயினுக்கு வாய்க்கரிசியும் போடும்படி நேரிட்டுவிட்டதும் கன்மமேயெனத் துக்கித்தபடியாம்.

### கலிவிருத்தம்.

முன்னையிட்டதீ முப்புரத்திலே
பின்னையிட்டதீ தென்னிலங்கையி
லன்னையிட்டதீ யடிவயற்றிலே
யானுமிட்டதீ மூள்கமூள்கவே.

(பொ-ரை.) முதலில் (சிவபெருமானால்) இடப்பட்ட நெருப்பு முப்புரத்தின்கண்ணே (மூண்டெரிந்தது) பிற்பாடு (அனுமனால்) இடப்பட்ட நெருப்பு தென்னிலங்கைநகரில் (மூண்டெரிந்தது) (இப்போது) என் தாயாரால் இடப்பட்ட நெருப்பு என்னுடைய அடிவயற்றில் (மூண்டெறிகின்றது) (அங்ஙனமாக) யானும் தாயாருடம்பில் இட்டநெருப்பு மூண்டெரிக மூண்டெரிக.

(கு - ரை.) பெருநெருப்பு விஷயமாகப் பிரஸ்தாபிப்பது முப்புரத்திலேயும் இலங்கையிலேயுமாகலின் அவ்விரண்டினையும் கூறினர். முப்புரத்திலே யுண்டானதுபோல என்வயிற்றிலுண்டாயதென்னும், அனுமார்மூட்டியதுபோல நான்மூட்டினேனென்றும் குறிப்பித்தனர். அதாவது தனக்குண்டாய துக்கம் இவ்வளவிற்றெனக் கூற முடியாதெனவும் தானிடவேண்டியது இன்றியமையாத செயலெனவும் தெரிந்தனர்.

### வேண்பா.

வேகுதே தீயதனில் வெந்துபொடிசாம்ப
லாகுதே பாவியேனையகோ—மாகக்
குருவிபறவாமற் கோதாட்டி யென்னைக்
கருதி வளர்த்தெடுத்த கை.

(பொ - ரை) ஆகாயத்தில் பறக்கின்ற பறவைகள் (எனக்கு நேராக மேலே) பறவாதபடி என்னைப் பாராட்டி (மனத்திலே அன்

புடனே) எண்ணி வளர்த்தெடுத்தகையானது நெருப்பில்வேகா நிற்கிற தே, வெந்து துண்ணியசாம்பலாகிறதே ஐயகோ தீவினையேன் எங்ஙனம் பார்த்துக்கொண்டிருப்பேன்.

(கு - ரை.) ஆகாயத்தில் சஞ்சரிக்கும் பட்சிகட்கு நேரே காலை மாலைகளில் சிறுகுழந்தைகள் நேர்படில் பட்சிதோட முண்டாமென் பது சாஸ்திர வழக்காகலின் 'குருவிபரவாமல்' என்றனர். இம்மை க்கு வேண்டியவற்றையெல்லாம் உதவி, மறுமையில் புத்தென்னு நரகத்திற்கும் போகாதபடி தடுத்து மோட்சத்தை டைதற்கு வேண் டிய வைதீக சாதனங்களையும் நடத்திவருவானென்று றாயெண்ணி யிருதந்தாளாதலால் 'கருதி' என்றனர்.

வெந்தாளோ சோணகிரி வித்தகா நின்பதத்தில்
வந்தாளோ வென்னை மறந்தாளோ—சந்ததமு
முன்னியே நோக்கி யுகந்துவரங் கிடந்தென்
றன்னையே யீன்றெடுத்த தாய்.

(பொ - ரை.) திருவண்ணாமலையி லெழுந்தருளியிருக்கின்ற ஞானவடிவானவனே! எப்போது தேவரீரையே நாடி மகிழ்ச்சியுடன் வரம்பெறவேண்டித் தங்கி என்னைப் பெற்றெடுத்த தாயானவள் வெந்துபோயினளோ, உன் திருவடியில் வந்து சேர்ந்தனளோ என் னை மறந்துவிட்டனளோ.

(கு - ரை.) திருவெண்காரைப்போன்ற சற்புத்திரனைப் பெறு தற்குச் சிவபெருமானை நோக்கி அறிய தவங்கிடந்தாலன்றிப் பலியா தாகலின், 'வரங்கிடந்து' என்றனர். சர்வசங்கப் பரித்தியாகமடையத் தக்க ஒரு புத்திரனைப் பெற்றவள் உடனே மோட்சமடைவள் என் பது சாஸ்திர நிச்சயமாகலின் 'நின்பதத்தில்வந்தாளோ' என்றனர்.

விற்றிருந்தாளன்னை வீதிதனி லிருந்தாள்
நேற்றிருந்தா ளின்றுவெந்து நீறானாள்—பாற்றெளிக்க
வெல்லீரும் வாருங்க ளேதென்றிரங்காம
லெல்லாஞ் சிவமயமே யாம்.

(பொ - ரை.) (எனது) தாயானவள் (சுகமாக) விருந்துகொண்டிருந்தாள் வீதியிலு (மூலவிக்) கொண்டிருந்தாள், நேற்று (சீவதிசையுட) னிருந்தாள் இன்றையதினம் (நெருப்பில்) வெந்து சாம்பலாயினாள், இதென்ன ஆச்சரியமென்று (மனம்) இராங்காமல் பால் தெளிக்கும்பொருட்டு நீவிரெல்லோரும் வாருங்கள் எல்லாம் சிவமயமேயாகும்.

(கு - ரை.) தனது தாயார் தகனகிரியையின் முன்னிலையாக உலகநிலையாமையினைக் குறிப்பித்தனர். இத்தகயசெயல் பிரபஞ்சத்தில் நிகழ்வது சகசமாம் என்பர். 'ஏதென்றிறங்காமல்' என்றனர். தோன்றுதலும் வாழ்தலும் இறத்தலும் நமது விருப்பத்தின்படி சிறிதும் நடவாது பூர்வகன்மத்திற்குத் தக்கபடி சிவன் கூட்டிவைப்பானென்பார். 'எல்லாம் சிவமயமே' என்றனர்.

## திருவிடமருதூர்.

மென்று விழுங்கி விட்டாய்கழிக்க நீர்தேட
லென்றுவிடியுமெனக் கென்கோவே—நன்றி
கருதார் புரமூன்றுங் கட்டழலாற் செற்ற
மருதாவுன் சந்நிதிக்கே வந்து.

(பொ - ரை.) என் தலைவனே! நன்மையினை நினையாதவர்களுடைய முப்புரங்களையும் பெருநெருப்பினால் சாம்பலாக்கின திருவிட

மருதூர்ப்பிரானே! தேவரீருடைய சந்நிதியிலேவந்து ஆகாரத்தினை யென்று உட்கொண்டு தாகவிடாய் தணித்துக்கொள்ளும் பொருட்டு நீரினைத்தேடுந் தொழிலானது எக்காலத்தில் எனக்கு முடிவுபெறும்.

(கு - ரை.) திருவருண்மயமாக விளங்கும் சிவாலயத்திலேயே யிருந்துகொண்டு, பசியின்பொருட்டுப் பிறரைநாடி ஆகாரத்திற்கு வேண்டியவற்றைக் கொள்ளாதிருக்கும் நாள் எக்காலம் சித்திக்கு மென்பார் 'என்றுவிடியும்' என்றனர்.

## திருவொற்றியூர்.

கண்டங் கரியதாங் கண்மூன் றுடையதா
மண்டத்தைப்போல வழகியதாங்—தொண்ட
ருடலுருகத் தித்திக்கு மோங்குபுக ழொற்றிக்
கடலருகே நிற்குங் கரும்பு.

(பொ-ரை.) புகழானது ஓங்கிய திருவொற்றியூரின் சமுத்திரத் தீரத்திலேயிருக்கும் கரும்பானது கண்டம்கருமையானதாம், மூன்று நேத்திரங்களையுடையதாம், ஆகாயத்தினைப்போல அழகினையுடையதாம், சிவனடியார்கள் திருமேனியானந்திக்கத் தித்தித்துக்கொண்டிருக்கும்.

(கு - ரை.) சிவனடியார்கள் திருவொற்றியூர்ப் படம்பக்கநாதரைத் தியானிக்குந்தோறும் அவர்கள் மனத்தில் பேரானந்தசுவை விளைந்துகொண்டிருக்குமாதலின் அந்நாதரைக் கரும்பு என்றனர்.

ஓடு விழுந்துசீப்பாயு மொன்பதுவாய் புண்ணுக்
கிடு மருந்தை யானறிந்து கொண்டேன்—கடுவருந்து

தேவாதி தேவனே றிருவொற்றி யூற்றெருவிற்
போவாரடியிற் பொடி.

(பொ-ரை.) கட்டிகள் உண்டாகிச்சீப்பாயாநின்ற ஒன்பதுதுவாரங்களுள்ள உடலினுக்கு இட்ட அதனைப்பரிகரிக்கத்தகுந்த அவுடதத்தினை நான் தெரிந்துகொண்டேன் அதென்னெனின் நஞ்சினையுண்ட தேவாதிதேவனுடைய திருவொற்றியூர்த்தெரிவின்கண்ணே நடப்பவர்களுடைய திருவடியினதுகளேயாம்.

(கு-ரை.) சிவனடியார்கள் நெருங்கி எக்காலத்துமுலவும் திருவொற்றியூர் மாடவீதியிலுள்ள மண்ணிற் சிறிதினை யொருவன் சிரசிற்றரித்துக்கொள்ளுவானேல் அவர் பிறப்பு எடுத்தற்கேற்ற வினையானது நீங்கிவிடுமென்பதாம். இது முத்திக்ஷேத்திரமாகலின் - இவ்வுண்மை நமது திருவெண்காடர் தெரிந்தன்றோ, பற்றற்றமூர்த்தியாகிய அவர் உலகத்தின் கண்ணே பற்பலக்ஷேத்திரங்களையும் விரும்பாது இத்தலத்தினையடைந்து ஞானசமாதிகொள்ளுதந்து வீற்றிருந்தருளினர்.

வாவியெல்லாந் தீர்த்த மணலெல்லாம் வெண்ணீறு
காவணங்க ளெல்லாம் கணநாதர் — பூவுலகி
லீது சிவலோக மென்றென்றே மெய்த்தவத்தோ
ரோதும் திருவொற்றியூர்.

(பொ-ரை.) இது இவ்வுலகிலுள்ள சிவலோகமாகும் என்று பலதரம்தோத்தரித்து மெய்கண்டதவத்தினையுடையவர்கள் புகழ்ந்து கொண்டிருக்கும் திருவொற்றியூரிலுள்ள தடாகங்களி யாவும் புண்ணியதீர்த்தங்களாம், மணல் முழுவதும் திருவெண்ணீறும். சோலைகளெல்லாம், சிவகணங்களாம்.

(கு - ரை.) திருவொற்றியூர்ப் ,பூலோககைலாசமென்னச் சிவ ஞானிகள் சொல்லுவதால் உண்மைச் சிவனடியார்கட்கு அத்தலத் துத் தடாகங்கள் புண்ணியதீர்த்தமாகவும், மணல் விபூதியாகவும், விருட்சங்கள் சிவகணங்களாகவும் தோன்றுமென்பதாம். ஆகவே திருவெண்காடர் தாம்கண்ட, அனுபவ உண்மையை யிங்ஙனங் கூறினர்.

## திருவாரூர்.

ஆரூராிங்கிருக்க வவ்வூர்த் திருநாளென்
றூரூர்கடோறு முழலுவீர்—நேரே
யுளக்குறிப்பை நாடாத வூமர்களா னீவிர்
விளக்கிருக்கத் தீத்தேடுவீர்.

(பொ-ரை.) திருவாரூருடையார் இவ்விடத்திலிருக்க (இத்தலத் தினைக் கடந்து) அந்த ஊரில் திருநாளென்றும். எல்லாவூர்களினும் சென்று அலைபவர்களே நோக்மனக்கருத்தையறியாத மூங்கைகளே நீங்கள் தீபம் இருக்க நெருப்பைத்தேடுவீர்கள்.

(கு-ரை.) 'புகழுமூவரி லுருத்திரமூர்த்தி பொங்கொளியிற், றிகழுஞாயிறு வகைகளிற் செம்பொனஞ்சிலம்பு, பகருமந்திரத் தஞ் செழுத் தென்னவே பலவா, நகரின்மேன்மைபெற் றதுகமலாலய நகரம்'' என்றபடி இத்தலத்தில் திருவிழாவைத் தரித்தபின் வேறு தலத்தின் திருவிழாவை தரிசிக்க மனம்வாராதாகலின், ஊரூர்கடோ று முழலுவீர், என்றனர்.

## திருவையாறு.

எருவாய்க் கிருவிரண்மே லேறுண்டிருக்குங்
கருவாய்க்கோ கண்கலக்கப் பட்டாய்—திருவாரூர்த்

தேரோடும் வீதியிலே செத்துக் கிடக்கின்றாய்
நீரோடும் தாரைக்கே நீ.

(பொ - ரை) மலத்துவாரத்திற்கு இரண்டங்குலத்திற்குமேலே ஏறிய புழுக்கூடாகிய பிறப்பிடத்திற்குக் கண்கலங்கினை, திருவாரூரின்கண் தேரோடும் திருவீதியில் நீ நீரோடும்வழியின் பொருட்டு மாண்டு கிடந்தாயே.

(கு - ரை.) தன்னையடுத்திருந்த ஒரு நல்லடியார் தன்கட்டளைப்படி விவாகம்செய்து வாழ்ந்துகொண்டிருக்கையில் பெண் சம்பந்தமான சுகஜன்னிகண்டு மாண்டுபோக அதுதெரிந்து அவனைச்சமீபித்து இத்திருச்செய்யுளைப்பாடி எழுப்பிவிட்டனர்.

## திருக்காளத்தி.

பொய்யை யொழியாய் புலாலைவிட்டாய் காளத்தி
ஐயரையென்று மறஞ்செய்யாய்—வெய்ய
சினமே யொழியாய் திருவெழுத்தைந் தோதாய்
மனமே யுனக்கென்ன மாண்பு.

(பொ-ரை.) மனமே! பொய்பேசாதிராய் புலாலுண்ணிதலினின்றும் நீங்காய், திருக்காளத்திநாதரை நினைக்கமாட்டாய், சிவதருமத்தினைச்செய்யாய், கொடியகோபத்தினை நீங்காய், அழகிய பஞ்சாட்சரத்தினை செபியாய், உனக்கென்ன பெருமையுண்டாகப்போகிறது.

(கு - ரை.) ஒருவன் மனிதப்பிறப்பையெடுத்து அதனாலடைய வேண்டிய அரிய பாக்கியத்தை யடையவேண்டுமாயின் நீக்கவேண்டுவன சில, கொள்ளவேண்ன சில, அவையாவன பொய், புலால்

கோபம் இவற்றையொழித்தல்வேண்டும். சிவசிந்தனை, சிவதருமசிந்தனை, பஞ்சாசரதியானம் இவற்றைப்பெறவேண்டும்.

## திருக்காஞ்சி.

எத்தனையூ ரெத்தனைவீ டெத்தனைதாய் பெற்றவர்கள்
எத்தனைபே ரிட்டழைக்க வேனென்றே—னித்தம்
எனக்குக் களையாற்று யேகம்பா கம்பா
உனக்குத் திருவிளை யாட்டோ.

(பொ - ரை.) திருவேகம்பமுடையானே! கம்பாநதியுடையானே! எத்தனை ஊர்கள் எத்தனை வீடுகள், எத்தனை தாய்மார்கள் ஈன்றோர்கள், எத்தனைபேர்வைத்தழைக்க என் என்று விடைகொடுத்தேன், நாள்தோறும் அடியேனுக்கு விடாய்தனியாய் தேவரீருக்கு இது ஒரு திருவிளையாட்டா யிருக்கிறதோ.

(கு - ரை ) எடுத்த சனனங்கட்கு எண்ணிக்கை இவ்வளவெனக்கணக்கிட முடியாதாகலினாலும், அந்தந்தச் சென்மங்கள் தோறும் அனுபவித்த துன்பங்கட்கு அளவில்லையாகலினாலும் அதனால் விடாயற்றிருக்குமெனக்கு இச்சென்மத்திலாவது அக்கவலைதீர்த்து இனி. சென்மமெடாதபடி செய்வாயென்பார் 'களையாற்றாய்' என்றனர் 'திருவிளையாடோ' எனச் சந்தேகித்ததனால் திருவிளையாட்டன்று எனது கன்மமென்றபடியாம்.

## திருவிருப்மையூர்.

மாதாவுடல்சலித்தாள் வல்வினையேன் கால்சலித்தேன்
வேதாவுங் கைசலித்துவிட்டானே—நாதா
விருப்பையூர் வாழ்சிவனே யின்னமோ ரன்னை
கருப்பையூர் வாராமற் கா.

(பொ - ரை) (என்னைப்பெற்ற) தாயானவள் உடம்புதளர்ந்தாள், வலியவினையையுடைய நான் கால் ஓய்ந்துவிட்டேன், பிரமனும் கைதளர்ந்துவிட்டான், தலைவனே திருவிருப்பையூரில் வாழ்கின்ற சிவபெருமானே இனிமேலும் ஒருதாயினுடைய கருப்பையாகிய ஊரில் வருந்து பொருந்தாமல் என்னைக் காத்தருள்வாயாக.

(கு-ரை.) எடுத்தசன்மங்கட்கு அளவில்லையாகலின் அவ்வளவு சென்மங்களிலும் என்னைப்பெற்ற தாய்மாரும், சிருட்டித்த பிரமனும், கொன்றை இயமனும் சலித்துவிட்டனர்களாகலின் இனியவர்கட்குச் சிறிது ஆறுதலுண்டாம்படி என்னைப்படையாதிருக்கவேண்டுமென்றனர்.

## திருக்காரோணம்.

அத்திமுத லெறும்பீ றானவுயி ரத்தனைக்குஞ்
சித்தமகிழ்ந்தளிக்குந் தேசிகா—மெத்தப்
பசிக்குதையா பாவியென் பாழ்வயிற்றைப்பற்றி
யிசிக்குதையா காரோணரே.

(பொ-ரை.) யானைமுதலாக எறும்பு ஈறாகவுள்ள எல்லா உயிர்கட்கும் மனமகிழ்ந்து அவைகள் வேண்டியவற்றைக் கொடுக்கின்ற ஆசாரியனே! மிகவும் பசிக்கின்றது ஐயனே! பாவியாகிய என்னுடைய பாழாகிய உதரத்தைப்பற்றி இழுக்கின்றது கடவுளே திருக்காரோணத்திலிருப்பவரே!

(கு - ரை.) ஆன்மகோடிகட்கெல்லாம் அவரவர்கள் கன்மத்திற்குத்தக்கபடி உணவு ஊட்டிக்காத்துவருபவன் நீயேயாகலின் அவ்வான்மகோடிகளுள் ஒருவனாகிய நான் மாத்திரம் இங்ஙனம் பசியால் துக்கப்படலாமோ உடனே தணிக்கவேண்டுமென்பர்.

## திருக்குற்றாலம்.

காலன் வருமுன்னே கண்மஞ் சடைமுன்னே
பாலும் கடைவாய் படுமுன்னே—மேல்விழுந்தே
யுற்றா ரழுமுன்னே யூரார் சுடுமுன்னே
குற்றாலத் தானையே கூறு.

(பொ-ரை.) எமன் நெருங்குவதற்கு முந்தியே, கண்பஞ்சடைவதற்கு முந்தியே. பாலுண்ட கடைவாய்ப்பல் விழுவதற்கு முந்தியே. உறவினர்மேலே விழுந்து அழுவதற்கு முந்தியே, ஊரிலுள்ளார் மயானத்திற்குக்கொண்டுபோய் சுடுவதற்குமுந்தியே, திருக்குற்றாலத்தி லெழுந்தருளியிருக்கும் சிவபெருமானைத் துதிப்பாயாக.

(கு-ரை.) மரணத்தருவாயில் இந்திரியங்கள் கலங்கிவிடுமாகலின் அச்சமயத்தில் நினைப்பதற்கேதுவாகிய காரணங்களும் அங்ஙனமேயாகும் ஆகவின் அறிவானது தெளிவாகவிருக்கிற காலத்திலேயே சிவத்தியானம் பண்ணுதல் வேண்டுமென்றார்.

## திருவையாறு.

மண்ணுந் தணலாக வானும் புகையாற
வெண்ணரிய தாயு மிளைப்பாறப்—பண்ணுமயன்
கையாறவும்மடியேன் காலாறவுங் கண்பா
ரையா திருவை யாறா.

(பொ-ரை.) என் தந்தையே! திருவையாற்றி லெழுந்தருளியிருப்பவனே! பூமியானது (தன்னுடைய) அனல் அடங்கும்படியாகவும், ஆகாயமானது (தன்னுடைய) புகையடங்கும்படியாகவும் (என்னைச் சனனங்கள்தோறும் பெற்றெடுத்த) அனேக தாய்மார்கள் இளைப்பா

றும்படியாகவும், சிருஷ்டிசெய்யும் பிரமன்கையாறும்படியாகவும் அடியேனுடையகால்கள் ஆறும்படியாகவும் திருநோக்கம் வைத்தருளவேண்டும்.

(கு-ரை.) எடுத்தசனனங்கட்குக் கணக்கில்லையாகலின் அவ்வவ் செனனங்கடோறும் மரணகாலத்தில் கொளுத்தியபோது உண்டாகிய நெருப்பும் புகையும், பிறந்தகாலத்தில் தாய்மார்க்குண்டாகிய நோயும், பிரபஞ்சபோகத்தினை யனுபவிக்கும்படி பிரமன் எழுதிவந்ததையும், அங்ஙனம்போகங்களை யனுபவிக்கிறகாலத்தில் உலகமெங்குந் திரிந்தலுத்தகாலும் இளைப்பாற எனவே அதாவது இனிச் சென்மம் வாராதபடி திருவடியிற்சேர்த்துக்கொள்ளவேண்டுமென்பதாம்.

## சிதம்பரம்.

சிற்றம்பலமுஞ் சிவனு மருகிருக்க
வெற்றம்பலந்தேடி விட்டோமே—நித்தம்
பிறந்திடத்தைத் பேதைமட நெஞ்சே
கறந்திடத்தை நாடுதே கண்.

(பொ-ரை.) திருச்சிற்றம்பலமும் (அவ்வம்பலத்தில் ஆனந்தநிர்த்தம் செய்தருளும்) நடராஜப்பிரபுவும் சமீபத்திலிருக்க வெறுமையாகிய அம்பலப்தைத்தேடிக்கொண்டோமே (என்னெனின்) அறியாமையினையும் மடமையினையும் வாய்ந்த மனமானது எந்நாளும் தான் பிறந்தவிடத்தினையே தேடாநின்றதே, கண்ணானது தான் (பால்) உண்ட இடத்தினையே நாடாநின்றதே.

(கு - ரை.) பிறப்புதற்கிடமாயுள்ள நிதம்பமும் பாலுண்பதற்கு இடமாயுள்ள தனமும் ஒவ்வொருவரையும் மயக்கிக் காமத்தை யூட்டுவதற் கேதுவாகப் பிரபஞ்சத்திலிருந்து கொண்டிருத்தலினால் அம்

மயக்கிற் சிக்காது உலகத்திலுள்ள மாதரனைவரையும் தாய்மார்களாகப் பாவித்து வாழவேண்டுமென்பதாம்.

## போது.

தோட்டவிழும் பூங்கோதைத் தோகையுனை யிப்போது
தேடினவர் போய்விட்டார் தேறியிரு—நாடிநீ
என்னை நினைத்தா லிடுப்பி லுதைப்பேனுன்
உன்னை நினைத்தா லுதை.

(பொ - ரை.) இதழானது விரியாநின்ற புட்பமாலையினைத்தரித்த பெண்ணே, உன்னை இப்போது தேடினவர்போய்விட்டார். மனந்தெளிந்திரு, நீ என்னைவிரும்பி நினைந்தனையாயின், நானுன்னை இடுப்பிலுதைப்பேன், உன்னை நினைந்தேனாயின் நீயென்னை உதை.

(கு - ரை.) அனேககோடி சன்மாந்தரங்களினும் மாதருடன் கலத்து கலந்து மயங்கிக்கிடந்த மனமானது ஒரேவழிதன்னையறியாது எதிரிட்டமாதொருவள் பால் நாடி அவளைவசியம்செய்து விட உடனே தன்மனதைத் தன்வழித்திருப்பிக்கொண்டு அம்மாதினை நிக்கிரகித்தபடியாம். சாமான்னியர் மனத்தின்வழி அறிவினைவிட்டு மயங்குவர், அறிஞர் அம்மனத்தினை அறிவால் தன்வயப்படுத்திடுவர் எத்தகையினராயினும் பிராரத்துவத்தை யனுபவித்தே தீரவேண்டும். ஆனல் அபக்குவர்கட்கு அனுபவமாயும் பக்குவர்கட்கு வாசனைமாத்திரமாயும் நிகழும், ஈண்டுச்சுவாமிகள்பால் சேர்ந்ததுபூர்வவாசனையேயாம்.

வாசற் படிகடந்து வாராத பிச்சைக்கிங்
காசைப் படுவதில்லை யண்ணலே—யாசைதனைப்

பட்டிறந்த காலமெலாம் போதும் பரமேட்டி
சுட்டிறந்த ஞானத்தைச் சொல்.

(பொ-ரை.) பெருமையிற்சிறந்த பெருமானே! நான் வாசற்ப டியைக்கடந்து தாண்டிக்கொண்டுவந்து இடாதபிச்சையினுக்கு இப் போது ஆசைப்படுவதில்லை (அங்ஙனம்) அப்பிச்சையினுக்கு ஆசை கொண்டிருந்து கழிந்தகாலமனைத்தும் போதும், இனிக்குறித்துச் சொல்லுதற்கேலாத ஞானோபதேசம் செய்தருளுவாய்.

(கு-ரை.) ஒன்றினைச்சுட்டில் சுட்டுவோனாகிய ஞாதுருவும், மன மாகிய ஞானமும், சுட்டப்படும் பொருளாகிய ஞேயமும் மூன்றுந் தோன்றுமாகலின், சுட்டிறந்த ஞானவேண்டும் என்றனர். ஞானமன மாலை. "என்னுணை மாணவகாவீதென்று சுட்டாதே, பன்னுளுமுண் மைதனைப் பாராதே—நின்னாலே, யொன்றலது வொன்றுதங் குண் ணுணை யொன்றாயே, லொன்றுமிரண்டல்லாதவொன்று" என்றத னுற் காண்க.

நச்சரவம் பூண்டானை நன்றாய்த் தொழுவதுவு
மிச்சையிலே தானங் கிருப்பதுவு—பிச்சைதனை
வாங்குவது முண்பதவும் வந்துதிரு வாயிலிலே
தூங்குவதுந் தானே சுகம்.

(பொ-ரை.) விஷத்தினையுடைய பாம்பினைத் தரித்த பரமசி வனை நன்றாக வணங்குவதும், தன்னிஷ்டப்படி யிருந்து கொண்டிரு ப்பதுப், பிச்சையெடுப்பதும், சாப்பிடுவதும், வந்து சிவாலயவாயற்ப டியிலேயே நித்திரை செய்வதும் தானே இன்பமாகும்.

(கு-ரை.) இன்றியமையா துண்டாகும், பசியினை மாத்திரம் தணித்தற்குப் பிச்சையேற்றுண்டு சிவாலயதரிசனம்செய்த பின்அக்

கோயில் வாயற்படியிற் கிடத்தலே சுகமென்றனர். அதனால் எத்த கையினர்கட்கும் சிவாலய வழிபாடொன்றே மோட்சந் தருமென்ப தாம். இதுபற்றியன்றே, "திருக்கோயிலில்லாத திருவில் ஊரும்" எனவும், "ஆலயம்தொழுவது சாலவுநன்று" எனவும், "கோயிலில் லாதவூரில் குடியிருக்க வேண்டாமெனவும்" பெரியோர் பணித்துள் ளார்.

இருக்கு மிடந்தேடி யென்பசிக்கே யன்ன
முருக்கமுடன் கொண்டுவந்தா லுண்பேன்...பெருக்க
வழைத்தாலும் போகே னரனே யென்றேக
மிளைத்தாலும் போகே னினி.

(பொ-ரை.) சிவபெருமானே! நானிருக்கும் இடத்தினைத்தேடி என்பசியினைத்தணித்திடற்கு அன்னத்தினைப் பரிவுடனே கொண்டு வந்தால் புசிப்பேன் அங்ஙனம் செய்யாமல் மிகவும் வருந்தியழைத் தாலும் போகமாட்டேன் எனது தேகமெலிந்தாலும் இனிப்போக மாட்டேன்.

(கு-ரை.) பசியைத்தணித்தலின்பொருட்டு அன்னத்திற்கென வெளிவரின் வீதிகடோறும் ஒவ்வொரு வீட்டிலும் செல்லவேண்டி யிருக்கின்றது, அவ்வவவீட்டிலுள்ள சாமான்யரையெல்லாம் கெஞ்ச வேண்டியுமிருக்கிறது, அவ்வமயம் மெய் வாய் கண் மூக்குச் செவி முதலியவற்றிற்குப்பிரபஞ்சவேடிக்கை விளைகின்றது அவ்விளைவின் வழியே மனம் செல்லுகிறது. செல்லவே இச்சைவிளைகின்றது இச் சைவிளையவே அளவிச்சையினை யனுபவிக்க முயற்சியுண்டாகின்றது அம்முயற்சியில் இன்பதுன்பம் விளைகின்றன. அவை புண்ணியபாவ ங்கட்கிடமாய்ப்பிறப்பினுக்கேது உண்டாகின்ற இத்தகைய விபரீதங் கட்கிடம்கொடாதபடி யிருந்தவிடத்திலே யிருத்தலே நலமென்பார் "போகேனினி" என்றனர்.

விட்டுவிடப் போகுதுயிர் விட்டவுடனே யுடலைச்
சுட்டுவிடப் போகின்றார் சுற்றத்தார்...பட்டதுபட்
டெந்நேர முஞ்சிவனை யேத்துங்கள் போற்றுங்கள்
சொன்னே னதுவே சுகம்.

(பொ-ரை.) ஜகத்தீரே! உயிரானது உடலைவிட்டு நீங்கப்போகிறது விட்டவுடன் சரீரத்தினை உறவினர் சுட்டுவிடப்போகின்றார், ஆகையால் என்னபாடு பட்டாயினும் எப்பொழுதும் சிவபெருமானைத் துதியுங்கள் வணங்குங்கள் சொல்லிவிட்டேன் அதுவேசுகமாவது.

(கு-ரை.) உலகத்திலே ஒருவன் நற்கதியினை யடையவேண்டியதற்கேற்ற சாதனங்கள் உடலுடன் உடல் கூடியிருக்கும் காலத்திலேயே சம்பாதித்துக்கொள்ளவேண்டும். அடலோ அருத்த கணம் நலது வசத்திலிருப்பது துல்லபம் ஆகலின் உடலோடிருக்கும் காலமெல்லாம் ஒவ்வொரு கணந்தோறும்சிவசிந்தனையுடனிருக்க வேண்டுமென்பார் 'எந்நேரமும் சிவனை யேத்துங்கள்' என்றனர்.

ஆவியொடுகாய மழிந்தாலு மேதினியிற்
பாவியென்று நாமம் படையாதே...மேவியசீர்
வித்தார முங்கடம்பும் வேண்டா மடநெஞ்சே
செத்தாரைப்போலே திரி.

(பொ-ரை.) அறியாமை வாய்ந்த மனமே! உயிருடன் கூடிய சரீரமானது அழிந்துபோனாலும் உலகத்திலே பாவியென்ற பேரினைப்படைக்காதே, பொருந்திய சிறப்பினைவாய்ந்த விஸ்தாரவார்த்தையும் உலகவுறவும் உனக்கு வேண்டாம் மாண்டவர்போலத் திரிவாயாக.

(கு-ரை.) உலகத்தில் விவகாரமுள்ளவரையில் நன்மைதீமைகட்கேதுவாகிய விஷயங்களுள் சிக்குண்ணவரும் அங்ஙனம் சிக்கவே

எவ்வழியிலாவது பாவியென்றேபேருண்டாம் ஆகலின்மவுனம்பூண்டு நடைப்பிணம்போ லிருந்துகொண்டிருத்தலே யுத்தம மென்றனர். "பாவியென்ற பேர்படைத்துப் பாழ்நரகில் வீழாமல், ஆவிநின்ற சூத்திசித்தை யறிவதினியெக்காலம்" என்றனர் பத்திரகிரியாரும்.

## பின்முடுகு வெண்பா.

இப்பிறப்பை நம்பி யிருப்பையோ நெஞ்சமே
வைப்பிருக்க வாயின் மனையிருக்கச் சொப்பனம்போல்
விக்கிப்பற் கிட்டக்கண் மெத்தப்பஞ் சிட்டப்பைக்
கக்கிச்செத் துக்கொட்டக் கண்டு.

(பொ - ரை.) மனமே! செல்வமிருக்க, வீடும் மனைவியுமிருக்க கனவினைப்போல நிலையிலதாகி, விக்கலெடுத்து பற்கள் கிட்டிவிட, கண்கள் மிகவும் பஞ்சடைந்து, நீரையும் கோழையையும் கக்கி, இறந்து சாப்பிறையடித்தலைக் கண்டிருந்தும் இந்தச்சன்மத்தினை நம்பி யிருப்பரோ (அறிவுடையோர்கள்.)

(கு - ரை.) அனுபவிக்க வேண்டிய சகலபோகங்களும் குறைவறவிருக்க அவற்றையெல்லாம் விட்டுக் கணத்திலிருந்துவிடும் உண்மையினைப் பிரத்தியட்சமாகத் தினமும் கண்டும் இவ்வுடலில் அபிமானம் வைத்துக்கொண்டு பெருமானை மறந்திருப்பது தகுதியாமோ என்றனர்.

மேலுமிருக்க விரும்பினையே வெள்விடையோன்
சீலமறிந்திலையே சிந்தையே...கால்கைக்குக்
கொட்டையிட்டு மெத்தையிட்டுக்குத்தி பொத்தப்பட்டவு
கட்டையிட்டுச் சுட்டுவிடக் கண்டு. [டல்

(பொ-ரை.) மனமே! கால்கைகளுக்குச் சிறு துண்டுகளை வைத்து உடலுக்கு மெத்தைகள்வைத்து (அடிமைகள் வாயுவின் நிமித்தம்) குத்திய துக்கப்பட்ட உடலை விறகிலிட்டுச் சுட்டுவிடப்பார்த்தும்இனி மேலுமிருக்க விரும்பினையே, வெள்ளிய இடபவாகனத்தை யுடைய பரமசிவனது கல்யாணகுணங்களை யறிந்தில்லையே.

(கு-ரை.)பற்பலவகையினும் உபசரித்துவைத்துக்கொண்டிருந்த உடலைப் பிரத்தியட்சமாக நெருப்பிலிடுவதைக் கண்ணாரக்கண்டிருந்தும், நித்தியனாகிய சிவபெருமான் திருவருளினை நாடாது உடலுடனேவாழவே விரும்புகின்றனை யென்னப் பிரயோசனமடைவாயென்பதாம்.

ஒன்பதுவாய்த் தோற்பைக் கொருநாளைப் போலவே
யன்புவைத்து நெஞ்சே யலைந்தாயே—வன்கழுக்க
டத்தித்தத் திச்சட்டை தட்டிக்கட்டிப்புட்டுக்
கத்திக்குத் தித்தின்னக்கண்டு.

(பொ-ரை.) மனமே! வலிமைபொருந்திய கழுக்கள் குதித்துக் குதித்து இறகுகளைத்தட்டி மூடி உடலைச் சிறுகூறுகளாக்கி இரைச்சிவிட்டுமூக்கினல் குத்தித்தின்னப்பார்த்தும் ஒன்பதுவாயில்களை யுடைய தோற்பையாகிய உடலின்பொருட்டு எந்நாளுமே அன்புவைத்துத் திரிந்தாயே

(கு-ரை.) கழுகுமுதலியவைகள் தமது பசியாற்று பொருட்டுப் பிடுங்கித்தின்னுதற்கேதுவாக உடலிருந்துகொண்டிருத்தல் பிரத்தியட்சமாகலின் அங்ஙனம் அவற்றிற்கு உடலிரையாகாதபடித் திருவருளிற் கலந்துகொள்ள முயற்சிக்கவேண்டுமென்பதாம்.

இன்னம்பிறக்க விசைவையோ நெஞ்சமே
மன்னரிவ ரென்றிருந்து வாழ்ந்தவரை—முன்ன
மெரிந்தகட்டைமீது துணைக்கோ வணத்தை
யுரிந்துருட்டிப் போட்டது கண்டு.

(பொ-ரை.) மனமே! அரசர்கள் இவர் என்றுசொல்லப்பட்டிருந்து வாழந்தாரை முன்னம்(வேறொருபிணம்)எரிந்த மேட்டின்மேரில் ஆண்மைக்குத் துணையாகவிருந்த கௌபீனத்தையும் உரிந்துகொண்டு எருமுட்டைகளின்மேல் வளர்த்திவிட்டதைப்பார்த்தும் இனிமேலும் பிறப்பதற்குவைவையோ.

(கு-ரை.) பிறருக்கு எவ்விதத்தும் பிரயோசனப்படாத அல்பத்துண்டாகிய கௌபீனத்தினையும், தன்னுடன்வைத்துக் கொளுத்துதற்கு இயலாதிருக்க அருமையென நாம்பாராட்டி யனுபவித்துவந்த பொருள்களுக்கு நமக்குமென்ன சம்பந்தமுண்டென்பதை யாலோசித்து அவற்றிற் பற்றுவையாது பிறப்பினுக்கும் ஏதுவுண்டாக்கிக் கொள்ளாதிருக்க வேண்டுமென்பதாம்.

முதற்சங் கமுதூட்டு மொய்குழலார் தம்மை
நடுச்சங்க நல்விலங்கு பூட்டுங்—கடைச்சங்க
மாம்போத துஊது மம்மட்டோ விம்மட்டோ
நாம்பூமி வாழ்ந்த நலம்.

(பொ-ரை.) முதலிலுண்டாகிய சங்குபாலை யூட்டும், மாதர்களுடைய இச்சைகாரணமாக உண்டாகிற நடுச்சங்கமானது உறுதியான விலங்குபூணும்படிசெய்யும், கடைசிகாலத்தில் உண்டாகிற சங்கானது இறந்துபோகும் காலத்தினுக்குரியதாகித ஊதப்படும், நாம் உலகத்தில்வாழ்ந்த சுகம் அவ்வளவோ இவ்வளவோ அறியேம்.

(கு - ரை.) குழந்தைப்பருவத்தில் பாலூட்ட உபயோகப்படுத்து வது முதற்சங்கு (பாலாடை) விவாக மகோற்சவகாலத்தில் ஊதுவது நடுச்சங்கு மயானத்திற் எடுத்துக்கொண்டு போம்போது ஊதுவது கடைச்சங்கு.

எத்தனைநாள் கூடியெடுத்த சரீரமிவை
யத்தனையு மண்டின்ப தல்லவோ—வித்தகனார்
காலைப்பிடித்துமெள்ளக் கங்குல்பகலற்றிடத்தே
மேலைக் குடியிருப்போமே.

(பொ - ரை) இவைகள் எத்தனைநாள் சேர்த்தெடுத்த உடம்பு கள் அவ்வளவும் மண்ணுண்பதல்லவோ கடவுளின் திருவடியினைமெ ல்லப் பற்றி இராப்பகலற்ற இடத்திலே மேன்மைக் குடியாகவிருப் போம்.

(கு - ரை.) புல்லாய்ப் பூடாய்ப் புழுவாய் மரமாய் மிருகமாய்பற வையாய் பாம்பாய் கல்லாய் மனிதராய் என்றபடி எத்தனையோ சன் மங்க ளெடுத்தபின்னர் மனிதப்பிறப்பை யெடுக்கப்பெற்றும் அம்மனி தப்பிறப்பை மண்ணுக்கு வீணாகக்கொடுக்காமல் அப்பிறப்பிலேயே சிவபெருமான் திருவடித்தியானஞ்செய்து மோட்சவீடடைதலே தகுதி யென்றனர்.

எச்சிலென்று சொல்லி யிதமகிதம் பேசாதே
யெச்சி லிருக்கு மடமறியீ—செச்சிறனை
யுய்த்திருந்து பார்த்தா லொருமை வெளிப்படும்பின்
சித்த நிராமய மாமே.

(பொ-ரை.) சிற்சிலவஸ்துக்களை எச்சிலென்று இகழ்ந்துரைத்து நன்மை தீமைகள் பேசவேண்டாம், எச்சிலிருக்கு மிடந்தனைத் தெரி

ந்தீரில்லை, எச்சிலை யூகித்திருந்துபார்த்தால் ஒற்றுமை வெளியாகும் பிறகு மனத்துன்ப மற்றதாகும்.

(கு-ரை.) ஒருவஸ்துவினை எச்சிலென்று நீக்கில் எச்சிலில்லாத என்றில்விருப்பமுண்டாம், ஆகவேஒன்றில் விருப்பும்ஒன்றில்வெறுப்பு நிகழும் அது ஏதுவாக சுகதுக்கம் விளைந்து புண்ணியபாவங்கட்குட்பட்டுச் சனனமரணங்களில் அலைதல்வேண்டிவரும், ஆகலின் உலகிலுள்ள எல்லாப்பதார்த்தங்களினிடத்தும் சமபுத்தி பாராட்டி இருவினையற்றிருக்க வேண்டுமென்பார் 'இதமகிதம்பேசாதே' என்றனர் எச்சிலுண்டாமிடத்திலேயே எச்சிலில்லாததும் உண்டாகு மென்பதனைத் தெரிந்தீரில்லை யென்பார் 'இடமறியீர்' என்றனர். ஈண்டுஎச்சிலென்றது வாய்நீரையன்று நிற்கிரவ்ஷடவஸ்துக்களை.

எத்தனைபேர் நட்டகுழி யெத்தனைபேர் தொட்டமுலை
யெத்தனைபேர் பற்றி யிழுத்தவிதழ்—நித்தநித்தம்
பொய்யடாபேசும் புவியின்மட மாதரைவிட்
டுய்யடா வுய்யடா வுய்.

பொ-ரை.) எத்தனைபேர் தங்கள் தங்கள்கோசத்தினைநாட்டியபள்ளம், எத்தனைபேர் தங்கள் தங்கள் கரங்களினால் விடித்த தனம், எத்தனைபேர் தங்கள் தங்கள் பற்களால் கடித்து இழுத்த கீழுதடு, ஆகையால் அடா தினந்தோறும் பொய்யினையே பேசுகின்ற உலகிலுள்ள அறியாமையுடன் கூட்டிய மாதர்களினின்று நீங்கிப் பிழையேடா பிழையேடா பிழை.

(கு-ரை.) ஈண்டு மாதரை எனப் பொதுப்படக்கூறினும் வேசிகளையே குறித்ததொன்றும்- நாளொன்றுக்குப் பர்பல ஆடவர்களையணைந்து அவ்வர்கட்குத் தக்கபடி அவரவர்கள் நம்புமாறு உண்மை

யான வார்த்தைகளைப் போலவே இதமாகப் பொய்பேசிப் பொருளை க்கவர்ந்துகொண்டு அவர்களை விலகிவிடுவார்களாகலின் அத்தகை யர் கூட்டுறவு எக்காதேத்தும் கூடாதென்பார் 'உய்யடா' வெனப் பல தரம் வற்புறுத்திகூறினர்.

இருப்பதுபொய் போவதுமெய் யென்றெண்ணி நெஞ்சே
யொருத்தருக்கும் தீங்கினையுன் னாதே—பருத்ததொந்தி
நம்மதென்று நாமிருக்க நாய்நரிகள் பேய்க் கழுகு
தம்மதென்று தானிருக்குந் தான்.

(பொ - ரை.) மனமே! உலகிலிருப்பது பொய் இறந்துபோவது மெய் என்று ஆலோசித்து ஒருவர்க்காயினும் கெடுதிணைநினையாதே, பெருத்தவயிறானது நம்முடையதென்று நாமிருக்க, நாயும் நரியும் பேயும் கழுகும் தம்முடையதென்று தாமிருக்கும்.

(கு - ரை.) உலகின்கண்ணே யிறந்துவிடுவது பிரத்தியட்ச சாட்சியாகலின் அதனையடிக்கடி நினைந்துகொண்டு எவர்பாலும் தீங்கு செய்யாதிருந்தால் நாயாதிகளுக்கு இரையாகாமல் மோட்சமடையலாம், தீங்குசெய்யின் நாயாதிகட்கு இரையாகவேண்டுவது நிச்சய மென்றனர்,

எத்தொழிலைச் செய்தாலு மேதவத்தை பட்டாலு
முத்தர்மனமிருக்கு மோனத்தே—வித்தகமாய்
காதிவிளை யாடியிரு கைவீசி வந்தாலுந்
தாதிமன நீர்க்குடத்தே தான்.

(பொ-ரை.) அதிஉல்லாசமாக அசைந்து விளையாடிக்கொண்டு இரண்டுகைகளை வீசிவரினும் பெண்ணின் மனமானது தன்தலையின் மீதுள்ள நீர்க்குடத்தின் கண்ணதேயாகும். அதுபோல எந்தத்தொழி

லைச் செய்யினும் எந்த அவஸ்தையனுபவித்தாலும் முத்தர்களுடைய மனமானது மவுனநிலையிலேயேயிருக்கும்.

(கு - ரை.) பெரியோர்கள் உலகத்திலே ஆடுவாரோடாடியும், பாடுவாரோடும்பாடியும், பெண்டு பிள்ளை சுற்றத்தினர் மத்தியிலிருந்தும் பகிர்முக விவகாரங்கள் எவ்வளவுசெய்யினும் அந்தர்முகத்தியானத்தினை ஒரு இம்மிநேரமும்விட்டு நீங்கார், இதுவே சிவராஜயோக நிலையாம்.

மாலைப் பொழுதினறு மஞ்சளரைத்தே குளித்து
வேலை மினுக்கிட்டு விழித்திருந்து—சூலாகிப்
பெற்ருள் வளர்த்தாள் பெயரிட்டாள் பெற்றபிள்ளை
பித்தாறு லென்செய்வாள் பின்.

(பொ-ரை.) மாலைக்காலத்திலே மணத்துடன்கூடிய மஞ்சளினையரைத்துப் பூளக்குளித்து வேலைமெனக்கிட்டுக் கண்விழித்திருந்து கர்ப்பமாகி (ஒருபிள்ளையினை) யீன்றெடுத்தாள் பெயருமிட்டாள் அங்ஙனம் பெற்றபிள்ளையபனது பித்தனுகிவிட்டால் பிறகு அவள் யாதுசெய்வாள்.

(கு - யை.) உலகில் ஒருவன் ஒருகாரியத்தைப் பலவகையாக வெகு பிரயாசையுடன் முடிக்க எத்தனிக்கினும் அது அவனிஷ்டப்படி வாராது வேறுவிதமாக முடியினுமுடியும். ஆகலின் அவரவர்கள் கன்மத்திற்குத் தக்கபடி திருவருள் கூட்டிவைக்குமே யல்லது தற் சுதந்தரத்தாலொன்றும் நடவாதென்பதாம்.

பட்டினத்துப்பிள்ளையார் பாடலும்
ஞானார்த்த தத்வதீபவுரையும்
முற்றுப்பெற்றது.

## உடற்கூற்றுவண்ணம்.

தனதனதான தனதனதான
தந்ததனந்தன தந்ததனந்த
தனனதன்ந்த தனனதனந்த
தானனதானன தானனதந்த—
தந்ததனதான தனதானனு

ஒருமடமாது மொருவனுமாகி யின்பசுகந்தரு
மன்பு பொருந்தி யுணர்வுகலங்கி யொழுகியவிந்து
ஆறுசுரோணித மீதுகலந்து—

(பொ-ரை.) ஒரு அழகியபெண்ணும், ஒரு வாலிபனும் கூடி இன்பமாகிய சுகத்தினைக்கொடுத்தற் கேதுவாகிய அன்பினையடைந்து (கலவியில்) அவசமாகியபோது வெளிப்பட்ட சுக்கிலம் பெண்ணிடத்துதித்த சுரோணிதத்டன் கலந்து

பனியிலொர்பாதி சிறுதுளிமாது பண்டியில்வந்துபு
குந்திரண்டு பதுமவரும்பு கமடமிதென்று
பார்வைமெய்வாய்செவி கால்கைகளென்ற—

(பொ-ரை.) பனித்துளியில் பாதித் துளி யளவாகி மாதினுடையவயிற்றிற் பிரவேசித்துத்திறட்சியாகித் தாமரைமொக்கினை நிகர்த்து ஆமைவுருவெனவாகிக் கண், உடல், வாய், காது, கால் கைகளென்று சொல்லத்தகுந்த.

உருவமுமாகி யுயிர்வளர்மாத மொன்பதுமொன் றுநி
றைந்துமடந்தை யுதரமகன்று புவியில்விழுந்து
யோகமும்வாரமு நாளுமறிந்து—

(பொ-ரை.) உருவத்தினையுமடைந்து உயிர்விருத்தியாதற்குப் பத்துமாதங்கள் பூர்த்தியாகி அம்மாதின் வயிற்றின்று வெளிவந்து பூமியில் விழுந்து (அச்சமயம் இன்ன) யோகம் இன்னவாரம் இன்ன நட்சத்திரமெனத் தேர்ந்து.

மகளிர்கள்சேனை தரவணையாடை மண்படவுந்தியு
தைந்துகவிழ்ந்து மடமயில்கொங்கை யமுதமருந்தி
யோரறிவீரறி வாகிவளர்ந்து—

(பொ-ரை.) மகளிர்கூட்டம் எணையில் வளர்த்த (இவ்வேளையிலிருந்தும்) பூமியில் தாவியும் காலையுதைத்துக்கொண்டு கவிழ்ந்து மயில்போன்ற சாயலையுடைய (தனதுதாயின) முலைப்பாலைக்குடித்து சிறிது சிறிதாக அறிவு வளர வளர்ந்து.

ஒளிநகையூர லிதழ்மடவாரு வந்துமுகந்திட
வந்துதவழ்ந்து மடியிலிருந்து மழலைமொழிந்து
வாவிருபோவென நாமம்விளம்ப—

(பொ - ரை.) பிரகாசிக்கின்ற பற்களுடன் ஊறும் உதட்டினையுடைய மாதர்வந்து மூத்தமிடத்தவழ்ந்து தாயின்மடியிலிருந்துகொண்டு குதலைவார்த்தைகளைச்சொல்லி !வா போவென இரண்டொரு சொற்களைக்கூறி;

உடைமணியடை யரைவடமாட வுண்பவர்தின்பவர்
தங்கலொடுண்டு தெருவிலிருந்து புழுதியளைந்து
தேடியபாலரொ டோடிநடந்து—
அஞ்சுவயதாகி விளையாடியே—

(பொ - ரை.) உடுக்கத்தகுந்த ஆபரணங்களும் வஸ்திரத்துடன் அரைஞாண் அசைய (அன்னம்) சாப்பிடுவொருடனும் (பலகாரம்) தின்பவருடனும் புசித்து வீதிக்குவந்து புழுதியினைப் பூசிக்கொண்டு நாடிவரும் மற்றையபிள்ளைகளுடன் ஓடி நடந்து ஐந்துவயதுவரையில் இங்ஙனம் விளையாடியே;

உயர்தருஞான குருவுபதேச முந்தமிழின்கலை
யுங்கரைகண்டு வளர்பிறையென்று பலரும்விளம்ப
வாழ்வதினாறு பிராயமும்வந்து—

(பொ-ரை.) உயர்வாகிய ஞானாசிரியரிடம் உபதேசமும், தமிழ்ச் சாத்திரங்களில் அளவுதெரிந்து வளர்பிறையென்றுயாரும்சொல்லப் பதினாறு வயதடைந்து;

மயிர்முடிகோதி யறுபதநீல வண்டிமிர்தண்டொடை
கொண்டைபுனைந்து மணிபொனிலங்கு பணிகளணிந்து
மாகதர்போகதர் கூடிவணங்க—

(பொ-ரை.) தலைமயிர் கோதிமுடித்து, வண்டுகள்தங்கிப் பாடும் குளிர்ச்சிபொருந்திய மாலைகளைத் தலையிற்றரித்து இரத்தினங்களிழைத்த பொன்னாற்செய்த ஆபரணங்கள்பூண்டு மாகதர் போகதர் ஆகிய பாடகர்கள்சேர்ந்து புகழ்ந்து வணங்க;

மதனசொரூப னிவனெனமோக மங்கையர்கண்டும
ருண்டுதிரண்டு வரிவிழிகொண்டு சுழியவெறிந்து
மாமயில்போலவர் போவதுகண்டு—

(பொ-ரை.) மன்மதன் போன்ற வடிவனிவனென்ன காமமாதர்கள்பார்த்து மருமருண்டுகூடி வண்டுகளையொத்த விழிகளினால் மருட்ட அழகிய அவர்மயிலன்ன சாயலுடன் நடப்பதனைப்பார்த்து;

மனதுபொறும லவர்பிறகோடி மங்கலசெங்கல
சந்திகழ்கொங்கை மருவமயங்கி யிதழமுதுண்டு
தேடியமாமுதல் சேரவழங்கி—

(பொ-ரை) மனந்தாளாது அம்மாதர்பின்னாலோடிமங்கலமான செவ்விய கலசத்தினையொத்த தனங்களையணைத்து மயங்கி அதரபாணம் பண்ணித் தாம் சம்பாதித்த செல்வமுழுவதையும் மொருங்கே கொடுத்து;

ஒருமுதலாகி முதுபொருளாயி ருந்ததனங்களும்
வம்பிலிழந்து மதனசுகந்த விதனமிதென்று
வாலிபகோலமும் வேறுபிரிந்து—

(பொ-ரை.) ஒருமுதற் பொருளாகவும் அபாரமாகவுமிருந்தசெல்வமுழுவதும் வீணகச்செலவழித்து மதனலீலை விசனத்திற்கேதுவென்று வாலிப்பருவத்தினின்றும வேறுபட்டு:

வளமையுமாறி யிளமையுமாறி வன்பல்விழுந்திரு
கண்களிருண்டு வயதுமுதிர்ந்து நரைதிரைவந்து
வாதவிரோத குரோதமடைந்து—
செங்கையினிலோர் தடியுமாகியே—

(பொ-ரை.) அழகுகெட்டு, இளமைகெட்டு, வலியபற்கள் உதிர்ந்து, இரண்டு நேத்திரங்களும் மறைந்து, மூப்படைந்து நரையும் திரையும் அதிகப்பட வாதநோயும். யாவரையும் விரோதிக்கும்கோபமும் பெற்று செவ்வியகரத்தினிடத்தில் ஒருதடி பிடித்துமே.

வருவதுபோவ தொருமுதுகூனு மந்தியெனும்படி
குந்திநடந்து மதியுமழிந்து செவிதிமிர்வந்து
வாயறியாமல் விடாமின் மொழிந்து—

(பொ - ரை.) ஒருமுதுகு கூனுடன் வருவதும்போவதுமாகி குரங்கினைப்போலக் குந்திக்குந்திநடந்து அறிவுகெட்டுச் செவிடுபட்டு இன்னது சொல்லியதென்றறியாமல் எந்நேரமும்பேசி:

துயில்வருநேர மிருமல்பொருது தொண்டையுநெஞ்சுமு
லர்ந்துவறண்டு துகிலுமிழந்து சுணையுமகிழ்ந்து
தோகையர்பாலர்கள் கோரணிகொண்டு—

(பொ-ரை.) தூங்குகின்ற சமயத்தில் இருமல் சகிக்முடியாக மல் தொண்டையும் மார்பும் உலர்ந்து வறண்டு இடுப்பிலுள்ள வஸ்திரம் நழுவச் சுரணையின்றி மாதரும் பிள்ளைகளும் கோளாறு செய்யப் பெற்று;

கலியுகமீதி லிவர்மரியாதை கண்டிடுமென்பவர்
சஞ்சலமிஞ்ச கலகலவென்று மலசலம்வந்து
கால்வழி மேல்வழி சாரநடந்து—

(பொ-ரை.) இக்கலியிலே இவர் தன்மையினைப் பாருமெனச் சொல்பவர்கட்குத் துன்பமதிகரிக்கக் கலகல என மலமும் சலமும் பெருகிக் கால்வழியாகவும் தேகமேலும் பொருந்த வழிந்து;

தெளிவுமிராம லுரைதடுமாறி சிந்தையுநெஞ்சமு
லைந்துமருண்டு திடமுமுலைந்து மிகவுமலைந்து
தேறிநலாதர வேதனநொந்து—

(பொ-ரை.) மனத்தெளிவின்றிக் குளறுபடிவார்த்தையடைந்து மனமும் எண்ணமும் அலைந்து நல்ல ஆதரவு (இக்காலத்திலது மில்லையென) வருந்தி,

மறையவன்வேத றெழுதியவாறு வந்ததுகண்டமு
மென்றுதெளிந்து இனியெனகண்டமினி யென தொந்த
மேதினிவாழ்வுநி லாதினி நின்ற—

(பொ-ரை.) வேதங்களுக்குரிய பிரமன் தலையில் எழுதியவிதி நெருங்கிவிட்டது, இனி மரணகண்டமெனத் தெரிந்து இதைக்காட்டிலும் வேறு கண்டமேது இனியெனச் சம்பந்தமுளது, இனி உலக வாழ்வு நில்லாது பாக்கியாகவிருக்கும்:

கடன்முறைபேசு மெனவுறைநாவு றங்கிவிழுந்துகை
கோண்டுமொழிந்து கடைவழிகஞ்சி யொழிகிடவந்து
பூதமுநாலுசு வாசமுநின்று—
நெஞ்சுதடுமாறி வருநேரமே—

(பொ-ரை.) கடன்முதலியவற்றைப்பற்றி ஏதாவது ஏற்பாடு செய்யவேண்டுமெனின் பேசுவீரென்று சொல்லிக்கொண்டிருந்த நாவானது குளறி யிழுத்துக்கொள்ள, கைகளினாலே சாடைகாட்டி கிரியில்வார்க்கும் கஞ்சி பக்கங்களின் ஒழுகிவிட பஞ்சபூதங்களும் விடுவன்ற பிராணவாயுவும் குறைய மனத்தடுமாற்ற முண்டானகாலத்தே;

வளர்பிறைபோல வெயிறுமுரோம முஞ்சடையுஞ்சிறு
குஞ்சியும் விஞ்ச மனதுமிருண்ட வடிவுமிலங்க
மாமலைபோல்யம தூதர்கள்வந்து—

பொ - ரை- வளர்கின்ற சந்திரனது காலங்களைப்போலப் பற்களும் மயிரும் சடையும்சிறுகுடுமியும்காண கடினமனதும் இருண்ட உருவமும் தோன்ற பெரியமலையினைப்போல யமதூதுவர்கள் வந்து

வலைகொடுவீசி யுயிர்கொடுபோக மைந்தரு ம வநது
குனிந்தழ நொந்து மடியில்விழுந்து மனைவிபுலம்ப
மாழ்கின ரேயிவர் காலமறிந்து—

பொ - ரை. வலையினைவிசிறி உயிரைப்பிடித்துக் கொண்டு போகவே புத்திரரும் மனைவியும் ஓடிவந்து துக்கப்பட்டு வருத்தமாக மடிமேல் விழுந்து இறந்து விட்டனரே யென;

பழையவர்காணு மெனுமயலார்கள் பஞ்சுபறந்திட
நின்றவர்பந்த ரிடுமெனவந்து பறைமிடமுழங்க
மேவிணம்வேக விசாரியுமென்று—

பொ - ரை இக்காலத்தினைக்கேட்டு இவர் மிகவயோதிகரென நினைத்து அயலார்கள் உடனே யோடிவந்து பந்தல் முதலிய இடச் செய்து மேளமுதலிய அடிப்பித்துப் பிணத்தினைக் கொண்டுபோக விசாரியுங்களென்று;

பலரையுமேவி முதியவர்தாமி ருந்தசவங்கழு
வுஞ்சிலரென்று பணிதுகில்தொங்கல் களபமணிந்து
பாவகமேசெய்து நாறுமுடம்பை—

பொ - ரை. பலரையு மனுப்பிக்கேட்டுப் பெரியார் சிலரைக் கொண்டு பிணத்தினை யலம்பச்செய்து ஆபரணம், வஸ்திரம். மாலை, வாசனை தரித்துத்தோற்றமாகச்செய்து துர்வாசனையுடையதேகத்தை

வரிசைகெடாம லெடுமெனவோடி வந்திளமைந்தர்
குனிந்துசுமந்து கடுகிநடந்து சுடலை யடைந்து
மானிடவாழ்வென வாழ்வெனநொந்து—

பொ-ரை. கிரமமாகத் தூக்குமெனயாவரும் ஓடிவந்து இளமையான பிள்ளைகள் குனிந்து தாங்கிச் சீக்கிரம் நடந்த சுடுகாட்டை நெருங்கி இவ்வளவுதானோ மனிதவாழ்வென வருந்தி,

விறகிடமூடி யழல்கொடுபோட வெந்துவிழுந்து மு
றிந்துநிணங்க ளுருகியெலும்பு கருகியடங்கி
யோர்பிடிநீறுமி லாதவுடம்பை—
நம்புமடியேனை யினியாளுமே.

பொ-ரை. விறகு அடுக்கிமூடி நெருப்பு மூட்டிவிட்ட பிணம் வெந்து விழுந்து முறிந்து கொழுப்பு உருகி எலும்புகருத்துத் தீயடங்கி ஒரு கைப்பிடிசாம்பலுக்கு ஆகாத தேகத்தினை நம்பிகிடக்கின்ற அடியேனை ஆட்கொள்ளவேண்டும்.

கு-ரை. பிறப்பு, பாலியம், யவ்வனம், மூப்பு, மரணம் முதலிய நிச்சயமாகலினாலும், பிரத்தியட்ச மாகலினாலும், இத்தகைய அவஸ்தைகள் இனி யுண்டாகாதபடி இப்பிறப்பிலேயே உண்மை விசாரித்து திருவருளினைத் தேர்ந்து பெருமானுடன் இரண்டறக் கலந்து வாழும் பாக்கியத்தை யடையவேண்டியே யொழிய இவ்வுடலினை நம்பி வாழுதல் பிரயோசன மில்லையென்று நம்புமடியேனை யினியாளுமே என்றனர்.

பட்டிணத்துப்பிள்ளையார் உடற்கூற்றுவண்ணமும்
ஞானார்த்த தத்துவதீபவுரையும்
முற்றியது.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பட்டினத்துப்பிள்ளையார்

# அருட்புலம்பலும்

## ஞானார்த்ததீபவுரையும்.

### முதல்வன் முறையீடு.

---

(கன்னிவனநாதா கன்னிவனநாதா)

(பொ-ரை) கன்னிவனமென்று சொல்லப்படுகின்ற மதுரைமாநகரில் எழுந்தருளியுள்ள சிவபெருமானே!

(கு-ரை) பாண்டிநாட்டு மலயத்துவஜ பாண்டியற்கும் காஞ்சனமாலைக்கும் பார்வதி புத்திரியாக அவதாரம் செய்து தனது கன்னிப்பருவத்தே தான் அரசாட்சிசெய்த நாடானதால் கன்னிநாடு என மதுரைக்கு ஒரு பெயராயது.

மூலமறியேன் முடியுமுடிவறியேன்
ஞாலத்துட்பட்டதுயர் நாடநடக்குதடா.

(பொ-ரை) உற்பத்தியறியேன், அவ்வுற்பத்தி யர்தமாகும் தீர்மானமறியேன், உலகத்தில் நேர்ந்த துன்பம் எனைச்சார நடந்துவருகிறது.

(கு - ரை) வினைபுற்பத்திக்கும் அவ்வினையைப் போக்கடித்துக் கொள்வதற்கும் தக்க விசாரம்செய்து தெரிந்துகொள்ளாததால் அவ் வினையா லனுபவிக்கவேண்டிய துன்பம் பீடிக்கிறதென்பதாம்.

அறியாமையாமலத்தா லறிவுமுதற்கெட்டனடா
பிரியாவினைப்பயனாற் பித்துப்பிடித்தனடா.

(பொ-ரை.) அறியாமையினைச் செய்கின்ற மலத்தினால் எனது அறிவு மயங்கினேன், தேகமுள்ளளவும் பிரிதற்கேலாத வினையினால் பயித்தியங் கொண்டவன்போலாயினேன்.

(கு - ரை.) ஆன்மாக்களுக்கு அறியாமையினைச் செய்வது ஆணவவினை, பிரியாதிருப்பது பிராரத்துவவினை, ஆணவமலத்தினைத் திருவருளைக்கொண்டு நீக்கிக்கொள்ளினும், பிராரத்துவம் அனுபவித்தே தீரவேண்டுமாகலால் இதனைப் 'பிரியாவினை' என்றனர். (2)

தனுவாதியநான்குந் தானாய்மயங்கினண்டா
மனுவாதிசத்தி வலையிலகப்பட்டனடா.

(பொ-ரை.) தேகமுதலாகச் சொல்லப்பட்ட நான்கினிலும் அம்மயமாகவே யிருந்து மயங்கினேன், முதன்மையான திரோதான சத்தியமாகிய வலையில் அகப்பட்டேன்.

(கு - ரை.) தனுவாதியான-தேகம், கரணம், புவனம், போகம் ஆன்மா இவற்றிற் கட்டுப்பட்டு மயங்கி இவற்றிற்கு அன்னியமாகத் தானிருப்பதாகத் தெரிந்துகொள்ளா திருத்தலின் 'தானாய் மயங்கி னேன்' என்றனர். உண்மையினை விசாரிக்கவொட்டாது அடிக்கடி மறைவு உண்டாவது திரோதானசத்தியாலாகலின் 'சத்திவலையி லக ப்பட்டேன்' என்றனர்.

மாமாயையென்னும் வனத்திலலைகிறண்டா
தாமாயுலகனைத்துந் தானுகலங்கிறண்டா.

(பொ - ரை.) பெரியமாயை யென்று சொல்லப்படுகின்ற காட்டில் அலைகின்றேன். தாமாகப் பிரபஞ்சத்தில் மனக்கலக்கமுற்றிருக்கின்றேன்;

(கு - ரை.) உலக மனைத்தும் மாயாகாரிப்பாடாகலின் அக்காரியத்திற் சிக்குண்டார் அம்மாயையைக் கடத்தல் அசாத்தியமாதலின் உலகினை வனமென்றனர். (4)

(கன்னிவனநாதா கன்னிவனநாதா)

(பொ - ரை,) கன்னிவனமென்று சொல்லப்படுகிற மதுரையம்பெருமானே.

மண்ணாசை பட்டேனை மண்ணுண்டுபோட்டகடா
பொன்னாசைபெண்ணாசை போகேனேயென்குதே.

(பொ - ரை.) பூமியினிடத்தில் ஆசைவைத்திருந்த என்னை அப்பூமியே சாப்பிட்டுவிட்டது. பொன்னலாகிய விருப்பமும் பெண்ணலாகிய விருப்பமும் நீங்கக்கூடவில்லை.

(கு - ரை.) மண்ணிலதிக விருப்பத்தை வைத்திருத்தலின் அவ்வுடல் மூவகைச் சித்தியிலொன்றை யடையாமல் மண்ணில் புதைக்கும்படியான தன்மையை யடைகிறது, மற்றைய பொன்மோகமும் பெண்மோகமும் தேகமுள்ளளவும் தாக்குமென்பதாம். (5)

மக்கள் சுற்றத்தாசை மறக்கேனேயென்குதே
இக்காசாமாசையது தீரேனேயென்குதே.

(பொ - ரை) புத்திரரிடத்தும், உறவினரிடத்தும் வைத்துள்ள ஆசையானது மறக்கக்கூடவில்லை, திக்கனைத்தையும் அரசாட்சி செய்யும்படியான ஆசையானது நீங்கினதில்லை.

(கு - ரை.) 'கடந்துளோர்களும் கடப்பரோமக்கள்மேல் காதல்' என்றதானும், 'கடன்மீதிலேஆனைசெலவே நினைவர்' என்றதானும் புத்திரர்மேல் விருப்பமும், அரசாட்சியில் விருப்பமும் நீங்காதென்பதாம். (6)

வித்தைகற்குமாசையது விட்டொழிகியனென்குதே
சித்துகற்குமாசை சிதையேனெயென்குதே.

(பொ - ரை) கல்வியில் பயிலும் விருப்பம் நீங்குவதில்லை. சித்திகளை யுடையயாசை யொழிவதில்லை.

(கு - ரை) கல்விக்கு அளவில்லையாகலின் கற்குந்தோறும் மேலும் மேலும் விருத்தியடைதற்கே முயற்சியுண்டாம். ஆன்மார்த்தமாகப் பிரயோசனமில்லையாயினும் உலகத்தை மிரட்டுதற்கு உபயோகமாகலின் சித்தியிலவாவதிகரிக்கிற தென்பதாம் 'அஷ்டமா சித்தியுமென் செய, என்றனர் தாயுமானவர். (8)

மந்திரத்திலாசை மறக்கேனெயென்குதே
சுந்திரத்திலாசை துறக்கேலையென்குதே.

(பொ - ரை.) மந்திரத்தில் வைத்துள்ள விருப்பம் மறப்பதில்லை; அழகில் வைத்துள்ள ஆசை நீங்குவதில்லை

(கு - ரை.) பஞ்சாட்சர முதலிய மகாமந்திரங்களைச் செபிக்க வேண்டிய தின்றியமையாத கடமையேயாயினும், திருவருளைப் பூரணமா யுடைதற்குச் செபிக்காமல் யாதாமொரு உலகசித்தியடைய

வேண்டுமெனச் செபித்தல் கூடா தாகலின் 'மறக்கேனே' என்றனர்

கட்டுவர்க்கத்தாசை கழலேனேயென்குதே
செட்டுதனிலாசை சிதையேனே யென்குதே.

(பொ - ரை) பலவகையான ஆடைகளில் ஆசைநீங்குதலில்லை திரவிய சிக்கனத்தில் ஆசைகுறைதலில்லை.

(கு - ரை:) குளிர் முதலியவற்றிற்கு அவசியமாக ஒரு ஆடையுடனிருக்கத் திருப்திபடையாமல் மேலும் மேலும் சித்திரவிசித்திரமானபீதாம்பர முதலிய உடைகளிலும், முக்கியமாகச் செய்யவேண்டிய தருமங்களிலும் பொருளைச்செலவிடால் சேகரித்துவைப்பதிலும் ஆசைநீங்கவில்லை யென்பதாம். (9)

மாற்றுஞ்சலவை மறக்கேனேயென்குதே
சோற்றுக்குழியின்னுந் தூரேனேயென்குதே.

(பொ - ரை) அடிக்கடிமாற்றிச் சலவைவஸ்திரங்களைத் தரிப்பதில் மறப்புண்டாவதில்லை, சோற்றினை யடைதற்கேதுவாகவுள்ள வயிறாகிய பள்ளம் இன்னம் அடையவில்லை.

(கு - ரை) ஒருவஸ்திரத்தினையே தோய்த்துக் கட்டிக்கொள்ள நினையாது, அடிக்கடி சலவைத்துணிகளையே அணிய விரும்புவதினால் 'மறக்கேன்' எனவும், உண்ணுந்தோறும் பசியெடுத்துக்கொண்டிருத்தலினால் (தூரேனே) எனவும் கூறினர். (10)

(கன்னிவனநாதா கன்னிவனநாதா)

(பொன் - ரை) கன்னிவனமென்று சொல்லப்படுகிற மதுரையில் எழுந்தருளியுள்ள சிவபெருமானே !

ஐந்துபுலனு மடங்கேனேயென்குதே
சிந்தைதவிக்கிறதுந் தேறேனேயென்குதே.

(பொ - ரை) பஞ்சேந்திரிய வுணர்ச்சி யடங்கினபாடில்லை, மன முமொடுங்கின பாடில்லை.

(கு - ரை.) சப்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் ஐம் புலன்களும்தாம்செய்யும் சேஷ்டைகளினின்றும் நீங்கினாலன்றி மன வியாபாரம் குறையாதென்பார் 'அடங்கேனே' தேறேனே என்றனர்

காமக்குரோதங் கடக்கேனே யென்குதே
நாமேபரசென்று நாடோறும் மெண்ணுதே.

(பொ - ரை) காமமும் கோபமும்விட்டு நீங்குவதில்லை, நாமே தலைமைபெற்றிருக்கவேண்டுமென எந்நாளும்தோன்றுகிறது.

(கு - ரை) காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற் சரியம் ஆகிய இவைகள் நீங்கினாலன்றி அடியார்க்கடிமையாதல் இல் லை. அங்ஙனம் ஆகாதிருக்கவே தலைமைவாய்ந்திருக்கவேண்டுமென் கிற இருமாப்புண்டாம்என்பார். 'கடக்கேனே' எனவும் 'எண்ணுதே' எனவும் கூறினர். (12)

அச்சமாங்கார மடங்கேனேயென்குதே
கெச்சுமின்னுமானங் கழலேனேயென்குதே.

(பொ - ரை) அச்சமும், அசங்காரமும் அடங்கினதில்லை, உலக த்தினை வெறுத்தும் பின்னும் மனமானது நீங்கினதில்லை.

(கு - ரை) உலகர் தாட்சண்ணியத்தின்பொருட்டு அச்சங் கொள்ளுதலும், சருவித்திருத்தலும் சன்மார்க்க நடைக்கு இடையூ

னுதலாலும், மானத்தைவிட்டாலன்றிப் பிரபஞ்சவாசை நீங்காதாதலி னாலும் 'அடங்கேனே' எனவும் 'கழலுவேனே' எனவுங் கூறினர்.

நீர்க்குமிழியாமுடலை நித்தியமாயெண்ணுதே
ஆர்க்குமுயராசை யழியேனே யென்குதே.

(பொ - ரை.) நீரினிடத்தே தோன்றி உடனே மாறும் குமிழி யையொத்த தேகத்தை நித்தியமெனவும், எத்தகையினர்க்கும் விருத் தியாகின்ற அவர் நீங்காமலு மிருந்துகொண்டிருக்கிறது.

(கு - ரை) பசுபாச விசாரணைதக்கபடி சாஸ்திரமூலமாக விசா ரியாத குறைவினால் உடல் நித்தியமெனவும், அது சம்பந்தமான ஆசை நீங்காமலும் இருக்க நினைவு விளைகிறதென்பதாம். (14)

கண்ணுக்குக்கண்ணெதிரே கட்டையில் வேகக்கண்டும்
எண்ணுந்திரமா யிருப்போமென் றெண்ணுதே.

(பொ - ரை) பிரத்தியட்சமாக உடலானது கட்டையின்மே லிருந்து எரிவதனைக் கண்டும் நெடுநாளைக்கிருப்போ மெனவே எண் ணம் விளைகின்றது.

(குரை - ரை.) நித்தியம் தன்கண்முன்னேபலவயதுடன் கூடிய வுடல்கள் சுடுகாட்டில் வேகக்கண்டும் அங்ஙனம் தனக்கும் எண்ணுத நேரத்தில் உண்டாகுமென்பதை யாலோசிப்பதில்லை. (15)

அநித்தியத்தை நித்தியமென் றுதரவாமெண்ணுதே
தனித்திருக்கேனென்குதே தனைமறக்கே னென்குதே.

(பொ - ரை) அனித்தியமாக வுள்ளவற்றை நித்தியமாக விரு க்கு மென்றெண்ணி யவற்றினிடத்தில் ஆசையுண்டாகிறது. ஏகாந்த மாகவிருக்கவும் தன்னை மறந்திருக்கவும் கூடவில்லை.

(கு - ரை) உலகம் மாயாகாரியமாகலினாலும் அக்காரியமொரு காலத்து மாறிவிடுமாகலினாலும் அத்தகையவற்றிலவா வைத்தல் அப்பிரயோசன மென்பார் 'ஆசாவாபெண்ணுதே' என்றனர். தனித்திருத்தல் பிரபஞ்சபோகம் அனுபவியா திருத்தலாவது தனைமறதலாவது சிவராஜயோக நிஷ்டை கூடியிருத்தல். (16)

நரகக்குழியுமின்னு நான்புசிப்பேனென்றதே
உரகப்படத்தல்குலுனைக்கெடுப்பேனென்றதே

(பொ - ரை) நரக்குழியானது எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது. பாம்பின் படம்போன்ற நிதம்பம் தன்வசப்படுத்துகிறது.

(கு - ரை.) நரகத்திற்கேதுவான பாவத்தொழில்களே மேலும் மேலும் விளைந்துகொண்டிருக்கின்றன. மாதர் ஆசையும் நீங்கின தில்லை யென்பதாம். (17)

குரும்பைமுலையுங் குடி கெடுப்பேனென்றதே
அரும்புவிழியுமெத்த ஆவியுண்பேனென்றதே.

(பொ - ரை) தென்னங்குரும்பையொத்த தனம் மயக்குகின்றது நீலோற்பலத்தினையொத்த நேத்திரம் உயிரை விழுங்குகின்றது.

(கு - ரை.) மாதர்கள் கண்களுக்கும் தனங்களும் கண்டு மறுண்டார் மறுபடியும் அவர் மீளுதல் அசாத்தியமாகலின் 'ஆவியுண்பேன்' குடிகொடுப்போன்' என்கிறதென்றனர். (18)

மாதருருக்கொண்டு மறலிவஞ்சமெண்ணுதே
ஆதாரவுமற்றிங் காரக்காயுருகிறண்டா.

(பொ - ரை.) இயமனானவன் பெண்ணுருவாய்ந்து வஞ்சிக்கின்றது. அதனால் யாதொரு ஆதாரமில்லாமல் நெருப்பிலிட்ட அரக்கினைப்போல வுருகுகின்றேன்.

(கு - ரை.) "வீடுகள் தோறும் பெண்களைப்படைத்து எமனை யென்செயப் படைத்தாய்" என்றபடி எமனே பெண்களாய் மாறி யுள்ளாரெனவும் அவரினின்றும் தப்பித்துக்கொள்ளுதற்கேற்ற சிவ சாதனமான ஆதரவொன்றும் தேடிக்கொள்ளவில்லை யெனவும் கூறினர்- (19)

கந்தனையீன்றருளுங் கன்னிவனநாதா
எந்தவிதத்திலுனை யெறிப்படருவண்டா.

(பொ - ரை) கந்தப் பெருமானை பெற்றெடுத்த மனோன்மணிப்பெரு மானே எந்தவகையினால் தேவரீர் திருவடியினை யடைந்து வாழு வேன்.

(கு - ரை.) திருவடியினையடைதற்கேற்ற சிவசாதனங்களிலொ ன்றைக் கைக்கொண்டு இதுகாறும் பழகியறியேனாகலின் எங்ஙனம் ஏறிப்படருவேன் என்றனர் (20)

புல்லாகிப்பூண்டாய்ப் புலர்ந்தநாள்போதாதோ
கல்லாய்மரமாய்க் கிழிந்தநாள்போதாதோ.

(பொ - ரை.) புல்லாகியும், பூண்டாகியுமிருந்து பலநாள் கழிந்த தும் கல்லாய் மரமாயுமிருந்து பலநாள் கழிந்ததும் போதாதோ.

(கு - ரை.) கன்மத்திற்குத் தகுந்தபடி எடுத்த சனனங்களில் சிலகாலம் ஓரறிவு மீராகி வாழ்ந்ததுமுண்டென்பதாம். (21)

கிரியாய்க்கீடமாய்க் கெட்டநாள்போதாதோ
நீரியாயூர்வனமாய் நின்றநாள்போதாதோ

(பொ - ரை.) கீரிப்பிள்ளையாகியும் புழுவாகியும் அறிவகெட்டிருந்த நாள்களும், நீர்வாழ்வனவாயும், ஊர்கின்ற பாம்பு முதலிய செந்துக்களாயும் வாழ்ந்தநாளும் போதாதோ,

(கு - குரை.) எடுத்த அளவிலாத சனனங்களுள் மூவறியுயிரான செந்துக்களாகச் சிலகாலம் வாழ்ந்தது முண்டென்பதாம் (22)

பூதமொடு தேவருமாய்ப் போனநாள் போதாதோ.
வேதனைசெய் தானவராய் வீழ்ந்தநாள் போதாதோ.

(பொ - ரை) பூதங்களுடனே தேவர்களுமாகி வாழ்ந்தநாள்களுடன், துன்பத்தினைச் செய்கின்ற அசுரர்களாய் தங்கிய நாள்கள் போதாதோ.

(கு - ரை.) உயர்ந்த பிரபுக்களுள் ஐயறிவுடன் கூடிய சென்மங்களாய்ப் பிறந்து வாழ்ந்தநாள்களும் பலவுண்டென்பதாம். (23)

அன்னைவயிற்றி லழிந்தநாள் போதாதோ
மன்னவனாய்வாழ்ந்து மரித்தநாள் போதாதோ.

(பொ-ரை.) தாயின்வயிற்றிலுற்பத்தியாகி யழிந்தநாள்களுடன் அரசனாகவாழ்ந்து இறந்த நாள்கள் போதாதோ.

(கு-ரை) கற்பத்திலுற்பத்தியாகி வெளிவருவதற்கு முந்தியுள்ள பத்துமாதங்களுள் ஒருநாளிலே இறந்தும், பிறந்தபின் அரசனாயிருக்கும் வாழ்வைபெற்றும் மறணமடைதற்கேதுவுண்டென்பதாம்.

தாயாகித்தாரமாய்த் தாழ்ந்தநாள் போதாதோ
சேயாய்ப்புருடனுமாய்ச் சென்றநாள் போதாதோ.

(பொ - ரை) ஒருவருக்குத் தாயாகியும், ஒருவனுக்கு மனைவியாகியும் தங்கிவாழ்ந்த நாள்களுடன் ஒருவனுக்குக் குழந்தையாம் ஒருவனுக்குப் புருஷனாயும் தங்கின நாள்போதாதோ.

(கு - ரை.) எடுசதப் பிறப்புக்களில் கன்மத்திற் தக்கபடி ஆணாயும் பெண்ணாகியும் மாறிமாறிப் பிறந்தநாள்களு முண்டென்பதாம்

நோயுண்ணவேமெலிந்து நொந்தநாள்போதாதோ
பேயுண்ணப்பேயாய்ப் பிறந்தநாள்போதாதோ

(பொ - ரை) பலநோய்கள் உண்டாக அதனால் மெலிவடைந்து துன்பமனுபவித்த நாள்களுடன் அறிபாமைவாய்ந்த பேயாய்ப்பிறந்த நாள்கள் போதாதோ.

(கு - ரை) எடுத்த சனனங்கள்தோறும் வந்துதாக்க அனுபவித்த பிணிகளுக்கோ அளவில்லை. யாரும் வெறுக்கத்தகுந்த பேயாய் பிறந்தது முண்டென்பதாம்- (26)

ஊனவுடல்கூன் குருடாய் யுற்றநாள் போதாதோ
ஈனப்பொசிப்பி லிளைத்தநாள் போதாதோ.

(பொ - ரை.) மாமிசவுடலில் கூனும், குருடும் அடைந்த நாளுடன் அற்ப உணவினிமித்தம் தேடியலைந்த நாள் போதாதோ.

(கு - ரை.) மனித செனனமெடுக்கத்தக்க புண்ணியம் பெற்றும் அச்சென்மங்களில் அங்கவீனமடைந்ததுடன், வயிற்றினிமித்தம் பிறரைத் தேடியலைந்து அதனால் தேகம்வாடியது முண்டென்பதாம்.

பட்டகளையும் பாதவிப்பும்போதாதோ
கெட்டநாள்கெட்டேனென்று கேளாதும்போதாதோ.

(பொ - ரை) எண்ணிலாத செனனங்களால் உண்டாகிய இளைப்பும் பாதவிப்பு முண்டானதுடன் வீணாகக் கழிந்தநாள் கழிந்துவிட்டது. இனியேனும் பிறர்வார்த்தை கேட்கவேண்டுமென்று கேளாதிருந்ததும் போதாதோ.

(கு - ரை) எடுத்த சனனங்கள் எண்ணிலவற்றுள் மொத்துண்டதனால் விளைந்த இளைப்புடன் உண்மைதேராது காலங்கழித்தபோகப் பின்னராவது உண்மையறிந்தாரை யடைந்து உண்மையைத் தெரிந்து கொள்ளவில்லை யென்பதாம். (28)

நில்லாமைக் கையமுது நின்றநாள்போதாதோ
எல்லாருமென்பார மெடுத்தநாள்போதாதோ.

(பொ - ரை) உலகம் நிலையற்றதாக விருக்கிறதேயென்று வியசனப்பட்டதுடன், என் தேகத்தைச் சனனங்கடோறும பலதாய்மார் சுமந்ததுபோதாதோ.

(கு - ரை) தேகம் இறந்துவிடுமே என்று துக்கமனுபவித்ததேயன்றி அது நிலைபெறச் செய்துகொண்டேனில்லை, ஒவ்வொரு தாய்மார்கள் கற்பத்திலு மிருந்து அவர்கட்குங் சிரமங் கொடுத்ததிலும் கணக்கில்லையாம். (29)

காமன் கணையாற் கடைபட்டல் போதாதோ
ஏமன் கரத்தா லிடியுண்டல் போதாதோ.

(பொ - ரை) மன்மதன்பாணத்தால் துன்பமடைந்ததுடன் இயமன் கையால் இடிபட்டதும்போதாதோ.

(கு - ரை) சனனந்தோறும் காமந்தகாரனாயிருந்து அந்தந்தச் சென்மங்களினும் இயமனாலுந் துன்பமடைய நேர்ந்ததென்பதாம்.

**நான்முகன்பட்டோலை நறுக்குண்டலைபோகாதோ**
**தோன்றுளபத்தானேமி தேக்குண்டல்போகாதோ.**

(பொ - ரை) நான்முகக்கடவுள் விதியேட்டினை கிழித்ததும் தேன்ததும்பும்துளபமாலையுடைய விஷ்ணுவின் ஆஞ்ஞாசக்கரத்தின் கீழலைப்புண்டது போகாதோ.

(கு-ரை.) ஒவ்வொரு சன்மத்திலும் இறக்கும்போது பிரமன் தான்விதித்திருந்த எட்டினைக் கிழித்துவிடுவான் என்பார். 'நறுக்குண்டல்' எனவும், விஷ்ணுமூர்த்தியின் இரட்சிப்பிலடங்கி யுணவுக்குத் திண்டாடின துண்டென்பார். 'தேக்குண்டல்' என்றனர். (31)

**உருத்திரனார்சங்காரத் துற்றநாள்போகாதோ**
**வருத்தமறிந்தையில்லை வாவென்றழைத்தையில்லை.**

(பொ - ரை) உருத்திரமூர்த்தியின் சங்காரத்தில் பொருந்திய நாள் போகாதோ, என்னுடைய துன்பத்தை யறிந்தாயில்லை, என்னை வாவென்று மழைத்தாயில்லை.

(கு - ரை) சிருஷ்டியிலும், திதியிலும் சங்காரத்திலும் கட்டுப்பட்டலைந்து அளவிலாத துன்பத்தினையடைந்த வென்னை யருகழைத்து அனுக்கிரகம் செய்தாயில்லையே யென்றனர். (32)

(கன்னிவனநாதா கன்னிவனநாதா)

(பொ - ரை) கன்னிவனமென்று சொல்லப்படுகிற மதுரையிலெழுந்தருளியிருக்கும் சிவபெருமானே !

**பிறப்பைத்தவிர்த்தையில்லை பின்னாகக்கொண்டையில்லை**
**இறப்பைத்தவிர்த்தையில்லை யென்னென்றகேட்டையில்லை**

(பொ - ரை.) பிறப்பினை நீக்கினுயில்லை, பின்பு ஆட்கொண்டா யில்லை, இறப்பினை நீக்கினுயில்லை, என்னவென விசாரித்தால்யிலை.

(கு - ரை.) இறப்பினின்றும் பிறப்பினின்றும் நீக்கி இனிச் ஜென்மம் வராதபடிசெய்து திருவருள்புரிந் தனுக்கிரகிக்க வேண்டு மென்பதாம். (33)

பாசமெரித்தையிலை பாதவிப்பைத்தீர்த்தையிலை
பூசியநீற்றைப் புனையென்றளித்தையிலை.

(பொ - ரை ) மலத்தினை யொழித்தாயிலை துன்பத்தினை நீக்கி னுயில்லை, அணிபத்தகுந்த விபூதியினைத் தரித்துக்கொள்ள யீந்தா யில்லை.

(கு - ரை.) ஈண்டு எரித்தாயென்றதனுல் பாசமென்றது சஞ்சி தத்தினை ஆசாரியன் ஞானக்கினியால் சஞ்சிதத்தை யெரித்தாலன் றிப் பிறப்பு நீங்கார்தாகலின் அங்ஙனம் கூறினர். விபூதியானது பவ ரோக நின்மூல அருமருந்தாகலின் 'அளித்தையிலை' என்றனர் (34)

அடிமையென்றுசொன்னயிலை யக்குமணிதந்தையிலை
விடுமுலகம்போக்கியுன்றன் வேடமளித்தையிலை.

பொ-ரை) (அடியேனை தேவரீருக்கு) அடிமையென்று சொன் னுயில்லை, உருத்திராக்கக் கண்டிகை யளித்தாயிலை, நீங்கத்தகுந்த பிரபஞ்சவாழ்க்கையினை நீங்கித்தேவரீர் திருவேடத்தினைத்தந்தாயிலை.

(கு - ரை) ஆசாரியலோகம் கொண்டுவந்து அடிமையாக்கிக் கொண்டு சிவமாங்கல்யம் தரித்துச்சிவவேடம் பொலியச்செய்யவில்லை யென்பார். 'தந்தையிலை' 'அளித்தையிலை' என்றனர். (35)

உன்னிலழைத்தையிலே யொன்றாகிக்கொண்டையிலே
நின்னடியார்கூட்டத்தி னியடைத்துவைத்தையிலே,

(பொ - ரை) தேவரீருக்குச் சமீபத்தில் அழைத்தாயிலே, இரண்டறக்கலந்து வாழச்செய்யதாயிலே. அல்லது தேவரீருடைய அடியார்கள் கூட்டத்திலொருவனாக விருக்கச்செய்தாயில்லே.

(கு - ரை.) 'உன்னிலழைத்தயிலே' என்பது சிவசொரூபத்தினையும் 'ஒன்றாகிக் கொண்டயிலே' என்பது சிவசாயுச்சியத்தினையும் குறித்தப்படியாம். அந்நிலேயடைய பக்குவமில்லேயேல் அந்நிலேயினை யடைதற்கேதுவாகிய சிவனடியார்க் கூட்டுறவினையாகிலும் செய்வாயென்பார் 'அழைத்துவைத்தையிலே' என்றார். (36)

ஓங்குபரத்து ளொளித்தவடியார்க்கடியான்
ஈங்கோரடியா னெமக்கென்றுரைத்தையிலே.

(பொ-ரை) ஓங்கிய சிவபரத்துள் பிரகாசிக்கின்ற சிவனடியார்களுக்கு அடியனாகிய இவனும் இவ்வுலகில் ஒரு அடிமைத் தேவரீருக்கு என்று திருவாய் மலர்ந்தருளினீரில்லே.

(கு-ரை) சிவசாம்பிராச்சிய திருவருளடைந்துள்ள சிவனடியார்கள் திருக்கூட்டத்திலொருவன் என்னும் பக்குவமடையவும் அப்பக்குவ மடைந்தனனெனத் தேவரீர் கடைக்கணிக்கவும் உண்டாவதென்றோ யென்பார். 'உரைத்தையிலே' என்றனர். (37)

நாமந்தரித்தையிலே நாவொழியநின்றையிலே
சேமவருளிலேனைச் சிந்தித்தழைத்தையிலே.

(பொ - ரை) சிவனடியானென்னும் பெயரை யளித்தாயில்லை நான்என்னும் ஆங்காரம் நீங்கச்செய்தாயில்லை, திருவருட்பொக்கிஷத்தை அடியேனுமனுபவிக்கும்படி நினைத்தாயில்லை.

(கு - ரை) சிவனடியான் என்னும் பெயருக்கு இலக்கானாலன்றி அகங்காரயடங்குவது கூடாதாகலினாலும் அது அடங்கினாலன்றித் திருவருளடைய முடியாததாகலினாலும், மூன்றையும் முறையே கூறிவைத்தனர். (37)

முத்தியளித்தை யில்லை மோனங்கொடுத்தையில்லை
சித்தியளித்தையில்லை சிராட்டிக்கொண்டையில்லை.

(பொ-ரை) சிவசாம்பிராச்சயம் அளித்தாயில்லை, மவுனநிலையினில் வைத்தாயில்லை, அருட்சித்தியினைக் கொடுத்தாயில்லை, அன்பனாகக்கொண்டாயில்லை.

(கு-ரை) அன்பினால் திருவருளும், திருவருளினால் மவுன நிலையும், மவுன நிலையினால் சிவசாயுச்சியமும் உண்டாகுமாகலின்முறையே கூறினர். (38)

தவிப்பைத்தவிர்த்தையில்லை தானாகிக்கொண்டையில்லை
அவிப்பரியத்தீயாமென் னாசைதவிர்த்தையில்லை.

(பொ-ரை) எனக்குண்டாயிருக்கும்! பரிதவிர்ப்பினை நீக்கினாயில்லை, சிவமாந்தன்மை செய்தாயில்லை, கெடுத்தற்கரிய நெருப்பினையொத்த அவாவினை யொழித்தாயிலை.

(கு-ரை.) தவிப்பாவது திருவருள்என்று கிடைக்குமோவென்ற பெரிய எக்கமாம் தானாகிக்கொள்ளுதலாவது அத்துவித நிலை கூடி நிற்றலாம் இவ்வளவு மடைதற்குத் தடையாயிருப்பது பிரபஞ்ச ஆசை

இவ்வாசையினின்றும் விலகுவது அசாத்தியமென்பார் ' அவிப்பரி யதீயாமென்ருசை ' என்றனர். (40)

நின்றநிலையி னிறுத்திவைத்தாயிலை
துன்றுங்கரணமொடு தொக்கழியப்பார்த்தையிலை.

(பொ-ரை.) (திருவருளைப் பற்ருகக்கொண்டு) நின்றிருக்கும் நிலையினிலேயே சலனப்படாதபடி அடியேனை நிறுத்திவைத்தாயில்லை. பொருந்திய அந்தக்கரணம் புறக்கரணங்களுடன் கூடிய கூட்டத்தினை நீக்கத் திருஷ்டித்தாயில்லை.

(கு-ரை.) ஒரேவழி திருவருள் கிட்டியகாலத்தும் பூர்வ சென்மாந்தரவினையால் மாயசாலங்கள் வந்து மயக்குமாகலின் அங்ஙன மயங்காதபடி செய்யவேண்டுமென்பார் ' வைத்தையிலை ' என்ருர் 'கரணமொடுதொக்கு ' என்றது தத்துவக்கூட்டத்தினை. (41)

கட்டவுலகக்காட்சிக் கட்டொழியப்பார்த்தையிலை
நிட்டையிலேநில்லென்று நீநிறுத்திக்கொண்டையிலை.

(பொ-ரை.) (வினையினிற்) கட்டத்தகுந்த பிரபஞ்ச மாயாக்காட்சிகளின் சம்மந்தம் நீங்க தீட்சித்தாயில்லை, சிவராஜயோக சமாதியினில் நிறுத்திருயில்லை.

(கு-ரை.) திருநோக்கால் தீட்சைசெய்தா லல்லாமல் பிரபஞ்சமூகமாயுள்ள பார்வை நீங்காதென்பார் ' பார்த்தையிலை' என்றனர். அல்லதூஉம் சிவஞானயோக நிட்டையிலேனும் நிலைப்பெறச் செய்வாயென்பார் ' நிறுத்திக்கொண்டையிலை ' என்றனர். (42)

(கன்னிவனநாதா கன்னிவனநாதா.)

(பொ-ரை.) கன்னிவனமென்று சொல்லப்படுகின்ற மதுரையம்பெருமானே!

கடைக்கணருள் தாடா கன்னிவலை நாதா
கெடுக்குமலமொருக்கிக் கிட்டிவரப்பாரேடா.

(பொ-ரை.) மதுரையம்பெருமானே! திருக்கடைக்கண்ணால் திருவருளைத் தருக, அழித்தற்கேதுவாயுள்ள ஆணவத்தைக் குறைத்துத் தேவரீர் சமீபத்தில் வருதற் கேதுவினைச்செய்க.

(கு-ரை.) திருவருட் சந்நிதானத்தினை யடைதற்குத் தடையாயிருப்பது ஆணவமலமே யாகலினாலும் அம்மலம் பெருமான் திருவருள் நோக்காலன்றித் தீராதாகலினாலும், 'தா வரப்பார்' என்றனர்.

காதல்தனியேனோ கண்டுமகிழேனோ
சாதல்தவிரேனோ சங்கடந்தான் தீரேனோ.

(பொ-ரை.) பெருமானே! தேவரீர் திருவருள் அடியேனுக்குக் கிடைக்கில் பிரபஞ்ச ஆசையை நீக்கிக்கொள்ளேனோ, தேவரீரைத் தரிசித்துச் சந்தோஷியேனோ, இறப்பினின்றும் நீங்கேனோ, துன்பத்தினின்றும் நீங்கேனோ.

(கு-ரை.) பிரபஞ்சபற்றை யொழித்தற்கும், சிவதரிசனம் செய்தற்கும் மரணத்தை நீக்கிக்கொள்ளற்கும், துன்பம் நீங்கற்கும் திருவருளேவேண்டுமென்பதாம். (44)

உன்னைத்துதியேனோ வூர்நாடிவாரேனோ
பொன்னடியைப்பாரேனோ பூரித்துநில்லேனோ.

(பொ-ரை.) (தேவரீர் திருவருள் கிடைக்கின்) தேவரீரைப் புகழ்ந்து பாடேனோ! சிவத்தலங்கள்தோறும் வாரேனோ, திருநடதரிசனம் செய்யேனோ, சிவானந்தமடையேனோ.

(கு-ரை.) சிவாலயங்கள் தோறும் செல்லுதலும், சிவபெருமான் திருவடியினைத் தரிசித்தலும், வாயாரப்பாடித் தோத்தரித்தலும், சிவானந்தத்துத் திளைத்தலுமே சிறப்பென்றனர். (45)

ஓங்காரப்பொற்சிலம்பி னுல்லாசம்பாரேனே
பாங்கான தண்டை பலபணியும்பாரேனே.

(பொ-ரை.) ஓங்காரமே சொரூபமாகிய அழகான சிலம்பினது அழகினையும், அலங்காரமான தண்டையுடன் கூடிய பல திருவடியின் ஆபரணங்களையும் தரிசியேனு.

(கு-ரை.) பரமேஸ்வரனுக்கு வேதமே சிலம்பாய்க்கிடந்து நாத வொலியைச் செய்துகொண்டிருத்தலின் ' ஓங்காரப் பொற்சிலம்பு ' என்றனர். ஈண்டு பிரணவம் வேதத்தைக்குறித்து நின்றது. (46)

வீரகண்டாமணியின் வெற்றிதனைப்பாரேனே
சூரர்கண்டுபோற்றுமந்தச் சுந்தரத்தைப்பாரேனே.

(பொ-ரை.) ஜெயத்தைக்குறிக்கும் வீரகண்டாமணி யென்னும் ஆபரணத்தினையும், அதி பராக்கிரமசாலிகள் தோத்தரிக்கும் திருமேனியின் அழகினையும் தரிசியேனு.

(கு-ரை.) பிரமமுதல் பிபீலிகை பரியந்தமுள்ள ஆன்மகோடிகளையெல்லாம் ஜெயித்துவரும் இயமனை எட்டியுதைத்த திருவடியில் பூண்ட ஆபரணத்தினை வீரகண்டாமணியென்றனர். (47)

இடையில்புலித்தோ லிருந்தநலம்பாரேனே
விடையிலெழுந்தருளும் வெற்றிதனைப்பாரேனே.

(பொ-ரை.) அரையிலே புலித்தோலினையணிந்து அழகினையும் இடபவாகனத்தின்மேலெழுந்தருளும் செயத்தினையும் தரிசியேனே.

(கு-ரை.) புலித்தோலையுடுத்த அவசரமாவது, தாருவனமுனிவர்செய்த அபிசாரஹோமத்தினின்றும் வெளிவந்து தன்னை யெதிர்த்த புலியினது சருமத்தினையுரித்துத் தரித்த சார்த்தூல அரமூர்த்தியானது. (48)

ஆனையுரிபோர்த்த வழகுதனைப்பாரேனே
மானைப்பிடித்தேந்து மலர்க்கரத்தைப்பாரேனே.

(பொ-ரை.) ஆனையினது தோலினைப் போர்த்துக்கொண்டுள்ள அழகினையும், மானைத் திருக்கரத்திலேந்தி யதனையும் தரிசியேனே.

(கு-ரை.) ஆனையின்தோல்தரித்த அவசரமாவது கயாசுரனாகிய யானையைத் தேவர் மானவர் துயர்தீர்த்தற்பொருட்டுப் போர்புரிந்து சங்கரித்துக் கஜயுத்த மூர்த்தியானது, மானையேந்தியது தாருவனத்தர் ஏவியதாம். (49)

மாண்டார்தலைப்பூண்ட மார்பழகைப்பாரேனே
ஆண்டார்நமக்கென் றறைந்துதிரியேனே.

(பொ-ரை.) இறந்த தேவர்களின் தலைகளை மாலையாகத்தரித்த மார்பினுடைய அழகினையும், சிவபெருமானே நம்மையடிமையாக ஆட்கொண்ட ஆண்டவரென்று சொல்லித்திரியேனே.

(கு-ரை.) சர்வசங்காரகாலத்தில் இறந்துபோன பிரமாதிதேவர்களின் தலைமாலைகளைத் தரிப்பது மறு சிருஷ்டியில் வரும் பிரமாதி தேவர்கள் அம்மாலையினைக்கண்டு செருக்கடையாது வாழுநிமித்தமாம். (50)

கண்டங்கறுத்துநின்ற காரணத்தைப்பாரேனே
தொண்டர்குழுவினின்ற தோற்றமதைப்பாரேனே.

(பொ-ரை.) கண்டமானது கருமைநிறத்துடன் கூடியிருந்த காரணத்தையும், சிவனடியார்களெல்லாம் ஒருங்குகூடியிருந்தகாட்சியினையும் காணேனே.

(கு-ரை.) திருப்பாற் கடலிலுண்டாகிய விஷத்தினால் தேவர்கள் இறந்துபோகாதபடி அவ்விடத்தினைக் கண்டத்திலடக்கிவிஷஆபரணமூர்த்தியாய் எழுந்தருளினமையின் 'கண்டங்கறுத்து நின்ற, என்றனர். (51)

அருள்பழுத்தமாமதியா மானனத்தைப்பாரேனே
திருநயனச்சடையொளிருஞ் செழுங்கொழுமைப்பாரேனே

(பொ-ரை.) திருவருள்ததும்பிய சந்திரனைப்போன்ற திருமுகத்தினையும், அழகிய நேத்திரங்களின் அருட்பிரகாசமாகிய செவ்வியவளமையினையும் தரிசியேனே.

(கு-ரை.) தன்னையடுத்த சிவனடியார்பால் குளிர்ச்சியாகிய கருணையெந்நேரமும் ததும்பிக்கொண்டிருக்குமுகமென்பார்'மதியானனம்' எனவும், கிருபையுடனே நோக்கும் விழியென்பார் 'நயனக்கடை, எனவும் கூறினார். (52)

செங்குமிழின்றுண்டம்வளர் சிங்காரம்பாரேனே
அங்கனியைவென்ற வதரத்தைப்பாரேனே

(பொ-ரை.) செவ்விய குமிழம்பூவினையொத்த நாசியிலுண்டான அழகினையும், அழகிய கொவ்வைப் பழத்தினைக்காட்டிலு மழகினை வாய்ந்த அதரத்தினையும் தரிசியேனே.

(கு-ரை.) பெருமான் அங்கங்கள் உவமையற்றதாயினும் உலக ரைடைநோக்கி அலங்காரம் செய்யும்பொருட்டு உவமித்துக்கூறினர்.

முல்லைநிலவெறிக்கு மூரலொளிபாரேனே
அல்லார்புருவத் தழகுதனைப்பாரேனே.

(பொ-ரை.) முல்லைமொக்கின் அழகினையொத்த பற்களின் பிரகாசத்தினையும், இருண்டபுருவத்தின் அழகினையும் தரிசியேனே.

(கு-ரை.) புருவத்திலுள்ள உரோமம் அதிக நெருக்கங்கொண்டு கருமைவாய்ந் திருக்குமாகலின் 'அல்லார்' என்றனர். மூரலைப் பல்லெனக் கொண்டமையின் அதற்கேற்பமுல்லை மொக்கு எனக் கூறப்பட்டது. (54)

மகரங்கிடந்தொளிரும் வண்மைதனைப்பாரேனே
சிகரமுடியழகுஞ் செஞ்சடையும்பாரேனே.

(பொ-ரை.) மகரமானது தங்கிப்பிரகாசிக்கும் அழகதனையும், சிரசின் முடியழகினையும் செஞ்சடையினையும் தரிசியேனே.

(கு-ரை.) மகரமென்றது முதலைவடிவாய்ச்செய்து காதலிடும் ஆபரணம். சிகரமெனினும் முடியெனினும் ஒன்றேயாயினும் சிகரமென்பதற்குச் சிரசெனவும் முடியென்பதற்கு மயிர் முடிச்செனவும் கொள்ளவேண்டும். (55)

கங்கையொடுதிங்கணின்ற காட்சிதனைப்பாரேனே
பொங்கரவைத்தான்சடையில் பூண்டவிதம்பாரேனே.

(பொ-ரை.) கங்காநதியுடனே சந்திரன்றங்கிய அழகினையும் மிகுதியான சர்ப்பங்களைச் சடாபாரத்தில் தரித்த தன்மையினையும் தரிசியேனோ.

(கு-ரை.) கங்கைநதியேயாயினும் அக்கங்கை இமயமலையரசன் பத்தினியாகிய மேனைக்கு இரண்டாவது புத்திரியே கங்கைவடிவாய் விளங்கியதனால் அக்கங்கையையொரு பெண்ணாகச்சொல்வதுமுண்டு. (56)

சரக்கொன்றைபூத்த சடைக்காட்டைப்பாரேனோ
எருக்கறுகூமத்தையணி யேகாந்தம்பாரேனோ

(பொ-ரை.) தொங்குகின்ற கொன்றைமலர்கள் பூத்துள்ள சடைக்காட்டினையும், எருக்கு அறுகு ஊமத்தை, தரித்துள்ள தனிக்கோலத்தினையும் தரிசியேனோ.

(கு-ரை.) கொன்றையென்பது பிரணவாகாரமாயுள்ள வொருசிறந்த புட்பமாகலின் அது பெருமானுக்கு அதிக உரித்தாகியது சடையின் அதிக நெருக்கத்தினை நோக்கிக்காடென்றனர். (57)

கொக்கிறகுசூடிநின்ற கொண்டாட்டம்பாரேனோ
அக்கினியையேந்திநின்ற வானந்தம்பாரேனோ

(பொ-ரை.) கொக்கின் இறகுகளைத்தரித்திருக்கும் சந்தோஷத்தையும், மழுவினையேந்தியுள்ள களிப்பினையும் தரிசியேனோ.

(கு- ரை.) அற்பபட்சியாகிய கொக்கினை யாட்கொள்ளும்பொருட்டு அதன் இறகினையும், கரத்தால் ஏந்தக்கூடாத அக்கினியையும்தரித்த அருமையினைப்பற்றி 'ஆனந்தம், என்றனர். (58

தூக்கியகாலுந் துடியடியும்பாரேனே
தாக்குமுயலகன்மேற் றண்டவத்தைப்பாரேனே.

(பொ-ரை.) மேலேயெடுத்த திருவடியும், காத்திற்றாங்கியதுடியின் ஓசையையும், முயலகன்மேல் வைத்துள்ள நடனத்தையும்தரிசியேனே.

(கு-ரை.) தூக்கியகால் குஞ்சிதபாதம், துடியடி வலக்கையிலுள்ள உடுக்கையிற் பிறக்கும் நாதவொலி, தாண்டவம் சிற்சபையில் செய்யும் ஆனந்தத்தாண்டவம். (59)

வீசுகரமும் விகசிதமும்பாரேனே
ஆசையளிக்கு மபயகரம்பாரேனே.

(பொ-ரை.) வீசுகின்ற காத்திளையும், மந்தகாசத்தையும், ஆசையினையுண்டாக்கும், அபயாஸ்தத்தினையும் தரிசியேனே.

(கு-ரை.) வீசியகரமாவது திருவடியைக் காட்டிக்கொண்டிருக்கும் திருக்கரம், அபயகரமாவது ஆட்கொள்வேமெனும் குறிப்பினைக்காட்டும் திருக்கரம், மந்தகாசமாவது திருமுகத்துவாயில் உண்டாகும் குஞ்சிரிப்பு. (60)

அரிபிரமர்போற்ற வமரர்சயசயெனப்
பெரியம்மைபாகம் வளர் பேரழகைப்பாரேனே.

(பொ-ரை) விண்டுவும், பிரமனும் ஏத்ததேவர்கள் சய சய என்ன அம்பாள் இடதுபாகத்தி லெழுந்தருளிருக்க உண்டாகுமழகினைத்தரிசியேனே.

(கு-ரை.) அரிபிரமர் போற்றவென்றது நடாராஜப்பிரபுவின் ஆனந்தத்தாண்டவகாலத்தில் அரிமத்தளம் போடவும் பிரமன்

தாளந் தட்டவுமாய் நின்றதன்மை பெரியம்மை யென்றது சிவகாமித்தாயினை. (61)

சுந்தரநீற்றின் சொகுசுதனைப்பாரேனோ
சந்திரசேகரனைத் தயவுசெய்தல்பாரேனோ.

(பொ-ரை.) அழகியவிபூதியின் விநோதத்தினையும், சந்திரசூடனெழுந்தருளிக் காட்சிசெய்தலையும் தரிசியேனோ

(கு-ரை.) 'பூசப்பூசப் பொன்னிறம்,' என்றதற்கேற்ப விபூதி திருமேனியில் அழகைக் கொடுக்குந் தன்மையால் சுந்தரநீறு, என்றனர் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளும் 'சுந்தரமாவதுநீறு' என்றனர். தட்சனால் சாபமேற்று அடைக்கலம் புகுந்த சந்திரனையாட்கொண்ட அவசரம் சந்திரசேகரமூர்த்தி. (62)

(கன்னிவனநாதா கன்னிவனநாதா.)

(பொ-ரை.) கன்னிவனமென்று சொல்லப்படுகின்ற மதுரையம்பெருமானே!

கெட்டநாள்கெட்டாலுங் கிருபைபுரிப்பாரேடா
பட்டநாள்பட்டாலும் பதமெனக்கிட்டாதோ.

(பொ-ரை.) தேவரீரைத்துதியாது கெட்டுப்போன நாள்கள் கெட்டுப்போனாலும் இனியேனும் கருணைச்செய்யப்பாராய், துன்பம் அடைந்தநாள் பலவுண்டானாலும் இனியேனும் தேவரீர்திருவடியெனக்குக்கிடையாதோ.

(கு-ரை.) அறியாமை மேலீட்டினால் இதுகாறும் துதியாது கெட்டேன் அதனால் பலதுன்பங்களை யனுபவித்தேன் ,இனியங்ங

னம் நோதபடி கருணைசெய்து திருவடிதந்தருளவேண்டு மென்றனன். (63)

நற்பருவமாக்குமந்த நாளெனக்குக்கிட்டாதோ
எப்பருவமுங்கழன்ற வேகாந்தங்கிட்டாதோ.

(பொ-ரை.) தேவரீரையடைதற்கேற்ற பரிபக்குவகாலம் எனக்குண்டாகாதோ, எத்தகைய பக்குவங்களையும் கடந்த ஏகாந்தநிலையுண்டாகாதோ.

(கு-ரை.) பக்குவகாலமாவது மலத்தடிப்புகுறைந்த அவசரம். ஏகாந்தமாவது தனியேயிருந்து சிவராஜயோக நிஷ்டை கூடும் நிலை,- 'தனியேயிருப்பதற்கெண்ணினேன் சாமிநீயறியாததோ' என்றனர். தாயுமானவரும். (64)

வாக்கிறந்துநின்ற மவுனமதுகிட்டாதோ
தாக்கிறந்துநிற்குமந்தத் தற்சுத்திகிட்டாதோ.

(பொ-ரை.) பேச்சற்றநிலையாகிய மவுனநிஷ்டை உண்டாகாதோ, பிரபஞ்ச சம்பந்தமில்லாதுநிற்கும் ஒப்புற்ற சுத்தமாந்தன்மை உண்டாகாதோ.

(கு-ரை.) மனோவாக்குக்காயங்களால் உண்டாகும் பிரபஞ்ச சேஷ்டைகளைக் கடந்து அந்தர் முகமாகவிருந்துசெய்யும் தியானம் மவுனநிலை விவகாரத்திசையிலேயே சதாகாலமிருக்கினும் அதிற் பற்றின்றியிருக்குந்தன்மை தற்சுத்தி. (65)

வெந்துயரைத்தீர்க்குமந்த வெட்டவெளிகிட்டாதோ
சிந்தையையுந்தீர்க்குமந்தத் தேறலதுகிட்டாதோ.

(பொ-ரை.) கொடியதுன்பத்தினை நீக்குமந்தச் சிதாகாயமுண்டாகாதோ, எண்ணிய எண்ணத்தை முடிக்குமந்த திருவருட்டேன் உண்டாகாதோ.

(கு-ரை.) வெட்டவெளியாவது சிதம்பரகசியம். அது தரிசித்தார்க்கு வெந்துயர் நீங்குமென்பதாம். சிவனடியார்கள் சிந்தையில் திருவருள் தேன்போலினுக்குமாகலின் 'தேறல்' என்றனர். (66)

ஆனவடியார்க் கடிமைகொளக்கிட்டாதோ
ஊனமறவென்னை யுணர்த்துவித்தல்கிட்டாதோ.

(பொ-ரை.) தேவரீருக்கான சிவனடியார்கட்குஅடிமைபூண்டு வாழும்படி உண்டாகாதோ குற்றமற அடியேற்குத் திருவருளைத் தெரிவித்தல் உண்டாகாதோ.

(கு-ரை.) அடியார்கடிமையாய் வாழ்தலோர்சிறந்த சாதனமானதால் 'அடிமைகொள' என்றார். 'அறிவித்தாலன்றி அறியாவுளங்கள்' என்றதற்கேற்பத் திருவருளைக் கூட்டிவைக்க வேண்டுமென்பார். 'உணர்த்துவித்தல்' என்றனர் (67)

என்னென் றுசொல்லுவண்டாவென்குருவேகேளடா
பின்னையெனக்குநீ யல்லாற்பிறிதில்லையே.

(பொ-ரை.) அடியேனையடிமையாக வாட்கொண்ட ஆசாரியனே (எனது துன்பமனைத்தினையும்) என்னவெனவெடுத்து விவகரிப்பேன், தேவரீரையல்லாமல் வேறு எனக்குத்துணை எது.

(கு-ரை.) அனுபவிக்கும் துன்பம் சிறிதாகவிருக்கின் சந்நிதானத்தில் விண்ணப்பிக்கக்கூடும், அளவில்லாத துன்பத்திற் கட்டுப்பட்டுக் கிடத்தலின் 'என்னென்று சொல்லுவன்' என்றனர். தே

வரீர் சந்நிதானத்தில் விண்ணப்பித்தால் பரிகாரமுண்டேயன்றி வேறொருவரிடத்திற் சொல்லியதிற் பிரயோசனமென்னவென்பார் "நீயல்லாற் பிறிதில்லையே" என்றனர். (68)

(கன்னிவனநாதா கன்னிவனநாதா.)

(பொ-ரை.) கன்னிவனமென்று சொல்லப்படுகிற மதுரையின்கண்ணே யெழுந்தருளியிருக்கும் சிவபெருமானே!

அன்னவிசாரமது வற்றவிடங்கிட்டாதோ
சொன்னவிசாரந் தொலைந்தவிடங்கிட்டாதோ.

(பொ-ரை.) ஆகாரவிஷயமாக விளைக்கின்ற விசாரமொழிந்த நிலையும். பொன்னைத்தேடியலைகின்ற விசாரமொழிந்தநிலையும் எனக்கு வாராதோ.

(கு-ரை) இன்றியமையாதுவிளையும் பசியும் அதனைப்பரிகரிக்கப்பொன்னும் தேடியலைகின்றதாகிய முயற்சியுமற்ற நிலையே வேண்டுமென்பதாம். (69)

உலகவிசார மொழிந்தவிடங்கிட்டாதோ
மலக்குழியின்மின்னார் வசியாதுங்கிட்டாதோ.

(பொ-ரை.) பிரபஞ்சமுகமாக விளையும் விசாரம் நீங்கியநிலையும் மலக்கூட்டத்தினையொத்த மாதர்களினின்று நீங்கியநிலையும் வாராதோ.

(கு-ரை.) உலகசம்பந்தமாகவிளையும் முயற்சியும், மாதர்கள் சாவகாசமும் நீங்கின் மவுனநிலையும் பேரின்பவிச்சையும் உண்டாமென்பதாம். (70)

ஒப்புவமைபற்றோ டொழிந்தவிடங்கிட்டாதோ
செப்புதற்குமெட்டாத தெளிந்தவிடங்கிட்டாதோ

(பொ-ரை.) சாமானம், திருட்டாந்தம், பந்தம் இவைநீங்கிய நிலையும், வாக்கினாற்சொல்லுதற் கரிதாகிய சந்தேகமற்ற நிலையும் வாராதோ.

(கு-ரை.) திருவருளினுக்குச்சமானமுதலிய எந்தவகையினும் இல்லையென்பார் 'ஒப்புவமைபற்றோ டொழிந்தவிடம் எனவும், வைகரிவாக்கிற் கெட்டாததென்பார் 'செப்புதற்குமெட்டா, எனவும் கூறினர். (71)

வாக்குமனாதீத வகோசரத்திற்செல்லவெனைத்
தாக்குமருட்குருவேநின் றாளிணைக்கேயான் போற்றி.

(பொ-ரை.) வாக்கினுக்கும் மனதினுக்கும் எட்டாதவிடத்தில் அடையும்படி அடியேனைக்கூட்டிவைத்த திருவருட்சொரூபமாகிய ஆசாரியனே தேவரீர் இரண்டுதிருவடிக்கே துதிசெய்கின்றேன்.

(கு-ரை.) சிவபோகநிலையானது ஆசாரியன்திருவருளை முன்னிட்டே யடைத்ததொன்றாகலினாலும், அத்திருவருள்நிலையானது வைகரிவாக்கினாலும், தற்போதமனத்தினாலும் சொல்லுதற்கூடாதாகையினாலும் அவ்வரிய நிலையைக்கூட்டிவைத்தார்க்கு நன்றிகாட்டுவார் 'போற்றி, என்றனர். (72)

## பட்டினத்தார் முதல்வன் முறையீடு

## முற்றிற்று.

பட்டினத்துப்பிள்ளையார்.

## மகடூஉ முன்னிலையாகத் திருவாய்மலர்ந்த

# அருட்புலம்பல்.

---

ஐங்கரனைத்தெண்டனிட்டே னருளடையவேண்டுமென்று
தங்காமல்வந்தொருவன் றற்சொரூபங்காட்டியெனைக்

(பொ-ரை.) திருவருளினைப் பெறவேண்டுமென்று ஐந்துதிருக்கரங்களுடன் கூடிய விநாயகக்கடவுளை வணங்கினேன். தாமதியாமல் 'முதல்வன்' எழுந்தருளிவந்து தனது சொருபத்தினைத் தரிசிப்பித்து அடியேனை.

(கு-ரை.) திருவருளினையடைதற்குப் பிரபஞ்சமுகமாக விக்கினம்வாராதபடி விநாயகனைவணங்கியவுடன் முதல்வன்றரிசனம் கிடைத்ததென்பார் 'சொரூபங்காட்டி' என்றனர். (1)

கொள்ளைப்பிறப்பறுக்கக் கொண்டான் குருவடிவம்
கள்ளப்புலனறுக்கக் காரணமாய்வந்தாண்டி.

(பொ-ரை.) கூட்டமாகிய சென்மங்களையொழிக்க ஆசாரியமூர்த்தங்கொண்டு வஞ்சகமாயுள்ள புலன்களை வெல்லுதற்கேதுவாய்வந்தனன்.

(கு-ரை.) முந்தியெடுத்துள்ள பிறப்புகட்கு அளவிலவென்பார் 'கொள்ளைபிறப்பு, என்றனர். ஆசாரியர்தரிசனத்தால் இந்திரியங்களின்சேஷ்டை யொடுங்குமென்பார். 'கள்ளப்புலனறுக்க' என்றனர். (2)

ஆதாரமோராறு மைம்பத்தோரக்ஷரமும்
ஆதாரகோட்டையெல்லாஞ் சுட்டான்றரிசறவே.

(பொ-ரை.) ஆறாதாரங்களையும், அவ்வாறாதாரங்களிலுள்ள ஐம்பத்தோரெழுத்துக்களையும் அவ்வாதார கோணங்களையும் ஆகிய எல்லாவற்றையும் ஆசாரியன் தனது நேத்திரத்தால் ஒழித்தனன்.

(கு-ரை.) ஆறாதாரமாவன.—மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, ஐம்பத்தோரட்சரமாவன—அவ்வவ்வாதாரங்களிலுள்ள எழுத்துக்கள். கோட்டையாவன—அவ்வாதாரங்களின கோணங்கள். (3)

மெத்தவிகாரம் விளைக்கும்பலபலவாம்
தத்துவங்களெல்லாந் தலைகெட்டுவந்ததடீ.

(பொ-ரை.) ஆசாரியன் அனுக்கிரகித்ததனால் பற்பல விகாரங்களைச்செய்யும் பற்பலவாம் தத்துவங்களெல்லாமொடுங்கிவிட்டன

(கு-ரை) ஆசாரியர் உபதேசத்தெளிவினால் தத்துவங்களின் உண்மையினை விசாரிக்க அவை சடமென நிச்சயித்தவுடன் அவற்றால் விளைந்த காரியப்பாடு நின்றுவிட்டன என்பார் 'தலைகெட்டுவந்தது' என்றனர். (4)

என்னோடுடன்பிறந்தா ரெல்லாரும்பட்டார்கள்
தன்னந்தனியே தரித்திருக்கமாட்டேனடீ.

(பொ-ரை.) அடியேனுடன் பிறந்தவர்களாகிய தத்துவங்கள் எல்லாரும் நீங்கினர்கள் இனி நான் தனித்திருந்து வாழேன்.

(கு-ரை.) ஆன்மா தேகமெடுத்தபொழுதே தத்துவங்கூடினவாகலின் 'உடன்பிறந்தார்' என்றனர். ஆசாரிய னனுக்கிரகத்தால்

தத்துவங்களின் சேஷ்டை யொழிந்ததென்பார் எல்லாரும் பட்டார்கள் என்றனர். (5)

எல்லாரும்பட்டகள மென்றுதொலேயுமடி
சொல்லியழுதாற் றுயரமெனக்காறுமடி.

(பொ-ரை.) எல்லாத் தத்துவங்களும் ஒடுங்கிய இடம் எந்நாளில் நீங்கும், எனது துன்பங்களை வாயாரச்சொல்லியழுதால் என் றுயரமொழியும்.

(பொ-ரை.) தத்துவங்கள் காரியப்படாமல் நிற்க வாய்ந்த உடலைக் 'களம்' என்றனர். அவ்வுடல் அங்ஙனமேயிருக்கின் ஒருகால் மறுபடியும் அவ்வுடல் எதுவாகத் தத்துவங்கள் காரியப்படுமென்பார் 'களமென்று தொலேயும்' என்றனர். (6)

மண்முதலாமைம்பூத மாண்டுவிழக்கண்டேண்டி
விண்முதலாமைம்பொறிகள் வெந்துவிழக்கண்டேண்டி

(பொ-ரை.) மண், நீர், தீ, காற்று, வெளி யனைத்துமாகிய பூதங்கள் தம் காரியங்களிற் குறையவும், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய புலன்களின் சேட்டைகளொடுங்கவும் தரிசித்தனன்.

(கு-ரை.) ஆசாரியர் எதிரிட்டு அனுக்கிரகித்த உபதேசத்தினல் பஞ்சபூதங்களின் விகாரமும், ஐம்புலன்களின் சேட்டையும் நீங்கினவென்பார், 'மாண்டுவிழ' 'வெந்துவிழ' என்றனர். (7)

நீங்காப்புலன்களைந்து நீறாகவெந்ததடி
வாக்காதியைவரையு மாண்டுவிழக்கண்டேண்டி.

(பொ-ரை.) எக்காலத்திலும் நீங்குதற்கரிய மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஞானேந்திரியங்களும், வாக்கு, பாதம், பாணி

யாயுரு, உபத்தம் ஆகிய கன்மேந்திரியங்களும்' தத்தம் தொழில்களி னின்றும்' நீங்கின.

(கு-ரை.) ஆசாரிய ரனுக்கிரகத்தால் விசாரித்தகாலத்து இந் திரியங்களின் செயலனைத்தும்நீங்கினஎன்பார். 'நீமுக்' "மாண்டுவிழ" என்றனர். (8)

மனக்கரணமத்தனையும் வகைவகையேபட்டொழிய
இனக்கரணத்தோடே யெரிந்துவிழக்கண்டேண்டி.

(பொ-ரை.) மனம், புத்தி, சித்தம், அகங்காரம் அவ்வளவும் கிரமமாக ஒழியம், இவைகட்கு உபாகரணமாக விருந்தனவும் அழிந் துவிடத் தரிசித்தேன்.

(கு-ரை.) அந்தக்கரணங்களும் அவை விளைதற்கேதுவாகிய வாக்கு, காயங்களும் தத்தம் தொழிலற்றுக் கிடந்தனவென்பார், 'பட்டழிய' 'விழ' என்றனர். (9)

ஆத்துமதத்துவங்கள் அடுக்கழிபவெந்ததடி
போற்றும்வகையெப்படியோ போதமிழந்தானே.

(பொ-ரை) ஆன்மதத்துவங்கள் இருபத்து நான்கும் தமது வரிசையழிந்தன. இனித் தற்போதத்திற் கெட்டாத சிவபெருமா னைத்தும்வித மெங்ஙனமோ அறிகிலேன்.

(கு-ரை) ஆன்ம தத்துவங்களாவன — ஞானேந்திரியமைந்து, கன்மேந்திரயமைந்து, அந்தக்கரணம் நான்கு, தன்மாத்திரை ஐந்து பூதமைந்து.

வித்தியாதத்துவங்கள் வெந்துவிழக்கண்டேண்டி
சுத்தவித்தையைந்தினையுஞ் சுட்டான்றுரிசறவே.

(பொ-ரை.) வித்தியாதத்துவங்கள் ஏழும் வெந்துவிடவும் சுத்த தத்துவம் ஐந்தும் அங்ஙனமேயாகவும் ஆசாரியமூர்த்தி (தீட்சையினால்) எறிந்தனன்.

(கு-ரை) வித்தியாதத்துவமாவன — கலை, காலம் நியதி, வித்தை, அராகம், புருடன், மாயை, சுத்த தத்துவமாவன—சுத்த வித்தை, ஈச்சுரம், சாதாக்கியம், சத்தி, சிவம். (11)

மூன்றுவகைக்கிளையு முப்பத்தறுவரையும்
கொன்றுவிழச்சுட்டுக் கருவேரறுத்தாண்டி.

(பொ-ரை) மூவிதபாகுபாடமைந்த முப்பத்தாறுதத்துவங்களும் முற்றும் செயலற நாசமாக்கினன் ஆசாரியன்.

(கு-ரை.) மூவகையாவன — ஆன்மதத்துவம். வித்தியாதத்துவம், சுத்த தத்துவம், இவையினி யொருக்காலுந் தலையெடாதபடி அனைத்தையும் அடியோடே ஆசாரியன் களைந்துவிட்டனனென்பார் 'கருவேரறுத்தான்' என்றனர். (12)

குருவாகிவந்தானே குலமறுக்கவந்தானே
உருவாகிவந்தானே வுருவழிக்கவந்தானே.

(பொ-ரை.) ஞானாசிரியனாகி எழுந்தருளினனே; குலப்பற்றினையொழிக்க வெழுந்தருளினனே; சகள வடிவங்கொண் டெழுந்தருளினனே; எனது உடற்றடிப்பையொழிக்க வெழுந்தருளினனே அடியேன்.

(கு-ரை) நிஷ்களமாகிய சிவம் சகளவடிவங்கொண்டு எழுந்தருளின் குலத்தின் கண்ணே விளையும் பெரும்பற்றும், தூலதேகச் செயலும் ஒழியுமென்பதாம். (13)

கேடுவருமென்றறியேன் கெடுமதிகண்டோற்றாமல்
பாடுவருமென்றறியேன் பதியாண்டிருந்தேண்டி

(பொ-ரை) அறிவீனத்தினால் நான் சிந்தியாதிருந்ததலினால் இனி வருகின்ற கெடுதியினைப்பற்றித் தேர்ந்தேனில்லை. பூமியினை நம்பி அதனையனுபவித்திருந்தேனே யல்லாமல் துன்பம் வருமென நினைத்தேனில்லை.

(கு-ரை.) அவ்வவ்வமயம் எனக்கு உண்டாயிருந்த செல்வச் செருக்கினால் பின்னால்வரும் துன்பத்தினைப்பற்றிச்சிறிதுஞ் சிந்தித்தேனில்லை என்பார் 'கெடுமதி கண்ணுக்குத்தோற்றாது' என்னும் பழமொழியை யுபயோகப்படுத்தினர் (14)

எல்லாரும்பட்டகள மின்னவிடமென்றறியேன்
பொல்லாங்குதீர்க்கும் பொறியிலியைக்கண்டேண்டி

(பொ-ரை) எல்லாத் தத்துவங்களும் ஒடுங்கிய உடலானது இன்னவிதமாயிற் றென்பதனை யறியேன், வினையினை யொழிக்கும் சிவபெருமானைத் தரிசித்தேன்.

(கு-ரை) தத்துவங்களைத்தும் ஒடுங்கிய அவசரத்திலே உடலானது தோன்றாது சிவபெருமானே தோன்றினனென்பார் பொறியிலியைக் கண்டேன் என்றனர். (15)

உட்கோட்டைகுள்ளிருந்தா ரொக்கமடிந்தார்கள்
அக்கோட்டைகுள்ளிருந்தா ரறுபதுபேர்பட்டார்கள்

(பொ-ரை) உள்கோட்டையாகிய தேகத்தினுள்ளே யிருந்தார்கள் எல்லாருமொழிந்தார்கள் 'அன்றியும்' அத்தேகத்திலேயே வாழ்ந்த அறுபதுபேர்களு மிறந்துபட்டனர்.

(கு-ரை) உட்கோட்டைக் குள்ளிருந்தார் முப்பத்தாறு தத்துவங்கள் அந்தத்துவங்களுடனேயிருந்தார் மற்றைய அறுபது தத்துவங்கள் முப்பத்தாறும்காரணத்தத்துவங்கள். அறுபதும் காரியதத்துவங்கள். ஆகத்தொண்ணூற்றாறு. (16)

ஒக்கமடிந்ததடி யூடுருவவெந்ததடி
கற்கோட்டையெல்லாங் கரிக்கோட்டையாச்சுதடி.

(பொ-ரை) தத்துவங்களனைத்தும் ஒன்றுசேர மடிந்தது அவையாவும் சாம்பலாயின், இங்ஙனமாகவே கருங்கல் கோட்டையினையொத்திருந்ததும், கரிக்கோட்டைக்குச் சமானமாயது.

(கு-ரை) தேகமானது தொண்ணூற்றாறு தத்துவங்களுடனே கூடி விளங்கிப் பலமானகோட்டை போன்றிருந்தது. அத்தத்துவங்களழியவே அத்தேகம் அற்பமாய் விளங்கியதென்பார் 'கற்கோட்டை கரிக்கோட்டை' என்றனர். (17)

தொண்ணூற்றறுவரையுஞ் சுட்டான் குருசறவே
கண்ணேறுபட்டதடி கூறுவோருத்தாண்டி.

(பொ-ரை) தொண்ணூற்றாறு தத்துவங்களனையும் குற்றமற (ஆசாரியன்) தீட்சித்தான்; பிறரால் திருஷ்டிபட்டது; இனியுண்டாதற்கும் எதுவில்லாமற் செய்தனன்.

(கு-ரை) ஆசாரியன், பிறப்பினுக்கேதுவாகிய தொண்ணூற்றாறு தத்துவங்களின் காரியப்பாட்டினை யழிக்கவே இனிவேறு உடலெடாதிருப்பதற்கும் எதுவாயிற்றென்பதாம். (18)

ஓங்காரங்கெட்டதடி யுள்ளதெல்லாம்போச்சுதடி;
ஆங்காரங்கெட்டதடி யடியோடறுத்தாண்டி.

(பொ-ரை) ஓங்காரசத்தத்திற்கேதுவாகிய நாதமானது குறைந்தது அந்நாதத்தின் சம்பந்தமானஎல்லாத்தத்துவங்களும் போயின. (அன்றியும்) ஆங்கார தத்துவமும் ஒழிந்தது அதற்காதாரமாயதும் நீக்கினன்.

(கு-ரை) பிரபஞ்ச விவகாரங்கட்கு முக்கியவாதாரமாகிய சத்தத்திற்கு உற்பத்தியோங்கார சொரூபமாகிய நாத தத்துவமாகலின் அது கெட்டதென்றும், அச்சத்த சம்பந்தமாக அபரகலைஞான விவகார நீங்கியதென்பார் 'உள்ளதெல்லாம்போச்சு' எனவும், விபரீத குணங்கட் கேதுவாயது ஆங்கார தத்துவமாகலின் அது கெட்டதெனவும் கூறினர். (19)

தரையாங்குடிலைமுதல் தட்டுருவவெந்ததடி
இரையுமனத்திடும்மை யெல்லாமறுத்தாண்டி.

(பொ-ரை) பூமியினைப்போல எல்லாவற்றிற்கும் ஆதாரமாகிய சுத்தமாயை முதலாகிய தத்துவமனைத்தும் ஒடுங்கியது, விவகாரம் செய்துக்கொண்டேயிருக்கும் மனத்துன்பமனைத்தும் நீங்கியது.

(கு-ரை) சகல தத்துவக் காரியப்பாட்டிற்கும் ஆதாரமாயிருப்பது மாயையாகலின் அதனை 'தரை' என்றனர். பிரபஞ்சமுகமாகப் பேசுவதனைத்திற்கும் காரணமனமாகலின் 'இரையுமனம்; என்றனர்

முன்னைவினையெல்லா முழுதுமறுத்தாண்டி
தன்னையறியவே தானொருத்தியானேண்டி

(பொ-ரை) பூர்வ சென்மவினை யனைத்தினையும் நீக்கினேன் பின்னர் ஆன்மாவாகிய வென்னை நான் தெரிந்துகொள்ளவே நான் தனித்திருந்தனன்.

(கு-ரை) ஆசாரியன் முன்னை வினையாகிய சஞ்சிதத்தினை யொழிக்கவே இச்சென்மத்தி லனுபவிக்கவேண்டிய வினையொன்று மின்றி ஆன்மாவாகிய நான் தனித்துவிட்டேன் என்பார் 'ஒருத்தியானேன்; என்றனர். ஒருத்தியென்றது சிவபெருமானை நாயகனைக் கொண்ட அவசரத்தில். (21)

என்னையேநானறிய விருவினையுமீடழித்துத்
தன்னையறியத்தலமெனக்குச்சொன்னாண்டி.

(பொ-ரை) ஆன்மாவாகிய என்னையே நான் தெரிந்துகொள்ள நல்ல வினையினையும் தீவினையினையும் கெடுத்துக் சிவபெருமானைத் தெரிந்துகொள்ளுமிடமெனக்கு உபதேசித்தான்.

(கு-ரை) ஆசாரியன் வினைக்கட்டறுத்து ஆன்மாவாகிய என்னையுபரமான்மாவாகிய முதல்வனையும் அறிந்துகொள்ளும்படி அனுக்கிரகித்தருளினன். (22)

தன்னையறிந்தேனண்டி தனிக்குமரியானேனண்டி
தன்னந்தனியே தனியிருக்கும்பக்குவமோ.

(பொ-ரை) சிவபெருமானாகிய ஆன்மநாயகனைத் தெரிந்தேன் உடனேயவனையனுபவிக்கும் பக்குவமடைந்தேன் இனி நான் தனித்திருக்கும் பக்குவமுண்டானதுபோலும்.

(கு-ரை) கன்னிப்பருவமுடையபோது எல்லாருடனும் கூடி ஆடிக்கொண்டிருந்த பெண், பக்குவமடைந்து நாயகனை யெதிர்கொண்டபின் யாரோடுங் கலவாது தனித்திடுவாள்போல, அறிமை மேயாவிட்ட காலத்துடலதெய்வவழிபாடுகொண்டிருந்த தன்மை அறிவடைந்

து சிவபெருமானைத்தரிசித்தபின் தனியோ நிஷ்டைகூடினனென் பார் 'தனியிருக்கும் பக்குவமோ' என்றனர். (23

வீட்டிலொருவரில்லை வெட்டவெளியானேனண்டி
காட்டுக்கெறிந்தநிலா கனவாச்சேகண்டதெல்லாம்

(பொ-ரை) வீடாகிய உடலில் ஒருதத்துவமுமில்லையாகி வெறுவெளியாயினமையின், 'பிரபஞ்சமுழுவதும்' காட்டின் கண்ணெரிந்த நிலவினையொத்தும், நித்திரையிற்கண்ட கனவினையொத்தும் விளங்கியது.

(கு-ரை.) பிரபஞ்சமுகமாகவிருந்து அனுபவித்த போகமனைத்தும், தத்துவங்ககளின் சேஷ்டையொடுங்கவே யாவும்பொய்யாகத் தோன்றினவென்பார். காட்டுநிலாவாகவும், கனவாகவும்' ஆயிற்றென்றார்- (24)

நகையாரோகண்டவர்கள் நாட்டுக்குப்பாட்டலவோ
பகையாரோகண்டவர்கள் பார்த்தாருக்கேச்சலவோ.

(பொ-ரை.) என்னுடைய துறவினைக்கண்டவர்கள் 'சிலர்' சிரியாரோ? நாடனைத்தும் பேச்சாக முடியாதோ, சிலர் பகைகொள்ளார்களோ, நேரேபார்த்தவர்கட்குப் பழிப்பாகமுடியாதோ!

(கு-ரை.) திடீரென அபாரசெல்வத்தினைவிட்டு துறவடைந்தமாத்திரத்தில் துறவினருமையினையறியாச்சாமானியர் சிலர் நகைக்கவும், சிலர் வாயில்வந்தவாறு பேசவும், சிலர்பகைகொள்ளவும், சிலர் ஏசவும் இடமுண்டாயிற்றென்பதாம். (25

இந்நிலைமைகண்டாண்டி யெங்குமிருந்தாண்டி
கன்னியழித்தாண்டி கற்பைக்குலைத்தாண்டி

(பொ-ரை.) இப்பக்குவநிலைமையினை யுணர்ந்து, சர்வவியா பகமாயிருந்த முதல்வன் (நாயனுகைஎழுந்தருளிவந்து) கன்னிப்பருவ த்தைக்கெடுத்துக் கற்பினை நீக்கினன்.

(கு - ரை.) கன்னிகழித்தலாவது ஆன்மநாயகியுடன் சிவபெரு மானுகிய நாயகன்கலந்து சிவானந்த இன்பத்தினை விளைவித்தலாம். கற்பைக்குலைத்தலாவது ஏகதேச அறிவுடனிருந்தும் பாசத்திற்கட் டுப் பட்டுக்கிடந்த தன்மையைநீக்கிப் பொதுவான அறிவுத்தன் மைத்தந்து எல்லாவற்றையும் சிவமாகப் பாவிக்கும் நினைவினைக் கூட்டிவைத்தலாம். (26)

கற்புக்குலைத்தமையுங் கருவேரறுத்தமையும்
பொற்புக்குலைத்தமையும் போதமிழந்தமையு

(பொ - ரை.) கற்பினை நீக்கினமையும், பிறப்பினையொழித்த மையும், அழகைக்கெடுத்தமையும், அறிவினையிழந்தமையும்.

(கு - ரை.) ஆசாரியரனுக்கிரகத்தினுல் ஏகதேச அறிவுபொது அறிவாக விளங்கியது, இனிச்சென்மமெடாதபடி செய்தது இலவு கீக கோலமாறியது, தற்போதமிழந்தது என்பதாம். (27)

என்னவினைவருமோ வின்னமெனக்கென்றறியேன்
சொன்னசொல்லெல்லாம் பலித்ததடிசோர்வறவே.

(பொ ரை) நடந்ததுபோக இனிமேலும் என்னென்னதுன் பம் உண்டாகுமோ நானறிகிலேன், 'ஆனுனும்' எனது ஆசாரி

யன் சொன்ன சொல்லெல்லாம் தவறாமல் பலித்துவருதலினால் வினைவாராதென்று நம்பிக்கையுண்டு:

(கு - ரை) ஒருக்கால் ஏதாவது இனி துன்பம் விளையுமோவெனச் சந்தேகிக்கினும், ஆசாரியர் அனுக்கிரகவார்த்தை இதுகாறும் பிரத்தியட்சமாகப் பலித்துவருதலினால் அவர்வாக்கின்படி யாதொரு வினையும் வாராதென்றே தீர்மானிக்கின்றேனென்பதாம் (28)

கங்குல்பகலற்றிடத்தே காட்டிக்கொடுத்தாண்டி
பங்கமழித்தாண்டி பார்த்தானைப்பார்த்திருந்தேன்.

(பொ - ரை.) இரவும்பகலுமில்லாத இடத்திலே என்னைச்சேர்ப்பித்தான், மலத்தினையொழித்தான், இங்ஙனஞ்செய்யவே என்னைப்பார்த்துக்கொண்டிருந்த சிவபெருமானையே நானிப்போது பார்த்துக்கொண்டிருந்தேன்.

(கு-ரை.) கங்குல் பகலற்ற இடமாவது கேவல சகலமற்றவிடம், காட்டிக்கொடுத்தல் திருவருளைக்கூட்டிவைத்தல், பங்கமழித்தல் ஆணவத்தைநீக்கல், பார்த்தானைப் பார்த்தலாவது மலத்தடிப்பால் தனக்குநேரே பிரத்தியட்சமாகக் காணாது தன்னில்மறைந்து பார்த்துக்கொண்டிருந்த சிவபெருமானை இப்போது மலமொழியப்பெற்று நேரேதெரிசித்தலாம். (29)

சாதிபிற்கூட்டுவரோ சாத்திரத்திற்குள்ளாமோ
ஓதியுணர்ந்ததெல்லா முள்ளபடியாச்சுதடி.

(பொ-ரை.) இனிக்குலத்தினில் கூட்டிக்கொள்ளுவார்களோ இப்போது ஏற்பட்டநடக்கை சாத்திரத்திற் சொல்லப்பட்டது தானோ, படித்துத்தெரிந்தவையெல்லாம் உண்மையாகவிளங்கியது.

(கு-ரை) எல்லார் வீட்டினிலும் இரக்கத் துணிந்துகொண்டமையின் சாதியில்கூட்டுவரோ எனவும், நன்மை தீமையிழந்து நடக்கின்றவொழுக்கம் சாத்திரசம்மதமாமோ வெனவும், முத்தியே படித்து அறிந்த யாவும் அனுபவத்தில் விளங்கியதுஎன்பதாம். (30)

என்னகுற்றஞ்செய்தேனோ எல்லாருங்காணமல்
அன்னைசுற்றமெல்லா மறியாரோவம்புவியில்.

(பொ - ரை.) நான் உலகின்கண்ணே யாவருமறியாதபடி என்ன தீமைகள்செய்திட்டேனோ அத்தீமைகள் என்னுடனிருந்ததாய் முதலிய உறவினரெல்லாமறிந்திராரோ.

(கு- ரை) நான் இல்லறத்திலே கட்டுப்பட்டிருந்தகாலத்தில் பிரபஞ்ச போகவிச்சையால் செய்திருந்தபாவங்கட்கு அளவில்லை என்பதைத் தெரிந்தசுற்றத்தினர் இப்போது எடுத்துத்தூற்ற முன்வருவர் என்பதைக் குறிப்பாகவிளக்கினர். (31

கொன்றாரை தின்றேனோ தின்றாரைகொன்றேனோ
என்னதெல்லாமெண்ணு மிச்சைமறந்தேனோ.

(பொ-ரை) என்னைக்கொன்றவரை நானொருக்கால் புசித்தேனோ, என்னைப்புசித்தவரை நானொருக்கால் கொன்றேனோ, செய்த தீமைகளை யெண்ணியெண்ணி வருந்தும் தன்மையைச் செய்யாதவனாயினேனோ.

(கு-ரை) எந்தச்சீவன் ஒருகாலத்தில் என்னைக்கொன்றதோ அந்தச்சீவனை நானும் ஒருகாலத்தில்கொன்று தின்றிருப்பேன், எந்தச்சீவன் என்னையொருகாலத்தில் தின்றதோ அந்தச்சீவனை நான்

கொண்டிருப்பேன் இங்ஙனம்செய்தபின்னர் இத்திமைக்காக விரங்கினேனுமில்லையென்பதாம். (32)

சாதியிற்கூட்டுவரோ சமயத்தோரெண்ணுவரோ
பேதித்துவாழ்ந்ததெல்லாம் பேச்சுக்கிடமாச்சுதடி.

(பொ-ரை) யாதாமொரு சாதியிலென்னை யேற்றுக்கொள்ளுவரோ, யாதாமொரு சமயத்தினனென வென்னைக் கொள்ளுவரோ இன்னசமயம் இன்னசாதியென்று பாராட்டி யனுபவித்ததெல்லாம் பேச்சுக்கிடமாயதேயொழிய வேறு பிரயோசனமில்லை.

(கு-ரை.) எல்லாச்சாதியரினும் நானுயர்ந்தசாதி யெனவும், மற்றைச் சமயத்தினரைக் காட்டிலு நானுண்மைச் சமயத்தவனெனவும் ஏகதேசப்படுத்தி வாழ்ந்த வாழ்வனைத்தும் பெரியோர்கள் இழிவாகப்பேசுதற்கு இடமாயதேயன்றி யாதொரு பிரயோசனமும் விளைந்ததில்லை யென்பதாம். (33)

கண்டார்க்குப்பெண்ணலவோ காணார்க்கும்காமமடி
உண்டார்களுண்டதெலா மூணல்லதுண்பர்களோ

(பொ-ரை) உண்மையினைக் கண்டவர்க்கு உண்மையினைக் காணாதநான்பெண்டன்மையலவோ, அனுபவியாதவர்கட்கே இச்சையுண்டாகும், அனுபவிப்பவர்கள் அனுபவிப்பதெல்லாம் பிராரத்துவ உணவல்லாது வேறுவகையில் அனுபவிப்பவரோ.

(கு-ரை) உண்மையினை விசாரித்துத்தேர்ந்த பெரியோரே ஆண்பிள்ளையெனவும், அங்ஙனம் விசாரியாதார் ஆணாயிலும் பெண்மைத் தன்மையுடையரே யெனவும். யாதர்சுக மனுபவியாதவர்கட்கே

இன்பமதிகரிக்கு மாறுபோல, திருவருளினை யடையாதவர்கட்கே மோட்சதாகமாகியவிச்சையதிகமாமெனவும், உலகத்திலொவ்வொருவரு மனுபவிப்பது பிராரத்துவத்திற்குத் தக்கபடியேயல்லது வேறில்லையெனவும் கூறியபடியாம். (34)

கொண்டவர்கள்கொண்டதெல்லாங் கொள்ளாதார்கொள்ளுவரோ
விண்டவர்கள்கண்டவரோ கண்டவர்கள்விண்டவரோ. [ரோ

(பொ-ரை.) ஆசாரியனிடத்துப் பெற்றவர்கள் பெற்றபேறனைத்தும் அங்ஙனம் பெறாதவர்கள் பெறும்பேறுமோ, பேசுபவர்கள் உண்மையறிந்தவரோ, உண்மை யறிந்தவர்கள் வாய்விட்டுப்பேசுவரோ.

(கு-ரை.) நேரே ஆசாரியனிடத்தை யடைந்து அவர்பால் பெற்ற அனுக்கிரகத்தை மற்றையர் எவ்விதத்தினும் அடையார்கள். பூரணத்திருவருளினிற்றிளைத்தவர்கள் மவுனமுற்றிருப்பார்கள், பெறாதார் பெற்றவரைப்போலப் பேசித் திரிபவரென்பதாம் 'கண்டவர் விண்டிலர் விண்டவர் கண்டிலர்' என்னும் பழமொழியைக்காண்க

பண்டாயநான்மறைகள் பாடும்பரிசலவோ
தொண்டாயதொண்டருளந் தோற்றியொடுங்குமதோ.

(பொ-ரை) பழமையாகிய நான்குவேதங்கள்பாடுந் தன்மையுடையதன்றோ, அடிமைபூண்ட அடியார்கள் மனத்துன்கண்ணே தோன்றி அம்மனத்திலேயே யொடுங்கத்தக்கதன்றோ.

(கு - ரை.) சிவபெருமானை வேதங்கள் எக்காலமும் புகழ்ந்து பாடிக்கொண்டே யிருப்பதே யதன் சுபாவமென்பார் 'பாடும் பரிசலவோ, எனவும், அப்பெருமான் சிவனடியார்கள் இருதயத்திலேயே

தோன்றி அவரிடமே தங்கியிருப்பானென்பார் 'தோற்றியோடுங்குமதோ' என்றனர். (36)

ஓதவரிதோ வொருவருணர்வரிதோ
பேதமறவெங்கும் விளங்கும்பெருமையன்காண்

(பொ-ரை) வாக்காலெடுத்துச் சொல்லுதற் கரிதானவனே, ஒருவர் உணர்ந்துகொள்ளுவதற்கு அருமையானவனே, அபேதமாக சர்வவியாபகமாகப் பிரகாசிக்கும் பெருமையினை யுடையவன் 'சிவபெருமான்'

(கு-ரை) எவ்விடத்தும் தோய்வறச் சர்வவியாபியாய் நின்ற பெருமானைத் தற்போத முனைவுகொண்டு ஒருவர் சொல்லவும், ஒருவர் அறியவும் கூடாதென்பதாம். (37)

வாக்குமனமுங் கடந்தமனேலயன்காண்
நோக்கவரியவன்கா ணுண்ணியபரி னுண்ணியன்காண்.

(பொ - ரை.) வாக்கினுக்கு மனத்தினுக்கு மெட்டாது அடியார்கள் மனத்திலேலயப்பட்டு இருப்பவன். பிரத்தியட்ச காட்சியினுக் காணப்படாதவன், நுட்பமாயறிபவர்பாலும் நுண்மையாக விளங்குபவன்.

(கு - ரை.) தற்போதமுன்னிட்ட வாக்கினுக்கும் மனத்தினுக்கு மெட்டாதவனாயினும், திருவருளைமுன்னிட்டறியமனத்தில் விளங்குபவன், அஞ்ஞானிகள் பார்ப்பதற்குக்கூடாதவன், கூர்ந்துவிசாரிக்க அதிநுட்பமாக விளங்குபவன் சிவபெருமானென்பதாம். (38)

சொல்லுக்கடங்கான்காண்சொல்லிறந்துநின்றவன்காண்
கல்லுளிருந்தகனலொளிபோ னின்றவன்காண்.

(பொ-ரை) சொல்லினிற் கட்டுப்படாதவன், சொல்லனைத்தும் கடந்தவன், கல்லினுக்குள்ளேபிரகாசிக்கும் அக்கினிப்பிழம்பாய் நின்றவன்.

(கு-ரை.) சிவபெருமான் பாசசாலமாகிய சொற்களினாலே பிரதிபாதிக்கவும் தீர்மானிக்கவும்முடியாதிருந்தவன், எனவேஞானிகளுடைய சுயம்புலிங்கமாகவும் ஆங்காங்கு விளங்கியிருப்பவன் (39

சுட்டிறந்தபாழதனிற் சுகித்திருக்கச்சொன்னவன்காண்
எட்டிலெழுத்தோ எழுதினவன்கைப்பிழையோ.

(பொ-ரை.) ஏகதேசவறிவினல் காணுதற்கரியசிதாகாயத்தில் சுகமாகவாழும்படி கட்டளையிட்டனன். ஆனல் ஏகதேசவறிவினல் காணலாமெனச்சிலநூல்கள் கூறுவது சாமானியர் சிலரெழுதிவைத்த சுவடியின் வார்த்தையோ, உண்மையினையேயெழுதும்போது பிழைபட்டுப்போய்விட்டதோ அறியேம்.

(கு-ரை.) சிதாகாயமானது எல்லாவற்றையும் விழுங்கிகொண்டு வியாபகமாகவிருத்தலின் சுட்டறிவிற் கெட்டாதென்றனர் அவ்வாகாய அருள்வெளியில்கலந்துகொள்ள வேண்டுமென்பார் 'சொன்னவன்காண்' என்றனர். இத்தகைவஸ்து சுட்டுக் கடங்குமெனக் கூறும்நூல் பிரயோசன மில்லையென்பார் 'எழுத்தோ' 'பிழையோ' என்றனர். (40)

சும்மாவிருக்கவைத்தான் சூத்திரத்தைநானறியேன்
அம்மாபொருளிதென வடையவிழுங்கினண்டி.

(பொ-ரை.) சும்மாவிருக்கும்படிக் கட்டளையிட்டானுடைய தந்திரத்தினை யின்னதென நானறியேன். அங்ஙனம் சும்மாவிருக்க

வைத்த உண்மையினை ; தெரிந்துகொண்ட மாத்திரத்தில் என்னைத் தானாக்கிக்கொண்டனன் இது ஆச்சரியம்.

(கு - ரை) ஆசாரியன் மவுனநிலையி லிருக்கும்படி கட்டளையிட்டதனை நான் முதலில் தெரிந்துகொண்டேனில்லையாயினும் அதனை அனுபவத்தில் கொண்டுவந் துண்மையறிகையில் திருவருள் மயமாக நின்றனனென வியந்துபாராட்டினர். (41)

பார்த்தவிடமெல்லாம் பரமாகக்கண்டேனடி
கோத்தநிலைகுலைத்த கொள்கையறியேனடி

(பொ-ரை) தரிசித்த விடமனைத்தும் சிவமயமாகவிருந்தது தத்துவங்களால்கட்டப்பட்டிருந்த உடனிலைகலைந்தவகையறிந்தேனில்லை

(கு-ரை) 'எங்கும் சிவமொழிய வில்லையவன்றன்னை' என்றதற்கேற்ப ஞானிகட்குப் பிரபஞ்ச முழுவதும் சிவமாந் தன்மையாகத் தரிசனமுண்டாகுமாகலின் 'பரமாகக்கண்டேன்' என்றனர். ஆச்சாரியன் அனுக்கிரகத்தால் தத்துவக்கூட்டத்தின் செயல் இன்னவழியாகப் போயினதென வறியவராமையின் 'கொள்கையறியேன்' என்றனர்.

மஞ்சனமாட்டி மலர்பறித்துச்சாத்தாமல்
நெஞ்சுவெறும்பாழானேனின்றநிலைகாணேனடி.

(பொ-ரை) அபிடேகம்செய்து புட்பத்தினைப்பறித்து அருச்சிக்காமல் மனத்தினை வீண்பாழாக்கினன், ஆகையினால் பெருமான் எழுந்தருளிய 'உண்மை' நிலையினைக் காணாதவனாயினேன்.

(கு - ரை) சிவாலயத்தி லெழுந்தருளியிருக்கும் சிவலிங்கப்பெருமானுக்கு மகாபிஷேகம்செய்து நன்மலர்களைக்கொண் டருச்சித்து

வணங்கினர்க்கே மனம் சுத்தமாகமெய்மையாகிய நிலைமையறியவேது உண்டென்பதாம்.

பாடிப்படித்திருந்தும் பன்மலர்கள்சாத்தாமல்
ஓடித்திரியாம லுருக்கெட்டுவிட்டேண்டி.

(பொ-ரை) பாடவும் படிக்கவும் தெரிந்திருந்தும் நூற்களிற் குறித்தபடி பல புட்பங்களைக்கொண்டு சிவபெருமானை யர்ச்சிக்காமலும், திவ்யதலங்களுக்கு யாத்திரைசெய்யாமலும் தேகத்தை வீணுக்கினேன்.

(கு-ரை.) சாத்திரங்களைக் கற்றுக் கல்விமானாக விளங்கியும் அச்சாத்திரங்களைக் குறித்தபடி சிவபூசைபண்ணாமலும், புண்ணிய தலங்களுக்குச்சென்று தரிசியாமலும் வீணாயினனென்பார் 'கெட்டு விட்டேன்' என்றனர். 'மூர்த்தி தலந்தீர்த்தம் முறையாற்றொடங்கினர்க்கோர், வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே' என்றதனாற் காண்க.

மாணிக்கத்துள்ளொளிபோல் மருவியிருந்தாண்டி
பேணித்தொழுமடியார் பேசாப்பெருமையன்காண்.

(பொ-ரை.) மாணிக்கத்தின் கண்ணே பிரகாசிக்கும் ஒளியினைப்போல சத்தியிற்றிருமேனிகொண்டு விளங்கினன். அவனை விரும்பி வணங்கும் அடியார்கள் வேறுபிரித்துக்கூறுதற்குக் கூடாதமேன்மை நிலையினையுடையவன்.

(கு-ரை.) மணியும் அதினின்றும் வேறுபிரிக்கக்கூடாத ஒளியும்போலச் சிவசத்தியாகிய திருமேனிக்கொண்டு விளங்குபவன் என்பார், 'மாணிக்கத்துள்ளொளி' என்றனர். உண்மைச் சிவனடியார்கள்

மவுன நிலையிலிருந்து அனுபவிக்கக்கூடிய பதார்த்தம் பரமசிவமென்பார் 'பேசாப்பெருமையன்காண்' என்றனர்.

அன்றுமுதலின்றளவு மரியாப்பருவமதில்
என்றும்பொதுவா யிருந்தநிராமயன்காண்.

பொ-ரை பிறந்தநாள்முதல் இன்றையவரையில் என்னை நானறியாதகாலமுழுவதும் 'சிவபெருமான்' என்னிடத்து அத்துவிதமாக யிருந்த நிராமயனுவன்-

கு-ரை. ஆன்மாவுடன் பரமான்மா எந்நாளும் அத்துவிதமாகவிருந்துகொண்டிருப்பானெனவும், அங்ஙனமிருக்கிலும் அப்பெருமான் அவரவர்கள் கன்மத்திற்குத் தக்கபடி பக்குவா பக்குவங்களை நோக்கித்தோன்றியு மறைதலுமாக விருப்பனென்பதாம். (46

சித்தவிகாரத்தாலே சின்மயனைக்காணுமல்
புத்திகலங்கிப் புகுந்தேன்பொறிவழியே.

பொ-ரை. மனமயக்கத்தாலே ஞானமாகிய சிவபெருமானைத் தரிசியாமல் அறிவுமயங்கி ஐம்பொறிவழியே யலைந்தேன்.

கு-ரை. மெய்கண்ட சாத்திரங்களைவாசித்து உண்மையினைத்தேராததன்மையினுல்மனம்கலங்கிய தெனவும்அது காரணமாகவே பெருமானை யறிதற் கேதுவில்லாமல் போயிற்றெனவும் அங்ஙனம் போகவே மனமானது பிரபஞ்சமுகமாக ஐம்பொறிவழியேசென்றதென்பார் 'புகுந்தேன் பொறிவழியே, என்றனர். 47

பத்தியறியாமற் பாழிற்கவிழ்ந்தேண்டி
ஒத்தவிடநித்திரையென் ருெத்துமிருந்தேண்டி.

பொ- ரை. சிவபக்தி யின்னதெனவறியாமல் மாயாகாரியமாகிய இருட்டிலழுந்துகிடந்தேன். சௌக்கியமானவிடத்தில் நித்திரையே சுகமென்றுதங்கிவாழ்ந்தேன்

கு ரை. 'பத்திவலைபிற் படுவோன்காண்க, என்றதனால் பத்தியில்லாதவர்கள் ஒரு பிரயோசனத்தை யடையாமல் நரகத்திலாழ்வர் என்பார். 'பாழிற்கவிழ்ந்தேன்' என்றனர். இடம் சுகமாகவாய்ந்த காலத்தில் நித்திரைசெய்தேனேயல்லது நிஷ்டை கூடினேனில்லை யென்பார் 'நித்திரையென் றொத்துமிருந்தேன்' என்றனர். 48

செத்தாரையொத்தேனடி சிந்தைதெளிந்தேனடி

மற்றொருமில்லையடி மாறுமாற்றங்காணேனடி.

பொ- ரை. இறந்தபிணத்தினை யொத்திருந்தேன் சிந்தைதெளிவுகண்டேன், சுட்டியறிதற் 'கொருவருமில்லை, வார்த்தைசொல்ப எவரும் வேறுகிடையாது.

கு- ரை. தத்துவங்களின் சேஷ்டைகள் பிரபஞ்சமுகமாகச் சிறிதும் செலுத்தலில்லாமையால் 'செத்தாரையொத்தேன்' என்றனர். ஆசாரியன்பால் கேட்டவற்றையெல்லாம் நன்குசிந்தித்து உண்மை தெளிந்துகொண்டேனென்பார், தெளிந்தேன்' என்றனர். மவுனநிலையோடு தங்கினதால் எனக்கன்னியரும், அன்னியவார்த்தைகளும் கண்டேனில்லை யென்றனர். 49

கல்வியல்ல கேள்வியல்ல கைகாட்டுங்காரணங்காண்

எல்லையளவற்றதடி யெங்குநிறைந்ததடி

பொ-ரை, எனக்கேற்பட்ட மவுனநிலை கல்வியினாலேனும்கேள்வியினாலேனும் கிடைத்ததல்ல அதுகுறிப்பாற் றெறிவித்ததினா

லே கிட்டியது அவ்வுண்மை அளவுபட்டதன்று எங்கும் பரிபூரண நிலையினையுடையது.

கு- ரை. ஆசாரியமூர்த்தியின் சின்முத்திரையுபதேசத்தாலே யே உண்மைநிலை விளங்கிவிட்டமையின் 'கைகாட்டுங்காரணங்காண்' எனவும், அவ்வுபதேசத்தால் விளைந்ததிருவருள் வியாபக மானதால் பூரணத்தன்மைவாய்ந்த தெனவும் கூறினர். 50

வாசாமகோசரத்தை மருவியிடங்கொண்டாண்டி
ஆசூசமில்லாண்டி யறிவுக்கறிவாண்டி,

பொ- ரை. வாக்குக்கு எட்டாதயிடத்தினைப் பொருந்தியிருப்பவன் பெருமான், ஆன்மாக்களின் அறிவினுக்கு அறிவாகி எவரிடத்தும் அசூயையில்லாதிருப்பவன்.

கு- ரை. பெருமான் ஆன்மாக்களின் வைகரிவாக்கினுக்கு எட்டாத சிதம்பராகாயத்தில் இருப்பவனெனவும் ஆன்மாக்களின் சிற்றறிவினை யதிட்டித்துக்கொண்டு அவர்கள்கன்மத்திற்குத் தக்கபடி பிரேரேபித்துத்தான தாககற்றுவிளங்குபவனாகலின் இடங்கொண்டான், 'ஆசூசமில்லான்' எனவுங்கூறினர் 51

பத்துத்திசைக்கு மடங்காப்பருவமடி
எத்திசைக்குமெங்கு மிடைவிடாதேகமடி

பொ- ரை. பத்துத் திக்குக்களிலும் அடங்காத நிலையினையுடையன் ஆகலினானும் எவ்விடத்தினும் சிறிதுஇடமில்லாது ஒன்றாயிருப்பவன்.

கு- ரை. பெருமான்பரிபூரண விலக்கணம் வாய்ந்தவன் ஆகலினானும் யனைத்தும் அவன்பால் வியாப்பியமுற்று விளங்கலானும் அவனில்லாதவிடம் சிறிதும் கிடையாது என்றனர்

தித்திக்கவூறுமடி சித்தமுடையார்க்குப்
பத்திக்கடலுட் பதித்தபராஞ்சோதியடி.

பொ-ரை. பெருமானிடத்து மனமுடையவர்கட்கு அவர் இருதயத்தில் சுவைப்பொருளாய் விளங்குபவன், அடியார்களுடைய பத்தியென்னும் சமுத்திரத்தில் இளைக்கும் அருட்பெருஞ்சோதி

கு-ரை. சிவத்தியானத்தி லுறைந்தவர்கள் மனத்தின் கண்ணே இன்பசுவையுடன் விளங்கிக்கொண்டிருப்பவனென்பார் 'தித்திக்கவூறுமடி' என்றனர் விசேஷபக்தி யுடையார்மாட்டு நீங்காது எந்நாளுமுறைபவன்என்பார் 'பத்திக்கடலுட்பதிந்த, என்றனர். 53

உள்ளுணர்வாய்நின்றவர்த முணர்வுக்குணர்வாண்டி
எள்ளளவுமுள்ள திலே யேறிக்குறையாண்டி.

பொ-ரை அதோகமுகவறிவு வியாபாரத்துடன் கூடியவர்கள் அறிவிலேஅறியப்படுபவன், அன்பர்கள்மனத்தில் ஒரேபடித்தாகவிருப்பன்.

கு-ரை. பிரபஞ்சமுகமாகவிஷயங்களைச்செலுத்திப் போகானுபவமுடையவரையில் தோன்றாது உண்முகநாட்டம் பெற்றவளவில் நன்குவிளங்குவனென்பார் உணர்வுக்கு உணர்வான் என்றனர் ஆன்மாக்கள் மனத்தில் சிவவிளக்கம் தோன்றுவதும் மறைவதும் போல அவரவர்கள் கன்மத்திற்குத் தக்கபடி விளங்கினும் அப்பெருமான் எக்காலத்தும் ஒரேதன்மையாக இருப்பனென்பார் 'யறிக்குறையான் என்றனர். 54

தூருந்தலையுமிலான் றோற்றமொடுக்கமிலான்
ஆருமறியாம லகண்டமாய்நின்றாண்டி

பொ- ரை. அடியும்முடியுமில்லாதவன், உற்பத்தியும்நாசமு மில்லாதவன், ஒருவராலு மறியப்படாது வியாபகமாகவிருப்பவன்.

கு- ரை: அகண்டிதனானபடியால் அடிமுடிகாணுவது அரிது நித்தியனானபடியால் தோற்றமொடுக்கமில்லை சர்வவியாபகனாகலின் ஏகதேசவுணர்வாலறியப்படாதவனென்பதாம் 55

எத்தனையோவண்டத் திருந்தவர்களெத்தனைபேர்
அத்தனைபேருண்டாலும் அணுவுங்குறையாண்டி

பொ- ரை. அளவில்லாத அண்டங்களில் வாழ்கின்ற ஆன்மாக்கள் எத்தனையோகணக்கிலடங்காதவராவர் அவ்வளவு ஆன்மாக்களும் புசித்தாலும் சிறிதும்குறையாதவன்.

கு-ரை. சிவபெருமானுடைய கிருபாசமுத்திரமானது அளவுபடாநித்தியத்தன்மையுடையது, இவ்வளவெனக்கணக்கிலடக்கக்கூடாதஆன்மகோடிகள் அக்கிருபா சமுத்திரத்திற்படிந்து திருவருளையனுபவித்தாலும் பரமாணுமளவும் அதுவற்றாது. 'பூரணக் குறையுமோ என்றனர் தாயுமானவர். 56

வாக்குமனமும்வடிவுமிலாபொருள்காண்
போக்குவரவுமிலான் பொருவரியபூரணன்காண்

பொ-- ரை. வாக்கும், மனதும் உருவமும் இல்லாத வொருபொருளாயுள்ளவன், போக்குவரத்தில்லாதவன் ஒப்பற்ற பரிபூரணன்.

கு- ரை. தனக்கெனவடிவொன்றில்லாத நிட்களனாய் விளங்குபவ ன் சிவபெருமானாகலின் வாக்குமுதலிய **வில்லான்** என்றனர். எங்கு மொரு படித்தாய் சர்வவியாபகனாகலின் ஏகதேசப் பொருளினைப் போலப் போக்குவரத்தற்றவனென்றனன்- 57

காட்சிக்கெளியான்காண் கண்டாலும்காணான்காண்

மாட்சிமனம்வைத்தார்க்கு மாணிக்கத்துள்ளொளிகாண்

பொ- ரை. திருவருட்காட்சியினுக்கு இலேசாக எட்டக்கூடியவன், அங்ஙனம் திருவருளைக்கொண்டு கண்டாலும் பிரத்தியட்சமாகவூன க்கண்ணினுக்குக் காணாதவன், பெருமைபொருந்திய மனத்தின்கண் ணே தியானித்தார்க்கு மாணிக்கவொளிபோல் பிரகாசிப்பவன்.

கு- ரை. திருவருளைக்கொண்டு விசாரிக்கின்ற அடியவர்கட் குமாத்திரம் வெளிப்பட்டுசிவபெருமான் காட்சியளித்தருளுவன ன்றி மற்றபடி தரிசனங்கொடானென்பார் '**காணான்காண்**' என்ற னர் அன்பர்மனத்தின்கண்ணே மணிவொளிபோற் விளங்குவானெ ன்பார் உள்ளொளிகாண் என்றனர். 58

வாழ்த்தியவனை வழிபட்டால்மன்னுயிர்கள்

தோற்றவரியான்காண் சொல்லிறந்தசோதியன்காண்

பொ-ரை. தற்போதமுனைவால் சொற்களைக்கொண்டு வாழ் த்துதல்செய்து வணங்கினால் ஆன்மகோடிகட்குப்பிரத்தியட்சமாகத் தோற்ற அருமையானவன். பாசசாலசொற்களுக்கு மெட்டாததபம சோதிசொரூபமானவன். 59

கு- ரை. திருவருளை முன்னிட்டு அன்பின்மயமாகவிருந்து வாழ்த்துபவர்க்கே காட்சிக்கொடுத் தருளுவனெனவும், சிவகாரணங்களையடைந்த மெய்ஞ்ஞானிகள் வாக்கின்கண்ணெழுந்த சுத்தவைத்த சொற்களுக்கே செவிகொடுப்பவனெனவும் கூறுவாராயினர். 59

ஐயமறுத்தவனை யாராய்வாருண்டானால்
வையகத்தேவந்து மலர்ப்பாதம்வைத்திடுவான்

பொ- ரை. ஆன்மாக்கட்கு உண்டாகிய சந்தேகத்தினை நீக்கினவனை விசாரித்துணர்வாராகில் சிவபெருமான் பூமியிலேயெழுந்தருளி அவர்கட்கு அவனுடைய திருவடியைச் சிரசில் தரித்தருளுவன்-

கு- ரை. மெய்கண்ட நூல்களைப் படித்துப் பதியிலக்கணந்தேர்ந்து உண்மை விசாரிப்பவர்பால் பெருமான் ஆசாரியகோலங்கொண்டுவந் தெழுந்தருளித் திருவடி தீட்சை செய்தருளுவனென்பார் 'பாதம்வைத்திடுவான், என்றனர். 60

அணுவுக்குமேருவுக்கு மகம்புறமாய்நின்றான்காண்
கணுமுற்றுஞானக் கரும்பின்றெளிவான்காண்

பொ- ரை, அணுவினிடத்தும், மேருவினிடத்தும் உள்ளும் புறம்புமாகவியாபகமாய் எழுந்தருளியவன், கணுமுற்றியுள்ள ஞானமாகியகரும்பின்தெளிவாக விளங்கும் சாற்றின் சுவையை யொத்தவன்.

கு- ரை. பரமாணுரூபமாய் அதிநுட்பமான பொருளாயிருக்கினும் மேருமலையினைப்போலப் பெரியவடிவான பொருளாயிருக்கி

னும் பெருமான் அப்பொருள்களில்' எள்ளின் எண்ணெயைப்போல, வியாபித்து நிற்பவனெனவும், ஞானமே சொரூபமாகிய கரும்பினிடத்து ஞேயமான சுவைப்பொருளால் விளங்குபவனெனவும் கூறிப்போந்தார். 61

எந்நாளுமிந்நாளு மிப்படியாயப்படியாய்ச்
சொன்னாலுங்கேளான்காண் தோத்திரத்திற் கொள்ளான்காண்.

பொ-ரை. எக்காலத்தும் இக்காலத்தும் இவ்விதமெனவும் அவ்விதமெனவும் ஒருவன் கூறினும் கேட்கமாட்டான் தனதுகாது கொடான்.

கு-ரை பதியுண்மை விசாரித்துத் தேர்ந்து திருவருளிற்கட்டுப் பட்டுத்தோத்திரம்புரிகின்ற மெய்ஞ்ஞானிகளாகிய சிவனடியார்கட்கேதமது திருச்செவியினைப் பெருமான்சாத்துவரேயன்றிமற்றையரைக்கவனியான் என்பார் 'கொள்ளான்காண்' என்றனர். 62

ஆத்தாளுக்காத்தாளா மப்பனுக்குப்பனுமாம்
கோத்தார்க்குக்கோத்தநிலை கொண்டகுணக்கடல்காண்

பொ-ரை. தாய்க்குத்தாயாகியும், தந்தைக்குத் தந்தையாகியும் உறவினர்க்கு உறவினராகியும் வாய்ந்த கிருபாசமுத்திரம்.

கு-ரை. தன்பால் அன்புபூண்டு தன் திருவடி தொழுதுவரும் சிவனடியார்கட்குத்தாயினைப்போல் ஞானமிர்தம்ஊட்டியும், தந்தையினைப்போல் பாசமணுகாதபடி காத்தும், உறவினரைப்போல வேண்டிய அருளை உதவியும் பெருமான் வருவனென்பதாம்

இப்போபுதிதோடி யெத்தனைநாளுள்ளதடி
அப்போதைக்கப்போ தருளறிவுந்தந்தாண்டி

பொ-ரை., இன்றுதான் நூதனமாக வுதித்தவனோ எத்தனை யோநாளாகவுள்ளவனன்றோ அப்பப்போது திருவருள் கொடுப்பவனேயாம்.

கு-ரை. "முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப்பழம்பொருளாயுள்ளவன்" ஆகலின் பெருமான் அநாதி நித்தியனாகவெழுந்தருளியிருந்து அடிக்கடிபிறந்து வருகின்ற ஆன்மாக்கட்கு அவ்வவ்காலத்தில் அவரவர்கள் கன்மத்தினுக்குத் தக்கபடி திருவருளைக்கூட்டி முடிப்பவனென்றபடியாம். 64

பற்றற்றார்பற்றாகப் பற்றியிருந்தாண்டி
குற்றமறுத்தாண்டி கூடியிருந்தாண்டி

பொ-ரை. பாசப்பற்றிநின்று நீங்கின ஆன்மாக்களையே பற்றாகக்கொண்டு அவர்பால் தங்கியிருந்தான் அவர்கள்குற்றமனைத்தையும் ஒழித்தான் அவருடன் கலந்திருந்தான்.

கு-ரை- ஆன்மாக்களுடன் அத்துவிதமாகவிருக்கும் சிவபெருமான் ஆணவத் தடிப்புள்ளவரையில் வெளிப்படாது அது நீங்கவேதோன்றி அவர்கள் பூர்வசென்ம வாசனை யனைத்தையுமொழித்து அவர்களுடன் அளவளாவி யிருப்பனென்பதாம். 65

வெட்டவெளியிலெனை மேவியிருந்தாண்டி
பட்டப்பகலிலடி பார்த்திருந்தாரெல்லோரும்.

பொ-ரை. பகிரங்கமானவிடத்தில் என்னைக் கலந்திருந்தான் அது பகற்காலமேயாம் அனேகரும் கண்டிருந்தனர்.

கு-ரை. அனேகமான சிவனடியார்கள் கண்டுகொண்டிருக்கச் சகலத்தில் சிதம்பர சிதாகாயத்தில் கலந்துகொண்டா னென்பதாம்.

வாழ்வானவாழ்வெனக்கு வந்ததடி வாழாமல்
தாழாமற்றாழ்ந்தேண்டி சற்றுங்குறையாமல்.

பொ-ரை. நல்ல வாழ்வான வொருவாழ்வானது எனக்குக் கிடைத்தது. அதனால் பாசத்தில் தாழாமல் திருவருளிற் றாழ்ந்தேன் சிறிதும் குறைவு அடையாதபடி.

கு-ரை. வாழ்வானவாழ்வு என்பது பிரபஞ்ச வாழ்வினின்று நீங்கிய திருவருள் வாழ்வு தாழாமல் தாழ்வது தற்போதமுன்னிட்டுத் தாழாமல் திருவருளை முன்னிட்டுத்தாழ்வது இங்ஙனம் திருவருள் முன்னிட்டு எவற்றினு நடந்துகொண்டு இத்திருவருள் வியாபகத்தில் கட்டுப்பட்டிருப்பார்க்கு யாதொரு குறையும் வாராதென்பார் 'சற்றுங் குறையாமல்' என்றனர். 67

பொய்யானவாழ்வெனக்குப் போதுமெனக்காணேண்டி
மெய்யானவாழ்வெனக்கு வெறும்பாழாய்விட்டதடி

பொ-ரை. நிலைதவறுதலில்லாத பிரபஞ்சவாழ்வானது எனக்குப்போதுமென வெறுப்படைந்தேன் இல்லை. (இங்ஙனம் வெறுப்படையாததால் உண்மையான திருவருள்வாழ்வுஎனக்குக்கிட்டாமல் பொய்த்துப்போய்விட்டது

கு-ரை. அனேக சென்மாந்தரங்களாகப் பிரபஞ்சத்திலழுந்திக் கிடக்கின்றமையின் அதில் வெறுப்புக்காணேனென்பார் 'போதுமெனக்காணேன்' என்றனர் பிரபஞ்சத்திலழுந்திக்கிடக்குமளவும்

உண்மையான சிவஞானவாழ்வு கிட்டாதென்பார். 'வெறும்பாழாய் விட்டது' என்றனர். 68

கன்னியழித்தவனைக் கண்ணாரக்கண்டேண்டி
என்னியல்புநானறியே னீதென்னமாயமடி.

பொ- ரை. எனது கன்னிப்பருவத்தினைக் கெடுத்தவனைப் பிரத்தியட்சமாகத் தரிசித்தேன் அதனால் என்னுடைய உண்மைத் தன்மையினை நானறிந்தேனில்லை ஈதென்னகாலமோ ¡ அறிகில்லேன்.

கு- ரை. கன்னிப்பருவமானது மலத்தில் கட்டுப்பட்டிருக்குங் காலமளவும். கன்னிப்பருவ மழிதலாவது அம்மல நீங்கச் சிவபெருமான் கலந்த அவசரம். அங்ஙனம் கலந்தபின் இதுகாறும் இருந்த சுதந்தர மிழக்கச்செய்தனர் இது வியப்பே என்பார் 'ஈதென்ன மாயம்' என்றனர். 69

சொல்லாலேசொல்லுதற்குச் சொல்லவாயில்லையடி
எல்லாருங்கண்டிருந்து மிப்போதறியார்கள்.

பொ- ரை. பெருமான் தன்மையினை சொற்களினாலே எடுத்துக்கூறித் தீர்மானித்துப் பேசுதற்கு வாயெழவில்லை இவ்வுண்மையினை எல்லாரு மறிந்திருந்தும் மலத்தடிப்பா லீதுணரவில்லை.

கு- ரை. அன்பின்மயமாகவிருந்து தோத்திரஞ்செய்தலினாலே சிவபெருமான்உண்மையறிதற்கேதுவென எல்லோருநன்கறிந்திருந்தும் அங்ஙனம்செய்யாது வாளாதோத்திரஞ்செய்து அவலமாகின்றாரென்பார் 'இப்போதறியார்கள்' என்றனர். 70

கண்மாயமிட்டாண்டி கருத்துமிழந்தேண்டி.
புண்மாய மிட்டவனை யுருவழியக்கண்டேண்டி.

பொ-ரை. ஆசாரியன் தனது கண்ணினாலே தந்திரஞ்செய் தான் உடனே என்னெஞ்சமிழந்தேன், அங்ஙனம் தந்திரஞ்செய் தானை அரூபமாகத் தரிசித்தேன்.

கு-ரை ஆசாரியன் எழுந்தருளிவந்து நயனதீட்சை செய்த மாத்திரத்தில் என்போதத்தினையொழித்து விட்டேனென்பார் 'இழந்தேன்' என்றனர் அத்தீட்சை யடைந்தபின் அத்தீட்சாபரானாகிய ஆசாரிய மூர்த்தியானவரை நிஷ்களசிவமாகத் தரிசித்தேன் என்பார் 'உருவழியக்கண்டேன்' என்றனர். 71

என்னசொல்லப்போறேனா னிந்தவதிசயத்தைக்
கன்னியிளங்கமுகு காய்த்ததடிகண்ணாரே.

பொ-ரை. என்னவெனவெடுத்துச் சொல்லுவேன் என்முன் விளைந்த இவ்வதிசயத்தினை, சிறிய இளமையான பாக்குமரமானது பிரத்தியட்சமாறக் குலைவிட்டது.

கு-ரை. இளமை மரமொன்றிலே காய்க்காய்த்தது போன்று எனது இளமைவயதிலேயே எனது ஆணவமலத்தினை நீங்கித் திருவருள்விளையும்படி ஆசாரியன் அனுக்கிரகித்தனன். இது எதிர்பாராது வந்த விளைவாகலின் 'இந்த அதிசயம்' என்றனர். 72

ஆர்ந்தவிடமத்தனையு மருளாயிருக்குமடி
சார்ந்தவிடமெல்லாம் சவ்வாதுமணக்குதடி.

பொ-ரை. தங்கிய விடமனைத்தும் திருவருண்மயமாயிருக்கின்றது, அடைந்தவிடமெல்லாம் சவ்வாது பரிமளம் வீசுகின்றது.

கு. ரை. திருவருளிற்றிளைத்த பெரியோர்க்கு எங்கும் திருவருளே தோன்றுமாகலின் 'அருளாயிருக்கும்' என்றனர். சிவஞானிகள் தேகத்தின் சுகந்தவாசமே வீசுமென்பார் சவ்வாது மணக்கும் என்றனர். 73

இந்தமணமெங்கு மியற்கைமணமென்றறிந்து
அந்தச்சுகாதீதத் தருட்கடலில்மூழ்கினண்டி

பொ- ரை- இங்ஙனம் வீசுகின்ற மணமானது இயற்கையிலேயேதோன்றியதெனத் தேர்ந்து அந்த ஆனந்தாதீத கிருபாசமுத்திரத்தில் முழுகினன்.

கு- ரை. சிவகரண முற்றவர்க்குச் செயற்கைமணமும், சிவகரணமுற்றவர்க்கு இயற்கைமணமும் உண்டாதல் அனுபவசித்தமாகலின் இயற்கைமணமென்றறிந்து என்றனர். அத்தகையஇயற்கைமணத்தின் உண்மையுணர்ந்தாரே திருவருளிற் றிளைப்பாரென்பார் மூழ்கினன் என்றனர். 74

இரும்பினுறைநீர்போலவென்னைவிழுங்கிக்கொண்டாண்டி
அரும்பிலுறைவாசனைபோ லன்றேயிருந்தாண்டி.

பொ- ரை. புட்பத்தின்அரும்பினிடத்தே அடங்கியிருந்தமணம்போல அநாதியிலேயே ஆன்மாவுடன் கலந்திருந்தவன் இப்போது இரும்புண்டநீரினைப்போல என்னைக் கவர்ந்துகொண்டனன்

கு- ரை. அரும்பினிடத்தே வாசனை யடங்கியிருந்தது அது மலர்ந்தகாலத்து வெளிப்படல்போல, ஆன்மா மலத்திற் கட்டுப்பட்டிருந்தகாலத்து அவனிடத்தில் மறைந்திருந்தசிவபெருமான் மலநீங்கியகாலத்து வெளிப்பட்டுத் தோன்றுவானென்பார் அன்றேயிருந்

தான் என்றனர். நெருப்பிற்காயந்து அக்கினியமயமாயுள்ள இரும்பினை நீரிற்றோய்த்தால் அந்நீரினை இரும்பு கிரகித்தல்போல, ஞானமயமாயுள்ள சிவபெருமானிடத்து ஆன்மா அத்துவிதமாயது என்பார் விழுங்கிக்கொண்டான் என்றனர். 75

அக்கினிகற்பூரத்தை யறவிழுங்கிக்கொண்டாற்போல்
மக்கினம்பட்டுள்ளே மருவியிருந்தாண்டி.

பொ-ரை. அக்கினியானது கற்பூரத்தினை முற்றும் தன்மயமாக்கிக்கொண்டதுபோல, நான்மறைந்துவிட என்னுள்ளே யெழுந்தருளியிருந்தனன்

கு-ரை. அக்கினிக்குமுன்னே கற்பூரத்தின்தடிப்பு மறைந்ததுபோல பெருமான் திருவருளின்முன்னர் சிவகரணமுற்ற ஆன்மா அத்திருவருள் மயமாவானென்பார் கற்பூரத்தை யறவிழுங்கிக்கொடாப்போல' என்றனர். கற்பூரமலைபாடுதீப்பட்டவிந்தையென என்றார் தாயுமானவரும். இது ஏகதேசஉவமை. 76

கடல்நீருமாறும்போற் கலந்துகரைகாணேண்டி
உடலுமுயிரும்போ லுட்கலந்தாநின்றாண்டி

பொ-ரை. சமுத்திரஜலமும்நதிஜலமும்போலக்கலந்தகாலத்து வரம்புகாணாததுபோல உடலுமுயிரும் 'ஒற்றுமைபட்டதுபோலவும், சிவபெருமான் உயிருடன் அபேதமாகநின்றனன்.

கு-ரை. சமுத்திர நீருடன் ஆற்றுநீர் கலந்தபோது வேற்றுமைதோன்றாதது போலப்பரமான்மாவுடன் ஆன்மா இரண்டறக்கலந்தகாலத்து வேறுபட்டுத் தோன்றானென்பதாம். இது ஏகதேசவுவமையாம். உயிரானது உடலெனத்தானென வேற்றுமையின்றி

அபேதமாய் நிற்றல்போலச் சிவபெருமான் ஆன்மாவுடன் அபேதமாய் ஒட்டி நிற்போனென்பார் 'உடலுமுயிரும்' என்றார் இது முற்றுவமை.

பொன்னுமுறைமாற்றும்போற் பொருவரியபூரணன்காண்
மன்னுமனுபூதியடி மாணிக்கத்துள்ளொளிபோல்-

பொ- ரை. பொன்னும் அதனை யுரைத்துத் தெரிந்துகொள்ளு மாற்று போலவும், மாணிக்கமுமதனுள் விளங்குமொளியைப்போலவும் எங்கும்பரிபூரணனைப்பிரித்து வறியக்கூடாதநிலைபெற்ற அனுபூதித்தன்மையன்காண்.

கு- ரை- பொன்னினின்று மாற்றினையும், மணியினின்றுஒளியினையும் பரித்து அறியக்கூடாதவாறுபோலப் பிரபஞ்ச சராசரப் பொருள்களினின்றும் பெருமானைப்பிரித்து அறியக்கூடாதெனவும் இது சிவானுபூதி யடைந்தகாலத்திலேயே விளங்குமென்பதாம் 78

கங்குகரையில்லாண்டி கரைகாணக்கப்பலடி
எங்குமளவில்லாண்டி யேகமாய்நின்றாண்டி

பொ- ரை. ஓர் ! அளவுகாணப்படாதவன், ஒரு துறையினைச் சாராத நாவாய்போன்றவன், இவ்வளவென அளவிடப்படாதவன் ஒரு பொருளாயிருந்தவன்.

கு- ரை. அண்டபகிரண்டங்களில் உள்ளும்புறம்பும் கலந்து அப்பாற்பட்டு எல்லையறவிளங்கும் சர்வபரிபூரணனென்பதாம்.

தீவகம்போலென்னைச் சேர்ந்தபரசின்மயன்காண்
பாவமொன்றில்லாண்டி பார்த்திடமெல்லாம்பரங்காண்

பொ-ரை. தீபம்போல விளங்கி அடியேனிடமிருந்து விளக்கம் செய்துகொண்டிருக்கும் ஞானமயன், பவமென்பது இல்லான் நோக்குமிடந்தோறும் சிவமாகவிளங்குபவன்.

கு-ரை. வீட்டின்கண்ணே விளக்கிருந்து அவ்வீட்டிருளையோட்டி யாவுந் தோன்றும்படி செய்யுமாறு, உடலின்கண்ணே பெருமானிருந்து மலவிருளை யொழித்துத் திருவருள்தோற்றுமாறு செய்வானென்பார் 'தீவகம்போல்' என்றனர். சிவமாந் தன்மையடைந்தார்சிவமே கண்டிருப்பாராகலின் 'எல்லாம் பரங்காண்' என்றனர்

உள்ளார்க்குமுள்ளாண்டி யூருமில்லான் பேருமில்லான்
கள்ளப்புலனறுக்கக் காரணமாய்வந்தாண்டி.

பொ-ரை. உண்டு என்று கொண்டு உள்ளபொருளாய் விளங்குபவன், அவனுக்கென வொரு இடமும், பெயரும் இல்லாதவன், ஆயினும் ஆன்மாக்களின் வசஞ்சகப்புலன்களின் சேஷ்டைகளை யொழிக்க(ஊரும்பேருங்கொண்டு) ஆச்சாரியவடிவமாய் வந்தனன்.

கு-ரை. தெய்வம் உண்டு என்பார்க்கு அனுக்கிரகம் புரிந்து இல்லையென்பார்க்குச் சும்மாவிருந்துகொண்டு மிருப்பவன். அவன் தனக்கென ஊரும்பேரு மில்லாதவனுக விருந்தாலும் ஊரும்பேருங் கொண்டுவாழும் ஆன்மாக்களின் ஆட்கொள்ளு நிமித்தம் ஊரும் பேரும் கொண்டெழுந்தருளி வருவனென்பதாம்

அப்பிறப்புக்கெல்லாம் அருளாயமர்ந்தாண்டி
இப்பிறப்பில்வந்தா னிவனுகுமெய்ப்பொருள்காண்.

பொ-ரை. முன்பிறப்புக்களனைத்திலும் திருவருளைக்கூட்டி வந்தான் இச்சென்மத்தில் ஆசாரியகோலங்கொண்டெழுந்தருளிவந்தான் இவனே உண்மைப்பொருளாகும்

கு- ரை. இப்பிறப்பில் ஆசாரியனாகவந்து ஆட்கொள்வதற்கு ஏற்ற திருவருள் பூர்வ சென்மங்களி லில்லாவிட்டால் இச்சென்மத்தி லித்தகையபேறு கிட்டாதென்பார் 'அருளாயமர்ந்தான்' என்றனர்.

நீரொளிபோலெங்கு நிறைந்தநிராமயன்காண்
பாரொளிபோலெங்கும் பரந்தபராபரன்காண்

பொ- ரை. நீரினது ஒளியானது அந்நீரிலேயே கலந்திருத்தற் போல வுலகமெங்கும் இரண்டறக்கலந்துள்ள மல ரோகமற்றவன் பூமியிற் சூரியப்பிரகாசம் எங்கும் வியாபித்திருத்தல்போல உலகெங்கும் பரவிய பராபரன்.

கு- ரை. நீரினிடத்து ஒளியானது விளங்கத் தோன்றாதவாறு போல சராசரங்களிடத்துப் பெருமான் தோன்றாது கலந்திருப்பனெனவும் சூரியப்பிரகாசம் எங்குமொருபடித்தாய் வியாபித்திருப்பது போலப் பெருமான் பூரணனாயிருப்பனெனவும் கூறினாராயினர்.

நூலா லுணர்வரிய நுண்மையி னுநுண்மையன்காண்
பாலாறுசர்க்கரைபோற் பரந்தபரிபூரணன்காண்.

பொ- ரை. சாத்திரங்களினாலே அறிதற்கரிய நுட்பத்தினுமதி நுட்பமாய் விளங்குபவன் பாலும் சர்க்கரையும்போலப் பரவியபரி பூரணன்.

கு- ரை. 'பாசமாய் ஞானத்தாலும் படர்பசு ஞானத்தாலு மீச னை யறியவொண்ணாது' என்றபடி பாசசாத்திரங்களினாலும்பசுசாஸ்திரங்களினாலும் தெரியாதவனாகிப் பதிநூல்களாலேயே யறியப்படுவானென்பார் 'நுண்மையன்காண்' என்றனர். பால்குணம்போன்ற

அன்பரிடத்து எல்லாம்சர்க்கரையின் சுவையினைப்போல அவர்பால் விரவி நிற்பனென்பார் 'பூரணன்' என்றனர். 84

உளக்கண்ணுக்கல்லா தூன்கண்ணாலோருமதோ
விளக்குச்சுடரொளிபோல் மேவியிருந்தாண்டி.

பொ-ரை ஒரு அகலைப் பற்றிக்கொண்டிருக்கிற பிரகாசத்தினைப்போல் பொருந்தி யிருந்தவன் மனக்கண்ணுக்குப் புலப்படுவானல்லாது ஊனநேத்திரத்தினால் தெரியத்தக்கதோ.

கு-ரை. தீபம் தனித்து நில்லாது ஒன்றினைப் பற்றிக்கொண்டே யுலகத்தினுக்கு உபகரிப்பதுபோல, பெருமான் குருலிங்க சங்கமங்களை யதிட்டித்துக்கொண்டே ஆன்மாக்கட்கு அனுக்கிரகம் செய்வனென்பார் 'மேவியிருந்தான், என்றனர் அப்பெருமான் திருவருளை முன்னிட்டுப்பார்ப்பார்க்கன்றித்தரிசனந் தரானென்பார் 'ஒருமதோ') என்றனர். 85

கல்லுளிருந்த கனலொளிபோற்காரணமாய்ப்
புல்லியிருந்தும் பொருவரியபூரணன்காண்

பொ-ரை. கல்லினுள்ளே அக்கினிசம்பந்தமானபிரகாசமானது கலந்திருந்தாற்போல எல்லாவற்றிலும் சம்பந்தப்பட்டிருந்தும் ஒப்பற்ற பரிபூரணன்.

கு-ரை. பெருமான் எங்கும் பரிபூரணமாக யிருந்தும் கல்லுட் கலந்த அக்கினிபோலயாவருக்குந் தோன்றாதபடி யிருப்பனென்பதாம். கல்லி லக்கினியுண்டென்பதைக் கல்லுடன் கல்மோதியகாலத்திலுண்டாம் நெருப்பாற் காணலாம். 86

பொற்பூவும்வாசனைபோற் போதம்பிறந்தார்க்குக்
கற்பூவும்வாசனைபோற் காணக்கயவருக்கு

பொ- ரை. ஞானமுடையாருக்கு அழகிய பூவினுதித்த மணம் போலவும், அஞ்ஞானிகட்குக் கல்லாற் செய்யப்பட்ட பூவின் வாசனை தோன்றாதவாறுபோலவு மிருப்பான்.

கு- ரை. சிவபெருமான் ஞானிகட்கு நன்கு வெளிப்பட்டு அனுக்கிரகம் செய்தருளி வருவன். அஞ்ஞானிகட்கு எவ்விதத்தும் தோன்றாது தெய்வமேயில்லையென்று சொல்லும்படி யிருந்திடுவனென்பதாம். 87

மைக்குழம்புமுத்துமேபால் மருவிமறவாதவற்குக்
கைக்குட்கனியாகுங் கருவறுத்தகாரணர்க்கு.

(பொ- ரை.) தன்னை மறவாது வாழ்பவர்கட்கு மைக்குழம்பினையும் முத்தினையுமொத்து விளங்கி, பிறப்பினை யொழித்த பெரியோர்கட்கு உள்ளங்கை நெல்லிக்கனி யெனக் காணுவன்.

கு- ரை. பிறப்பிலே கட்டுப்பட்டுப் பெருமானை மறவாது தியானஞ்செய்து வருபவர்ட்குக் கருமையிலே வெண்மை பிரகாசிப்பது போல ஒருவாறு விளங்குவன் பிறப்பற்றவர்கட்குப் பிரத்தியட்சமாகச் சந்தேகமின்றி உள்ளங்கை நெல்லிக்கனி யெனப் பிரகாசிப்பவன். 88

பளிங்கிற்பவளமடி பற்றற்றபாவலர்க்குக்
கிளிஞ்சிலைவெள்ளியென்பார் கிட்டாதார்கிட்டுவரோ.

பொ- ரை. பிரபஞ்சப்பற்று இல்லாத வித்துவான்கட்குப் பளிங்கினுடன் பதித்த பவளம்போல விளங்குவன், கிளிஞ்சிலைக்கண்டு வெள்ளியென மயங்குவார்பால், ஒருவருக்கும் கிடையாதவர் இவர்கட்குக் கிடைப்பரோ.

கு- ரை- கிளிஞ்சலை வெள்ளியென்று மயங்குதல்லாவது மாயாகாரியமாகிய பிரபஞ்சத்தினைக்கண்டு இக்காரியம் உண்மையெனமயங்

கல், உண்மை விசாரித்தவழி கிளிஞ்சலையன்றி வெள்ளியில்லாதது போல மாயையன்றிப் பிரபஞ்சமில்லையாம். 89

ஏட்டுக்கடங்காண்டி யெழுத்திற்பிறவாண்டி
நாட்டுக்நரிகளெல்லா நற்புரவிசெய்தாண்டி.

(பொ- ரை.) பெருமான் ஏட்டினுக் கடங்காதவன், எழுத்துக்களாற் பிரதிபாதிக்கப்படாதவன், நாட்டினையடுத்த காட்டிலுள்ள நரிகளனைத்தையும நல்லகுதிரைகளாகச் செய்தனன்.

கு- ரை. பெருமான் இத்தகையனென அனுபூதியாற் றெரிந்துகொள்ளத் தக்கவனேயன்றி எழுத்தாலும்ஏட்டாலும் தெரிந்துகொள்ளத்தக்கவனல்ல அன்றியும் திருவாதவூர் மாணிக்கவாச சுவாமிகளின்பொருட்டு மதுரையின்கண்ணே நரிகளைக் குதிரைகளாக்கிய திருவிளையாட்டினைச் செய்தவன். 90

பஞ்சப்பிரளயத்து மிஞ்சியிருப்பாண்டி
நஞ்சுபொதிமிடற்று னயன் றழல்விழியான்

பொ: ரை. ஐவகைப்பிரளயத்திலுக்கும் அப்பாற் பட்டவன், விடந்தங்கிய கண்டத்தினன், அக்கினிக்கண்ணினை யுடையவன்.

கு- ரை. ஐவகைப் பிரளயமான பஞ்சபூதங்கள் முறையே லயித்து வருவன அவ்வவ்பூதங்கள் யிருக்கும்போது அப்பூதத்திலே வரும் லயிப்பர் பெருமான் அவ்வகைத் தேவரையும் கடந்தவராகலின் 'மிஞ்சியிருப்பான்' என்றனர். 9

அகங்காக்கும்புறங்காக்கும் அளவிலாவண்டமுதல்
செகங்காக்குங்காணத் திசைபத்துங்காக்குமடி.

பொ-ரை. உள்ளும் புறம்புங் கலந்துகாக்கும் இவ்வளவென வளவிடக்கூடாத அண்டமுதலாகச் சொல்லப்பட்ட செகத்தினையும் காக்கும் எட்டாததூரத்துப் பத்துத்திசையினையும் காக்கும்.

கு-ரை. பிருதிவி முதல் நாதமீறாகவுள்ள தத்துவங்களிலுள்ள எண்ணிறந்த அண்டங்க ளனைத்தினிலும் உள்ளும்புறம்புமாக விருந்து காத்து வருபவன் பெருமானென்பதாம். 92

பேசாப்பிரமமடி பேச்சிறந்தபேரொளிகாண்
ஆசாபசாசங்கள் அணுகாதபேரொளிகாண்.

பொ-ரை. ஒருவராலும் இன்னபடித்தெனப் பேசக்கூடாத பிரமமயமாயுள்ளவன், வார்த்தைக்கடங்காத பெருஞ்சோதியாக விளங்குபவன் 'மாயாகாரியமான' ஆசைமுதலியவற்றால் நெருங்காத பெரிய சோதியாக விளங்குபவன்.

கு-ரை- சிற்றறிவினராகிய ஆன்மாக்களின்பேச்சினுக்கு அடங்காது அப்பாற்பட்டவனும், இராகதத்துவத்தில் கட்டுப்படாதவனுமாகிய அருட்பெருஞ் சோதிசொரூபனாக விளங்குபவனென்பார் 'பேரொளி' என்றனர். 93

தேசமிறந்தவன்காண் திசையிறந்ததெள்கடல்காண்
ஊசிமுனைபூண்ற வில்லாவுறுபொருள்காண்

பொ-ரை தேசமிழந்தவன் திக்கினைக்கடந்த இனிமையான சமுத்திரம்போன்றவன். ஊசிமுனையளவும் நாட்டுதற்கும் இடமில்லாதபடி பரவியவன்.

கு- ரை. தனக்கெனவொருதேசமும் தனக்கென வொருதிசையும் இல்லாமல் கடல்போல் பரவித் தானில்லாத விடமில்லையெனச் சொல்லும்படியிருப்பவன் பெருமானென்றபடியாம். 94

சிப்பியில்முத்தொளிகாண் சின்மயநோக்கில்லார்க்கு
அப்பிலொளிபோ லமர்ந்தவரும்பொருள்காண்.

பொ- ரை. ஞானமயமான பார்வை யுடையாருக்கு சிப்பியினிடத்துத் தோன்றுகிற முத்துப்போன்றவனும், ஞானமயமான பார்வையில்லார்க்கு நீரினிடத்துத் தோன்றுது விளங்கும் ஒளிபோலமர்ந்தவன்.

கு- ரை. ஞானவிசாரணையுடைய ஞானிகட்குச் சிவபெருமான் பிரத்தியட்சமாக நன்குவிளங்கிப் பிரகாசிப்பன். ஞானவிசாரணையில்லார்க்குச் சிறிதுந் தோன்றுனென்றபடியாம். 95

ஆலாவிருட்சமடி யளவிலாச்சாகையடி
மேலாம்பதங்கள்வீசும் பூடுருவுமெய்ப்பொருள்காண்.

பொ- ரை. எண்ணில்லாத கிளைகளுடன்கூடிய பெரிய ஆலவிருட்சம்போன்று அனேகமான உலகங்களைவாய்ந்த ஆகாயவெளியில் ஊடுருவி வியாபித்து விளங்குபவன்.

கு- ரை. விருட்சங்களிற் சிறந்த ஆலமரமானது அதிவிலாசமாகத் தழைத்து வியாபித்திருப்பதுபோலப் பெருமான் ஆகாயவெளியெங்கணும் வியாபித்திருப்பவனென்றூர் இது ஏகதேச உவமானம்.

வங்கிஷமெல்லாங்கடந்து வருமாமலர்ப்பதங்காண்
அங்கிஷமாயெங்கும் ஆய்ந்தவரும்பொருள்காண்.

பொ- ரை. பரம்பரையெல்லா வற்றையும் கடந்து வரும்தாமரைபோன்ற திருவடியினையுடையவன் நுணுக்கமாயாய்ந்து அறியத்தக்க அரியபொருளானவன்.

கு- ரை மற்றைய தேவர்களைப்போலப் பரம்பரை பெறாது தன்னேரற்றுத்தனக்குதானே தனியாய் விளங்குபவன்சிவ பெருமானென்பார் 'வங்கிஷமெலாங்கடந்து' என்றனர். ஞானத்தால் தீட்சண்யமடைந்த நுண்மையறிவுகொண்டே ஆராயத்தக்கபொருளாகலின் அரும்பொருள் என்றனர். 97

நாமநட்டமானதடி நவிலவிடமில்லையடி

காமனைக்கண்ணெரிக்கக்கனல் விழித்தகாரணன்காண்.

பொ- ரை. யாவரும் அஞ்சத்தகுந்த ஆனந்தநிர்த்தனம்செய்பவன் அவனிலைமை இன்னபடித்தெனச்சொல்லுதற்கு இடமில்லாதவன். மன்மதனை நேத்திரத்தினல் எரிக்கும்படி விழித்துப்பார்த்தயெல்லையுடையவன்.

கு- ரை. நாமநட்டமென்னது சர்வசங்காரகாலத்தில் தன்னந்தனியேயிருந்து செய்யும் திருக்கூத்து நவிலவிடமில்லை யென்றது வாக்கினுக் கெட்டாதவனென்றபடியாம். காமனையெரித்தது தன்காமத்தில் சட்டுப்படாதவனென்ற குறிப்பினைத் தெரிவித்தபடியாம். 98

கொட்டாதசெம்பொனடி குளியாத்தரளமடி

எட்டாதகொம்பிலடி யீப்புகாத்தேனமுதம்.

பொ- ரை. வேலைசெய்யாதசுத்த செம்பொன்னையும், சமுத்திரத்தில் முழுகி எடுக்கக்கூடாத முத்தினையும், ஒருவருக்கு மெட்டாத கிளையிற்கட்டியுள்ள ஈமொய்க்காத தேனையும் ஒத்தவன்.

கு- ரை. லோகங்களில் உயர்ந்தது பொன்னும், மணிகளிற் சிறந்தது முத்தும், சுவையிற்சிறந்தது தேனுமாகலின் ஒருபுடையுவமானமாகவைத்து உபசாரமாகப் பெருமானைச்சிறப்பித்தனர். 99

காணிப்பொன்னாணியுடன் கல்லுரைமாத்தின்றெண்றே.
ஆணியுடன்கூட்டியடங்கலிட்டுக் கொண்டாண்டி.

பொ- ரை. (யாவருக்கும்) உரிமையாகிய பொன் கட்டையுடன் அது உரைக்கப்பட்ட மாற்று இன்னதெனத்தெரிந்து பொற்கட்டையின் தன்மைதெரிந்து கொள்ளுதல்போல. ஆன்மாவனைத்தையும் தெரிந்துகொண்டான்.

கு-ரை, உரைமாற்றினைக்கொண்டு பொன்மாற்றினைத் தெரிந்து கொண்டு அதனைக்கொள்ளுதல்போல, ஆன்மாக்களின் சாதனச்செயலைக் கண்டு அவர்கள் பக்குவநிலையுணர்ந்து தன்னடியாரிற் கூட்டிக்கொள்ளுவன். 100

அளவிறந்தவண்டத்தா ரத்தனைபேருண்டாலும்
பிளவளவுந்தான்சற்றும் பேசாப்பிரமமடி.

பொ- ரை. அளவில்லாத அண்டத்தினர்கள் அவ்வளவுபேரும் புசித்திடினும் ஒருசிறிதும் குறைபாதபடி பவுனமாகவிருக்கும் பிரமம்.

கு- ரை. கணக்கிலடங்காத அண்டங்கள் கணக்கில்லாத காலம் பெருமான் திருவருளினை யனுபவித்துவந்தாலும் தமது திருவருளில் ஒருசிறிது குறைந்ததாகக் கூறாது, விருந்தவன்ன மவுனமுற்று இருக்கும் சிவமென்பதாம். 101

கன்னெஞ்சினுள்ளே கருநீலம்பூத்தாப்போல்
உன்னெஞ்சினுள்ளே யிணையடிகள்வைத்தாண்டி.

பொ- ரை. கருங்கல்லினையொத்த மனத்தினுள்ளே நீலோற்பலம் பூசித்தவிதம்போல அடியேன் இருதயத்தின்கண்ணே பெருமானது இரண்டுதிருவடிகளையும் மலர்ந்தருளச்செய்தான்.

கு- ரை- நீர்நிறைந்த தடாகத்தில் புஷ்பிக்கவேண்டிய மலர்களுங் கல்லிற்றோன்றியதுபோல, பக்குவான்மாக்களின் இருதயத்தில் தோன்றவேண்டிய திருவடி, மலத்தடிப்பினைவாய்ந்த அபக்குவத்தினையுடையவன்பால் தோன்றியதுவியப்பென்பார் 'அடிகள்வைத்தாண்டி' என்றனர். 101

வேதப்புரவியடி விரைந்தோடியும்மறியார்
காதற்றஞானமடிகாண்பார்கருத்துடையோர்.

பொ- ரை. மறைகளையே குதிரையாகவுடையவன், அதிவேகமாகத் தேடித்திரியினும் அறியப்படாதவன், மவுனஞானத்தில் வெளிப்படுவன் தரிசிப்பார் மனதில்விளங்குவான்.

கு- ரை. பெருமான் மகிமைகளைத்தாங்கி உலகமுழுவதும் உலவிவருவது வேதமாகலின் அவற்றைப்புரவியென்றனர். பிரமாதிதேவர்கட்கும் எட்டுதற்கரியன் என்பார் 'அறியார்' என்றனர், பிரபஞ்ச அசுத்த மாயாகாரிய வொலிகேளாமலிருப்பதே மவுனமென்பார் 'காதற்றஞான' மென்றனர், அருட்போத முன்னிட்டறிவார்கள் மனத்துவிளங்குபவனென்பார் 'கருத்துடையோர்' என்றனர். 103

பாசவினையைப் படப்பார்த்தபார்வையுடன்
நேசத்தைகாட்டியடி நில்லென்றுசொன்னாண்டி.

பொ- ரை. பாசமாகிய வினையொழியத் தீட்சித்த நேத்திரத்தை யுடையவன் அன்பினைக்காட்டிக் குறிப்பினில் வென்றருளினன்.

கு- ரை. பெருமான் ஆசாரியகோலம் கொண்டெழுந்தருளிநய னதீட்சைசெய்து சஞ்சிதத்தை யொழித்தனெனவும் திருவருளிற்பி ணைத்து ஞானநாட்டத்தில்நிறுத்தினனெனவும் கூறுவாராயினர்.

ஓசையொடுங்குமிட மோங்காரத் துள்ளொளிகாண்
பேசா திருக்கும் பிரமமிதுவென்றாண்டி.

பொ- ரை நாததத்தவம் ஒடுங்கிய இடம், பிரணவத்தினுள்ளே பிரகாசரூபமானவன், மவுனநிலையினர்கட்குத்தோன்றும் பிரமம்.

கு- ரை. நாததத்துவத்தினைக் கடந்து பிரணவத்தி னொளியாகி மவுனமூனிவர்கள் காணும் பிரமமாக விளங்கத்தகுந்தது பரப்பிரம மென்றனர். 104

சின்மயநன் னோக்காற் சிற்சுரூபங்காட்டியெனைத்
தன்மயமாயாக்கியே தானவனாய்நின்றாண்டி.

பொ- ரை. ஞானமயமாகிய பார்வையினால் ஞானசொரூபத்தி னைத் தெரிசிப்பித்து அடியேனையும் ஞானமயமாக்கி ஞானவடிவுமா த்திரமாயிருந்தவன்.

கு- ரை. ஆசாரியனெழுந்தருளி நயனதீட்சைசெய்தருளித்தன் திருவருளினைத் தரிசனம் செய்யும்படிசெய்து அங்ஙனம் செய்வித்த மாத்திரத்தில் திருவருள் மயமாக்கி என்னைத்தோன்றாதபடித்தான் மாத்திரனின்றான் என்பதாம். 105

தானென்னைப்பார்த்தாண்டி தன்னைத்தானல்லாமல்
நானென்னசொல்லுவண்டி நவிலவிடமில்லையடி.

பொ- ரை. தான் என்னைத் திருஷ்டித்துப்பார்த்தான். (அங்ஙனம்பார்க்கவே) தன்னைத்தவிர நானொருவன் அவனுக்கு வேறாகவிருப்பதாய்ச் சொல்லுதற்கிடமில்லை அவ்வருமைபார்வையை நானென்னவென்று சொல்லுவன்.

கு- ரை. ஆசாரியன் தீட்சானுக்கிரகத்தினால் நான்திருவருண்மயமாய் நின்ற அவதரித்த பெருமான் தோற்றமேயல்லாமல் என் தோற்றமென்பதில்லை இதுவொருவியப் பாக முடிந்தது. 106

இன்றிருந்துநாளைக் கிறக்கிறபேரெல்லோரும்
என்றுபரிபூரணத்தி லினிதிருக்கச்சொன்னாண்டி.

பொ- ரை. இன்றுவாழ்ந்து நாளையதினம் இறந்துபோகத்தக்கவர்களெல்லாம் எக்காலமும் திருவருள் வியாபகத்தில் நன்றாகவாழ்கச்சொல்லினான்.

கு- ரை. அநித்தியவாழ்வையுடைய மாந்தரெல்லாரும் நித்தியமாகவாழ்ந்து வரும்படியாகத் திருவருளிற் கலப்பித்தனன் ‘இன்றைக்கிருப்பாரை நாளைக்கிருப்பரென்றெண்ணவுந் திடமில்லையே’ யென்றனர் தாயுமானவர். 107

பார்க்கிலெளிதல்லவோ பற்றற்றபற்றலவோ
ஆர்க்குமிடங்காட்ட வவனிதனில்வந்தாண்டி.

பொ- ரை. (அன்பர்களுடைய) பார்வைக்கு எளிமையானவையன்றோ, பற்றற்றார்கட்குப் பற்றாக விளங்குபவனல்லோ, எத்தகையினர்கட்கும் மோட்சமாகிய இடத்தினைககாட்ட பூமியில் ஆசாரிய கோலம் கொண்டெழுந்தருளினன்.

கு- ரை. ‘அடியார்க்கெளியன் சிற்றம்பலவன்’ என்பார் பார்க்கிலெளிதலவோ’ என்றனர், வெளிமுகப்பற்றினை விட்டார்பால்

அந்தர்முகப்பற்ருக விளங்குபவ னென்பார் 'பற்றலவோ' என்றனர், ஆசாரியமுகூர்த்தங்கொண் டெழுந்தருளிவந்து காட்டினுலன்றி எத் தகையினர்கட்குந்திருவருள்நிலை தெரியாதென்பார் 'காட்டவந்தான்' என்றனர். 108

இத்தனைகாலமடி யிறந்துபிறந்ததெல்லாம்
இத்தனையுமில்லைபடி யிரும்பிலுறைநீரானேன்.

பொ- ரை. இதுவரையில் ஜெனனப்பட்டதும், மரணப்பட்டது மான இவ்வளவும் இனியில்லையென்று சொல்லும்படியாக நீருண்ட இரும்புபோலானேன்.

கு- ரை. நெருப்பிற்காய்ந்த இரும்பானது தன்முன்னேர்ந்த நீரினைக்கிரகித்து விடுமாறு, ஆசாரியன்முன்னர்அவன்திருவருளிற் நனைந்தவுடனே அனேகசன்மங்களி லனுபவித்துவந்த சனனமரண மற்றுப்போய்விட்டது 109

எக்காலம்பட்டதடி யிறந்துபிறந்ததெல்லாம்
அக்காலமெல்லாம் அழுந்தினேனுனரகில்

பொ: ரை. எக்காலமுதல்நான இறந்துபிறந்து வருகின்றேனே அக்காலமனைத்தினிலும் நரகத்தி லனுபவிப்பதற்கேதுவாகினேன்.

கு- ரை. நான் ஒரு சன்மத்திலும் புண்ணியத்தினுக் கேதுவா கியதனைச்செய்து மறுபடியும் பிறப்புவாராதபடி செய்துகொள்ள வில்லை யென்பார் 'அழுந்தினேன்' என்றனர்

காலங்கழிந்ததடி கர்மமெல்லாம்போச்சுதடி
நாலுவகைக்கருவு நாமநட்டமாச்சுதடி

பொ- ரை. எண்ணிலாதகாலம் கழிந்துவிட்டன, கன்மமனைத்தும் நீங்கியது: நான்குவகைப்பட்ட பிறப்புகளும் அற்றது.

கு- ரை எடுத்த அனேகமான சன்மங்கள்தோறும் செய்து, வந்த புண்ணிய விசேடத்சால் இனி சென்மமெடுப்பதற் கேதுவாயிருந்த கன்மநீங்கியது, அண்டசம், சுவேதசம், உற்பீசம், சராயுசம் என்னும் நால்வகைகளிலொன்றிற் பிறந்து ஒருபெயரைப்பெறேன் என்பார் 'நட்டமாச்சு' என்றனர். 111

முப்பாழுக்கப்பால் முதற்பாழ்முழுமுதலாய்

இப்போதுவந்தான்காண் எனைவிழுங்கிக்கொண்டான்காண்.

பொ- ரை மூன்று பாழினுக்கும் அப்பாற்பட்ட சூனியமாக விளங்குமிடத்தில் முழுமுதலாயுள்ள சிவம் இப்போது ஆச்சராயமூர்த்தியாசவந்தான் அடியேனைக் கிரகித்துக்கொண்டான்.

கு- ரை. பிரகிருதிப்பாழ் அசுத்தமாயைப்பாழ், சுத்தமாயைப்பாழ் இப்பாழ்களைக்கடந்த சிதம்பராகாயத்தில் விளங்கும் சிவபெருமான் சகளீகரித்துவந்து தனது திருவருளினால் முழுகுவித்தான் என்பார் விழுங்கிக்கொண்டார்' என்றனர். 112

பாலின்கணெய்யிருந்தாற் போலப்பரஞ்சோதி

ஆலிங்கனஞ்செய் தறவிழுங்கிக்கொண்டாண்டி.

பொ- ரை- பாலினிடத்திலே நெய் பிரகாசித்ததுபோல அருட்பெருஞ்சோதி எனைக்கலந்து தன்னுள் மறையச்செய்தனன்.

கு- ரை. பாலில் மறைந்துகிடந்த நெய்யினைப்போல, என்னுள் மறைந்திருந்தே என்னுடன் அத்துவிதமாகித் தனது திருவருளினில் முழுகுவித்தனன். 113

செத்தபடமா னேண்டி தீயிரும்புநீரானேன்
ஒத்தவிடநித்திரையென் றேதுமுணர்வறிந்தேன்.

பொ- ரை. நெருப்பில்வெந்த வஸ்திரமாயினேன், அக்கினிமய மான இரும்புகிரகித்த நீர்போலானேன், வினையொத்தவிடத்தில் சிவயோகநித்திரை செய்யவேண்டுமென அறிவினையும் தெரிந்தேன்.

கு- ரை. அக்கினிபட்டதுணி உருவமாத்திரமாய் விளங்குவது போல சீவன் முத்தநிலை இரும்புண்ட நீராவது திருவருளில பதிந்து வாழ்தல், ஒத்தவிடத்து நித்திரையாவது சிவயோகசமாதி. 114

ஒப்புவமையுமற் றேதவரிதாயபொருள்
இப்பூவினிற்குருவே யென்னவந்தோன்றாள்வாழி

பொ- ரை. சமுத்துவமும் உவமானமும் அல்லாது சொல்லுத ற்கரியபெருமான் உலகின்கண்ணே ஆசாரியமூர்த்தியாகவந்தான் திருவடிவாழக்கடவது.

கு- ரை. சமானமும் உவமானமுமின்றி விளங்கும் ஒரு பெரு மானே என்பொருட்டுத் திருவுருக்கொண்டெழுந்தருளி வந்தனனு கலின் அவன் திருவடி வாழக்கடவதென்றனர். 115

ஒப்பாரிசொல்லிடினு முவமைபிழைத்திடினும்
முப்பாழுங்கற்றுணர்ந்தோர் மன்னேர்பொறுத்தருளே

பொ- ரை. நான் ஒப்புச்சொல்லிப்பாடிய புலம்பலிலே உவமை (ஏகதேசம்) தவறின் மும்மொழியின் சொரூபத்தினை தெரிந்தோரா கிய பெரியர் பொறுத்தருளவேண்டும்.

கு-ரை. ஒப்பாரி என்பது புலம்பற்செய்யுள். இங்ஙனமையில் திருவருட் சம்பந்தமாகப் பாடிய பாக்களில் எடுத்துக்கொண்ட உவமானம்முறன்படில் தக்கோர் கவனியாதிருக்க வேண்டுமென்பார் அவையடக்கம் கூறினாராயிற்று. 116

அருட்புலம்பல் முற்றியது.

---

பட்டினத்துப்பிள்ளையார்

## இரந்தகாலத்திரங்கல்.

வார்த்தைத்திரமில்லா மனிதருக்குப்புன்சொல்லாஞ்
சாத்திரங்கள் சொல்லித் சதிரிழந்துகெட்டேனே.

பொ-ரை. பேசும் வார்த்தைகளில் உறுதியில்லாத மனிதர்கள்பால் அற்பசொல்லாகிய சாஸ்திரங்களை யெடுத்துப்பேசி எனது சாமர்த்தியத்தினை யிழந்து கெடுதியையடைந்தேன்.

கு-ரை. அசத்தியவார்த்தை யுடையாரே வார்த்தைத்திர மில்லாதவராவர், புன்சொல்லாவது பிரயோசனமற்ற சொற்கள், சாஸ்திரமாவது பதசாஸ்திரங்களுமாம் பாசாஸ்திரங்களும் 1

மெத்தமெத்தச்செல்வாக்கில் வேறுமருளடுத்துத்
தத்தித்தலைகீழாய்த் தானடந்துங்கெட்டேனே.

பொ-ரை. அபாரமாகிய செல்வத்தில் மருளினையடைந்து ஒழுங்கீனமாக நடந்துகொண்டு கெடுதியையடைந்தேன்.

கு-ரை. பொருட்செல்வம் அபாரமாக அனுபவிக்கும் சமயத்தில் 4 அச்செருக்கினால் ஒழுக்கம் தவனி வாழ்ந்து வந்தனன்.

வழக்கத்தலங்களினு மண்பெண்பொன்னாசையினும்
பழக்கந்தவிராமற் பதியிழந்துகெட்டேனே.

பொ-ரை. வழக்கமாகிய ஊர்களினும், மண்ணினிடத்தும் பெண்ணினிடத்தும் பொன்னிடத்தும் வைத்த அவாவினால் பழக்கத்தினை விடாமல் முதல்வனையிழந்து கெடுதியையிழந்தேன்.

கு-ரை. பழகிய பதார்த்தங்களில் விட்டுப்பிரிதல் எந்தவகையினும் கஷ்டமாகலின் 'பழக்கம் தவராமல்' எனவும், அங்ஙனம் அவற்றைப் பிரியாததினாலேயே பெருமான் தன்மையை யறிதற்கு நேரமில்லாமல் போயிற்று என்பார் 'பதியிழந்து' என்றனர். 3

ஆணிபொருந்து மருப் பூமியத்தனையுங்
காணிநமதென்று கனம்பேசிக்கெட்டேனே.

பொ-ரை. முதன்மைவாய்ந்த அரிய பூமியெல்லாம் நமக்கேயுரியதென்று கௌரவம்பேசிக் கெடுதியையடைந்தேன்.

கு-ரை. ஈஷணாத்திரயங்களில் முதற்பற்றினையுடையது பூமியே யாகலின் 'ஆணிபொருந்து' என்றனர். தனக்குச் சொந்தமாகவாய்ந்த நிலங்கள்யாவும் தனக்குச் சொந்தமாக விருக்குமென்ற செருக்கினால் கர்வங்கொடிருந்தே னென்பார் 'கனம்பேசி' என்றனர். 4

ஆசாரமில்லா வரசருடன்கூடிப்
பாசாங்குபேசி பதியிழந்துகெட்டேனே.

பொ-ரை- ஒழுக்கமில்லாத அரசர்களுடன் சினேகித்துத் தந்திரவார்த்தைகளைப்பேசித்தலைவனை யிழந்துகெடுதியையடைந்தேன்.

கு-ரை. கொடுங்கோலரசன் சினேகம் கொள்ளும்படி அவனுடன்கூடிஅவர்க்கிஷ்டம் வரும்பொருட்டுஅவ்வார்த்தை கட்குச்சுட்டு

டண்வன்போனடித்து வாழ்ந்ததனுல் பதிவிசாரணையிழக்தேன் ஸன்பார் 'பதியிழந்து' என்றனர். 5

குருமார்க்கமில்லாக் குருடருடன்கூடிக்

கருமார்க்கத்துள்ளே கருத்தமிழ்ந்து கெட்டேனே.

பொ-ரை. குருவினை வழிபட்டு நடவாத மனக்குருடருடன் கலந்து சனன முண்டாதற் கேதுவாகிய வழியிலேகட்டுபட்டு மனந்த மொழிக் கெடுதியை யடைந்தேன்.

கு-ரை. இரண்டுபுற நேத்திரங்களிருந்தும் ஆசாரியர் சொன்ன வழியிலே, நடவாதவர் அகக்கண்ணில்லாதவரே யென்பார் 'குருடர்' என்றனர். அவர் சிநேகம் பிறப்பினுக் கேதுவாகமுடிந்தது என்பார். 'கருமார்க்கத்துள்ளே' என்றனர். 6

ஆலமருந்து மரன்பெருமை யெண்ணமல்

பாலர்பெண்டீர் மெய்யென்று மதியிழந்துகெட்டேனே

பொ-ரை. ஆலகாலத்தினையுண்ட சிவபெருமான் மகிமையினைச் சிந்தியாமல்புத்திரர், மனைவியர், சத்திய மென்னத் தேர்ந்துதலைவனையிழந்து கெடுதியை யடைந்தேன்.

கு-ரை- தன்னைச் சூழ்ந்துக்கொண்டிருந்த புத்திரபாக்கியத்தினையும், மனைவியர் பாக்கியத்தினையும் உண்மையென வெண்ணிக் கொண்டிருந்தமையின் நீலகண்டனையும் மறந்தேனென்பார் 'பதியிழர்து' என்றனர். 7

பிணவாசமுற்ற பெருங்காயமெய்யென்று

பணவாசையாலே பதியிழந்து கெட்டேனே.

பொ - ரை. முடைநாற்றம் வீசாநின்ற பெரிய தேகத்தினைச் சத்தியமென்று திரவியவாசையாலே தலைவனையிழந்து கெடுதியை யடைந்தேன்.

கு - ரை. தேசத்தினையே சத்தியமெனவெண்ணி அத்தேகத்தினைப் பேணு நிமித்தம் திரவியம் சேகரித்தலிலேயே காலங் கழித்தமையின் தலைவனை விசாரியாதவனாயினேன் என்பார். 'பதியிழந்து' என்றனர் 8

கண்டபுலவர் கனக்கவேதான் புகழ
உண்டவுடன்பெல்லா முப்பரித்துக்கெட்டேனே.

பொ - ரை. எதிரிட்டபுலவர்கள் மிகவாகப் புகழுதற்கு நன்கு உணவு ஊட்டிவளர்த்துவந்த தேகம் தளர்ந்துவிடக் கெடுதியை யடைந்தேன்.

கு - ரை. கவிஞர்கள் புகழ்ந்து பாடுதற்கேற்றபடி நன்றாய்ப் புசித்து உடலை அதிக புஷ்டியாக வைத்துக்கொண்டிருந்தும் அது உப்பிட்ட பாண்டம்போலத் தளர்ச்சியடையப் பெற்றேன் என்றனர்.

எண்ணிறந்தசென்ம மெடுத்துச் சிவபூசை
பண்ணிப்பிழையாமற் பதியிழந்து கெட்டேனே.

பொ - ரை. அநேகமான பிறப்புக்களினையெடுத்தும் அச்செனமங்களால் சிவபூஜைசெய்து பிறப்புவாராதபடி செய்து கொள்ளாது தலைவனையிழந்து கெடுதியையடைந்தேன்.

கு - ரை. யாதாமொரு பிறப்பினில் சிவபூசைசெய்து இருப்பனேல் மேலும் சென்ம மெடாதிருப்பேன் அங்ஙனம் செய்யாததால் அநேகசென்மத்திற்கிட முண்டாகத் தலைவனை விசாரியாதவனாயினேன் என்பார் 'பதியிழந்து' என்றனர். 10

சிற்றெறும்புசற்றுந் தீண்டப்பொறுவுடம்பை
உற்றுருக்கவுஞ்சுடவு மொப்பித்துமாண்டேனே.

பொ-ரை சிறிய எறும்பு ஒன்று கடிக்கினும் சகியாதிருந்த உடலை அக்கினியிலிட்டு உருக்கவும் சுடவும் ஒப்பித்து வாழ்தற்கேதுவாக இறந்துவிட்டவனாயினேன்.

கு-ரை. ஒரு அற்பதுன்பமும் சகியாது சுகத்தினை வாய்ந்துவந்த உடலானது அக்கினியில் வேகும்படி செய்துகொள்ளுதற்கேதுவிளைவித்துக்கொண்டேன் என்பார் 'ஒப்பித்துமாண்டேன்' என்றனர். 11

தன்னுடம்புதானே தனக்குப் பகையாமென்
றெண்ணுமுணர் வில்லாம லின்பமென்றுமாண்டேனே

பொ-ரை. தன்னுடைய தேகந்தானே தனக்கு சத்துருவாகுமென்னும் அறிவில்லாமல் இன்பத்தினை யெண்ணியே மாண்டவனாயினேன்.

கு-ரை. சகலதிமை விளைவதற்குக் காரணம் இவ்வுடலேயல்லாமல் வேறில்லையென்று தேர்ந்து அதற்குத் தக்கபடி நடந்துகொள்ளாதே போயினேனென்பார் 'மாண்டேனே' என்றனர். 12

தோலெலும்புமாங்கிஷமுந் தொல்லன்னத்தால்வளரு
மேலெலும்பு சுற்றமென்று விருப்பாய்மாண்டேனே.

பொ-ரை தோலும், எலும்பும், மாமிசமும், எல்லாம் பழைமையான அன்னத்தால்வளரும் உடலும் சுத்தமானவையென்று கருவித்து மாண்டவனாயினேன்.

கு-ரை சகல அருவருப்புக்கும் இடமாயுள்ள பல உறுப்புக்களை வாய்ந்த உடலை அதிகச்சுகத்துடனிருப்பது என வீணேகாலம் கழித்துவந்ததனால் மாண்டவனுக்குச் சமானமானவனாயினேன் என்றனர்

போக்குவரத்தும் பொருள்வரத்துங்காணுமல்
வாக்கழிவு சொல்லி மனமறுக்கிகெட்டேனே.

பொ - ரை. இறப்பும், பிறப்பும், உண்மைப் பொருளின் அனுக்கிரகமும் ஆராயாமல் வீண்வார்த்தைப்பேசி மனமயக்க மடைந்து கெடுதியுடையவனுயினேன்.

கு - ரை. இறப்பினுக்கும் பிறப்பினுக்கும் காரணம் விசாரியாமலும், உண்மைப்பொருளையடைதற்கு ஏதுதெரிந்து கொள்ளாமலும் வாழ்ந்ததினுல் மனத்தின்கண்ணே கலக்கம்கொண்டேன் என்பார் 'மனமறுகி' என்றனர். 14

இறந்தகாலத்திரங்கல் முற்றிற்று.

## நெஞ்சொடுபுலம்பல்.

மண்காட்டி பொன்காட்டி மாயவிருள்காட்டிச்
செங்காட்டிலாடுகின்ற தேசிகனைப்போற்றுமல்
கண்காட்டும்வேசியர்தங் கண்வலையிற்சிக்கிமிக
அங்காடிநாய்போ லலைந்தனையேநெஞ்சமே.

பொ - ரை. மனமே! மண்ணைக்காட்டியும், பொன்னைக்காட்டியும். மாயவிருளுக்குச் சமானமான (பெண்ணைக்) காட்டியும் திருச்செங்காட்டிலே நிர்த்தனம்செய்கின்ற சிவபெருமானைத் தோத்தரியாமல் கண்களினுற் சாடைசாட்டியழைக்கும் வேசிகளின் ஆசை வலை

யிற்சிக்குண்டு நாளும் கடைவீதிநாயினைப்போல் அலைந்தனையே (இது வுனக்குத்தகுமோ.)

கு - ரை. ஆன்மாக்களின் கன்மத்திற்குத் தகுந்தபடி உலகிலே ஈஷணைத் திரவியங்களைக் கூட்டிவைத்து அவற்றைச் சுகமாயனுபவித்துக்கொண்டு இல்லறத்தினில் கிரமமாக வாழ்ந்திருக்கக் கடவையெனப் பெருமான் விதித்தும், அவ்வொழுக்கத்தினின்று மீறிக் கெடுதியினை விளைவிப்பதற் கேதுவாயுள்ள விலைமகளிரை நாடிக் கண்டவர்கள் கல்லாலடித்து ஓட்டத் தகுந்த நிலையினையுடைய கடைத்தெரு நாயானது என்னையோ என்றனர் 1

புட்பாசனவணையிற் பொற்பட்டு மெத்தையின்மேல்
ஒப்பாவணிந்தபணி யோடாணிநீங்காமல்
இப்பாய்க்கிடத்தி யியமனுயிர் கொள்ளுமுன்னே
முப்பாழைப்போற்ற முயங்கிலையே நெஞ்சமே.

பொ - ரை. மனமே? புட்பம் பரப்பப்பெற்ற அழகியபட்டும் மெத்தையினைக் கட்டிலிலிட்டு அதன்மேன் படுத்தும், அழகாக அணிந்திருந்த ஆபரணங்களை பூண்டும் (யிருந்தநிலை நீங்காத உடலினை)ராய் மீது படுக்கவைத்து இயமன் உயிரினைக் கொண்டுபோவதற்கு முந்தியே முப்பாழைக் (கடந்த ஒன்றை) போற்றுதற்கு முயற்சித்தாயில்லையே.

கு - ரை மிகுந்த ஆபரணங்களால் அலங்கரிக்கப்பெற்று கட்டிலின்மேல் உறங்கத்தகுந்த உடலைப் பூமியின் பாய்மேலே கிடத்த உயிர் நீங்கு முன் பிரகிருதிப்பாழ், அசுத்தமாயைப்பாழ், சுத்தமாயைப்பாழ்மூன்றையுங்கடந்தபெருமானைத்தியானம்பண்ணுவாயாக 2

முப்பாழும் பாழாய் முதற்பாழ்வெரும்பாழாய்
அப்பாழுக்கப்பாலின் ஞடுமதைப் போற்ருமல்

இப்பாழாம் வாழ்வைநம்பி யேற்றவர்க் கொன்றீயாமல்
துப்பாழாய்வந்தவினை சூழ்ந்தனையேநெஞ்சமே.

பொ-ரை. மூப்பாழும் சூனியமாய் அவற்றைக் கடந்த மூதற்பாழானது வெட்டவெளியாய் அவ்வெளியினைக் கடந்து நிர்த்தனம் செய்யும் நடராஜப் பிரபுவினைப் போற்றாமல் இங்குஅழிந்துபோகத் தகுந்த பிரபஞ்சவாழ்வினை நம்பி அடைந்து யாசித்தவர்கட்குதவி செய்யாமல் பாழாகிய வினைவந்து சூழ்ந்துக்கொள்ளும்படி செய்து கொண்டனையே.

கு - ரை. முப்பாழாவது மேற்செய்யுளின் குறிப்புரையிலுரைத்த மூன்றுபாழ், அதற்கு மேற்பட்டபாழ் அருட்பாழ், அதற்குமேற்பட்ட இடம் ஆனந்தவெளி அதைக்கடந்துநின்றது சிதாகாசம் அங்கே நிர்த்தனம் பண்ணத்தகுந்தவன் பெருமான் என்றபடியாம். 3

அன்னம்பகிர்ந்திங் கலைந்தோர்க்குதவிசெயுஞ்
சென்ம மெடுத்துஞ் சிவனருளைப் போற்றாமல்
பொன்னுமனையுமெழிற் பூவையரும் வாழ்வுமிவை
இன்னுஞ்சதமாக வெண்ணினையே நெஞ்சமே.

பொ - ரை. மனமே? அன்னத்தினை பங்கிட்டுப் பசியினல் அலைபவர்கட்கு உபகரிக்கும் மனித சென்மத்தினையெடுத்தும் சிவபெருமானைப்போற்றாமல் பொன்னினையும். மண்ணினையும், அழகில் பெண்ணினையும் ஆகிய இவை யென்று நிலையாகவிருப்பதாக வெண்ணி விட்டனையே.

கு-ரை. பிறர் பசியைத் தணிவிக்கும் உயர்ந்த பிறப்பாகிய மனிதப்பிறப்பினை யெடுத்தும் அப்பிறப்பினு லடையவேண்டிய பெரும்பேற்றினைப் பெறுதற்கேது வாய்சிவதரிசனமாகி செய்யாது அழிதற்கேதுவா யவற்றினை நாடிவாழுதலிலென்ன பிரயோசனமெறனர்.

முற்றொடர்பிற்செய்த முறைமையால் வந்தசெல்வம்
இற்றைநாட்போற்றேமென் றெண்ணாது பாழ்மனமே
அற்றவர்க்கு மீயாம லரன்பூசையோதாமல்
கற்றவர்க்கு மீயாமற் கண்மறந்து விட்டனையே.

பொ - ரை. பாழாகியமனமே? முன் சென்மத்தில் செய்தபுண்ணியத்தினால் நேர்ந்த செல்வம் இச்சென்மத்தில் வாய்க்கப்பெற்றேம் என்று சிந்தியாது தரித்திரர்கட்குக் கொடாமல், சிவபூசை செய்யாமல் வித்துவான்களுக்கு உதவிபுரியாமல் கண்மறந்து கிடக்கின்றனை.

கு - ரை. ஒருவன் இச்சென்மத்தில் செல்வமனுபவிப்பதும் தரித்திரமனுபவிப்பதும் பூர்வசென்மத்தில் ஆர்ச்சித்து கொண்டவையாகலின் மறுசென்மத்தில் செல்வந்தனாய் வாழவேண்டின் இச்சென்மத்தில் சிவபூசையும் தானதருமங்களும் இன்றியமையாது செய்ய வேண்டு மென்பதாம்.

மாணிக்கமுத்து வயிரப்பணிபூண்டு
ஆணிப்பொன்சிங்கா தனத்திலிருந்தாலும்
காணித்துடலைநமன் கட்டியே கைப்பிடித்தால்
காணிப்பொன் கூடவரக் காண்கிலமே நெஞ்சமே.

பொ - ரை. மனமே? மாணிக்கங்களாலும், முத்துகளாலும் வயிரக்கற்களாலும் ஆகிய ஆபரணங்களைத்தரித்து உயர்ந்த பொன்னாற் செய்யப்பட்ட சிங்காதனத்தின்மேல் வீற்றிருந்தாலும், இலட்சியம் வைத்து உடலை இயமன் கயிற்றாற்கட்டித் தன்கைவசம் கொண்டால் (அவ்வமயப்) மண், பொன் உடன் வரக்கண்டோமில்லை

கு - ரை. சகலசம்பத்துடன் ஒருவன் வாழ்ந்தாலும் அவனை இயமன்கொண்டு போம்போது செய்துகொண்ட புண்ணியபாவங்களேயல்லாமல் மேற்குறித்த செல்வங்கள் வருவதில்லையாம்.

> கற்கட்டுமோதிரநற் கடுக்கனரைஞாண் பூண்டு
> திக்கெட்டும்போற்ற திசைக்கொருத்தரானாலும்
> பற்கிட்டவேமனுயிர் பந்தாடும்வேளையிலே
> கைச்சட்டங்கூடவரக் காண்கிலமே நெஞ்சமே

பொ - ரை. மனமே? இரத்தினக் கற்களால் கட்டியமோதிரங்களும் நல்ல கடுக்கன்களும், அரைஞாணும் தரித்து எட்டுத்திக்கினரும் புகழ, எல்லாத் திசையினிருக்கும் மேற்பட்ட ஒருவனானாலும், மரணகாலத்தில் பல்கிட்டிக்கொள்ளும் சமயத்தில் உயிரினை இயமன் பந்தினை யாடுவதுபோல இலேசாகக் கொண்டுபோகும் சமயத்தில் கையிலுள்ளவையெல்லாம் உடன்வரக் கண்டோமில்லையே.

கு - ரை. எவ்வளவு விலையுயர்ந்த ஆபரணங்களைக் கையாடி வந்தாலும் அவையனைத்தையும் இவ்விடம் வைத்துவிட வேண்டுமே யொழிய ஒரு சிறிதும் கொண்டுபோவதில்லை (கொண்டுபோவதக்கது புண்ணியபாவங்களேயாம்)

> முன்னநீசெய்த தவ முப்பாலுஞ்சேருமன்றிப்
> பொன்னும் பணிதிகளும் பூவையுமங்கேவருமோ
> தன்னைச்சதமாக சற்குருவைபோற்றாமல்
> கண்ணற்றவந்தகன்போற் காட்சியற்றாய் நெஞ்சமே.

பொ - ரை. மனமே! பூர்வசென்மத்திற் செய்த தவமானது மூன்று சென்மத்திலும் பொருந்துமல்லாலும் பொன்னும் ஆபரணங்களும், மாதரும் அங்கே உடன்வருமோ (வராது) அவற்றை நிலை

யுடைய பொருளாகவெண்ணி நல்ல ஆசாரியமூர்த்தியைப் போற்று மல் கண்கெட்டகுருடனைப்போலப் பார்வையில்லாதவனாயினை.

கு-ரை. ஒருசென்மத்திற் செய்துகொண்ட புண்ணியம்மூன்று சென்மம்வரையில் தொடர்ந்துகொண்டுவருவதால் ஒவ்வொரு சென்மத்திலும் புண்ணியம் செய்துவந்தால் எச்சென்மங்களிலும் சுகமனுபவிக்கலாம் அங்ஙனம்செய்யாமலும், அப்புண்ணியம் விளைவதற் கேதுவாகிய ஆசாரியனை வணங்காமலும் இருப்பது அந்தகனுக்குச் சமான மென்பதாம். 8

பையரவம் பூண்ட பரமர் திருப்பொற்றாளைப்
துய்யமலர்பரித்துத் தொழுது வணங்காமல்
கையிலணிவளையும் காலிலிடும்பாடகமும்
மெய்யென்றிருமாந்து விட்டனையே நெஞ்சமே.

பொ-ரை. மனமே! படத்துடன்கூடிய பாம்பினை ஆபரணமாகத்தரித்த சிவபெருமான் அழகிய திருவடியினைப் பரிசுத்தம்பொருந்திய புட்பங்களை பரித்துச்சாத்தித் தோத்தரித்து வணங்காமல், கரத்தின்கண்ணே வளையல்களையும், கால்களிலே பாடகமும் (தரித்தமாதரைச்) சத்தியமென்று கர்வித்து விட்டாயே.

கு-ரை- சிவபெருமானைப் பூசித்துவரும் திருப்பணியொன்றே சென்மங்கடோறும் உதவிபுரிந்து மோட்ச சாம்பிராச்சியத்தினைத் தருவதாதலால் அதனைவிட்டு யாதர்போகமே மெய்யென்று நம்பி வாழ்ந்து இருமாப்பிற்றிருத்தல் (அழிவினுக்குக் கேடென்பதாம்.)

மாதுக்கொருபாகம் வைத்தவரன்பொற்றாளைப்
போதுக்கொருபோதும் போற்றிவருந்தாமல்

வாதுக்குத் தேடியிந்த மண்ணிற்புதைத்துவைத்தே
ஏதுக்குப்போக நீ எண்ணினையே நெஞ்சமே.

பொ - ரை. மனமே! பார்வதியாருக்கு ஒருபாகத்தினையளித்த சிவபெருமான் திருத்தாளினை ஒருநாளைக்கு ஒருபொழுதாயினும் தோத்தரித்துக் கசியாமல் வம்பாகச் சம்பாதித்து இப்பூமியிலேமறைத்துவிட்டு (என்ன காரியத்திற்காக அங்ஙனம்செய்து) நீ இறந்தனை.

கு - ரை. உடன்கொண்டு போவதாகவிருந்தால் எந்தவிதமான வம்புகளையும் உலகினிற் செய்து திரவியம் சேகரித்து அது பிறர்க்கியாதபடி சேகரித்து வைக்கவேண்டியது தான். அங்ஙனமேலாத போது என்ன உத்தேசங் கொண்டு புதைத்துவைத்தனை (அந்தோ இதுவீணகாரியம்.) 10

அஞ்சருளைப்போற்றி யைந்து புலனைத்துறக்க
நெஞ்சேயுனக்கு நினைவுநான் சொல்லுகிறேன்
வஞ்சகத்தைநீக்கி மறுநினைவு வாராமல்
செஞ்சரணத்தாளைச் சிந்தைசெய்வாய்நெஞ்சமே.

பொ - ரை. மனமே! அஞ்சத்தகுந்த திருவருளினை யாதரித்துப் பஞ்சேந்திரியசேஷ்டையினையொழிக்க உன்றனக்குஞாபகமூட்டுகின்றேன், வஞ்சகத்தையொழித்து வேறுசிந்தனைசெய்யாமல்செவ்விய திருவடியுடைய (சிவபெருமானைத்) தியானிப்பாயாக.

கு - ரை. உலகில்வரும் அனர்த்தங்களெல்லாம் பஞ்சேந்திரியங்களின் சேஷ்டையினாலல்லாமல் வேறில்லை. அத்தகையசேஷ்டைகளை யொழித்துக்கொள்ள வேண்டுமென்றால், சிவபெருமான் திருவடி சிந்தனை யொன்றினையே செய்யவேண்டு மென்பதாம். 11

அற்புதமாயிந்தவுட லாவியடங்குமுன்னே
சற்குருவைப்போற்றித் தவம்பெற்றுவாழாமல்
உற்பத்திசெம்பொன உடமை பெருவாழ்வைநம்பிச்
சற்பத்தின்வாயிற் றவளைபோலானேனே.

பொ - ரை. மனமே! ஆச்சரியமாக இந்தத் தேகத்தினின்றும் உயிரானது வெளிப்படுமுன்னரே, நல்ல ஆசாரியனைத்தோத்தரித்துத் தவத்தினையடைந்து வாழாமல் உண்டாகின்றசெவ்விய பொன்னினையும், ஆபரணங்களையும் பெருத்தவாழ்வினையும் நிலையென நம்பிப் பாம்பின்வாயகப்பட்ட தவளையினைப் போலாயினன்.

கு - ரை. உடலினின்றுய உயிர் நீங்குகிறகாலத்தில் எத்தனை பெயர் அதிசாக்கிரதையாகச் சூழ்ந்துகொண்டிருக்கினும் தெரிந்து கொள்ளுவதற்குக் கூடாமையாக விருத்தலின், 'அற்புதம்' என்றனர் பாம்பின்வாய்ப்பட்ட தவளை மறுபடியுமீளுதல் எக்காலத்திலுமில்லை போலப் பிரபஞ்சவாழ்விற்பட்டயான் மீளுதலில்லை யென்பார் 'தவளைபோலானேன்' என்றனர். 12

உற்றாரார்பெற்றாரா ருடன்பிறப்பார்பிள்ளைகளார்
மற்றாரிருந்தாலென்ன மாளும்போதுதவுவரோ
கற்றாவிழந்தவிளங் கன்றதுபோலேயுருகிச்
சிற்றாகிச்சிற்றின்பஞ் சேர்ந்தனையேநெஞ்சமே.

பொ - ரை. மனமே! உறவினர்களியார், பெற்றவரியார், உடன் பிறந்தாரியார், புத்திரர்களியார். மற்றவரியார் இவர்களிருந்து என்ன பிரயோசனம் இறந்துவிடும்போது உதவிசெய்வாரா, பசுவினைவிட் டெப்பிரிந்த இளமையான கன்றினைப்போலே யுள்ளமுருகி சிறுமையினையடைந்து அற்பப்பிரபஞ்ச இன்பத்தினை யடைந்தனையே.

கு - ரை. "தந்தையார் தாயார் தாரமார் உடன்பிறந்தாரார் தாந் தாமாறே வந்தவாறெங்ஙனே போமாறேதோ" என்றபடி இவர்க்கும் நமக்கும் சம்பந்தமில்லை நம்மை நெருங்கியிருந்தார் ஒவ்வொருவரும் மயிரைத்தடுத்தாண்டு கொள்வாரில்லை. ஆகலின் இத்தகையனரின் பொருட்டு இரங்குவதி லென்னபிரயோசன மென்றனர்.

வீடிருக்கத்தாயிருக்க வேண்டுமனையாளிருக்கப்
பீடிருக்கவூணிருக்கப் பிள்ளைகளுந்தாமிருக்க
மாடிருக்கக்கன்றிருக்க வைத்தபொருளிருக்க
கூடிருக்கநீபோன கோலமென்ன கோலமே.

பொ - ரை. வீடிருக்கவும், பெற்றதாயிருக்கவும், மிகவேண்டிய மனைவியிருக்கவும், பெருமையிருக்கவும், உணவிருக்கவும், புத்திரர்களிருக்கவும், மாடுகளிருக்கவும், கன்றுகளிருக்கவும், இருப்பாயுள்ள செல்வமிருக்கவும், உடலிருக்கவும் (ஆன்மாவாகிய) நீ பிரிந்துபோன மாய்கை என்னமாய்கையோ.

கு - ரை. சகலசம்பத்துடன் பிரபஞ்சத்தில் யாதொரு குறைவின்றி நெடுநாள் வாழ்ந்துக்கொண்டிருந்தும் இவையனைத்திலும் சிறிதும் விசுவாசமின்றி அனைத்தையும் திடீலெனப்பிரிந்து உயிர்நீங்கியது அதிசயமென்பார் 'கோலமென்னகோலமோ என்றனர்.' 14

சந்தனமுங் குங்குமமுஞ் சாந்தும்பரிமளமும்
விந்தைகளாய்ப் பூசிமிகு வேடிக்கையொய்யாரக்
கந்தமலர்சூடுகின்ற கன்னியருந் தாமிருக்க
எந்தவகை போனாயென் றெண்ணிலையே நெஞ்சமே.

பொ - ரை மனமே! சந்தனத்தையும் குங்குமத்தினையும், கூட்டுவர்க்கத்தினையும் (இன்னு மனேகமான) வாசனைத் திரவியங்களை

யும் விநோதமாக பூசிக்கொண்டு மிக வேடிக்கையாகவும், ஒழுங்காக வும் வாசனையுடன் கூடிய புட்பங்களைத் தரித்தமனைவியரும் சமீபத்தி ருக்க எந்தவகையாகப் போயிற்றென்று எண்ணிப் பார்த்தாயில்லையே.

கு-ரை எல்லாப் பதார்த்தங்களிலும் உயர்வாயும் அத்தியந்த பிரியமாயும் உடனுயிர்விடத் தகுந்த தன்மைவாய்ந்தவராயு மிருக்கத் தகுந்தவர் மனைவியர் அத்தகையினரும் ஏமாந்து நிற்க உயிர் நீங்குந் தன்மையைப்பற்றிச் சிறிதும் சிந்தித்தாயில்லையென்பார். 'எண்ணிலை யே' என்றனர். 15

காற்றுத்துருத்தி கடியவினைக்குள்ளான
ஊற்றைசடலத்தை யுண்டென்றிறுமாந்து
பார்த்திரங்கியன்னம் பசித்தோருக்கீயாமல்
ஆற்றுவெள்ளம்போல வாளாவினையே நெஞ்சமே.

பொ-ரை. மனமே! காற்றினையடைத்து வைத்திரும் தோல் துருத்தினையொத்து கொடுமையான வினையிற் கட்டுப்பட்ட நாற் றமாகிய உடலினை என்று நிலையாக விருக்குமெனக்கருவித்து எளி யாரைக் கண்டு மனமிரங்கி அன்னத்தினைப் பசித்தோருக்குக் கொ டுக்காமல் நதியின் நீர்பெருக்கினைப்போலப் பரதவிக்கின்றனையே.

கு-ரை. நிலையற்றதாகிய உடலினைப்பற்றி விசாரியாது அத னை நிலையெனவெண்ணி அதனாற் செருக்குற்ற எளியவர்கட்காகமன மிரங்கியவர்களை யாதரிக்காமல் விசாலமானவாழ்வில் புத்தியைவிட் டதனாலென்ன பிரயோசனமென்பார் 'அளாவினையே' என்றனர்.

நீர்க்குமிழிவாழ்வைநம்பி நிச்சயமென்றே யெண்ணிப்
பாக்களவாயன்னம் பசித்தோர்க்களியாமல்

போர்க்குளெமதூதன் பிடித்திழுக்கும்போது
ஆர்படுவரென்று யறிந்திலேயேநெஞ்சமே.

பொ - ரை. மனமே! நீரினிடத்துண்டாகும் குமிழினையொத்து வாழ்வதனைச் சத்தியமெனத் தீர்மானித்து. ஒருபாக்கு அளவேனும் அன்னம் பசித்தவர்கட்களியாது முடிவு காலத்தில் இயமனுடைய தூதன் கூட்டிக்கொண்டுபோம்போது யார் உதவிசெய்யவருவரென்று தெரிந்து கொண்டாயில்லையே.

கு - ரை. இயமன்பிடித்துக் கட்டிக்கொண்டு போம்போது எளியவர்கட் கன்னமிட்ட தருமந்துணையாக வருவதல்லது நிச்சயமென நம்பியிருந்த உடலானது உதவாதென்பார் 'அறிந்திலேயே' என்றனர். 17

சின்னஞ்சிறுநுதலாள் செய்தபலவினையான்
முன்னந்தமார்பில் முளைத்தசிலந்திவிம்மி
வண்ணந்தளதளப்ப மயங்கிவலைக்குள்ளாகி
அன்னம்பகிர்ந்துண்ண வறிந்திலேயே நெஞ்சமே.

பொ - ரை. மனமே! (மூன்றுவிரற்கடையுள்ள) அதிக சிறிய நெற்றியையுள்ளவள் பூர்வத்திற்செய்த வினைக்குத் தக்கபடி முன்னர் அவளுடைய மார்பினிடத்தே யுண்டாகிய கட்டிபோன்ற தனமானது பெருத்து நிறந்தளதளப்பாய் பிரகாசிக்கக்கண்டு மயங்கி மோகவலையிற் பட்டு அடியார்கட் கன்னமளித்துண்ணத் தெரிந்தாயில்லை-

கு - ரை. பெண்களில் சிறந்த அங்கமாகப்பாவிப்பது தனம். அது தன்னுடைய அழகியஉருவத்தால் எத்தகையினராயும் மயங்கச் செய்வது சகசம்- அவ்வுருவத்தினைச்சிறுது ஆராய்ந்து அது இரத்தம் மாமிசத்தாலாகிய ஒருகட்டி போன்றதெனத் தீர்மானித்து அதன்

மோகத்தினின்றுநீங்கி அடியார்கட்கன்னமளித்து வாழ்வதே சிறந்த தென்றனர். 18

ஒட்டைத்துருத்தியை யுடையும்புழுக்கூட்டை
ஆட்டுஞ்சிவசித்த ரருளைமிகப் போற்றியே
வீட்டைத்திறந்து வெளியை யொளியாலழைத்துக்
காட்டும்பொருளிதென்று கருதிலையே நெஞ்சமே.

பொ - ரை. மனமே! துவாரமுடைய தோல் துருத்தியினை, அழியும்புழுக்கணிறைந்த கூண்டினை (ஒத்த இவ்வுடலை) ஆட்டுவிக்கும் சிவசித்தராய் சுவாமியின் திருவருளை மிகவாகநாடியே ஆணவக் கபாடந் திறந்து இருதயசிதாகாயவெளியினை ஞானத்தால் அழைத்து நிறுத்தி ஆன்மாவிற்குக் காட்டிவிக்கும் பொருளின்னதென நினைத்தாயில்லையே.

கு - ரை. ஆணவமலத்தடிப்பால் சிதாகாயத்தின் கண்ணே மறைந்து கிடக்கும் முதல்வனை ஞானத்தாற்கண்டு தெரிந்துகொள்ளவில்லையேஎன்பார் 'கருதிலையே' என்றனர். உயிருக்குயிராக விருந்து கன்மத்திற்குத் தக்கபடி உடலினையாட்டுபவன் பெருமானாகலின், 'ஆட்டுஞ்சிவசித்தர்' என்றனர். 19

ஊன்பொதிந்தகாய முளைந்தபுழுக்கூட்டைத்
தான் சுமந்ததல்லால்நீ சற்குருவைபோற்றாமல்
கான்பரந்தவெள்ளங் கரைபுரளக்கண்டேகி
மீன் பரந்தாற்போலே விசாரமுற்றாய்நெஞ்சமே.

பொ - ரை. மனமே! தசைக்கொழுத்ததேகத்தினைப் புழுக்கள் நிறைந்தகூட்டினைப் (பலவருடங்களாகச்)சுமந்து (வாழ்ந்த) தல்லாமல் நீ உண்மையான ஆசாரி மூர்த்தியைப் போற்றாமல், காட்டினி

டத்தேபரவிய நீர் வெள்ளமான இருகரையினும் புரண்டு பாய்தலைக் கண்டு மீன்களும்சென்று பரவியதுபோல துன்பமுற்றினையே.

கு - ரை. ஆற்றிலேவெள்ள மதிகரித்து இருகரையுங்கடந்து பூமியிற் பரவியபோது மீன்களும் வெள்ளத்திற்சென்று பூமியிற்பர வியிருக்கும் சமயத்தில்பூமி நீர்வற்றிவிட மீன்கள் பூமியிலே தங்கி நீரின்றிப் பரிதபிக்கும். அதுபோல உடல்வழியாகஎல்லாப் பிரபஞ்ச காரியங்களிற்சென்று விஷயானுபோகங்களை யனுபவித்து வரும் சமயத்துத் தேகமழிய உயிர் தவிக்குமென்பார் 'விசாரமுற்றாய்' என் றனர்- 20

உடக்கையொக்கி யுயிரை யடைத்துவைத்த
சடக்கைச்சதமென்று சார்ந்தங்கிறுமாந்தை
உடக்கைதகர்ந்தே யுயிரையமன் கொள்கையிலே
யடக்கமாய்வைத்தபொரு ளங்குவரமாட்டாதே.

பொ - ரை. (மனமே! வாயுவாகிய வொரு) சுள்ளாணியை மூ றுக்கி யுயிரையடைத்துவைத்த தேகத்தினை நித்தியமென்று பொருந் திக் கர்வித்திருந்தனை, (வாயுவாகிய) சுள்ளாணிகழற்றி யுயிரை யம ன்பிடித்துக் கொண்டுபோகையிலே நீ சேகரித்துவைத்த திரவிய உன்னுடன் வராது.

கு - ரை. உயிரினைத் தேகத்தினிலடைத்து அது வெளிவாரா படிஒரு ஆணியாக வாயு பூரிக்கப்பட்டிருக்கிறது, அவ்வாயு வெளிப் படின் உயிர் வெளிப்பட்டு விடுமாகையால் வாயுவை 'உடக்கை' என் றுவமித்தார். 2

தித்திக்குந்தேனைத் தெவிட்டாததெள்ளமுதை
முத்திக்குவித்தான முட்பாழை போற்றாமல்

பற்றிபிடித்தியமன் பாசத்தாற்கட்டும்வண்ணம்
சுற்றியிருக்கும்வினை சூழ்ந்தனையேநெஞ்சமே.

பொ - ரை. மனமே! சுவைவாய்ந்ததேனை, (உண்ணஉண்ண) வெறுக்காததெள்ளியஅமுதினை, முத்திக்குக்காரணமாயுள்ள முப்பாழினைக்கடந்த பொருளைப்போற்றாமல் நெருங்கிப்பிடித்து இயமன் கயிற்றால் பிணிக்கும்படியாகச் சூழ்ந்திருக்கும் வினைகளினிற் கூடினையே.

கு - ரை. வினைசம்பந்தமாக விருக்கும்வரையில் இயமன் கட்டிற்குட்படவேண்டியது வினைநீங்கி இயமன் கட்டினின்றும நீங்க வேண்டுமோயின் முப்பாழினைவிசாரித்து அதற்கப்பாற்பட்ட முதலினைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்பதாம். 22

அஞ்செழுத்தாமெட்டெழுத்தா மைம்பத்தோரட்சரமாய்
பிஞ்செழுத்தாய்நின்ற பெருமானைப் போற்றாமல்
வஞ்சகமாயுற்றமுலை மாதர்வலைக்குள்ளாகிப்
பஞ்சரித்துத்தேடிப் பாழுக்கிறைத்தோமே.

பொ - ரை. பஞ்சாட்சரமாகியும் அஷ்டாட்சரமாகியும் ஐம்பத்தோரெழுத்தாகியும், பிஞ்செழுத்தாகியும் எழுந்தருளிய சிவபெருமானைப் போற்றாது வஞ்சகம்வாய்ந்த தனத்துடன் கூடியபெண்களின் வலையிற்பட்டுக் கெஞ்சிபேசி அவரைத் தொடர்ந்து நாடிப் பாழினிற் காலத்தைக்கழித்தோமே.

கு - ரை. ஈண்டு எட்டெழுத்தென்றது ஓம்-ஆம்-அவ்வும்-சிவாயநமஎன்றதாம். பிஞ்செழுத்தென்பது சத்தியட்சரமாகிய வகரமாம் மாற்றிவற்றின் விபரங்களனைத்தையும் சுத்தாத்துவித சித்தாந்தவைதிக சைவசன்மார்க்கரையடுத்து உபதேசக்கிரமமாகத் தெளிந்துகொள்ளவேண்டும். 23

அக்கறுகுகொன்றைதும்பை யம்புலியுஞ்சூடுகின்ற
சொக்கர்திருத்தாளைத் தொழுதுவணங்காமல்
மக்கள்பெண்டீர்சுற்றமுடன் வாழ்வைமிகநம்பியன்பாய்
எக்காலமுமுண்டென் றெண்ணினையேநெஞ்சமே.

பொ-ரை. மனமே! உருத்திராட்சத்தினையும், அறுகம்புல்லினையும், கொன்றைப்புட்பத்தினையும், தும்பைமலரினையும், சந்திரனையும் தரிக்கின்ற சொக்கலிங்கப்பெருமான் அழகிய சரணங்களைத் தொழுது வணங்காமல், புத்திரர், மனைவியர், சுற்றத்தினர் இவர்களுடன் கூடிவாழுதலையை அதிகமாகநம்பி ஆசையாய் எக்காலமும் சத்தியமாயிருக்குமென்று நினைத்துவிட்டனையே.

கு-ரை. என்றும் சத்தியமாயுள்ள சிவபெருமான் திருத்தாளைவணங்காது என்றும் அசத்தியமாயுள்ள வாழ்வினரை நம்பியிருத்தலிற் கண்டபயனென்னை யென்பதாம். 24

ஆண்டகுருவி னருளைமிகப்போற்றி
வேண்டுங்கயிலாய வீட்டுபழிபாராமல்
பூண்டகுழன்மாதுநல்லார் பொய்மாய்கைக்குள்ளாகி
தூண்டிலகப்பட்டுத் துடிகெண்டையானேனே.

பொ-ரை. மனமே! அடிமையாக ஆட்கொண்ட ஆசாரியனின் திருவருளை அதிகமாக வாதரித்து அத்தியாவசியமாக வடையவேண்டும் திருக்கயிலாயவழியினை யெதிர்ப்பாராமல், (புட்பத்தினைத்) தரித்த கூந்தலையுடைய மாதர்களின் பொய்பாகிய வஞ்சனையிற்சிக்கி தூண்டினிலகப்பட்டு துடிக்கின்ற கெண்டைமீனுக்கு ஒப்பானேன்.

கு-ரை. ஆசாரியமூர்த்தியின் அனுக்கிரகத் தன்மையினைய டைதல் கயிலாயமடைதல் திண்ணமாகலின் அவ்வனம் செய்ப

தூண்டிலகப்பட்ட மீனைப்போல மாதர்மயலிற் சிக்குண்டு துன்பமடைவதிலென்ன பிரயோசனமென்றனர். 25

ஏணிப்பழுவா மிருளையருக்தாளமுற்றும்
பேணித்தொழுங்கயிலை பேறுபெறமாட்டாமல்
காணவரும்பொருளாய்க் கண்கலக்கப்பட்டடியேன்
ஆணியற்றமாமரம்போ லாகினனே நெஞ்சமே.

பொ - ரை. மனமே! ஏணிபழுவாகிய ஆணவவிருளையொழித்து ஆட்கொள்ளவும் வந்தித்து தொழத்தகுந்த திருக்கயிலையின் பாக்கியத்தை யடையமாட்டாது, காண்டற்கரியதாயுள்ள நிஷ்களப்பொருளைநாடி வீண்சஞ்சலமுற்று அடியேன் ஆதாரமற்ற வொருமாமரத்தினையொத்தேன்.

கு - ரை. சகளரூபகமாயுள்ள திருக்கயிலாயத்தி லெழுந்தருளியிருக்கும் ஸ்ரீகண்ட பரசிவப்பொருளின் திருவடியையடைய முயற்சிசெய்யாது நிஷ்களமாயுள்ள வொருபொருளிருப்பதாக வெண்ணிச் சிந்தித்துச் சூனியமேகண்ட பொருளாகிமுடிந்ததால் 'கண்கலக்கப்பட்டேன்' என்றனர். 26

கோத்துப்பிரகாசங் கொண்டுருகியண்டமெல்லாம்
காத்தபடியே கயிலாயஞ்சேராமல்
வேற்றுருவப்பட்டடியேன் வெள்ளம்போலுள்ளுருகி
ஏற்றுங்கழுவி லிருந்தபிணமானேனே.

பொ - ரை. கலந்து சிவப்பிரகாசமடைந்து மனமுருகி உலகமனைத்தும் திருவருளிற்றிளைத்துக் காத்தவண்ணமே திருக்கயிலையினையடையாமல், வேறு இடங்களிலுள்ள தேவர்கள்பால். மனம்

வைத்து எதன்பொருட்டு வெள்ளெலும்பினைப்போல இளைத்து, எற்றிய கழுவில் தங்கிய சவத்திற்குச் சமானமாயினேன்.

கு - ரை. திருக்கைலாயத்தின் கண்ணேயுள்ள சிவபெருமானைத் தியானித்தலினாலேயே முத்தியுண்டாம், வேறுபட்ட பொருள்களாகிய தேவர்கள்பால் சிந்தைவைக்கின் கழுவேறியபிணத்தின் நிலையினை யொக்குமென்பதாம். 27

நிலைவிட்டுடலையுயிர் நீங்கியகலு முன்னே
சிலைதொட்ட வேடனெச்சிற் றினனைச்சேராமல்
வலைபட்டுழலுகின்ற மான்போற்பரதவித்துத்
தலைகெட்ட நூலதுபோற் றட்டழிந்தாய்நெஞ்சமே.

பொ - ரை. தேகத்தின் நிலையினைப்பிரிந்து உயிர்நீங்கு முன்னர் வில்லினைக்கரத்திலேந்திய வேடராகிய கண்ணப்பர் எச்சிலையுண்ட பரமசிவனையடையாமல் வலையிற்சிக்குண்ட மானினைப்போலவும், நுனியகப்படாத நூலினைப்போலவும் மாறிகெட்டேன் என்றனர்.

கு - ரை. சிவபெருமானை வணங்காது வேறுபட்ட மனத்தரியாவரும் வலையிற்சிக்குண்டமான் கஷ்டப்பட்டதுபோலவும், நுனிகாணாத நூல்சிக்குண்ணுவதுபோலவும் மானினையொத்துத்தான் துன்பப்படுவதன்றி, நூற்சிக்கலைப்போலப் பிறருக்குத் துன்பங் கொடுப்பரென்பதாம். 28

முடிக்குமயிர்ப்பொல்லா முழுக்குரம்பையின்றரின்
இடைக்குநடைக்கு மிதங்கொண்டவார்த்தைசொல்லி
அடிக்கொண்ட தில்லைவனத் தையனேநாயனையேன்
விடக்கையிழந்த மிருகமதுவானேனே.

பொ - ரை. புட்பங்களைமுடிக்கும் கூந்தலினைவாய்ந்து, தீமையாகிய தேகத்தினை யெடுத்துள்ள மாதர்களின் இடுப்பினுக்கும், நடையினுக்கும் (உவமித்த) இதமாகிய வார்த்தையினைபேசி அன்பரின்பொருட்டுத் திருவடியினைவாய்ந்ததில்லை வனத்தின்கண்ணே யெழுந்தருளியிருக்கும் ஐயனே மாமிசத்தையிழந்த மிருகத்தை யொத்தவனாயினேன்.

கு - ரை. மாதர்களின் அங்கங்களுக்கு உவமானம் சொல்லியிருக்கிற வார்த்தைகளை யெடுத்துக்கூறி அவர்கட்குச் சந்தோஷம் விளைவித்துக் குஞ்சிதபாதத்தினையுடைய பெருமான்றிருவடியை மறந்திருப்பது தனக்கு உணவாகக்கிட்டிய மாமிசத்தினையிழந்த மிருகத்தினுக் கொப்பென்பதாம். 29

பூவாணர்போற்றும் புகழ்மதுரைச்சொக்கரது
சீர்பாதம்போற்றிச் சிவலோகஞ்சேராமல்
தாவாரந்தோறுந் தலைபுகுந்தநாய்போல
ஆகாதநெஞ்சமே யலைந்துதிரிந்தாயே.

பொ - ரை. பிராமணர்வந்திக்கும் புகழினைவாய்ந்த மதுரையிலெழுந்தருளியிருக்கும் சொக்கலிங்கப்பெருமானது சிறப்புப்பொருந்திய திருவடியினைத் தோத்தரித்துச் சிவபதியடையாமல் வீட்டின் தாவாரம் தோறுமோடிப் பிரவேசித்து (யாவராலும் மொத்துண்ணும்) நாயினைப்போல (ஒன்றினுக்கும்) உபயோகப்படாத மனமே வீணையலைந்துதிரிந்தனையே.

கு - ரை. மதுரைச் சொக்கலிங்கப் பெருமானைத் தோத்தரித்து அடையவேண்டிய நற்பதவியினையடையாமல் கண்டகண்டவூரை நாடித்திரிதல் வீடுகள்தோறு நுழைந்து எல்லாராலும் மொத்துண்ணும் நாயினிலைக்கு ஒத்திருக்குமென்பதாம். 30

பத்தொட்டாயோரைந்தாய்ப் பதின்மூன்றையுங்கடந்து
ஒத்திட்டுநின்றதோர் சொரூபத்தைப்போற்றாமல்
தெத்திட்டுநின்ற திரிகண்ணிக்குள்ளாகி
வித்திட்டாய்நெஞ்சே விடவுமறியாயோ.

பொ - ரை. மனமே! பத்து, எட்டு, ஐந்து, பதிமூன்று ஆக முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து ஒத்து எழுந்தருளியசொரூபத்தினை வணங்காமல் அலைத்துநின்ற சுழலுநேத்திரத்திலுக்குட்பட்டு ஆதாரமாகுய் நீங்கவுமறியாய்.

கு - ரை. தத்துவாதீதனாக விலங்கும் பெருமானை வணங்காது கண்ணால்மயக்கி யலைகின்றமாதர்போல் சிக்குண்டனை யினிமீளவறியாய்- 31

அஞ்சுடனேழாகி யைமூன்றுமெட்டுமொன்றாய்
மிஞ்சியிருந்த விளக்கொளியைப்போற்றாமல்
பஞ்சிலிடுவென்னியைப்போற் பற்றிப்பிடியாமல்
நஞ்சுண்டசென்னடையைப்போல் நானலைந்துகெட்டேனே.

பொ - ரை. ஐந்து, ஏழு, பதினைந்து, எட்டு ஒன்று ஆகிய (முப்பத்தாறு தத்துவங்களையும்) கடந்திருந்த அருட்சோதியைப் போற்றாமல் பஞ்சிலிட்ட அக்கினியைப்போலத் தாவிப்பிடியாமல் விஷமுண்ட மீனைப்போல நானலைந்துகெட்டேனே.

கு - ரை. தத்துவாதீதனாகவிளங்கும் பெருமானைப் போற்றாமலும், பஞ்சில் அக்கினி யதிசீக்கிரம் பற்றுதல்போல அதிவிரைவிற் றாவாமலும் விடமுண்ட மீனையொத்துத் துடிக்கின்றேனென்பதாம்

ஊனமுடனே யுடையும்புழுக்கூட்டை
மானமுடனே சுமந்து மண்ணுலகில்மாளாமல்
ஆனதொருபஞ்சவர்க ளாண்டிருந்ததேசம்விட்டுப்
போனதுபோலேநாம்போய்ப் பிழைத்தோமில்லையே.

பொ - ரை. மனமே! குற்றத்துடனே அழிந்துபோகும் புழுக்கள்நிறைந்த கூண்டினையொத்த உடலைக் கவுரவத்துடனே தாங்கிப் பூமியிலேசாகாமல் பஞ்சபாண்டவர்கள் அரசாட்சி செய்துகொண்டிருந்த சுதேசத்தை நீங்கிக் காட்டிற் சென்றதுபோல நாம் சென்று உய்ந்தோமில்லை.

கு - ரை. பஞ்சபாண்டவர்கள் சுதேசத்தி லிருந்துகொண்டு பங்காளிகள் உபத்திரவம் சகியாமல் அவர்களைவிட்டு நீங்கிக் காட்டிற் சென்று பெரியோர் கூட்டத்திலிருந்து வாழ்ந்ததுபோல, இல்லறத்தின்கண்ணே யிருந்துகொண்டிருந்து அனேகமான சச்சரவுகளுடன் சஞ்சலப்படாது வெளியேறித் தவம்செய்தோ மில்லையேயென்றனர். (இது ஏகதேச வுவமானம்.) 33

ஊறையிறைக்கின்ற வுப்பிருந்தபாண்டத்தை
நாறாமல்நாறி நழுவும்புழுக்கூட்டை
வீறும்புரத்தை விரும்புகின்றதெப்படியென்
றூறுதநாட்டி லகன்றிருந்தேனில்லையே.

பொ - ரை. சலமலாதிகளை யிறைக்கின்ற உப்படைத்த பாண்டத்திற் கொத்தனை, நாற்றமெடாததுபோல் தோன்றி நாறிக்கொண்டிருந்து ஒருகாலத்தில் அழிபடும் புழுநிறைந்த கூட்டினை, இருமைப்புவாய்ந்த உடலை விரும்புகின்ற தெவ்வண்ணம் எனினும் அழிவில்லாத பூமியில் சென்றிருந்தேனில்லை.

கு - ரை எந்தவிதத்திலும் சிறிதும் சுகமென்பது கிடையாத உடலினை நம்பி சுத்தபூமியில் போய்வாழும் பாக்கியத்தினைப் பெற்றேனில்லையே.

அரியவரிதேடி யறியவொருமுதலை
பரிவுடனேபோற்றும் பரஞ்சுடரைப்போற்றாமல்
கரியபெருவாழ்வைநம்பிக் காமத்தழுந்தியே
அரிவாயிற்பட்ட கரியதுபோலானேனே.

பொ - ரை. அருமையான விஷ்ணுமூர்த்தி தேடி அறிந்துகொள்ளக்கூடாத ஒப்பற்ற முதல்வனை ஆசையுடன்போற்றும் சிவபரஞ்சுடரைத் தோத்தரியாமல் கரிந்துபோகத்தகுந்த பெரிய வாழ்வினை நம்பிகொண்டு காமாந்தகாரத்தி லழுந்தியே சிங்கத்தின்வாயிலகப்பட்ட யானையைப்போல வாயினேன்.

கு -ரை. பிரபஞ்சவாழ்வானது அநியற்புக வாழ்வென்று சிந்தியாது மறந்து பெருவாழ்வாக நினைத்திருக்கின்றாரென்பார் பெருவாழ்வு என்றனர். இவ்வாழ்வை நம்பின் சிங்கத்தின்வாய்ப்பட்ட யானையின் கதியேயாமென்றனர். 35

தந்திரத்தைபுன்னி தவத்தைமிகநிறுத்தாது
மந்திரத்தைபுன்னி மயங்கித்தடுமாறி
விந்துநாதமா மேலொளியைக்காணமல்
அந்தரத்தேகோலெறிந்த அந்தகன்போலானேனே.

பொ - ரை. சிவாகமங்களைப்படித்து தவத்தினை நிலையுறச்செய்யாது, சாமான்னிய மந்திரங்களைச் சபித்து அதில் மயங்கித் தடுமாறி விந்துநாதங்களைக்கடந்த சோதி சொரூபத்தினைத் தரிசியாமல் ஆகாயத்தில் கைக்கோலை வீசிவிட்ட குருடனையொத்தேன்.

கு - ரை. சிவாகமங்களிற் குறித்த மகா மந்திரங்களைச் சிந்தியாது பசுமந்திரங்களைச் சிந்தித்து மோட்சமடையக் கருதுதல் தனக்காதாரமாக விருந்த கையிலுள்ள கோலினை ஆகாயத்திலெறிந்துவிட்டு வழிதெரியாது மயங்கிவிழும் குருடனுக்கு சமமாம். 36

விலையாகிப்பாணனுக்கு வீறடிமைபட்டதுபின்
சிலையார்கைவேடனெச்சிற் றின்றானைப்போற்றாமல்
அலைவாய்த்துரும்பதுபோ லாணவத்தினாலழுங்கி
யுலைவாய்மெழுகதுபோ லுருகினையேநெஞ்சமே.

பொ - ரை. மனமே! பாணபத்திரனுக்கு அடிமையாக வெழுந்தருளியவரும், கைவில்லேந்திய கண்ணப்பநாயனார் எச்சில் தின்றவருமாகிய பெருமானைத் தோத்தரியாமல், சமுத்திரவலையிற் சிக்குண்ட துரும்பினைப்போல, ஆணவமலத்திலே கட்டுபட்டு உலையிலுருகும் மெழுகினைப்போல உருகினையே.

கு - ரை. சிவபெருமான் திருவடிகளைப் போற்றியுய்யாது, பிரபஞ்ச போகத்தின்கண்ணே உலைவாய்மெழுகா யுருகுவதனால், அலையிலகப்பட்ட சிறுதுரும்பு கரையினும்சேராமல் கடலினும் புகாமல் அலைவதுபோன்ற நிலையடைந்தனை யென்பதாம். 37

நெஞ்சொடுபுலப்பல் முற்றிற்று.

# பட்டினத்துப்பிள்ளையார்

## பூரணமாலை.

மூலத்துதித்தெழுந்த முக்கோணசக்கரத்துள்
வாலைதனைப்போற்றாமல் மதிமறந்தேன் பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே! மூலாதாரத்திலே யுதித்த முக்கோணவடிவமாயுள்ள சக்கிரத்தின்கண்ணே யெழுந்தருளியிருக்கும் வாலாம்பிகைத் தாயைத் தோத்தரியாமய் புத்திகெட்டேன்.

கு - ரை. மூலாதாரமாவது காலெலும்பும் இரண்டுங் கதிரெலும்புங்கூடிய இடம் குய்யம் குய்யத்திற்கும் குசத்திற்கும் நடுவே குண்டலிவட்டமாய் அந்தவட்டத்திற்கு நடுவே நாலிதழுடைய ஒரு புட்பவட்டமாய் கடப்பம் பூப்போன்றிருக்கும் அந்தப் புட்பத்திற்கு நடுவில் ஓங்காரவெழுத்து நிற்கும் அந்த ஓங்காரத்திற்கு நடுவில், விகினேஸ்வரனும், வல்லபைசத்தியும் எழுந்தருளியிருப்பார்கள். 1

உந்திக்கமலத் துதித்துநின்றபிரமாவைச்
சந்தித்துக்காணாமற் றட்டழிந்தேன் பூரணமே.

பொ - ரை. எங்கு நிலைறகின்ற பொருளே! உந்தியாகிய கமலத்திலே தோன்றியிராநின்ற பிரமனை நெருங்கித் தரிசியாமல் தடுமாறினேன்.

கு - ரை. இது சுவாதிட்டானம் மூலாதாரத்திற்கு இரண்டுவிரற்கடையேலிருப்பது நாற்சதுரமும் அச்சதுரத்தினடுவே ஆறிதழ்களையுடைய ஒரு புட்பவட்டமும் அதன்மத்தியிலே லிங்கபீடமும் வீணைத் தண்டினடியுமாயிலங்கி அதனடுமத்தியிலே நகார எழுத்து நிற்கும். அந்நகாரத்தினடுவில் பிரமாவும் சரஸ்வதியும் வீற்றிருப்பார்.

நாபிக்கமல நடுநெடுமால்காணாமல்

ஆவிகெட்டியானு மறிவழிந்தேன்பூரணமே.

பொ-ரை. எங்கு நிறைகின்ற பொருளே! உந்தியின் கமலமாகிய நடுவிலே விண்டுமூர்த்தியைத் தரிசியாமல் உயிர்பூர்த்து அடியேனும் புத்திகெட்டேன்.

கு-ரை. இது மணிபூரம் சுவாதிஷ்டானத்திற்கு எட்டுவிரற் பிரமாணத்திற்குமேல் இருப்பது இது அண்டம்போல ஆயிரத்தெட்டு நரம்பு நாடிகளும் சூட்சநாடிக்கெல்லாம் வேருள்ளது. இது உந்திக்கு நேரில் அப்புத்தானத்தில் எழாம்பிறைக் கிணங்கியிருக்கும் இதுநடுவே பத்து இதழுடைய ஒருபுட்பம் வட்டமாயிருக்கும். அந்தப் புட்பத்தினடுவில் மகாரவெழுத்து நிற்கும்- அம்மகாரத்தினடுவில் மகாவிஷ்ணுவும் இலட்சுமியும் எழுந்தருளியிருப்பார்கள். 3.

உருத்திரனையிருதயத்தி லுண்மையுடன்பாராமல்

கருத்தழிந்துநானுங் கலங்கினேன்பூரணமே.

பொ-ரை. எங்கும் நிறைகின்ற பொருளே! உருத்திர மூர்த்தியை இருதயத்திலே பிரத்தியட்சமாகத் தரிசியாமல் மனங்கெட்டு அடியேனுங் கலங்கினேன்.

கு-ரை. இது அநாகதம், மணிபூரகத்திற்குமேல் பத்துவிரற்கடை பிரமாணமுள்ள இடத்திற்கு மேலுள்ளது; இது இருதயகமலமாம் இத்தேயத்தானத்தில் முக்கோணமாயிருக்கும். அம் முக்கோணத்தினடுவில் பனிரண்டிதழுடைய ஒருபுட்ப வட்டமாயிருக்கும் அப்புட்பத்தினடுவில் சிகாரவெழுத்து நிற்கும் அச்சிகாரத்தினடுவில் உருத்திரனும் பார்வதியும் எழுந்தருளியிருப்பர். 4

விசுத்திமயேசுரனை விழிதிறந்துபாராமல்
பசித்துருகிநெஞ்சம் பதறினேன்பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே! விசுத்தியிலே மகேஸ்வரனை விழித்துக்கொண்டிருந்து தரிசியாமல் பசியால் வருந்தி மனம் பதைத்தேன்.

கு - ரை. இது விசுத்தி அநாகதத்திற்குமேல் பத்துவிரற்கடை பிரமாணமுள்ள இடத்திலிருப்பது. இது கண்டஸ்தானத்திலே வாயுஸ்தானத்திலுள்ளது. அறுகோணமாயிருக்கும் அக்கோணத்தி னடுவில் பதினாறிதழையுடைய ஒரு புட்பவட்டமாயிருக்கும் அப்புட்பத்தினடுவே வகாரவெழுத்து நிற்கும். அதனடுவில் மகேஸ்வரனும் மகேஸ்வரியும் எழுந்தருளியிருப்பர். 5

நெற்றிவிழியுடைய நிர்மலசதாசிவத்தைப்
புத்தியுடன்பாராமற் பொறியழிந்தேன்பூரணமே

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே! நெற்றியின்கண்ணே நேத்திரத்தையுடைய மலரகிதராயுள்ள சதாசிவத்தினை அறிவுடனே தரிசியாமல் ஞானமிழந்தேன்.

கு - ரை. இது ஆஞ்ஞை விசுத்திற்குப் பனிரண்டு விரற்கடை பிரமாணமுள்ள ஸ்தானத்தின்மேலிருப்பது, வீணைத்தண்டின் முடிமமாய் ஊடுருவிப் பொன்போன்ற வடிவமுற்றுநிற்கும். நெற்றிப் புருவத்தின் வெளியாய் ஆகாயதானத்தில் மூன்றிதழையுடைய ஒரு புட்பத்தினடுவே யகாரவெழுத்தோ டிணங்கியிருக்கும். அவ்வெழுத்திற்கு நடுவே சதாசிவமும் மனோன்மணியும் எழுந்தருளியிருப்பர். 6

நாதவிந்துதன்னை நயமுடனேபாராமல்
போதமயங்கிப் பொறியழிந்தேன்பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே! நாததத்துவத்தினையும் விந்து தத்துவத்தினையும், விருப்பமுடனே தரிசியாமல் அறிவு கெட்டு இந்திரிய கலக்கமுற்றேன்.

கு - ரை. நாததத்துவம் விந்துதத்துவ மிரண்டும் சதாசிவதத்துவத்தைக் கடந்ததத்துவங்கள். சிவதத்துவத்திற்கும் சந்திதத்துவத்திற்கும் கீழ்பட்டன. 7

உச்சிவெளியை யுறுதியுடன்பாராமல்

அச்சமுடனானு மறிவழிந்தேன்பூரணமே.

பொ - ரை. எங்கும் நிறைகின்ற பொருளே! உச்சியிலேயிருக்கும் வெளியினைநிலையாகத் தரிசியாமல் பயத்துடன் அடியேனும் அறிவிழந்தனன்.

கு - ரை. உச்சிவெளியாவது விந்துநாதமாகிய தத்துவங்களைக் கடந்த சிதாகாய சிதம்பரவெளியாம். 8

மூக்குமுனையை முழித்திருந்துபாராமல்

ஆக்கைகெட்டுநானும் மறிவழிந்தேன்பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே! மூக்கினுனியாகிய இடத்தினைக் கண்விழித்திருந்து தரிசியாமல் உடல்கெட்டு அடியேனும் அறிவழியப் பெற்றேன்.

கு - ரை. மூக்கினுனியாவது சுழுமுனை ஸ்தானம் அவ்விடத்தில் பார்வையினைநாட்டித் தியானம் செய்வது ஒருமுறை. 9

இடைபிங்கலையி னியல்பறியமாட்டாமல்

தடையுடனேயானுந் தயங்கினேன்பூரணமே.

பொ - ரை. எங்குநிறைகின்றபொருளே! இடைகலை, பிங்கலைகளின் தன்மையினை உணரமாட்டாமல் தடையுற்று அடியேனும் தத்தளித்தேன்.

கு - ரை. இடைகலையாவது மூக்கின் இடதுதுவாரத்தின் வழியாகவரும் பிராணவாயுவாகிய சுவாசம், இதனைச் சந்திரகலையென்பர், பிங்கலைமூக்கின் வலத்துவாரத்தின் வழியாகவரும் பிராணவாயுவாகிய சுவாசம் இதனைச் சூரியகலையென்பார். 10

ஊனுக்குணின் றுலாவினதைக்காணாமல்
நானென்றிருந்து நலமழிந்தேன்பூரணமே.

பொ - ரை. பரிபூரணப் பொருளே! உடலுக்குள்ளே தேவரீர் (ஆன்மாவிற்கு ஆன்மாவாகவிருந்து) உலாவிக்கொண் டிருப்பதனைத் தெரிந்துகொள்ளாமல் நானே அப்பரமான்மாவென விருந்து நலமனைத்தையுமிழந்தேன்.

கு - ரை. இது, "யாங்களே கடவுளென்றி பாதகத்தவரை" யென்றது. 11

மெய்வாழ்வைநம்பி விரும்பிமிகவாழாமல்
பொய்வாழ்வைநம்பிப் புலம்பினேன்பூரணமே.

பொ - ரை. எங்கும் நிறைகின்ற பொருளே! உண்மையானவாழ்வதனைச் சத்தியமென நம்பிக்கைகொண்டு ஆசைப்பட்டு வாழாது, பொய்மையான வாழ்வதனைச் சத்தியமென நம்பி விசனமடைந்தேன்.

கு - ரை. பொய்வாழ்வாவது சிவபெருமானுடன் இரண்டறக்கலந்துவாழ்வது பொய்வாழ்வாவது பிரபஞ்சத்தினைச் சத்தியமென எண்ணிவாழ்வது. 12

பெண்டுபிள்ளை தந்தைதாய் பிறவியுடன்சுற்றமிவை
யுண்டென்றுநம்பி யுடலழிந்தேன்பூரணமே.

பொ - ரை. எங்கும் நிறைந்த பொருளே! மனைவி, புத்திரர், பிதா, அன்னை. சோதாருடன் உறவினர் ஆகிய இவர்களெல்லாம் எந்நாளுமிருப்பரென வெண்ணித் தேகமழியப் பெற்றேன்.

கு - ரை. இவர்களனைவரும் எந்நாளுமிருந்து தனக்கு உதவி புரிவார்களெனநம்பி அவர்களைக் காக்கும்பொருட்டு உழைத்து உழைத்து உடலிளைத்தேனே யொழிய தனக்கென வொன்றுஞ் சம்பாதித்துக்கொண்டேனில்லையென்பார் 'உடலிழந்தேன்' என்றனர். 43

தண்டிகைப்பல்லாக்குடனே சகலசம்பத்துகளும்
உண்டென்றுநம்பி யுணர்வழிந்தேன்பூரணமே.

பொ - ரை. எங்கும் நிறைந்தபொருளே! தண்டிகை, பல்லக்கு மற்றைய செல்வங்கள் ஆகிய இவைகளெல்லாம் எந்நாளுமிருக்குமென நம்பி அறிவழிந்தேன்.

கு - ரை. தனது ஆயுள்பரியந்தம் தானனுபவித்துவரும் போகங்கள் தனக்கு உபகாரமாக விருக்குமென நம்பி மோசம்போயினேனென்பார் 'உணர்வழிந்தேன்' என்றனர். 14

இந்தவுடலுயிரை யெப்போதுந்தான்சதமாய்ப்
பந்தமுற்றுநானும் பதமழிந்தேன்பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைந்தபொருளே! இவ்வுடலிலே உயிரானது எக்காலத்தும் நிலையுற்றிருக்குமெனப் பந்தப்பட்டவனாகி அடியேனும் பக்குவத்தை யிழந்தனன்.

கு - ரை. உலகிலே எந்நாளும் சீவித்திருப்பமென நம்பிக்கொண்டு அடையவேண்டியவற்றை யடையாது இழந்தேன் என்பதை 'பதமிழந்தேன்' என்றனர். 15

மாதர்பிரபஞ்ச மயக்கத்திலேவிழுந்து

போதமயங்கிப் பொறியழிந்தேன் பூரணமே.

பொ - ரை. எங்குநிறைந்த பொருளே! மாதர்களென்னும் பிரபஞ்ச மோகத்திலேயழுந்தி அறிவுகெட்டு மயங்கி மதிகெட்டனன்.

கு - ரை. ஒருவன் மயக்கமடைவதற் கேதுவாகிய போகப்பொருள்கள் உலகத்திலே எண்ணிலவா யிருப்பினும் அவற்றுள் மாதரே சிறந்தவராய் எத்தகையினரையு மயக்கத்தக்கப் பொருளாயிருத்தலின் 'மாதர் பிரபஞ்சம்' என்றனர். 16

சரியைகிரியாயோகந் தான்ஞானம்பாராமல்

பரிதிகண்டமதியதுபோற் பயனழிந்தேன் பூரணமே.

பொ - ரை. எங்குநிறைந்த பொருளே! சரியை, கிரியை, யோகம் ஞானமுதலியவற்றி லொன்றினையும் நாடாமல், சூரியனைக் கண்ட சந்திரன்போலப் பிரயோசன மிழந்தேன்.

கு - ரை. நான்குவகைப்பட்ட சாதனங்களுளொன்றைக் கைப்பற்றி வாழின் அதற்குத்தக்க பிரயோசனமடைதல் நிச்சயமாகலின் அங்ஙனம் செய்யாது அப்பிரயோசனழுகா நின்றேனென்பார் 'பயனழிந்தேன்' என்றனர். 17

மண்பெண்பொன்னாசை மயக்கத்திலேவிழுந்து

கண்கெட்டமாடதுபோற் கலங்கினேன் பூரணமே.

பொ - ரை. எங்கும் நிறைந்த பொருளே! மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை யென்கிற மயக்கத்திலே சிக்குண்டு கண்ணில்லாதவொரு மாட்டினைப்போலக் கலக்கமுற்றேன்.

கு - ரை. ஈஷணைத் திரயங்களிற் சிக்குண்டு அவற்றின் வழி பட்டார்க்குச் சிவபெருமானுண்மை எவ்விதத்திலும் தோன்றாது என்பார் 'கண்கெட்ட மாடு' என்றனர். 18

தனிமுதலைப்பார்த்துத் தனித்திருந்துவாழாமல்

அனியாயமாய்ப்பிறந்திங் கலைந்துநின்றேன் பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே! ஒப்பற்ற முதல்வனாகிய (சிவபெருமானை) தெரிசித்துச் (சுகமாக) விருந்து வாழுதலையடையாமல் அனியாயமாக இறத்தலிலும், பிறத்தலிலும் மொத்துண்டு இவ்வுலகில் அலைந்து திரிந்தேன்.

கு - ரை. யாரொருவர் சிவபெருமானைத் தரிசிக்கும் புண்ணியத்தினை யடைகின்றனரோ அவரே இறப்பினும் பிறப்பினும் வாராரென்பது நிச்சயமாகலின் அங்ஙனம் தரிசியாததலினால் சனனமரணங்களிற் கட்டுண்டேனென்பார் 'அலைந்து நின்றேன்' என்றனர்.

ஈராறுதன்கலைக்கு ளிருந்துகூத்தாடினதை

ஆராய்ந்துபாராம லறிவழிந்தேன் பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே! துவாதசாந்த சவத்திலிருந்துகொண்டு ஞானநடனம் செய்தருளினதை விசாரித்துத் தரிசனம் செய்யாமல் மதிகெட்டேன்.

கு - ரை. சிவயோகம்புரிந்து அவ்வியோக சமாதியில் துவாதசாந்தத்திலேயுள்ள பெருமானைத் தரிசியாது வாழ்ந்ததலினாலே 'மதிகெட்டேன்' என்றனர். 20

வாசிதனைப்பார்த்து மகிழ்ந்துனைத்தான்போற்றாமல்

காசிவரைபோய்த்திரிந்து காலலுத்தேன் பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே! பிராணவாயுவினைக் கண்டு சந்தோஷித்துத் தேவரீரை ஸ்துதியாமல் காசிதலம் வரையிற் சென்று அலைந்து கால்நொந்தேன்.

கு - ரை. சிவயோக சமாதிகூடிப் பிராணவாயுவினை யடக்கி யங்கு அந்தர்முகத்திலே தரிசியாது உலகம் சுற்றியலைந்தேனென் பார் 'காலலுத்தேன்' என்றனர். பெருமான் உள்ளும் புறமும் வியாபித்துள்ள உண்மையினைத் தெரிந்துகொள்ளாது வெளிமுகந் நாட்டத்திலே மாத்திரம் கருத்தினைவைத்துக் காசி முதலிய தலங் கட்கு யாத்திரை செய்வதிற் பிரயோசனமில்லை யென்றபடியாம். 12

கருவிகடொண்ணூற்றாறிற் கலந்துவிளையாடினதை
இருவிழியார்பாராம லீடழிந்தேன் பூரணமே.

பொ - ரை. எங்கும் நிறைகின்ற பொருளே! தத்துவங்களாகிய தொண்ணூற்றாறிலும் இரண்டறக்கலந்து நடித்ததை இரு நேத்தி ரங்களாலும் தரிசியாமல் கெட்டேன்-

கு - ரை. அவரவர்கள் கன்மத்திற்குத் தக்கபடி அவரவர்கள் தத்துவங்களை சேட்டிப்பிப்பவன் சிவபெருமானென்ற உண்மையி னைத் தெரிந்து கொள்ளவில்லையென்பார் 'ஈடழிந்தேன்' என்றனர்.

உடலுக்குள்நீநின் றுலாவினதைக்காணாமல்
கடமலைதோறுந் திரிந்து காலலுத்தேன் பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே தேகத்திற்குள்ளே தேவரீர் எழுந்தருளியிருந்து சஞ்சரித்ததைத் தரிசியாமல் காடு மலை களிற் சென்று திரிந்து கால் நொந்தேன்.

கு - ரை. உயிருக்கு உயிராயிருந்து உயிரைச் சேட்டிப்பிக்கும் தன்மையை விசாரித்துத் தேராது அன்னியமாகக் காணும்பொரு

-டு வனந்தரங்களிற் சென்று அலேதல் பிரயோசனமில்லை யென்பார் 'காலலுத்தேன்' என்றனர். 23

எத்தேசகாலமுநா மிறவா திருப்பமென்று
உற்றுனைத்தான்பாராம லுருவழிந்தேன்பூரணமே.

பொ-ரை. எங்கு நிறைகின்ற பொருளே எக்காலமும் நான் சாகாமலே யிருந்துகொண் டிருப்பேனென்று (தீர்மானித்துத்) தேவரைப்பற்றி விசாரியாது நான் கெட்டேன்.

கு-ரை. தேகம் அநித்தியமெனும் உண்மையினைத் தேர்ந்து அது அழிபடுமுன்னே நித்தியனாகிய சிவபெருமானை விசாரித்துச் சுகப்பேறடையாது அஞ்ஞானத்தினாலே நெடுநாளைக்கிருப்போமென வெண்ணி விசாரியாது கெட்டேன் என்பார் 'உருவழிந்தேன்' என்றனர். 24

எத்தனை தாய் தந்தை யிவர்களிடத்தேயிருந்து
பித்தனுபானும் பிறந்திறந்தேன்பூரணமே.

பொ-ரை. எங்கு நிறைகின்ற பொருளே எண்ணில்லாத தாய் தந்தையர்கள் கர்ப்பத்திற்றங்கிப் பேதையனாகி இறப்பினும் பிறப்பினும் உட்பட்டேன்.

கு-ரை. எடுத்த சன்மத்திலேயே விசாரிக்கவேண்டிய உண்மையினை விசாரித்து அவ்வழியிலே நின்று பெறவேண்டிய பேற்றினை யடையாததால் அனேக சென்மங்கள் எடுக்கும்படி நேரிட்டதென்பார் 'பித்தனுயானும்' என்றனர். 25

பெற்றலுத்தாள்தாயார் பிறந்தலுத்தேன்யானுமுன்றன்
பொற்றுணைத்தாள் தந்து புகலருள்வாய்பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே தாய்மார்கள் எண்ணிலர்கள் என்னைப்பெற்று அலுத்துவிட்டார்கள். அடியேனும் பிறந்தலுத்து விட்டேன் (இனி யாகிலும்) தேவரீர் அழகிய இரண்டு திருவடிகளைத் தந்தருளி அடைக்கலந் தந்தருள்வாய்.

கு - ரை. பெற்றெடுத்த தாய்மார்கட்கும், பிறப்பெடுத்ததற்கும் இவ்வளவென எண்ணற்குக் கூடாமையின் 'அலுத்தாள் அலுத்தேன்,' என்றனர். இனியாகிலும் தடுத்தாண்டுகொள்ள வேண்டுமென்பார் புகலருள்வாய் என்றனர். 26

உற்றாரழுதலுத்தா ருறன்முறையார்சுட்டலுத்தார்
பெற்றலுத்தாள்தாயார் பிறந்தலுத்தேன் பூரணமே.

பொ . ரை. எங்கு நிறைகின்ற பொருளே சுற்றத்தினர் அழுது அலுத்துப்போய் விட்டனர், உறவினர் தீயிலிட்டு அலுத்தும்போய் விட்டனர் தாய்மார் பெற்றலுத்து விட்டனர்கள், அடியேன் பிறந்தலுத்து விட்டனன்.

கு - ரை. எடுத்த சென்மங்களிலே பெற்ற தாய்மார்கட்கும், இறந்தபோதழுத சுற்றத்தினர்கட்கும் சுடுகாட்டிற் கொண்டுபோய் கொளுத்தினவர்களுக்கும் கணக்கில்லை யெனவும் அங்ஙனமே அடியேனும் அலுத்துப்போனேன் எடுத்த செனனங்களால் எனவும் கூறினர் 27

பிரமன்படைத்தலுத்தான் பிறந்திறந்துநானலுத்தேன்
உரமுடையவக்கினிதா னுண்டலுத்தான் பூரணமே.

பொ - ரை எங்கு நிறைகின்ற பொருளே பிரமதேவனே உண்டாக்கி வருந்தினன், அடியேனே பிறப்பினும் இறப்பினும் துன்புறேன், பலம் பொருந்திய நெருப்பு கொளுத்தியலுத்துப் போய்விட்டது.

கு - ரை. அடிக்கடிபிறந்தும், அடிக்கடி இறந்தும் வருகிறகாலத்தில் முறையே பிரமன் படைக்கவும், அக்கினி கொளுத்தவும் வேண்டியிருத்தலினல் அவர்கள் அலுத்தனரெனவும் அவற்றால் யானு மங்ஙனமே அலுத்தேனெனவும் கூறினர். 28

எண்பத்துநான்கு நூறுயிரஞ்செனனமுஞ்செனித்துப்
புண்பட்டுநானும் புலம்பினேன் பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்றபொருளே? எண்பத்து நான்கு நூறுயிரம் சென்மங்களிலும் பிறந்து துன்பமுற்றுத் துக்கமடைந்தேன்யான்.

கு - ரை. கன்மத்திற்குத் தக்கபடி பற்பல சென்மங்களிலும் கட்டுப்பட்டிருக்க வேண்டுமென்பது நிச்சயமாகலின் எண்பத்து நான்கு நூறுயிரம் சென்மமென்றனர். 29

என்னையறியாம லெனக்குள்ளேநீயிருக்க
உன்னையறியாம லுடலிழந்தேன் பூரணமே.

பொ - ரை எங்கும் நிறைகின்றபொருளே? நானறிந்துகொள்ளாதபடி என்னிடத்துத் தேவரீர் எழுந்தருளியிருக்கத் தேவரீரையறிந்து கொள்ளமாட்டாமல் தேகத்தைவிட்டு நீங்கினேன்.

கு - ரை. சிவபெருமான் ஆன்மாக்கள் தோறும் அத்துவிதமாகக் கலந்திருந்தும் மலத்தடிப்பால் தெரிந்து கொள்ளாமலே இறத்தல் சகஜமாகலின் 'உடலிழந்தேன்' என்றனர். 30

கருவாயுருவாய்க் கலந்துலகெலாநீயாய்
அருவாகிநின்ற தறிகிலேன் பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்றபொருளே? பிறப்பிலும், உருவத்தினிலு மிருந்துகொண் டிருப்பதேயல்லாமல் உலகமனைத்தும் சர்வவியாபியாய் அருவமாகநின்ற உண்மையினை அறிகின்றேனில்லை

கு - ரை- பிறப்பினுக்கேதுவாகிய கருவினிடத்தும், விக்கிரகங்களிடத்து மற்றுமுலகனைத்தும் வியாபித்திருந்தாம் விசாரித்து உண்மையினைத் தெரிந்துக்கொண்டே னில்லையென்றூர் 'அருகிலேன்' என்றனர். 31

செம்பொற்கமலத் திருவடியைப்போற்றாமல்

பம்பைகொட்டவாடும் பசாசானேன்பூரணமே.

பொ - ரை. எங்குநிறைகின்ற பொருளே? செவ்விய அழகிய தாமரைமலர்போன்ற நினது சரணத்தினைத் தோத்தரியாமல், உடுக்கைத் தட்டத் தலைவிரித்தாடும் பேயினையொத்தேன்.

கு - ரை சிவபெருமான் திருவடியினைத் தரிசியாதவர்கள் எத்தகையினரேனும்பேய்ச்சென்மமெடுப்பார் என்பார் 'பசாசானேன்' என்றனர் 32

எனக்குள்ளேநீயிருக்க வுனக்குள்ளேநானிருக்க

மனக்கவலைதீர வரமருள்வாய்பூரணமே.

பொ - ரை. எங்குநிறைகின்றபொருளே? என்னிடத்தே தேவரீர் வாழ்வும். தேவரீரிடத்தே நான்வாழவும் எனது மனத்துன்பம் நீங்கிவாழவும் வரந் தந்தருளவேண்டும்.

கு - ரை. ஆன்மாவினிடத்துப் பரமான்மா இரண்டறக்கலந்து அத்துவிதமாக விருக்கவும் மலத்தடிப்பால் வுண்மை தெரியவாரா திருக்கிறபடியால் அது தெரிந்துகொள்ளும்படி செய்யவேண்டு மென்பார் 'வரமருள்வாய்' என்றனர். 33

எழுவகைத்தோற்றத் திருந்துவிளையாடினதைப்
பழுதறவேபாராமற் பயனழிந்தேன் பூரணமே.

பொ - ரை. எங்குநிறைகின்றபொருளே! எழுவகையான பிறப்புக்களினும் தேவரீரெழுந்தருளி அவ்வப்பிறப்புகடோறும் நீகிருபை செய்துகொண்டு வந்திருக்கவதனைச் சூழ்ந்துதெரியாது கெட்டேன் என்பார் 'பயனழிந்தேன்' என்றனர்.

கு - ரை. தேவர், மக்கள், விலங்கு, புல், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் முதலியவகையில் சென்மமெடுக்குந்தோறும் உபசரித்துவந்தவன் சிவபெருமானென்பதையறிந்து தேர்ந்துகொள்ளாததால் மேலுமேலும் சென்மங்களுக்கேது வாயிற்றென்பார் 'பயனழிந்தேன்' என்றனர். 34

சாதிபேதங்கள் தனையறியமாட்டாமல்
வாதனையானின்று மயங்கினேன் பூரணமே.

பொ - ரை. எங்குநிறைகின்றபொருளே! சாதிவித்தியாசங்கள் தன்மையினைத் தெரிந்துகொள்ளமாட்டாமல் வேதனைபட்டுக்கொண்டிருந்து மயக்கமுற்றேன்.

கு - ரை- சாதிபேதங்கள் தொழிற்பாட்டினைக்குறித்து ஏற்பட்டதென்பதனை விசாரியாது அப்பேதத்தைச்சத்தியமென யதில் மூக்கினவனுதலால் பலதுன்பத்திற்கேது வுண்டாயிற்று என்பார்'மயங்கினேன்' என்றனர். 35

குலமொன்றாய்நீபடைத்த குறியையறியாமல்யான்
மலபாண்டத்துள்ளிருந்து மயங்கினேன் பூரணமே.

பொ - ரை. எங்குநிறைகின்றபொருளே! குலமொன்றாகவே நீ சிருட்டித்திருக்கவும் அந்தக் குறிப்பினை நான் தெரிந்தகொள்ளாமல் மலநிறைந்த தேகத்தினிற் கட்டுபட்டு மயக்கமுற்றேன்.

கு - ரை. மனிதசென்மமுற்று மொருவகைப் பட்டிருந்தும் அஃதுணராமல் கற்பித்துள்ளபேதங்களில் மொத்துண்டறிவுமயக்க முற்றேன் என்பார் 'மயங்கினேன்' என்றனர். 36

அண்டபிண்டமெல்லா மணுவுக்கணுவாகநீ
கொண்டவடிவின் குறிப்பறியேன்பூரணமே.

பொ - ரை. எங்குநிறைகின்றபொருளே! அண்டத்திலேயும் பிண்டத்திலேயும் அணுவிற்கும்அணுவாகித்தேவரீர் வாய்ந்திருக்கும் வடிவத்தின் குறிப்பதனைத் தெரிந்துகொள்ளாதவனாயினேன்.

கு - ரை. அண்டோற்பத்திகட்கும், பிண்டோற்பத்திகட்கும் அதி சூக்குமகாரணமாகயிருந்து காரியப்படுத்து முண்மையின் வடிவத்தைவிசாரித்துணர்ந்தே னில்லையென்பார் 'குறிப்பறியேன்' என்றனர். 37

சகஸ்திரத்தின்மேலிருக்குஞ் சற்குருவைப்போற்றும
லகத்திலுடையாணவத்தா லறிவழிந்தேன்பூரணமே.

பொ - ரை எங்குநிறைகின்றபொருளே! ஆயிரமிதழுடன்கூடிய தாமறைப்போன்ற (இருதயத்திலே எழுந்தருளியிருக்கும்) ஆரியனைத் தியானித்தரியாமல் அவ்விருதயத்திலேயிருந்துக்கொண்டிருக்கும் அகங்காரத்தால் கெட்டேன்.

கு - ரை. இருதயத்திலே ஆசாரியராகிய சிவபெருமான் வாழ்ந்தும் அகங்காரதத்துவம் தெரிந்துகொள்ளாதபடி தடுத்துக்கொண்டிருந்ததினால் 'அழிவழிந்தேன்' என்றனர் 38

ஐந்துபொறியை யடக்கியுனைப்போற்றுமல்
நைந்துருகிநெஞ்ச நடுங்கினேன்பூரணமே.

பொ - ரை. எங்குநிறைகின்றபொருள! பஞ்சேந்திரியங்களை யடக்கித் தேவரீரைத் தரிசியாமல் வாடிமனமிளகி நடுக்கமுற்றே

கு - ரை இந்திரிய வயங்கொண்டாலன்றிச் சிவபெருமான் தரிசனம் கிட்டுவது அருமையாகலின் அங்ஙனம் செய்யாது வீணாய் நொந்தேன் என்பார் 'நடுங்கினேன்' என்றனர். 39

என்னைத் திருக்கூத்தா லிப்படிநீயாட்டுவித்தாய்
உன்னையறியா துடலழிந்தேன்பூரணமே.

பொ - ரை. எங்கும் நிறைகின்ற பொருளே அடியேனை (என் கன்மத்திற்குத் தக்கபடி) பிரபஞ்சக்கூத்திலே இவ்விதமாகத் தேவரீர் யாட்டுவித்தனை. தேவரீரை நானறியாமல் தேகமிழந்தேன்.

கு - ரை. ஆன்மாக்களின் கன்மத்திற்குத்தக்கபடி அவரவர்கள் போகத்தினை யனுபவிக்கும்படிக் கூட்டிவைக்கின்றவனாக சிவபெருமானிருந்தும் அது தெரியாது போயினேனென்பார் 'உடலழிந்தேன்' என்றனர். 40

நரம்புதசைதோலெலும்பு நாற்றத்துக்குள்ளிருந்து
வரம்பறியமாட்டாமல் மயங்கினேன்பூரணமே.

பொ - ரை. நரம்பு, மாமிசம், தோல், எலும்பு முதலியவமைந்த நாற்றத்துடன் கூடிய தேகத்திலேயிருந்து தேவரீர் நிலையை தெரிந்துகொள்ளாமல் மயக்கமுற்றேன்.

கு - ரை- உடலிலே கட்டுப்பட்டுக் கிடந்தேனேயன்றித் தேவரீர் சர்வ வியாபக உண்மைகளைத் தெரிந்துகொள்ளாதிருந்தேன் என்பார் 'மயங்கினேன்' என்றனர். 41

சிலந்தியுடைநூல்போற் சீவசெந்துக்குள்ளிருந்த
நலந்தனைத்தான்பாராமல் நலமழிந்தேன்பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே! சிலந்தி பூச்சியிலிரு ந்து நூல் உண்டானதுபோல, ஆன்மாவிடத்து நீ தங்கியிருந்து நன் மையினைப் பார்த்தறியாமல் தீமையுற்றேன்.

கு - ரை. சிலந்தியானது தன்னுடலிலே யிருந்து நூலினையு ண்டாக்கல்போல, தேவரீர் மாயையி னிடத்திலிருந்து உலகத்தைக் காரியப்படுத்துமுண்மை விசாரித்துணராது நழுவலானேன் என் பார் 'நலமழிந்தேன்' என்றனர். 42

குருவாய்ப்பரமாகிக் குடிலைசத்திநாதவிந்தாய்
அருவாயுருவான தறிகிலேன்பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே குருவாகியும் பரம் பொருளாகியும், சுத்தமாயையாகியும், சத்தியாகியும், நாதமாகியும், விந்துவாகியும், அருவாகியும், உருவாகியும் நின்ற உண்மையினை யறிந்தேனில்லை.

கு - ரை. சகலான்மாக்களைத் தடுத்தாளும் பொருட்டு ஆசாரிய கோலங்கொண்டு வருபவனாகலின் குருவாயெனவும், எல்லோருக்கு மேலானவனாகலின் பரமாகி யெனவும், சுத்தமாயையினையும் நாத விந்துக்களையும் காரியப்படுத்த பலனாகலின் குடிலைநாதவிந்தாய் என வும், சத்தியினைத் திருமேனிகொண்டு விளங்குபவனாகலின் சத்தி யெனவும், சொரூபத்தில் நிஷ்களமாயும் தடத்தத்தில் சகளமாயும் விளங்குபவனாகலின் அருவாயுருவானவெனவும் கூறினர். 43

ஒளியாய்க்கதிர்மதியா யுள்ளிருளாயக்கினியாய்
வெளியாகிநின்ற வியனறியேன்பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே சோதியாய்ச் சூரிய சந்திரராய் ஆணவவிருளாய், தீயாய் ஆகாயமாயிருந்த ஆச்சரியத்தினைத் தெரியேன்.

கு - ரை. ஒளி, கதிர், மதி, மலம், அக்கினியாவும் சிவபெருமானையன்றிக் காரியப்படா தாகலினாலும், தான் சிதாகாயமான வெளியாகிநிற்பவ னாகலினாலும் 'வியனறியேன்' என்றனர். 44

இடையாகிப்பிங்கலையா யெழுந்தசுழிமுனையாய்
உடலுயிராய்நீயிருந்த வுளவறியேன் பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே இடகலை நாடியாகியும் பிங்கலை நாடியாகியும், சுழிமுனை நாடியாகியும், உடலின்கண்ணே உயிராயும் தேவரீ ரெழுந்தருளியிருந்த தந்திரத்தினையறியேன்.

கு - ரை. மூவகைப்பட்ட பிராணவாயு காரியப்படுவதும், உடலிலே உயிர் நிலைபெற்றிருத்தலும் சிவபெருமான் பிரேரபனையாலாகலின் அவ்வுண்மை தெரிந்துகொள்ள வில்லையென்பார் (உளவறியேன்) என்றனர். 45

மூலவித்தாய்நின்று முளைத்துடல்மே தாலுமிருந்து
காலனெனவழிக்குங் கணக்கறியேன் பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே (ஆன்மாக்கள் உண்டாதற்குக்) காரணமாயிருந்து தோன்றியபின் அவர்களுடலில் வசித்து இயமனாகவிருந்து சங்கரிக்கும் உண்மையறியேன்.

கு - ரை. ஆன்மாக்களி னனுக்கிரகார்த்தமாக உண்டாக்குதலும், காத்தலும், அழித்தலும் ஆகிய தொழிலுண்மை தேரேனென்பார் 'கணக்கறியேன்' என்றனர். 46

உள்ளும்புறம்புமா யுடலுக்குள்நீயிருந்த
தெள்ளவுநானறியா திருந்தேனே பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே தேகத்தினிடத்து உள்ளேயும் வெளியிலேயும் எழுந்தருளியிருந்த தன்மையினைச் சிறிதும் தெரிந்துகொள்ளா திருந்தேன்.

கு - ரை. கன்மத்திற்குத் தக்கபடி ஆன்மாவின் உயிருக்குயிரா யிருந்து சேட்டிப்பித்தும், பிரபஞ்ச போகத்தினை யூட்டுவித்தும் நிற்பவன் சிவபெருமானென்பதைச் சிறிதும் தெரிந்துகொள்ளவில்லை யென்பார் (அறியாதிருந்தேன்) என்றனர். 47

தாயாகித்தந்தையாய் தமக்கிளைஞர்சுற்றமெல்லாம்
நீயாகிநின்ற நிலையறியேன் பூரணமே.

பொ - ரை. எங்கும் நிறைகின்ற பொருளே அன்னையாகியும் பிதாவாகியும், உறவினராகியும், தேவரீராகியு மிருந்த நிலையினை யறியேன்.

கு - ரை. ஒருவனுக்கு உலகத்தின்கண்ணே உதவியாக விருப்பவரைக் கூட்டிவைப்பவனும் இவர்கட்கு அன்னியமாக விருப்பவனும் சிவபெருமானே யென்னும் தன்மையினைத் தேரேனென்பார் 'நிலையறியேன்' என்றனர். 48

விலங்குபுள்ளூர்வனசரம் விண்ணவர்நீர்ச்சாதிமனுக்
குலங்களெழுவகையில்நின்ற குறிப்பறியேன் பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே விலங்கு, புல், ஊர்வன, தாவரம், தேவர், நீர்வாழ்வன, மக்கள் ஆகிய பிறப்புக்கள் எழுவகையிலுமிருந்த சைகையறியேன்.

கு - ரை. எழுவகைப்பட்ட பிறப்புக்களினும் அவ்வவற்றின் கன்மத்திற்குத்தக்கபடி தனுகரண புவனபோகங்களைக் கூட்டிவைப்பவன் சிவபெருமானென்னும் கருத்தையறியே னென்பார் (குறிப்பறியேன்) என்றனர். 49

ஆணாகிப்பெண்ணா யலியாகிவேற்றுருவாய்

மாணாகிநின்ற வகையறியேன் பூரணமே.

பொ - ரை. எங்குநிறைகின்றபொருளே! ஆணாகவும், பெண்ணாகவும், அலியாகவும், இவைகளைக்கடந்த வேறுபட்ட உருவமாகியும். பெருமையுடனின்ற தன்மையினையறியேன்.

கு - ரை. ஆன்மா வொன்றினை அதன் கன்மத்திற்குத் தக்கபடி அவன் ஆகவும், அவளாகவும், அலியாகவும், அதுவாகவும் சிருஷ்டிப்பவன் சிவபெருமானே யென்னும் தன்மை தெரிந்தேனில்லையென்பார் (வகையறியேன்) என்றார். 50

வாலையாய்பக்குவமாய்ப் புகழ்வாரிதியாகி

மெய்யாகிநின்ற பயனறியேன்பூரணமே.

பொ - ரை. எங்குநிறைகின்றபொருளே! பாலை வாலை, யௌவனம், மூப்பு ஆகியிருந்த பிரயோசனத்தினைத் தேரேன்.

கு - ரை. மரணமானது எப்போதுமே யிருக்கினும் பிராரத்துவத்தினை யனுபவிக்குமளவு தேக மிருக்குமாகலின் பலபருவங்கள் வரையில் தேகமிருப்பது கன்மத்தளவு என்பதாம். 51

பொய்யாய்ப்புவியாய்ப் புகழ்வாரிதியாகி

மெய்யாகிநின்ற வியனறியேன் பூரணமே

பொ - ரை. பொய்யாகியும், பூமியாகியும், புகழப்படும் சமுத்திரமாகியும், பொய்யாகியும் இருந்த ஆச்சரியமறியேன்.

கு - ரை. தெய்வ மில்லையென்பார்பால் பொய்யாகியும், உண்டென்பவர்பால் மெய்யாகியும், மண் நீர் என இரண்டு கூறப்பட்ட பிரபஞ்சம் காரியப்படுதற்கேதுவாகியும், சிவபெருமா னிருத்தலாகிய உண்மையினை யறியேனென்பார் 'நயமறியேன்' என்றனர். 52

பூவாய்மணமாகிப் பொன்னாகிமாற்றாகி
நாவாய்ச்சொல்லான நயமறியேன் பூரணமே.

பொ - ரை, எங்குநிறைகின்ற பொருளே! பூவாகியும் அதன் வாசனையாகியும், பொன்னாகியும் அதன் மாற்றாகியும், நாவாகியும் அதன் சொல்லாகியும்முள்ள அருமையினையறியேன்.

கு - ரை. புட்பத்தில் மணமும், பொன்னில் மாற்றும் நாவில் சொல்லும் தாதான்மிய சம்பந்தமுற்றுச் சிவமும் சத்தியும் விளங்கும் மெய்யினைத்தேர்ந்தேனில்லை யென்பார் 'நயமறியேன்' என்றனர். 53

முதலாய்நடுவாகி முப்பொருளாய்மூன்றுலகா
யிதமாகிநின்ற வியலறியேன் பூரணமே.

பொ - ரை. எங்கு நிறை கின்ற பொருளே! ஆதியாகவும், நடுவாகியும், (அந்தமாகியும் முத்தேவர்களாகியும்) மூன்றுலகங்களாகியும் நன்மையாகவும் இருந்த தன்மையினைத்தெரியேன்.

கு - ரை. ஆதியந்தமில்லாதவனாயிருந்தும், ஆதியந்தமுடையவன்போலிருந்து, மும்மூர்த்திகளை யதட்டிக்கொண்டு மூவுலகங்களையும் [illegible]த்து எல்லாநன்மையினையும் ஆன்மகோடிகட்குச் செய்[illegible]

அருபவனுடைய தன்மையினைத் தேரேனென்பார் 'இயலறியேன்' என்றனர்.

> ஊனாயுடலுயிரா யுண்ணிறைந்தகண்ணொளியாய்த்
> தேனாய்ருசியான திறமறியேன்பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே! ஊனாகியும், உடலில் உயிராகியும, உயிருள்நிறைந்த கண்ணில் ஒளியாகியும், தேனாகியும் அதன் சுவையாகியும் இருக்குந்தன்மையினை யறியேன்.

கு - ரை. ஆன்மாவினுள் பரமான்மாவாக விருந்து சேட்டிப்பிக்கிறதினாலேயே ஊனாதி நிலைத்திருத்தலினால் அவ்வுண்மையறியே னென்பார் 'திறமறியேன்' என்றனர். 55

> வித்தமாய்மரமாய் விளைந்தகனியாய்ப்பூவாய்ச்
> சித்தாகின்ற திறமறியேன்பூரணமே.

பொ - ரை. வித்தாகியும் (அதன்காரியமான) மரமாகியும், (அம்மரத்தி லுண்டாகும்) பழமாகியுங் (அப்பழத்திற்கேதுவாகிய) புட்பமாகியும் அறிவுசொரூபமாகி நின்ற உண்மையறியேன்.

கு - ரை. அசித்தாயுள்ள ஒருவிதை பலவகையாகக் காரியப்படுகிறதற்கு எதுவாயுள்ள சித்துருபனாயுள்ளவனே காரணமென்பதனைத் தேரேனென்பார் 'திறமறியேன்' என்றனர். 56

> ஐவகையும்பெற்றுலக வண்டபகிரண்டமெல்லாந்
> தெய்வமெனநின்ற திறமறியேன்பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே பஞ்சகிருத்தியங்களைச்செய்து உலகமுழுவதினிலும் தெய்வமாக எழுந்தருளியிருக்கின்ற உண்மையறியேன்.

கு - ரை. இவ்வுலகத்தில் ஆன்மகோடிகட்குப் பஞ்சகிருத்தியம்நடத்த அதனாலேயே எல்லாரும் தெய்வமுண்டென்று வழிபடுதற்சேதுவாயுள்ள உண்மையறியேனென்பார் 'திறமறியேன்' என்றனர். 57

மனமாய்க்கனவாகி மாய்கையுள்ளிருந்து

நினைவாகிநின்ற நிலையறியேன் பூரணமே.

பொ - ரை, எங்குநிறைநின்ற பொருளே! மனமாகியும், (அம்மனத்தில் விளையும்) கனவாகியும் மாயமாக உள்ளேயிருந்து நினைப்பனவாயிருந்த நிலையினையறியேன்-

கு - ரை. உடலின்கண்ணே ஆன்மாவானது அவஸ்தாத்திரயம் [சாக்கிரதை, சொப்பனம் சுழுப்தி] பேதமடைதற்குக் காரணமும் சிவபெருமானென்றதன்மையினை யறியேனென்பார் 'நிலையறியேன்' என்றனர் 58

சத்திசிவமிரண்டாய்த் தான்முடிவிலொன்றாகிச்

சித்திரமாய்நின்ற திறமறியேன் பூரணமே.

பொ - ரை. எங்குநிறைநின்ற பொருளே! சத்திசிவமென்றும் இரண்டுபொருளாகி, முடிவில் ஒருபொருளாகி விசித்திரதன்மையதாகவிருந்த உண்மையறியேன்.

கு - ரை. சிவமொன்றே புனர் சிருஷ்டியில் ஞாயிறும் அதனொளியும்போல இரண்டென்னச் சிவசத்தியாகி லயகாலத்தில் சத்திசிவத்திலொடுங்கச் சிவமேயாயிருந்த உண்மையினை விசாரித்தறியேனென்பார் 'திறமறியேன்' என்றனர். 59

பொறியாப்புலனாகிப் பூதபேதப்பிரிவாய்

அறிவாகிநின்ற வளவறியேன் பூரணமே.

பொ - ரை. எங்குநிறைகின்ற பொருளே! ஐம்பொறிகளாகவும் ஐம்புலனுகவும், பூதங்களாகவும் அவற்றின் பேதங்களாகவும், அறிவு சொரூபமாகவுமிருந்த அளவினையறியேன்.

கு - ரை. ஞானேந்திரியமுதலிய தத்துவமனைத்தும் காரியப்படு தற்சேதுவாக அவற்றினைப் பிரேரேபித்து தாக்கற்றுச் சித்துருப மாகவிருந்து கொண்டிருக்கிற தன்மையறியேனென்பார் 'அளவறி யே' னென்றனர். 60

வானிற்கதிமதியாய் வளர்ந்துபின்ஞென்ருனதுபோல்
ஊனுடலுக்குள்ளிருந்த வுயிர்ப்பறியேன்பூரணமே.

பொ - ரை. எங்குநிறைகின்ற பொருளே! ஆகாயத்தின் கண் ணே சூரிய சந்திரர்களாய் விளங்கிப் பிற்பாடு ஒரு தன்மையானது போல ஊனுடன்கூடிய தேகத்திற்குள்ளிருந்த பிராணனைத் தெரி யேன்.

கு - ரை- சகலகேவலமற்ற அவசரத்தில் இரவு பகல் தோன் ருது அருளொளியென்றே தோன்றுமென்பார் ஒன்ருனதுபோல் என்றும், தேகத்தினிடத்தே பிராணவாயு சஞ்சரிக்கும் விதமறியே னென்பார் 'உயிர்ப்பறியேன்' என்றனர். 61

பொய்யும்புலையுமிகப் பொருந்துவீண்பேசலன்றி
ஐயோவுனைவுரைக்க வறிகிலேன்பூரணமே.

பொ . ரை. எங்குநிறைகின்ற பொருளே! பொய்மையும், புலா லுண்ணுதலையும், அதிகமாகப்பெற்று வீண்வார்த்தை பேசுதலே யொழிய அந்தோ! தேவரீரைத் தியானிக்கத் தெரிந்தேனில்லை.

கு - ரை. நாள் முழுவதும் பிழைப்பதற்கு பொய் பல பேசுத லும், உடலைப் பெருக்தற்குப் புலாலுண்ணுதலுமாகிக் காலத்தினைக் கழித்தேனேயன்றித் தெய்வ சம்பந்தமாகவொன்றும் செய்தேனில்லையென்பார் 'அறிகிலேன்' என்றனர். 62

நிரந்தரமாயெங்கு நின்றுவிளையாடினதைப்
பரமதுவேயென்னப் பதமறியேன்பூரணமே.

பொ - ரை. எங்குநிறைகின்ற பொருளே! நித்தியமாக எங்குமிருந்துகொண்டு விளையாடிக்கொண் டிருப்பதுமாகிய தன்னையே பரம்பொருளென்றும் தன்மையினைத் தேரேன்

கு - ரை. சர்வவியாபகமாக எங்கு நிறைந்துகொண்டு பிரபஞ்ச காரியம் செய்துவாராநின்ற வொரு பெரிய வஸ்துவே பொருளென் பதனை யுணர்ந்துகொண்டே னில்லையென்பார் 'பதமறியேன்' என் றனர். 63

கொல்வாய்பிறப்பாம் கூடவிருந்தேசிகிப்பாய்
செல்வாய்பிறர்க்குட் செயலறியேன்பூரணமே.

பொ - ரை. எங்குநிறைகின்ற பொருளே! சங்காரம் செய்வாய், சிருஷ்டிப்பாய், உடனிருந்து காத்துவருவாய், உள்ளுணர்வாயிருந்து கொண்டிருப்பாய் இக்காரியத்தினை அறியேன்.

கு - ரை. ஆன்மாக்கட்கு முத்தொழில் செய்வதுடன் உள்ளும் புறம்புமாய் விளங்கும் காரியத்தைத் தெரிந்துகொண்டே னில்லை யென்பார் 'செயலறியேன்' என்றனர். 64

வாரிதியாய்வையமெல்லா மன்னுமண்டபிண்டமெல்லாஞ்
சூரதியாய்நின்ற தலமறியேன்பூரணமே.

பொ - ரை எங்குநிறைகின்ற பொருளே! சமுத்திரமாய் உலக மனைத்தினு நிலைபெற்ற அண்டபிண்ட மனைத்திலுமிருந்து நடத்து கின்ற தன்மையினைத் தேரேன்.

கு - ரை. நீரும் நிலனுமாகப் பிரிந்துள்ள சர்வாண்டங்களாகிய தேரினை நடத்துகின்ற வொருசாரதியினை யொப்பாக விருந்துகொ ண்டிருக்கின்ற இடந்தேரேன் என்பார் 'தலமறியேன்' என்றனர்.

வித்தாய்மரமாய் வெளியாயொளியாநீ
சத்தாயிருந்த தாமறியேனபூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே! விதையாகி, மர மாகி, ஆகாயமாகி, பிரகாசமாகித் தேவரீர் உண்மையாயிருந்த தன் மையை தேரேன்.

கு - ரை. யாவற்றிற்கும் காரணமாகியும் அவைக் காரியப்படு தற்கும் ஏதுவாயும், சிதாகாசமாகியும் அதனில் விளங்கும் அருட் சோதியாயும், நித்தியவஸ்து வாகியும் இருந்ததன்மை யுணரேன் என்பார் 'தாமறியேன்' என்றனர். 66

தத்துவத்தைப்பார்த்துமிகத் தன்னையறிந்தறிவால்
உய்த்துனைத்தான்பாராம லுய்வாரோபூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே! தத்துவதரிசனஞ் செய்து பின்னர் ஆன்மாவாகிய தன்னை விசாரித்து விசாரித்த அறிவைக்கொண்டு ஆராய்ந்து உன்னைத் தரிசியாமல் வாழ்பவர் சீவிப்பரோ ?

கு - ரை. தத்துவ தரிசனம், ஆன்மதரிசனம் செய்த பின்னர் சிவதரிசனம் செய்ய முயலாது வாழ்பவர் அடையவேண்டிய பிரயோசனத்தினை யடையாரென்பார் 'உய்வரே' என்றனர். 67

ஒன்றாயுயிரா யுடல்தோறுநீயிருந்தும்
என்றுமறியார்க ளேழைகள்தாம்பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே! ஒன்றாகியும் உயிராகியும், ஒவ்வொரு தேகத்தும் நீ தங்கியிருந்தும் எக்காலத்தும் அறிவில்லாதவர்கள் தெரிந்து கொள்ளார்கள்.

கு - ரை ஒப்பற்ற ஒரு தெய்வமாக விருந்தும், உயிருக்கு உயிராயிருந்தும், உடலினைக் காரியப்படுத்தியும் இருந்துகொண்டிருக்கிற உண்மையினைக் கல்வி யில்லாதவர்கள் தெரிந்துகொள்ளுத லில்லையென்பார் 'அறியாரேழை' என்றனர். 68

நேற்றின்றுநாளையென்று நினைப்புமறப்பாய்ப்படைத்து
மாற்றமாய்நின்ற வளமறியேன்பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே! நேற்றையதினமென்றும், நாளையதினமென்றும், நினைவையும் மறதியையுமடைந்து வேறுருபட்டிருக்கும் தன்மையறியேன்.

கு - ரை. இறந்தகாலம் எதிர்காலங்களில் கட்டுப்பட்டும் சகலகேவலமடைந்தும் இவற்றைக்கடந்து வாழவேண்டிய வண்மையை தேரேன் என்பார் 'வளமறியேன்' என்றனர். 69

மனம்புத்திசித்தி மகிழறிவாங்காரமதாய்
நினைவார்சூலமான நிலையறியேன்பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே! மனம், புத்தி, சித்தம் களிக்கின்ற அறிவென்னும் அகங்காரம் ஆகியவிவை விளைதற்கேதுவான விடத்தில் நிலையினைத்தேரேன்.

கு - ரை. அந்தக்கரணம் நான்கும் உண்டாசற் கேதுவாயுள்ள தத்துவத்தின் உண்மை தெரிந்து அவற்றை யொடுக்கிக்கொண்டே னில்லையென்பார் 'நிலையறியேன்' என்றனர். 70

உருப்பேதமின்றி யுயர்ந்தசத்தபேதமதாய்க்
குருப்பேதமாய்வந்த குணமறியேன்பூரணமே.

பொ - ரை. எங்குநிறைகின்ற பொருளே! உருவத்தினல் வேற்றுமையின்றிச் சொல்லின் சத்த பேதத்திலேயே சாத்திரமமைந்ததென்ற உண்மையறியேன்.

கு - ரை. ஆண், பெண், அது என்னும் வேற்றுமை சொல்லின் சத்தத்தால் அமைந்த தேக வித்தியாசமேயன்றி (ஆன்மாவினுக் கொன்றுமில்லை) என்றும் உண்மைதேறேன் என்பார் 'குணமறியேன்' என்றனர். 71

சட்சமயபேதங்கள் தான்வகுத்துப்பின்னுமொரு
உட்சமயமுண்டென் றுறைத்தனையேபூரணமே.

பொ - ரை. எங்குநிறைகின்ற பொருளே! ஆறு வகையான சமய பேதங்களை யுண்டாக்கி (மேலும் இவற்றையெல்லாம் மடக்கிக் கொண்டிருக்கின்ற) உட்சமயமுளதென ஆசாரியகோலங் கொண்டெழுந்தருளித் தெரிவித்தனையே.

கு - ரை. அறுசமயங்களாவன:—பாடாண வாதசைவர், பேதவாதசைவர், சமவாதசைவர், சங்கிராந்தவாதசைவர், ஈசுவரவிகார

வாதசைவர், சிவாத்துவிதசைவர் ஆம். உட்சமயமாவது சுத்தாத்துவித சித்தாந்த வைதிக சைவம். 72

முப்பத்திரண்டுறுப்பாய் மூனைந்துபடைத்துள்ளிருந்த
செப்படிவித்தை திறமறியேன் பூரணமே.

பொ-ரை. எங்கு நிறைகின்ற பொருளே முப்பத்திரண்டு அங்கங்களுடன் கூடிய ஒரு உடலினையுண்டாக்கி அவ்வுடலிலிருந்து கொண்டு செய்யும் காலத்தின் சாமர்த்தியத்தினை யறியேன்.

கு-ரை. ஒருவனுக்கு கேசாதிபாதம் வரையிலுள்ள உறுப்புகள் முப்பத்திரண்டு இவ்வளவுமமைந்த ஒருவன் உயிருக்குயிராயிருந்து அவரவர்கள் கன்மத்திற்குத் தக்கபடிக் கூட்டிவைப்பவனென்பார் 'செப்படிவித்தை' என்றனர். 73

என்னதான்கற்றாலென் னெப்பொருளும்பெற்றாலென்
உன்னையறியாதா ருய்வரோ பூரணமே.

பொ-ரை. எங்கு நிறைகின்ற பொருளே? எவ்வளவு சாஸ்திரங்களைப் படித்திருந்தும் என்ன? எவ்வளவு செல்வமடைந்திருந்தும் என்ன? தேவரீரைத் தெரிந்துகொள்ளாதவர் சீவிப்பரோ.

கு-ரை. தெய்வவுண்மை அறியாதவர்கள் எவ்வளவு படித்தாலும், எவ்வளவு செல்வமடைந்தாலும் சிறிது பிரயோசனமில்லையென்பதாம். 74

கற்றறிவோமென்பார் காணார்களுன்பதத்தைப்
பெற்றறியார் தங்களுக்குப் பிறப்பறுமோ பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே கல்வி கற்றுத் தெரிந்துகொள்வோ மென்பார் (கற்றபின்) நின்பதத்தைக் காணார்கள், உன்னருளைப் பெற்றறியாதவர்கட்குப் பிறப்பு நீங்குமோ.

கு - ரை. மெய்கண்ட சாஸ்திர வாராய்ச்சியின்றி இலக்கிய இலக்கண நூல்கள் எவ்வளவு கற்றாலும் சிவபெருமான் உண்மையினைத் தேரார் அவனருளையின்றிச் சனன மரணமு நீங்காது. 75

வானென்பாரண்டமென்பார் வாய்ஞானமேபேசித்
தானென்பார்வீணர் தனையறியார்பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே? ஆகாயமே விருப்பிடமென்பர், அண்டத்திலுள்ள (பதங்க) ளென்பர் வாசா கைங்கரியப் பேச்சித்தானே (தெய்வ) மென்பர் (இவரனைவரும்) தன்னையாராய்ச்சி செய்யாதவர்யாவார்.

கு - ரை. ஆன்மவிசாரணை யில்லாத சிலர் சிவபெருமானுக்கும் பலயிடங்களைக் கற்பிப்பர். சிலர் தானே பிரமமெனப்பிதற்றி வாய் ஞானம் பேசித்திரிவர் என்பதாம். 76

ஆதியென்பாரந்தமென்பா ரதற்குணடுவாயிருந்த
சோதியென்பார்நாதத் தொழிலறியார்பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே! உற்பத்தி சொல்லுவர், முடிவுசொல்வர், அவற்றிற்கு நடுவேயுள்ள சோதி சொரூபமென்பர் நாதசொரூபமாக விருக்கிற காரியத்தை யறியார்.

கு - ரை. முப்பத்தைந்து தத்துவங்களையும் கடந்த நாதசொரூபமாயுள்ள சிவத்தினுண்மை யறியாதவர் பலவடிவமாக முடிவுகட்டிக் கூறுவர் தங்கள் தெய்வத்திற் கென்பதாம். 77

மூச்சென்பாருள்ளமென்பார் மோகமெனுமோட்சமென்பார்
பேச்சென்பாருண் ணுடைய பேரறியார்பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே? சிலர் பிராணவாயு வென்பர், சிலர் மவுன நிலையான மோட்சமென்பர். சிலர் சத்த ரூப மென்பர் இவரனைவருந் தேவரீர் இருப்பிடத்தை யறியார்.

கு - ரை. சிவபெருமானுக்குள்ள பெயரின் பரத்துவ உண்மை யறியார் யாரும் பற்பல விதமாகப் பிராணவாயுவே என்பாரும், மவுன நிலையே என்பரும், சத்தரூபமே யென்பாருமாகி யுழலுவ ரென்பதாம். 78

பரமென்பார்பானுவென்பார் பாழ்வெளியாய்நின்ற
வரமென்பாருன்றன் வழியறியார்பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே; சிலர் மேலான தென்பர், சிலர் சூரியனென்பர், சிலர் சூனிய வெட்ட வெளியாக விருக்கும் மேன்மைப் பொருளென்பர் இவரனைவரும் தேவரீர் உண்மை வழியறியார்.

கு - ரை. சிவபெருமான் உண்மைத் தன்மையைப் பற்றிப் பிரதிபாதிக்கும் பதிநூல்களை யாராய்ந்து பாராதார் பசுபாசநூல் களை நம்பித் தங்களுக்கு இஷ்டமானபடி பரத்துவம் சொல்லுவ ரென்பதாம். 79

எத்தனைபேரோவெடுத்தெடுத்துத் தானுரைத்தார்
அத்தனைபேர்க்கொன்றுன தறிகிலேன் பூரணமே.

பொ - ரை. எங்குநிறைகின்ற பொருளே; உலகில் எண்ணிலா தவர் நின்பெருமையினைப் பற்பலவிதமாகவெடுத்துப் பேசினர் (அங்

னம்பேசினும்) அத்தனை பெயருக்கும் நீயொரு பொருளாகவே விளங்கிக்கொண் டிருக்கின்ற தன்மையறியேன்.

கு - ரை. சிவபெருமான் ஒருவனே அவரவர்கள் கன்மத்திற்குத் தக்கபடி அவரவர்கள் துதிக்கின்ற தெய்வமாகத் தானேயிருந்து அனுக்கிரகிப்பானாகலின் 'ஒன்றான தறிகிலேன்' என்றனர். 80

நகாரமகாரமென்பார் நடுவேசிகாரமென்பார்
வகாரயகாரமென்பார் வகையறியார்பூரணமே.

பொ - ரை. நகரவெழுத்தென்பர். மகரவெழுத்தென்பர், நடுவேயுள்ள சிகரவெழுத்தென்பர், வகரவெழுத்தென்பர், யகரவெழுத்தென்பர் இவற்றினுண்மை வகையினையறியார்.

கு - ரை. நகாரம் திரோதான சத்தியெனவும், மகாரம் மலமெனவும், சிகாரம் சிவமெனவும், வகாரம் சத்தியெனவும், யகாரம் ஆன்மாவெனவும் உண்மையினை விசாரித்தறியா ரென்பார் 'வகையறியார்' என்றனர். 81

மகத்துவமாய்க்காம மயக்கத்துக்குள்ளிருந்து
பகுத்தறியமாட்டாமற் பயனழிந்தேன்பூரணமே.

பொ - ரை. எங்குநிறைகின்ற பொருளே; கௌரவமாய்க் காம மயக்கத்திற் சிக்குண்டு பிறித்தறியவாராது பிரயோசன மிழந்தேன்.

கு - ரை. காமமயக்கத்திற் கட்டுப்பட்டு அதிலதிகமாக அமிழ்ந்து விட்டமையின் அவ்வின்பத்திற் கன்னியமாக வேறு பெரிய இன்பமொன்று உண்டு என்று தெரிந்துகொள்வதற்கு ஏலாமையின் 'பயனழிந்தேன்' என்றனர். 8-

உண்மைப்பொருளை யுகந்திருந்துபாராமற்

பெண்மயக்கத்தாலே பிறந்திருந்தேன் பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே; சத்தியமான பொருள் தன்னை விரும்பியிருந்து தரிசியாமல் மாதரிடத்து வைத்த வாசையால் வீணைகப் பிறந்திருந்தேன்.

கு - ரை. மனிதப் பிறப்பெடுத்தும் மாதரிடத்து வைத்துள்ள மோகத்தினலே சிவபெருமான் தான் உண்மையான தெய்வமெனத் தெரிந்து தரிசித்தற் கேலாதவனாயினே னென்பதாம். 83

வாயாரவாழ்த்தி மகிழ்ந்துனைத்தான்போற்றுமல்

காயமெடுத்துக் கலங்கினேன் பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே; வாய்நிரம்ப வாழ்த்தெடுத்துச் சந்தோஷத்துடன் துதிக்காமல் தேகமெடுத்துக் கலக்கமுற்றேன்.

கு - ரை. எக்காலமும் உனைப் பாடுதலினும், நின்னைக்கண்டு தரிசிப்பதிலும் பொழுதுபோக்கர்ம லிருத்தலினலே அனேகமான பிரபஞ்ச கலக்கம் வந்து போராடுகிறதென்பார் 'கலங்கினேன்' என்றனர். 84

சந்திரனைமேகமது தான்மறைத்தவாறதுபோற்

பந்தமுறயானுமுனைப் பார்க்கிலேன் பூரணமே.

பொ - ரை. சந்திரனை மேகமானது மறைத்து விடுவதுபோன்ற பாசத்தடிப்படைய அதனல் தேவரீரைத் தரிசித்தேனில்லை.

கு - ரை. மேகமறைந்து விடுதலினாலே சந்திரனுக் கியற்கையாயுள்ள நிலவு தடைபடுவதுபோன்று ஆணவமல மறைந்துவிடுதலினாலே ஆன்மாவினுக் கியற்கையாயுள்ள நல்லறிவு தடைபட்டுச் சிவபெருமானைத் தரிசித்தற் கிடமில்லாமற் போயிற்றென்பதாம். 85

செந்தாமறைத்தாளைத் தினந்தினமும்போற்றாமல்
அந்தரமாய்நின் றங் கலைந்தேனே பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே! சிவந்த தாமரை போன்ற திருவடியினை நித்தியமும் தியானியாமல் அனாதரவாயிருந்து உழன்றேன்.

கு - ரை. சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் சிவாலயத்துட் பிரவேசித்து அப்பெருமான் திருவடிகளைக் கண்களாரத் தரிசித்துத் துதியாதவர்கள் எச்சார்புமின்றி அலைவரென்பார் 'அலைந்தேன்' நான் என்றனர். 86

நீர்மேற்குமிழிபோல் நிலையற்றகாயமிதைத்
தாரகமென்றெண்ணிநான் றட்டழிந்தேன் பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே? ஜலத்தின்மேலே தோன்றும் குமிழினையொத்து நிலையில்லாத தேகத்தினை ஆதாரமென்று நினைத்துத் தடுமாறினேன்.

கு - ரை. நீரினிடத்தே குமிழியானது தோன்றி மறைவது போல இவ்வுடல் இவ்வுலகினில் அடிக்கடி அதிசீக்கிரத்திற்றோன்றி மறையும் நிலையினையுடைய தென்பதைச் சிறிதும் ஆலோசித்துப் பாராததால் சதமென வென்னை உடலிற் பற்றுவைத்தலினால் தடுமாறினேன் என்பார் 'தட்டழிந்தேன்' என்றனர். 87

நெஞ்சமுருகி நினைந்துனைத்தான்போற்றிநெடு
வஞ்சகத்தைப்போக்க வகையறியேன்பூரணமே

பொ - ரை, எங்கு நிறைகின்ற பொருளே? மனங்கசிந்து எண்ணித் தேவரீரைத் தோத்தரித்து (எனக்குள்ள வஞ்சகத்தினைப்போக்கிக்கொள்ள, வகையொன்று மறிந்துகொண்டேனில்லை.

கு - ரை அன்புடனே மனநெக்குறுகச் சிவபெருமானைத் தோத்தரித்து வருவார்கட்கு மனத்தின்கண்ணே பிரபஞ்ச சம்பந்தமாக நேரிடும் மயக்கம் வராதென்பார் 'வகையறியேன்' என்றனர். 88

எள்ளுக்குளெண்ணெய்போ லெங்குநிறைந்திருந்த
துள்ளமறியா துருகினேன் பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே! எள்ளுக்குள்ளே எண்ணெய் வியாபித்திருப்பதுபோலச் சர்வ வியாபகமாக நிறைந்துள்ள உண்மையினை மனத்தினிடத்தே தெரிந்து கொள்ளாது கைந்தேன்.

கு - ரை. சிவபெருமான் சர்வ வியாபகமாக விருந்துகொண்டிருக்கும் தன்மையினை விசாரித்துணராத தன்மையினாலே அப்பெருமான் சம்பந்தமாகவிளையும் சந்தேகங்கட் கிடங்கொடுக்க மனம் வாடினேனென்பார் 'உருகினேன்' என்றனர். 89

மாயாபிரபஞ்ச மயக்கத்திலேவிழுந்தே
ஓயாச்சனன மொழித்திலேன் பூரணமே.

பொ - ரை. காரிய ரூபமாயுள்ள உலகத்தின்கண்ணே மயங்கி காரணமாயுள்ள நீங்காத பிறப்பினை நீக்கிக்கொண்டேனில்லை.

கு - ரை. பிரபஞ்ச மாயாகாரியமாகவென்று மிருத்தலின் இதனிடத்திற் பற்றுவைத்தல் கூடாதென்பதை யுணராது அதனிடத்து மோகம்கொண் டிருத்தலினாலே பிறப்பினுக்கேது வுண்டாயிற்றென்பார் 'ஒழிந்திலேன்' என்றனர். 90

பூசையுடன்புவன போகமெனும்போக்கியத்தால்
ஆசையுற்றேநானு மறிவழிந்தேன் பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே! சிறு தெய்வப்பூசையினும் உலகத்தின்கண்ணே அனுபவிக்கப்படும். போகவஸ்துக்களினும் ஆசைவைத்து வாழ்ந்ததினாலே அடியேனு மறிவுகெட்டேன்.

கு - ரை. சிவபூசை யல்லாத வேறு அற்ப பூசைகளிலும், உலகபோக மனுபவிப்பதிலுமே ஆசையை வைத்துக் காலத்தினைக் கழித்து வந்ததினாலேயே நல்லறிவின்றி கெட்டேன் என்பார் 'அறிவிழந்தேன்' என்றனர். 91

படைத்துமழித்திடுவாய் பார்க்கிற்பிரமாவெழுத்தைத்
தொடைத்துச்சிரஞ்சீவியாய்த் துலங்குவிப்பாய்பூரணமே

பொ - ரை எங்கு நிறைகின்ற பொருளே! உண்டாக்கியும் சங்கரிப்பாய், (ஞானக்கண்ணால்) நோக்கின் பிரமனினாலே விதித்த எற்பாட்டினை நீக்கி நித்தியனாகவிருந்து பிரகாசிக்கும்படி செய்வாய்.

கு - ரை சிருஷ்டியால் தொழிலினைத் தேவரீரே செய்வதல்லாமல் வேறு தேவர்கள் விதித்துள்ள ஆணையையு மாற்றிவைக்கும் சர்வ சாமர்த்தியத்துடன் விளங்குந் தெய்வம் நீயேயென்பார் 'துலங்குவிப்பாய்' என்றனர். 92

மந்திரமாய்ச்சாத்திரமாய் மறைநான்காய்நீயிருந்த
தந்திரத்தைநானறியத் தகுமோதான்பூரணமே.

பொ - ரை. மந்திர சொரூபியாகியும், சாஸ்திரத்தினால் பிரதிபாதிக்கப் படுபவனாகியும், வேதநான்காலும் கொண்டாடப்படுவனாயும், தேவரீர எழுந்தருளியிருக்கு முளவினை அடியேன் தெரிந்துகொள்ளத்தகுமோ?

கு - ரை. வேதங்களினாலேயும் சாஸ்திரங்களினாலேயும் கொண்டாடப்படுகிற தெய்வமாகத் தேவரீரிருப்பதுடன் அவற்றால் பஞ்சபிரம மந்திரசொரூபி தேவரீரே எனக் கூறுவதும் ஆகிய உண்மையினைச் சிற்றறிவினையுடைய நான் தெரிந்துக்கொள்ளத் தக்கவனேயோ. 93

அல்லாய்ப்பகலா யனவரதகாலமெனுஞ்
சொல்லாய்ப்பகுத்த தொடர்பறியேன்பூரணமே.

பொ - ரை. எங்கும் நிறைகின்ற பொருளே! இரவாயும், பகலாயும், எல்லாக் காலமாயும், சொல்லாகியும் வகுத்துள்ள சம்பந்தத்தினை யறிந்தேனில்லை.

கு - ரை. இவ்வுலகத்தினைக் காலபேதத்தாலும், சத்தரூபத்தாலும் அமைத்து வைத்துள்ள சம்பந்தா சம்பந்தத்தினைச் சாஸ்திர மூலமாக விசாரித்து அவற்றினுண்மை தெரிந்துகொண்டேனில்லையென்பார் 'தொடர்பறியேன்' என்றனர். 94

நரகஞ்சுவர்க்கமென நண்ணுமிரண்டாயும்
அரகராவென்ப தறிகிலேன்பூரணமே.

பொ - ரை நரகமெனவும், சுவர்க்கமெனவும் பொருந்திய இரண்டு இடங்களேற்பட்டிருந்தும் அரகர எனச்சொல்லத் தெரிகிலேன்.

கு - ரை. சிவபெருமான் திருநாமங்களிலொன்றாகிய அக்ஷர சப்தம் செய்பவர்க்கு மோட்சமும், சொல்லாதவர்கட்கு நரகமும் உண்டாமென்பதைத் தெரிந்திருந்தும் கன்மவசத்தால் அப்பெயரை யுச்சரிக்கும்வகைத் தெரிந்திலேன் என்பார் 'அறிகிலேன்' என்றனர்.

> பாவபுண்ணியமென்னும் பகுப்பாய்ப்படைத்தழித்திங்
> காவலையுண்டாக்கிவைத்த வருளறியேன்பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்றபொருளே! பாவமெனவும் புண்ணியமெனவும் இருவகையாகயுண்டாக்கி, சிருட்டித்தும், சங்கரித்தும், பிரபஞ்சமுகமாக ஆசையினை விளைவித்தும்வைத்த திருவருளினுண்மையறியேன்.

கு - ரை. ஆன்மாக்களின் கன்மத்திற்குத் தக்கபடி இருவினை வகுத்தும் பிறப்பினும் இறப்பினும் செலுத்தியும், ப்ராரத்துவம் அநுபவித்துத் தொலைக்குமாறு போகத்தினாலாசையை யுண்டாக்கியும் செய்து வரும் திருவருள் விளையாட்டினைத்தேறேன் என்பார் 'அருளறியேன்' என்றனர். 96

> சாந்தமென்றுங்கோபமென்றுஞ் சாதிபேதங்களென்றும்
> பாந்தமென்றும்புத்தியென்றும் படைத்தனையேபூரணமே.

பொ - ரை எங்குநிறைகின்றபொருளே! பொருமையெனவும் கோபமெனவும், பலவகையான சாதிகளெனவும், பந்தமெனவும், புத்தியெனவும் உண்டாக்கினை:

கு - ரை பொருமை, கோபம், சாந்தி, பாசம், புத்திமுதலியயா வும் ஆன்மாக்களினுடைய கன்மத்திற்குத் தக்கபடியே விளையுமாயி னும் அக்கன் மத்தினைக் கூட்டிமுடிப்பவன் சிவபெருமானேயாக லின் 'படைத்தனையே' என்றனர் 97

பாசமுடலாய்ப் பசுவதுவுந்தானுயிராய்

நேசமுடனீபொருளாய் நின்றனையே பூரணமே

பொ - ரை எங்கு நிறைகின்றபொருளே! உடல் பாசமாகவும் உயிர்பாசமாகவும், தேவரீர் பதியாகவும், அன்புடனே எழுந்தரு ளினை.

கு - ரை பாசம்சடமாகலினாலும், சுதந்தர வீனகலினாலும் இரண்டினையும் கன்மத்திற்குத் தக்கபடி கூட்டி முடிப்பித்துக்கொ ண்டு இருப்பவன் பதியாகலின் திரிபதார்த்தமாகவும் நீயேயாயிருந் தனை யென்பார் 'நீ பொருளாய் நின்றனை' என்றனர் 98

எதிலடியாரிரங்கி யிகத்தில்வந்துன்றன்

பாதமதில்தாழப் பரிந்தருள்வாய்பூரணமே.

பொ - ரை. எங்குநிறைகின்றபொருளே! குற்றமில்லாத சிவ னடியார்கள் மனமிரங்கிஇம்மையில்வந்து தேவரீர் திருவடியில் வண ங்க அவர்கட்கு விருப்பத்துடன் திருவருள்புரிவை.

கு - ரை தேவரீருடைய திருவடியில் அன்புமயமாகவிருந்து மனங்கசிந்து வணங்கும் உண்மையைச் சிவனடியார்கட்கு வேண்டிய வற்றைத் திருவருள்புரிவை யென்பார் 'பரிந்தருள்வாய்' என்றனர்.

நானேநீநீயேநா னுமிரண்டுமொன்றானால்

தேனின்ருசியதுபோற் றெவிட்டாய்நீபூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே! (சிவமாகுந்தன்மையடைய) நானே நீயாகவும், நீயே நானாகவும் இருவருமொரு தன்மையினையடைந்தால் அவ்வமயம் தேனினுடைய சுவையினைப்போல இனித்திடுவை.

கு - ரை. ஆன்மாவும் பரமான்மாவும் இரண்டறக்கலந்து அத்துவிதமாகவிருந்த அருளால் விளையும் சிவானந்தம் ஆன்மாவிற்குத் தேனினை யொக்குமென்பார் 'தேனின்ருசியது' என்றனர். ஈண்டு முத்தியனுபவத்தில் தேனின்சுவையை ஒருபுடை யுவமையாகக்கூறினமையின் ஏகான்மவாதத்தினை மறுத்தவாறாயிற்று என்னை? அனுபவம் இரண்டு பதார்த்தத்தினுக்கேயன்றி ஒன்றினுக்கின்மையின்.

முடிவிலொருசூனியத்தை முடித்துநின்றுபாராமல்

அடியிலொருசூனியத்தி லலைந்தேனே பூரணமே.

பொ - ரை. எங்கு நிறைகின்ற பொருளே! தத்துவங்களையெல்லாங்கடந்த முடிவில் சிதாகாச சொரூபமாக விளங்குகின்ற சூனியத்தினைத் தெரிந்திருந்து தரிசியாமல், ஆகாயத்திலேயே யொன்றுமில்லையென அறியாமையினாலே சூனியத்தின்பாற் பட்டேன்.

கு - ரை. ஈண்டு சூனியமென்பது விளங்காமை பொருட்டாம் தற்போதத்திற்கு விளங்காது சூனியமாகவிருக்கிற சிதாகாச சின்மய வெளியினை அருட்போதத்தைக்கொண்டு தரிசிக்க முயலாமல், ஆரம்பத்திலேயே தற்போதங்கொண்டு யாவும் சூனியமென அறியாமையால் உழன்றேன்.

பூரணமாலைதனைப் புத்தியுடனோதினர்க்குத்
தாரணியில்ஞானந் தழைப்பிப்பாய்பூரணமே.

பொ - ரை. பூரணமாலையென்னும் இப்பிரபந்தத்தினை அன்புடனே படித்தார்க்கு இவ்வுலகில் ஞானத்தினை யருள்செய்வாய்.

கு - ரை. ஆன்மாக்களின் பொருட்டு மனமிரங்கிக் கருணைகூர்ந்து நித்யாநித்ய உண்மையினைப் பூரணமாலையினில் விளக்கிக்காட்டினமையின் அந்நூல் சிவனடியார்கட்குப் பிரயோசனமாமாறு சிவபெருமானை ஆசிரியர் வணங்கிக் கேட்டுக்கொண்ட விதமாக இத்திருச்செய்யுளை யருளினர். 103

பூரணமாலை முற்றிற்று.

---

## பட்டினத்துப்பிள்ளையார்

# நெஞ்சொடுமகிழ்தல்.

*அன்றுமுதலின்றளவு மாக்கையொடுகூட்சியுமாய்*
*நின்றநிலையறிய நேசமுற்றாய்நெஞ்சமே.*

பொ - ரை. மனமே! பிறந்த நாளாகிய அந்நாள் முதல் இன்றையதினம் வரையில் தேகத்துடனே தந்திரமாகவிருந்த நிலையினையறிந்துகொள்ள என்பால் விருப்பம் வைத்தனை.

கு - ரை. உடல் வந்ததற்குக் காரணமும் அவ்வுடலுடன் இன்றையதினம் வரையில் உயிர் சம்பந்தப்பட்டு நடத்திக்கொண்டு வருகிற தன்மையும் இத்தகையதென விசாரித்துத் தெரிந்துகொள்ளற்குக் காரணமாயிருந்தனை. 1

*அங்கங்குணர்வா யறிவாகியேநிரம்பி*
*எங்கெங்குமானதிலே யேகரித்தாய்நெஞ்சமே.*

பொ - ரை. மனமே! அவ்வவ்விடங்களில் அறிதற்கேதுவான அறிவாகியிருந்து, எவ்விடத்துமான எவற்றிலும் கலந்தனை.

கு - ரை. மனமானது எங்கெந்த பதார்த்தங்களில் தாவுகின்றதோ அவ்வப் பதார்த்தங்களின் மயமேயாகி அவற்றுடன் கலந்து வேற்றுமையின்றி யிருந்துக்கொண் டிருக்கின்றனை. 2

*அலையாதபேரின்ப வானந்தவெள்ளத்தில்*
*நிலையாயுருவிறந்து நின்றனையேநெஞ்சமே.*

பொ - ரை. மனமே! சலனமில்லாத பேரானந்தக்கடலில் சாசுவதமாகத்தங்கித் தலையெடாதிருந்தனை.

கு - ரை. சிவானந்தமாகிய சமுத்திரத்திலழுந்தித் தலையெடாதபடி அவ்வானந்தமே தனக்குரிய செயலாய்த் தற்போதமுளையின்றி யிருந்தனையென்பார் 'உருவிறந்து' என்றனர். ஈண்டு உன்னென்றது வேறுசெயல். 3

பாராமற்பதையாமற் பருகாமல்யாதென்றும்
ஓராதுணர்வுடனே யொன்றினையேநெஞ்சமே.

பொ - ரை. மனமே! நோக்காமலும், அவசரப்படாமலும் உண்ணாமலும், எத்தனையும் ஆராயாமலும், சிவபெருமானுடனே சேர்ந்தனையே.

கு - ரை. பிரபஞ்சமுமாக விருந்துகொண்டு யாதொரு சீவச்செயலைச் செய்யாது சிவமயமாக விருந்தனை யென்பார் 'ஒன்றினை' என்றனர். 4

களவிறந்துகொலையிருந்து காண்பனவுங்காட்சியும்போ
யளவிறந்துநின்றநிலை யன்புற்றாய்நெஞ்சமே.

பொ - ரை. மனமே! பிறர்பொருளைக் கிரகிப்பதிலு மின்றி கொலைத்தொழிலற்று, ஞாதுருஞானேயந் தோன்றாது எல்லையற்ற பொருளினிடத்தே விருப்பம் வைத்தனை.

கு - ரை. உலகிலேபற்று உண்டாதற் கேதுவாகிய செயலையொழித்துச் சிவபெருமானை யடைதலிலேயே யவாவுற்றனை என்பார் 'அன்புற்றாய்' என்றனர். 5

பேச்சிறந்துசூட்டிறந்து பின்னிறந்துமுன்னிறந்து
நீச்சிறந்துநின்றநிலை நேசமுற்றாய்நெஞ்சமே.

பொ - ரை. மனமே! மவுனத்திற்குரியதாகி, ஏகதேசநோக்கிற்கரியதாகி, எதிர்காலம் இறந்தகாலங் குறித்தற்கில்லாமல், அசைவற்றவொரு பொருளினிடத்தே விருப்பம் வைத்தனை.

கு - ரை. எவ்வகையான பிரபஞ்ச செயல்கட்கும் அப்பாற்பட்டு விளங்கும் சிவபெருமானிடம் அவாகொண்டனை யென்பார் "நேசமுற்றாய்' என்றனர். 6

விண்ணிறந்துமண்ணிறந்து வெளியிறந்துவொளியிறந்து
எண்ணிறந்துநின்றதிலே யேகரித்தாய்நெஞ்சமே.

பொ - ரை. மனமே! ஆகாயம் கிடந்தும், பூமிகிடந்தும், வெளிகிடந்தும், பிரகாசம் கிடந்தும், அளவற்றிருந்த வஸ்துவினிடத்தேவொன்றாகக் கலந்தனை.

கு - ரை. பௌதிக சம்பந்தமாயுள்ள பொருள்களனைத்தினையும் கடந்து விளங்கும் வியாபகவஸ்துவாகிய சிவபெருமானை விரண்டறக் கலந்திருந்தனை. 7

பார்த்தவிடமெங்கும் பரமெனவேயுட்புறம்புங்
கோத்தபடியுண்மையெனக் கொண்டனையேநெஞ்சமே.

பொ - ரை. மனமே! நோக்கிய விடங்கள் தோறும் சிவமயமெனவேயாகி அகமும்புறமு மொன்றாகக் கலந்திருத்தல் சத்தியமெனத் தெரிந்துகொண்டனை.

கு - ரை. சிவத்தியானத் தடிப்பேறி உலக மனைத்தையும் சிவமயமாகக்கண்டு உள்ளும்புறம்பு மொரே தன்மையாகவுள்ள நிலையினைத் தெரிந்துகொண்டனை யென்பார் 'உண்மையெனக் கொண்டனை' என்றனர். 8

ஊரிறந்துமொளியிறந்து வெளியிறந்து
சீறிறந்துநின்றநிலை சேர்ந்தனையேநெஞ்சமே.

பொ - ரை. மனமே, தேசமிழந்து, பூதப்பிரகாச மொழிந்து பூதாகாயமொழிந்து பிரபஞ்சச்சிறப் பொழிந்திருந்த நிலையினிலே கலந்தனையே.

கு - ரை. தனக்கென ஊர் முதலிய வொன்றுமில்லாது எவற்றினும் கடந்து விளங்கும் சிவபெருமான் திருவருளில் இறண்டற விளங்கினையே என்பார் 'கலந்தனையே' யென்றனர். 9

ஆண்பெண்ணலியென் றழைக்கவரிதாய்நிறைந்து
காண்பவரிதாயவிடங் கண்ணுற்றாய்நெஞ்சமே.

பொ - ரை. மனமே, அவன், அவள், அதுவென வழைக்கத் தகுந்த வேற்றுமைப் பொருட்டன்மைக் கருமையாயிருந்து காண்டற்கரிய விடத்தினைத் தரிசித்தனை.

கு - ரை. இன்ன தன்மையனென் றழைத்தற்கரிய சிவபெருமான் எழுந்தருளி யிருக்குமோர் இடத்தினைத்தெரிந்து கொண்டனையென்பார் 'கண்ணுற்றாய்' என்றனர். 10

ஆங்காரமச்ச மகற்றியறிவினொடு
தூங்காமற்றூங்கிச் சுகம்பெற்றாய்நெஞ்சமே.

பொ - ரை. மனமே, அகங்காரம், பயம் நீங்கி ஞானமயமாகி தூங்காமலே தூக்கங்கொண்டு இன்பமுற்றாய்.

கு - ரை. சிவானந்தவின்பம் அடைதற் கிடையூறாயுள்ள அகங்கார முதலிய வொழித்துத் தற்போதமுன்னிட்டுத் தூங்காமல் அருட்

போதமுன்னிட்டுத் தூங்கிச் சிவானந்த மடைந்தனை யென்பார் 'சுக முற்றாய்' என்றனர். 11

ஆதியாய்நின்ற வகண்டபரிபூரணத்தைச்
சாதியாநின்றவிடஞ் சார்வுற்றாய்நெஞ்சமே.

பொ - ரை. மனமே! எல்லா வகையான பொருள்களுக்கும் தலைமையாகவுள்ள வியாபகமான பரிபூரணவஸ்துவைத் தெரிசிக்கத் தருந்த இடத்தினைச் சேர்ந்தனை.

கு - ரை. சிவபெருமானைத் தெரிந்துகொள்ளுதற் கேதுவாகிய திருவருளாகிய வொரு இடத்தினை கலந்தாயென்பார் 'சார்வுற்றாய்' என்றனர். 12

விருப்புவெறுப்பில்லாத வெட்டவெளியதனில்
இருப்பேசுகமென் றிருந்தனையேநெஞ்சமே.

பொ - ரை மனமே! விரும்புதற்கும் வெறுப்பதற்கும் எதுவில்லாத சிதாகாச வெளியிலேயுள்ள வாழ்வே சுகமெனக் கொண்டனை.

கு - ரை சகல கேவலமற்ற சிதம்பரவெளியே தனக்கிடமாக்கி கொள்ளுதல் இன்பமென்று கொண்டனை யென்பார் 'சுகமொன்றிருந்தனை' என்றனர். 13

ஆருமுறாப்பேறண்டத் தப்புறத்துமிப்புறத்தும்
நீருமுப்புமென்ன நிலைபெற்றாய்நெஞ்சமே.

பொ - ரை. மனமே! எவரு மடைதற்குக்கூடாத அண்டத்தினுள்ளும் புறம்பும் நீரு முப்பும் போலக் கலந்த நிலையுற்றனை.

கு - ரை. நீரினிடத்தே உப்புக் கலந்தபோது உப்பின் தடிப்பு நீங்கியதுபோல சிவபெருமான் திருவருள் வியாபகத்தில் முனைவு தோன்றாதிருந்தனை யென்பார் 'நிலைபெற்றாய்' என்றனர். இது ஏக தேச உவமானம். 14

உடனாகவேயிருந்து முணரவரியானோடு
கடனீருமாறும்போற் கலந்தனையேநெஞ்சமே.

பொ - ரை. மனமே? என்றும் கலந்திருந்தும் அறிதற்கருமையாக விருக்கின்ற பெருமானுடன் சமுத்திரம் நதியும்போலக் கலந்தனையே.

கு - ரை. ஆன்மாவுட னிருந்துகொண்டிருந்தும் ஆணவத்தால் வெளிப்படாதுள்ள சிவபெருமானுடன் கடனீரும் ஆற்றுநீரு மொன்றானாற்போலச் சேர்ந்தனை யென்பார் 'கலந்தனை' என்றனர். இதுவும் ஒருபுடை யொற்றுவமையாகலின் ஏகதேசவுவமை. 15

நெடியகத்தைப்போக்கி நின்றசழக்கறுத்துப்
படிகத்துக்கும்பம்போற் பற்றினையேநெஞ்சமே.

பொ - ரை. மனமே! நீளப்பிதற்றுதலும், நிலையுற்ற குற்றங்களும் நீங்கிப் படிகஸ்பாண்டம்போலக் கிரகித்தனை.

கு - ரை. ஸ்படிகத்தாற்செய்துள்ள வொருகுடமானது தனக்கு முன்னிட்ட நிறங்களைக் கிரகித்துத் தனக்கென வொரு நிறமின்றி யிருத்தல்போலச் சார்ந்ததன் வண்ணமாய் நீயு நின்றனையென்பார் 'பற்றினை' என்றனர். 16

மேலாகியெங்கும் விளங்கும்பரம்பொருளிற்
பாலூறுமென்சுவைபோற் பற்றினியேநெஞ்சமே.

பொ - ரை. எவற்றினுக்கும் சிறந்து பிரகாசிக்கின்ற பெருமானிடத்துப் பாலு மதன்சுவையும்போல விருந்தனை.

கு - ரை. பாலினின்று நீங்காத சுவையினைப்போலச் சிவபெருமானிடத்து விளங்கினை யென்பார் 'பற்றினை' என்றார். ஈண்டு கூறி உவமையும் ஏகதேசமாகலின் குணகுணிபேத வுவமைகொள்ளாது ஒன்றிலொன்று விளங்கும் தன்மை மாத்திரங் கொள்ளுக. 17

நீரோடுதண்ணுலிவிண்டு நீரானவாரேபோல்
ஊரோடுபேரில்லானோ டொன்றினையேநெஞ்சமே.

பொ - ரை. மனமே! நீருடனே குளிர்ச்சி பொருந்திய ஆலாங்கட்டி பழையபடி நீரான தன்மைபோல ஊரும்பேருமற்ற சிவபெருமானுடன் பொருந்தினை.

கு - ரை நீரும் ஆலாங்கட்டியும் ஒருபுடை யுவமையேயாகலின் கடிப்பு நீங்குந்தன்மை யவ்வளவினுக்கே கொள்ளுக. 18

இப்பிறப்பைப்பாழ்ப்படுத்தி யிருந்தபடியேயிருக்கச்
செப்பவரிதாயவிடஞ் சேர்ந்தனையேநெஞ்சமே.

பொ . ரை. மனமே! எடுத்த சன்மத்தினைப் பாழாக்கி மவுனநிலையிலிருந்திடச் சொல்லற்கறிய இடத்தினை யடைந்தனை

கு - ரை. மறுசென்ம முண்டாதற் கேதுவாகிய தத்துவ சேஷ்டைகளை இச்சன்மத்திலேயே யொழித்து மவுனநிலை யடைந்தனையாகலின் திருவருளினை யாதாரமாகப் பெற்றனை யென்பார் 'சேர்ந்தனை' என்றனர். 19

மேலாப்பதங்களெல்லாம் விட்டுவிட்டாராய்ந்து
நாலாம்பதத்தி னடந்தனையே நெஞ்சமே.

பொ - ரை. மனமே? மேற்பட்டுள்ள மும்மூர்த்திகளின் பதங்களையெல்லாம் விசாரித்து, நீங்கி உண்மை, தேர்ந்து நாலாவது பதவியினை நாடிச் சேர்ந்தனை.

கு - ரை. நாலாம் பதமாவது பிரமனுலகு, விண்டுலகு. உருத்திரனுலகு மூன்றையுங் கடந்த துரிய மூர்த்தியாகிய சிவபெருமான் சிதாகாசவுலகாம். 20

கடங்கடங்கடோறுங் கதிரவனூடாடி
யடங்குமிடந்தானறிந் தன்புற்றாய்நெஞ்சமே.

பொ - ரை. மனமே? ஒவ்வொரு பாண்டத்திலும் சூரியன் பிரதிம்பித்திருந்து கடமுடைந்தவழி பிரதிபிம்பம் சூரியனிற்சாரும் என்னும் உண்மை தெரிந்து விருப்பமுற்றனை.

கு - ரை. சூரியன் பாண்டங்கள்தோறும் தோன்றிப் பாண்டமுடைந்தவழி பிரதிபிம்பம் சூரியனைச் சாறுமாறுபோல, மாயையானது உடல்தோறும் காரியப்பட்டிருந்து உடல் நீங்கிய காலத்துக் காரியமாயை காரணமாயையி லொடுங்குமென்பதாம். இப்பிரதி பிம்பத்தினைப் பிரமத்தின் மேலேற்றிக் கூறுவர் ஏகான்மவாதிகள். பிர்மத்தின் கன்னியமாகவெல்லாம் சூனியமெனுமவரைப் ப்ரஹ்மம்பிரதி பிம்பிக்க வேறு வஸ்து ஏது எனக்கேட்டு அவரைமறுக்க. 21

கற்றவனைக்கேட்டவனைக் காணானைக்காண்பவனை
உற்றவனைநின்றநிலை யொன்றுபட்டாய்நெஞ்சமே.

பொ - ரை. மனமே? எல்லாம் கற்றவனாகவும், எல்லார் பிரார்த்தனையும் கேட்டவனாகவும், ஒருவருக்கும் காணாதவனாகவும் (அடி-

யார்கட்கு) காண்பவனுகவும் எல்லாரிடத்தும் கலந்தவராயுமுள்ள அவரிடத்தே கலந்தனே,

கு - ரை. ஆன்மாக்கள் சிவபெருமானை யறியாதவர்களாக விருக்கினும் சிவபெருமான் தன் வியாபகத்து ளடங்கிய ஆன்மாக்களின் செயலனைத்தையும் தெரிந்துகொள்ளுவ னென்பதாம். 22

நாலுவகைக்கரண நல்குபுலனைந்துமொன்ருய்
சீலமுற்றுநின்றதிலே சேர்ந்தனேயெநெஞ்சமே.

பொ - ரை. மனமே! நான்கு வகைப்பட்ட அந்தக்கரணங்களும், (விஷயங்களைக்) கொடுக்கும் ஐம்புலன்களும் ஒற்றுமைப் பட்டுச் சுத்தமான அவசரத்திலே கலந்தனே.

கு - ரை. கரணங்களும், புலன்களும் பிரபஞ்சமுகமான சேஷ்டைகளினின்று நீங்கி யந்தர்முகமாக நடக்கும் அவசரத்தே கலந்தனே யென்பார் 'சேர்ந்தனே' என்றனர். 23

விட்டிடமும்தொட்டிடமும் விண்ணிடமுமண்ணிடமுங்
கட்டுமொருதன்மையெனக் கண்ணுற்ருய்நெஞ்சமே.

பொ - ரை. மனமே! நீங்கிய இடமும் அடைந்த இடமும், ஆகாயமும், பூமியும்சேர்ந்த ஒரே தன்மை யுடையதெனப் பார்த்தனே.

கு - ரை. விட்டிடம் மண்ணிடம், தொட்டிடம், விண்ணிடம், இவற்றுள் விண் உயர்ந்தநிலையெனவும், மண் தாழ்ந்தநிலை யெனவும் பேதம் கருதிலுயில்லையென்பார் 'கண்ணுற்ருய்' என்றனர். 24

எங்தெந்தநாளு மிருந்தபடியேயிருக்க
அந்தச்சுகாதீத மாக்கினையெநெஞ்சமே.

பொ - ரை. மனமே! எக்காலமும் பிரியாமல் ஒரு நிலையிலேயே தங்க அந்த இன்ப மயமாக விருக்கச்செய்தனையே.

கு - ரை. எக்காலத்தும் ஒரே தன்மையான மவுன நிலையுடன் கூடிச் சிவானந்த மனுபவிக்கச் செய்தனை என்பார் 'ஆக்கினை' என்றனர். 25

வாக்கிறந்துநின்ற மனோகோசரந்தனிலே

தாக்கறவேநின்ற நிலை தலைசெய்தாய்நெஞ்சமே.

பொ - ரை. மனமே! சொல்லற்கடங்காத மனோதீத நிலையிலே யாதொன்றினும் சம்மதப்படாத நிலையிலே தலைமை வாய்ந்தாய்.

கு - ரை. சொல்லாலெடுத்து விவகரித்தற்கும், மனத்தினாலே நினைத்தற்கும் அரிய சுகாதீத நிலையிலே தனித்து நின்றனை என்பார் 'தலைசெய்தாய்' என்றனர். 26

எத்தேசமுநிறைந்தே யெக்காலமுஞ்சிறந்து

சித்தாயசித்திடஞ் சேர்ந்தனையேநெஞ்சமே.

பொ - ரை. மனமே! எல்லாத் தேசங்களினும் பூரணமாகி, எப்போதும் சிறப்புற்று விளங்கும் அறிவு ரூபமாயுள்ள சிவத்திலடைந்தனையே.

கு - ரை. சர்வ வியாபகமாய் எல்லாவற்றினு மேன்மை யடைந்து சூக்குமசித்து ரூபமாக விளங்கும் அறிவுமயமான பெருமானிடம் கலந்தனையே யென்பார் 'சேர்ந்தனை' என்றனர். 27

தாழாதேநீளாதே தன்மயமாய்நிறைந்து

வாழாதேவாழ மருவினையேநெஞ்சமே.

பொ - ரை. மனமே! தாழ்வுபடாமலும், உயர்வடையாமலும் ஒரே தன்மையினையுற்றுப் பிரபஞ்சமுமாக வாழாமல் திருவருளினை முன்னிட்டு வாழக்கலந்தனை.

கு - ரை. திருவருள் வியாபகத்தில் பூரணமாய் தேறி ஒருபடித்தாயிருக்கும் தன்மையினை யடைந்தாயென்பார் 'மருவினை' என்றனர். 28

உள்ளும்புறம்பு மூவட்டாதவானந்தக்

கள்ளருந்திநின்றநிலே கண்ணுற்றாய்நெஞ்சமே.

பொ - ரை. மனமே! அகத்திலேயும் புறத்திலேயும் தெவிட்டாத சிவானந்தத்தில் அருந்திய நிலையிலேயே இலட்சியம் வைத்தனை.

கு - ரை. எக்காலத்தும், எவ்வகையினும் விருப்பு வெறுப்புண்டாகாத சிவானந்த சமுத்திரத்தில் கலக்கக்கருதினையென்பார் 'கண்ணுற்றாய்' என்றனர். 29

வாதனைபோய்நிட்டையும்போய் மாமௌனராச்சியம்போய்

பேதமறநின்றவிடம் பெற்றனையேநெஞ்சமே.

பொ - ரை, மனமே! பிரபஞ்ச வாசனை யொழிந்து, யோகம் கலைந்து, பவுனநிலையினின்று நீங்கி அபேதமாகவுள்ள திருவருள் நிலை யடைந்தனை.

கு - ரை. திருவருள் நிலையை யடைதற்குச்சாதனயா யிதுகாறுமிருந்தவை யெல்லாம்போய் நான்காவது பதத்தை அடைய சாத்தியமுற்றாய் யென்பார் 'பெற்றனை' என்றனர். 30

இரதம்பிரிந்துகலந் தேகமாம்வாறேபோல்

விரகந்தவிர்ந்தணல்பால் மேவினையேநெஞ்சமே.

பொ - ரை. மனமே! பாதரசம் பிரிந்த காலத்து உடனே கலந்துவிடுமாறுபோல மோகம் நீங்கி அக்கினியினிடத்துப் பொருந்தினையே.

கு - ரை. ஒவ்வொரு சமயம் பிரபஞ்ச மாயை தாக்கிய காலத்து வெளிமுகப்படினும் அக்கணமே பழையபடி திருவருளிற் கலந்து விடுவையென்பார் 'மேவினை' என்றனர். ஈண்டு அனல் என்றது அக்கினி சொரூபனான சிவம். 31

சோதியான்சூழ்பனீர் சூறைகொளுமாறேபோல்
நீதிகுருவின்றிருத்தாள் நீபெற்றாய்நெஞ்சமே.

பொ - ரை. மனமே? சூரியனானவன் தன் பிரகாசத்தால் தன்னைச் சூழ்ந்துள்ள பனிநீரினை நீக்கி, விடுமாறுபோன்று நீதியுடன் கூடிய ஆசாரியன் மூர்த்தியின் அழகிய சரணங்களை நீ யடைந்து விட்டனை.

கு - ரை. சூரியன் பனியை யொழித்தற்போல ஆச்சாரியன் பிரபஞ்ச வியாபாரத்தினை யொழிக்கத் திருவருள் பெற்று அவனடியினை யடைந்தனை யென்பார் 'நீ பெற்றாய்' என்றனர். 32

நெஞ்சோடு மகிழ்தல் முற்றிற்று.

பட்டினத்துப்பிள்ளையார் பாடற்றிரட்டினுக்கு, அறுபான்மும்மை நாயன்மாருள் ஒருவராயவாயிலார், நாயனார் பரம்பரையில் வந்தினரும், சுத்தாத்துவித சித்தாந்த வைதிகசைவ பிரவர்த்தகாசாரியரும் சென்னை மெய்கண்ட சந்தானசபை அக்கிராசனாதிபதியுமாகிய சித்தானந்த சாபம், அஷ்டாவதானம் பூவை கலியாணசுந்தரர் இயற்றிய,

ஞானார்த்த தீபவுரை முற்றியது.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பட்டினத்துச் சுவாமிகள் சீடராகிய

# பத்திரகிரியார்

## மெய்ஞ்ஞானப் புலம்பல்-மூலமும்.

ஞானார்த்த தீபவுரையும்

அடங்கியிருக்கின்றன.

---

இதற்கு

மதுரை தமிழ்சங்கத்து மகாவித்துவான் சித்தாந்த சரபம்

அஷ்டாவதானம்

பூவை—கலியாணசுந்தர முதலியார்

இயற்றியதை

க. அருணகிரி முதலியாரால்

சென்னை.

சரவணபவ அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றன.

1930.



11

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பட்டினத்துச்சுவாமிகள் சீடராகிய
# பத்திரகிரியார் சரித்திரச்சுருக்கம்.

தவராஜ சிங்கமாகிய திருவெண்காட்டடிகளென்னும் பட்டினத்துச் சுவாமிகள் சர்வசங்கல்ப பரித்தியாக முற்றுக் காவிரிப்பூம் பட்டினத்தினின்றும் வெளியேறிச் சிவத்தலயாத்திரை செய்து வருகையில், பத்திரகிரி மகாராஜன் நகர்ப்புறத்திலுள்ள ஒரு விநாயகர் ஆலயத்தினையடைந்து சிவஞான நிஷ்டைகூடி யிருக்குஞ்சமயத்தில், கள்வர் சிலர் பத்திரகிரியரசன் மாளிகையிற் பிரவேசித்து வெகு திரவியங்களைக் கொள்ளை யடித்துக்கொண்டு போகும்போது வழியில் தாங்கள் பிரார்த்தித்துக்கொண்டுவந்த விநாயகருக்குச் சமர்ப்பிக்க வெண்ணி ஒரிரத்தினமாலையை இருட்டில் அவ்விநாயகர் கோயிலில் சிவயோக நிஷ்டையிலிருந்த பட்டினத்தடிகளை விநாயகரென்றெண்ணி யவர் கழுத்திற் போட்டுப்போயினர். உதயத்தில் கள்ளரைத் தேடிக்கொண்டு புறப்பட்ட அரண்மனைக் காவலர்கள் பட்டினத்தடிகள் கழுத்தில் ஆபரணமிருக்கக்கண்டு இவரும் கள்ளரைச் சேர்ந்தவரென பிடித்துக் கொண்டுபோய் அரசன் முன்னிலையில் விடுக்க, அரசன் வினாக்கட்கெல்லாம் சிவ! சிவ என்று சொல்லிக்கொண்டிருந்த சுவாமிகளைப்பற்றி யொன்றுந் தோன்றாது அமைச்சனை நோக்கி நீ உன்னிஷ்டப்படி யாக்கினை தருகவென, அவ்வமைச்சன் கழுவேற்ற நியமித்தனன் அங்ஙனமே காவலர்கள் சுவாமிகளை யழைத்துக் கொண்டுபோய் கழுமரத்தின் முன்னிறுத்தச் சுவாமிகள் புன்னகை செய்து "என்செயலாவ தியாதொன்றுமில்லை

யினித்தெய்வமே" என்னுந் திருச் செய்யுளைப் பாடக் கழுமரம் எரிந்துவிட்டது! அதுகண்டார் அரசனுக்கு அறிவிக்க அரசன் திடு க்கிட்டு ஓடிவந்து சுவாமிகள் திருவடியில் விழுந்து நமஸ்கரிக்க அவ் வரசன் மனப்பக்குவத்தினை யுணர்ந்து தமது திருக்கண்களால் தீட் சிக்க உடனே யரசன் இராஜ கோலத்தினை நீக்கி உடன் தொடர "திருவிடை மருதூரினுக்குச் செல்வாய்" எனக் கட்டளையிட்டு மீண்டும் தாம் அனேகமான சிவஸ்தலங்களை யடைந்து சிவதரிசனஞ் செய்து திருவிடைமருதூரில் கீழைக் கோபுரவாயிலில் வீற்றிருந்தரு ளினர். பத்திரகிரியாரும் ஆசார்யன் ஆணையையேற்று அனேக மான சிவத்தலங்களைத் தரிசனஞ் செய்துகொண்டே திருவிடை மருதூரையடைந்து குருவைத் தரிசித்துக்கொண்டு அவர் கட்டளைப் படி மேலைக் கோபுரவாயிலிலிருந்து கொண்டிருந்தும் தினம் பிச்சை யேற்றுவந்து குருநிவேதனம் செய்து மீதிச் சேடத்தையுண்டு சிவ நிஷ்டாபரராக விருந்தனர். இங்ஙனமாக, பத்திரகிரியாரிடம் ஒரு பெட்டைநாய்க் குட்டிவந்து வாலைக் குழைத்துத் தன் பசிநோயைக் குறிப்பித்து நிற்க, அதனை யறிந்து தனது சேடப்பிரசாத மளிக்கப் பசியாறி, அவருடன் கூடவே யிருந்துவிட்டது. ஒருநாள் மருதவாண ணர் ஒரு யாசகனைப்போல் வேடங்கொண்டு பட்டினத்தாரிடஞ்செ ன்று அதிக பசியுள்ளவர்போல நடிக்க, பட்டினத்தடிகள் "யான் கோவணந் தாங்குவதே பாரமாக வுடையேன் மேற்கு கோபுரவாயி லிலொரு சமுசாரியிருக்கின்றான்" அவனிடமேகினால் பசியாற்றுவ னென, இதுகேட்டு மருதவாணர் மேலைக் கோபுரவாயலை யடைந்து, பட்டினத்துச் சுவாமிகள் புகன்றதை யுரைக்கக்கேட்ட பத்திரகிரி யார் இவ்வோடும், நாய்க்குட்டியுமோ என்னைச் சமுசாரியாக்கியது எனப் பாத்திரத்தை யெடுத்தறிய, அது நாயின் சிரத்திற்பட அது இறந்தது. மருதவாணர் மறைந்தனர். அந்நாயானது காசி ராஜா வின் மகளாகப் பிறந்து வளர்ந்து பக்குவமடையத் தந்தையறிந்து புரோகிதரை யழைத்துத் தனது புத்திரிக்குத் தக்க நாயகன் நி.

மிக்க வேண்டுமென ஆலோசிக்கையில் இது தெரிந்த பெண் பிதாவைநோக்கி, ஐயா! யாவொருவனுக் குரியவளல்ல. "திருவிடைமருதூரில் மேலைக்கோபுர வாயிலில் எழுந்தருளியிருக்கும் எனது குருநாதரிடம் ஒப்புவிப்பீர்?" என அரசனதிசயித்து அவ்வுண்மை விசாரித்தறிந்து புத்திரியைப் பத்திரகிரியார் முன் கொணர்ந்துவிட அவர் சிவநிஷ்டையிலிருந்து விழித்து நோக்க, அப்பெண் "அடிபட்ட நாய் மீண்டும் திருவடியை நாடிவந்தது" என யாவும் திருவுளத்திலறிந்த பத்திரகிரியார் எழுந்து அப் பெண்ணின் கரத்தினைப் பற்றிச் சென்று தனது ஆசிரியர்முன் விட்டு தேவரீர் உச்சிட்டமுண்டு வளர்ந்த நாய்க்கு மீண்டும் இப்பிறவி வரலாமோவெனச் சுவாமிகள் "அவன் செயலன்றி யாதொன்றுமில்லை" எனத் திருவருளை பட அப்போது ஒரு அருட்பெருஞ்சோதி தோன்றி அதனில் அப்பெண்ணுடன் பத்திரகிரியார் மறைந்தருளினர். சுபம். சுபம்.

---

இந்நூலுரையாசிரியரியற்றிய

பத்திரகிரியார் திருநட்சத்திர வெண்பா.

ஓங்குதிரு வெண்காட் டியரடிகள் தன்னருளைப்
பாங்குபெற வேபெற்ற பத்திரகிரி—யாங்கொளியாய்ச்
சித்திரை மாமகத்திற் சேர்ந்தனனே மாமருதூர்க்
கத்தனருளிற் கலந்து.

பத்திரகிரியார் பாதாம்புஜம் வாழ்க.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பத்திரகிரியார்

# மெய்ஞ்ஞானப் புலம்பலும்

## ஞானார்த்த தீபவுரையும்.

### விநாயகர்வணக்கம்.

முக்திதரும்ஞான மொழியாம்புலம்பல்சொல்ல
அத்திமுகவன்றன் அருள்பெறுவதெக்காலம்.

பொ - ரை. (ஆன்மகோடிகளின் மோட்சத்திற் கேதுவான) ஞானசம்பந்தமாகிய (அனுபவ) வார்த்தைகளால் (மெய்ஞ்ஞானப்) புலம்பலைப்பாட (அந்நூல் இடையூறின்றி முடிதற்பொருட்டு) யானை முகத்துடன் கூடிய (மூத்த பிள்ளையாரின் திருவருளினை அடைதல் எக்காலம் என்றவாறு.

### நூல்.

ஆங்காரமுள்ளடக்கி ஐம்புலனைச்சுட்டறுத்து
தூங்காமற்றூங்கிச் சுகம்பெறுவதெக்காலம்.

பொ - ரை. (என்னோடொப்பாரில்லையென அகந்தைப்படுதற்கு காரணமாடுள்ள) அகங்காரத் தத்துவம் காரியப்படாதபடி அடங்கச்செய்து தைஜச அகங்காரத்தினின்றுந் தோன்றும் மெய்) வாய் கண், மூக்கு, செவியென்னும் ஞானேந்திரியங்களாகிய பஞ்சேந்திரியங்களைக் காரியபடவொட்டாமல் கெடுத்து நித்திய சுழுத்தியினைப் போலவொன்றுந் தோன்றாதபடி தூங்காமல் திருவருளினை முன்னிட்டு அறிவுமயமாக விருந்து தூங்கி சிவானந்த மடைவதெக்காலம். எ-று.

நீங்காச்சிவயோக நித்திரைகொண்டேயிருந்து
தேங்காக் கருணைவெள்ளந் தேக்குவதுமெக்காலம்.

பொ - ரை. எண்ணை யொழுகுவதுபோலத் தொடர்ச்சியாய் இடைவிடாது சிவராஜயோக சமாதி யடைந்திருந்து மாயாகாரியங்களால் தளும்பாத சுகவாரி என்னிடத்து நிறைந்திருத்த லெக்காலம்.

தேங்காக்கருணைவெள்ளந் தேக்கியிருந்துண்பதற்கு
வாங்காமல்விட்டகுறை வந்தடுப்பதெக்காலம்.

பொ - ரை. நிறைந்துள்ள கிருபாவெள்ளம் என்னிடத்துத் தேக்கியிருந்து அதனை யனுபவித்தற்குப் பின் வாங்காமல் பூர்வசென்மாந்தரபுண்ணிய சேஷம் என்னையடுத்து அதனை யுண்ணும்படி செய்வது எக்காலம். எ-று 3

ஓயாக்கவலையினு லுள்ளுடைந்துவாடாமல்
மாயாப்பிறவி மயக்கறுப்பதெக்காலம்.

பொ - ரை. பிரபஞ்சத்தின் கண்ணே நீக்கப் பெறாத மண் பெண், பொன் என்பவற்றால் விளையும் துன்பத்தினால் மனம் தளர்ச்சி யடைந்து மெலியாமல் அசுத்தமாயா காரியத்தால் உண்டாகும் சென்மத்தினால் விளையும் மயக்கத்தினை யொழித்துக் கொள்வது எக்காலம்.

மாயாப்பிறவி மயக்கத்தையூடறுத்துக்
காயாபுரிக்கோட்டை கைகொள்வதெக்காலம்.

பொ - ரை. மாயைசம்பந்தத்தாலுண்டாகியஜென்மத்தால்விளையும் பிரபஞ்ச மயக்கத்தினை அடியோடு நீக்கித் தேக மென்னுங்

கோட்டை (நிலைபெறுமாறு காயசித்தியைச்) செய்து கொள்வது எக்காலம். எ-று 5

காயாபுரிக்கோட்டை கைவசமாய்கொள்வதற்கு
மாயாவனுபூதி வந்தடுப்பதெக்காலம்.

பொ - ரை. (காயசித்தியினால்) தேகத்தினை நிலைபெறச்செய்து கொள்வதற்கு (சுத்த) மாயா சம்பந்தமாகச் சிவானுபூதி (என்னிடத்துச்) சுவானு பூதியாய் விளைவது எக்காலம் எ-று. 6

சேயாய்சமைந்து செவிடூமைபோற்றிருந்து
பேய்போலிருந்துன் பிரமைகொள்வதெக்காலம்.

பொ - ரை. (இவ்வுலகிலே) யொரு புத்திரனாகப்பிறந்து (பிரபஞ்சசம்பந்தமான விஷயங்கள் கேளாத) செவிடனாகவும் (தற்போத வார்த்தைகளைப்பேசாத ஊமையனாகவும் சஞ்சரித்துப் (பிசாசால் பிடியுண்டவன்தேகத்திலே யொருத்தர் பண்ணும் மிதாகிதங்கள் பிடித்தபேய்க்கேயாகத் தனக்குப் பாறமற நிற்பதுபோலச், சுதந்திரமின்றி) பேய்பிடிப்பான் போறசஞ்சரித்து (சிவபெருமானாகிய) தேவரீரிடத்துமெய்யறிவு கொள்வது எக்காலம் எ-று. 7

பேய்போற்றிரிந்தும் பிணம்போற்கிடந்துபெண்ணைத்
தாய்போனினைத்துத் தவமுடிப்பதெக்காலம்.

பொ - ரை. பேய் ஆவேசம்கொண்டவனைப் போலச் (சுதந்திரமின்றி) யுலவி (பிரபஞ்சவாசனை சிறிதும் தாக்காது நிருவிகற்பசமாதியில் சலனமற்ற) பிணம்போற்றங்கி (உலகிலுள்ள மாதர்களைத்தாய்மாரைப் போலப், பாவித்து (வாழும்) விரதத்தினைப் பூர்த்தி செய்து கொள்வது எக்காலம் எ-று. 8

கால்காட்டிக்கைகாட்டிக் கண்கள்முகங்காட்டி
மால்காட்டுமங்கையரை மறந்திருப்பதெக்காலம்.

பொ - ரை. செம்பஞ்சூட்டிய மிருதுவானகால்களைக் காட்டியும் கைகளினால் சாடைமுதலிய காட்டியும் பற்பல சைகைகள் கண்களாற்காட்டியும் முகம் மினுக்கிக் காட்டியும் காமவிச்சையினைக்காட்டியும்வாழுகின்ற (வேசிகளாகிய) மாதர்களை மறந்து தேவரீர் திருவருள்மயமாக இருப்பது எக்காலம் எ-று

பெண்ணினல்லாராசைப் பிரமையினைவிட்டொழிந்து
கண்ணிரண்டுமூடிக் கலந்திருப்பதெக்காலம்.

பொ - ரை பெண்தன்மையுடைய மாதர்களிடத்து வைக்கும் காமவாசையான மயக்கத்தினை நீக்கித் தெய்வீக சம்பந்தமான இரண்டு கண்களையு மூடிக்கொண்டு அறிவாகிய (கண்களைத் திறந்து)தேவரீர் திருவருளில கலந்து சுகித்திருப்பது எக்காலம் எ-று 10

வெட்டுண்டபுண்போல் விரிந்தவல்குற்பைதனிலே
தட்டுண்டுநிற்றல் தவிர்வதுவுமெக்காலம.

பொ - ரை. கத்தியினால் காயம்பட்ட புண்ணினைப்போலப் பிளப்புடையுடைய நிதம்பமென்கிற பாம்பின் படம்போன்ற வதனிலேயனப்சிக்கிக்கொண்டு நிற்றலினின்றும் நீங்கியிருந்தலெக்காலம் எ-று

ஆறாதபுண்ணி லழுந்திடக்கிடவாமல்
தேறாதசிந்தைதனைத் தேற்றுவதுமெக்காலம்.

பொ - ரை எவ்விதமான மருந்தினாலேயும் சௌக்கியமடையாதபுண்ணினைப்போலவிருக்கும்(அல்குலை ஆசையினில்) மனம் அழுந்தியிராமல் திருவருளினை யாராயாத சிந்தையினை நன்னெறியினில்சேர்ப்பது எக்காலம் எ-று 12

தந்தைதாய்மக்கள் சகோதரரும்பொய்யெனவே
சிந்தைதனிற்கண்டு சிக்கறுப்பதெக்காலம்.

பொ - ரை. பிதா, மாதா, புத்திரர், சோதரரும் வந்தவாறும் போமாறும் மாயாஜாலமெனவே மனத்தினால் உண்மை விசாரித்து தெளிந்து பிரபஞ்ச மயக்கை யொழிப்ப தெக்காலம் எ-று. 13

மன்னுயிரைக்கொன்று வதைத்துண்டுழலாமல்
தன்னுயிர்போலெண்ணித் தவமுடிப்பதெக்காலம்.

பொ - ரை. (ஆடு, கோழி, மச்ச முதலிய) ஜெந்துக்களைக் கொன்று (அவற்றை) உபத்திரவப்படுத்தி வயிராறத்தின்று பாவசொரூபிகளாகத் திரியாமல் தன்னுயிரைப் போலவே பிறவுயிர்களையும் பாவித்துக்கொல்லா விரதத்தினைப் பூர்த்திசெய்வது எக்காலம். 14

பாவியென்றேபேர்படைத்துப் பாழ்நரகில்வீழாமல்
ஆவிநின்றசூத்திரத்தை யறிவதினியெக்காலம்.

பொ - ரை. பிறருக்குத் தீங்கு செய்வதனால் பாவியென்று யாரும் சொல்லும்படியான பேரை வகித்து அதற்குப் பலனாகப் பாழாகிய நரகத்தில் வீழ்ந்து வருந்தாமல் உயிரானது உடலில் நிலைத்து நின்ற இரகசியத்தினைத் தெரிவித்துக்கொள்வ தெக்காலம் எ-று.

உளியிட்டகல்லு முருப்பிடித்தசெஞ்சாந்தும்
புளியிட்டசெப்பும் பொருளாவதெக்காலம்.

பொ - ரை. உளியைக்கொண்டு செதுக்கியமைத்த சிலாவுருவத்தினையும், செவ்விய சுண்ணாம்பு சாந்தினாலமைத்த வுருவத்தினையும், புளியினாற் சுத்தம் பண்ணப்பட்ட செம்பு விக்கிரகத்தையும், (சிலசாந்துரு, விக்கிரகமென்று சாமானியமாகப் பாவிக்காமல்,)

அவற்றையேதிருஷ்டித்துக்கொண்டுசிவபெருமான் அனுக்கிரகிக்கும் உண்மைப்பொருள் இவ்வகையெனத் தெரிவது எக்காலம் எ-று. 16

வேடிக்கையுஞ்சொகுசு மெய்ப்பகட்டும்பொய்ப்பகட்டும்
வாடிக்கையெல்லா மறந்திருப்பதெக்காலம்.

பொ - ரை. பிரபஞ்ச வேடிக்கையிலும், அழகாக நடப்பதிலும் தேகத்தை யலங்கரித்துக் கொள்ளுவதிலும், பெரியாரைப்போல நடிப்பதிலும் செய்யும் வழக்கத்தினை யெல்லாம் மறந்து எவற்றினும் பற்றற்றிருப்பது எக்காலம் எ-ற. 17

பட்டுடைபொற்பணியும் பாவனையுந்தீவினையும்
விட்டுவிட்டுன்பாதம் விரும்புவதுமெக்காலம்.

பொ - ரை. பீதாம்பர முதலிய தரித்துக்கொள்ளுவதிலும் ஆபரணங்களால் அலங்காரம் செய்து கொள்ளுவதிலும், பிறர்போல் நடித்தலிலும், கொடிய பாவங்கள் செய்தலிலுமிருந்து நீங்கித் தேவரீர் திருவடியிணையே விரும்புவது எக்காலம் எ-று. 18

ஆமைவருமாடகண் டைந்தடக்கஞ்செய்தாற்போல்
ஊமையுருக்கொண் டொடுங்குவதுமெக்காலம்.

பொ - ரை. ஆமையானது தனக்குச் சமீபத்தில் வரும் மனிதரைக்கண்டு நீரிலடைந்து தனது தலை நாலுகால் என்னு மைந்துறுப்புகளையும் தன்னுடற்கு ளிழுத்துக் கொள்ளுதல்போல மெய், வாய், கண், மூக்கு, செவி யென்னு மைந்து இந்திரியங்களின் வழியே செல்லும் விஷயங்களை யடக்கிக்கொண்டு மவுனநிலையை விவகாரமற்று ஒடுங்கியிருப்பது எக்காலம் எ-று. 19

தண்டிகையுஞ்சாவடியுஞ் சாளிகையுமாளிகையும்
கண்டுகளிக்குங் கருத்தொழிவதெக்காலம்.

பொ - ரை. நிலையாக வொருவர்பா லிருக்கத்தகுந்த தல்லனவா கிய பல்லக்கினையும், சத்திரத்தினையும், பணப்பையினையும், வீட்டினையும் பார்த்து எந்நாளுந் தனக்குச் சொந்தமெனச் சந்தோஷித்திருக்கும் எண்ணத்தினை நீக்குவது எக்காலம் எ-று. 20

அத்தனிருப்பிடத்தை ஆராய்ந்துபார்த்துநிதஞ்
செத்தசவம்போற் றிரிவதினியெக்காலம்.

பொ - ரை. பொதுத்தன்மையில் சர்வ வியாபகமாகவும், சிறப்புத்தன்மையில் குருலிங்க சங்கமங்களிலும் சிவபெருமானெழுந்தருளியிருக்கும் உண்மையிட மொவ்வொன்றையும் மெய்கண்ட சாத்திரங்களைக்கொண்டு விசாரித்துத் திருவருளை முன்னிட்டுத் தரிசித்து எந்நாளும் உயிர்நீங்கிய பிணம்போலப் பிரபஞ்ச சுதந்திரமின்றிச் சஞ்சரிப்பது எக்காலம் எ-று. 21

ஒழிந்ததருமத்தினைவைத் துள்ளெலும்புவெள்ளெலும்பாய்க்
கழிந்தபிணம்போலிருந்து காண்பதினியெக்காலம்.

பொ - ரை. பாவத்தினின்று நீங்கிய பதிதருமத்தினை ஆதாரமாக வைத்துக்கொண்டு உடலின் கண்ணேயுள்ள அன்பு வெளுத்த வெலும்பாகித் தசைகழிந்த சவம்போல வாழ்ந்து உன்னைத் தரிசிப்பது எக்காலம் எ-று. 22

அற்பசுகமறந்தே யறிவையறிவாலறிந்து
கெர்ப்பத்தில்வீழ்ந்துகொண்டு மீகொளறுப்பதெக்காலம்.

பொ - ரை. பிரபஞ்ச சம்பந்தமான சிற்றின்பத்தினை மறந்து அறிவு சொரூபமாகவுள்ள சிவபெருமானை, திருவருளை முன்னிட்டவான்ம வறிவினாற்றெரிந்து பிறவியில் தங்கும்படி வாய்ந்த தீமையை நீக்கிக்கொள்வது எக்காலம் எ-று. 23

கருப்பத்திளணனையமன் கைப்பிடித்துக்கொள்ளாமுன்
உருப்படுத்தியாள வுடன்படுவதெக்காலம்.

பொ - ரை. பிரமன் மனிதனுகப்பிறப்பித்து வாழ்ந்த பின்னர் என்றனை இயமன் பிடித்துக்கொண் டேகாமுன்னம், சிவயாந்தன் மைசெய்து ஆட்கொள்ளக் கருணைகூர்தல் எக்காலம் எ-று. 24

தூண்டுவிளக்கணைய தொடர்ந்திருள்சூழ்ந்தாற்போல்
மாண்டுபிழைத்துவந்த வகைதெரிவதெக்காலம்.

பொ - ரை தூண்டுகோளினையுடைய தீபமானது அணைந்து விட உடனே இருள் தொடர்ந்து எங்கும் சூழ்ந்துகொண்டு ஒளியும் இருளும் மாறிமாறி வருதல்போல அடிக்கடி இறந்துபிறந்து உலகில் வந்தவிதம் விருப்பு வெறுப்பினுல விளைந்த கன்மத்தினுலெனத் தெரிந்துகொள்வது எக்காலம் எ-று. 25

தூரியின்மீன்போற் சுழன்றுமனம்வாடாமல்
ஆரியனைத்தேடி யடிபணிவதெக்காலம்.

பொ - ரை. பெருவலையினிற்பட்ட மீனைப்போல பிரபஞ்ச மாயாவலையிற்பட்டுத் திரிந்து மனமிளைக்காமல் குருநாதனைத் தேடிக் கண்டு அவன் திருவடியினை வணங்குவது எக்காலம் எ-று. 26

எண்ணூறுகமிருந்து மெய்தாதவீடுபெற
வெண்ணீறுபூசி விளங்குவதுமெக்காலம்.

பொ - ரை. விபூதியினையணிந்து அனேகமான யுகங்களிருந் தாலும் அடையக்கூடாத மோட்சத்தினை யடைய வெண்மையான விபூதியினைத் தேகமனைத்தினிலும் சண்ணித்துக்கொண்டு (அதனுல்) மோட்ச வீட்டினில் வாழ்ந்திருப்பது எக்காலம் எ-று. 27

அல்வேடம்பூண்டிங் கலைந்து திரியாமற்
சிவவேடம்பூண்டு சிறந்திருப்பதெக்காலம்

பொ - ரை. புறச்சமயத்தினர்க்குரிய அப்பிரயோசனமானவேடத்தினை தரித்து இவ்வுலகில் நாய்போல அலைந்து உலவாமல் சைவசமயத்திற்குரிய (விபூதிருத்திராட்சமயமான) மங்களவேடந் தரித்து சிவஞானச் செல்வத்தில் சிறப்படைந்து இருப்பதெக்காலம்- 28

அண்டருக்காக நஞ்சருந்தி அம்பலத்திலாடுசிவன் [லம்
தொண்டருக்குத்தொண்டனெனத் தொண்டுசெய்வதெக்கா

பொ - ரை. தேவர்களனைவரும் சாகாதிருக்கும் பொருட்டு விஷத்தினையுண்டு தில்லைச்சிற்றம்பலத்திலே ஆனந்தநிர்த்தனஞ் செய்யும் நடராஜமூர்த்தியின் அடியார்கட்கு அடியனென அவர்கட்கு பணி செய்வது எக்காலம் 29

பன்றிவடிவெடுத்துப் பாரிடந்துமால்காணாக்
குன்றில்விளக்கொளியை கூறுவதுமெக்காலம்.

பொ - ரை. விஷ்ணுவானவர் பன்றியுருவினை யெடுத்து நூறு வருஷகாலம் பூமியினை யகழ்த்தும் காணப்படாத திருவண்ணாமலையின் சிகரத்தில் விளங்கும் ஞானதீபத்தினை போல் அனுபவித்து வாயாரச் சொல்வது எக்காலம் என்ற. 30

தித்திக்குந்தெள்ளமிர்தம் சித்தாந்தத்துட்பொருளை
முத்திக்குவித்தை முதனினைப்பதெக்காலம.

பொ - ரை. சிவனடியார்கள் உள்ளத்தில் தித்திக்கும்படியான தெள்ளிய தேவாமிர்தம் போன்றவனை வேதாந்தத்தைக் கடந்த வேதாந்த ரதமாகிய சித்தாந்தத்திலே விளங்கும் உட்பயனை சுத்தாத்து

விதசித்தாந்த முத்தியினுக்கு வித்தினை எத்தேவர்கட்கும் முதலாகத் தியானிப்பது எக்காலம் எ-று 31

வேதாந்தவேதமெல்லாம் விட்டொழிந்தேநிஷ்டையிலே
ஏகாந்தமாக யிருப்பதனியெக்காலம்

பொ - ரை. ஆன்மகோடிகட்குப் பொதுவாகச் சொல்லப்பட்டு ள்ள உபநிடதங்களுடன் கூடிய வேதமனத்தையும் விட்டுங் கிபாத உத்தமர்கட்குச் சிறப்பாகச் சொல்லப்பட்டுள்ள சிவாகமத்தின் குறித்த நிஷ்டையினில் தனியாகவிருப்பது இனியெக்காலம் 32

மற்றிடத்தைத்தேடியென்றன் வாழ்நாளைபோக்காமல்
உற்றிடத்தைத்தேடி யுரங்குவதுமெக்காலம்

பொ - ரை. பகிர்முகமாகவுள்ள அங்கிய பிரபஞ்சத்தினைத்தேடி எனது ஆயுள் நாள்களை வீணாக்காமல் அந்தர்முகமாவுள்ள அங்கிய பிண்டத்தினைதேடி யுண்மையறிந்து சிவானந்த யோக நித்திரையி லிருப்பது எக்காலம் எ-று 33

இன்றுளோர்நாளை யிருப்பதுவும்பொய்யெனவே
மன்றுளோர்சொல்லும் வகையறிவதெக்காலம்

பொ - ரை. இன்றையதினம் மிருப்பவர் அடுத்தநாளிருப்பது வும் நிச்சயமில்லையெனவே அறிவாளிகள் கூடிய சபையிலேயுள்ள பெரியோர்கள் சொல்லும்தன்மையினைத்தெரிவது எக்காலம்எ-று 34

கஞ்சாவபினியுடன் கள்ளுண்டுவாடாமற்
பஞ்சாவமிர்தம் பருகுவதுமெக்காலம்

பொ - ரை அறிவை மயக்கும் விபரீதங்களிற் புத்தினைச் செலுத்துநின்ற கஞ்சா, அபினி, கள் இவைகளைத் தின்றும், குடித்

தும் மயக்கமடையாமல் சிவபெருமானுக்கு அபிஷேகித்த தயிர், பால், நெய், சருக்கரை, பழம் கூடிய பஞ்சாமிருதத்தினை உண்ணுவதும் எக்காலம் எ-று. 35

சஞ்சலத்தினாற்றிரண்ட ஜெனனமோக்ஷம்பெறவே
சஞ்சலத்தைவிட்டுன் சரணடைவதெக்காலம்.

பொ - ரை. கருப்பாசயத்தினில் சிவந்த இரத்தத்தினால் வடிவெடுத்த பிறப்பானது மோட்சமடையவே பிரபஞ்ச சம்பந்தமாகவுள்ள மாயாகாரிய துன்பத்தினின்று நீங்கித் தேவரீர் திருவடியினையடைவதெக்காலம் எ-று. 36

கும்பிக்கிரைதேடிக் கொடுப்பாரிடந்தோறும்
வெம்பித்திரிகை விடுப்பதினியெக்காலம்.

பொ - ரை. வயிற்றுக்கென்று சாப்பாடு தேடி அது கொடுப்பாருடைய வீடுதோறும் மனம்புழுங்கித் திரிதலைத் தடுத்துக்கொண்டு இருக்குமிடந் தேடிவர வாழ்தல் எக்காலம் எ-று. 37

ஆடுகின்றசூத்திரந்தா னறுமளவுமேதிரிந்து
போடுகின்றநாள்வருமுன் போற்றுவதுமெக்காலம்.

பொ - ரை. உலகத்தில் சஞ்சரிக்கின்ற இத்தேகமானது சாமளவும்!உலவி இறக்குநாளை யடைவதற்குமுந்தியே தேவரீரை துதிப்பது எக்காலம் எ-று. 38

நவசூத்திரவீட்டை நானென்றலையாமல்
சிவசூத்திரத்தைத் தெறிந்தறிவதெக்காலம்.

பொ - ரை. ஒன்பது துவாரங்களுடன்கூடிய உடலினை ஆன்மாவாகிய நானென்றலையாமல் சிவஞானபோத சூத்திரத்தினைப் படித்தறிவது எக்காலம் எ-று. 39

மறந்துமலசலங்கள் பாயும்புழுக்கூட்டைவிட்டுக்
கரந்துனடியிணைக்கீழ்க் கலந்துநிற்பதெக்காலம்.

பொ - ரை. அறிவு மயங்கி மலமும் சலமும்தாமே வழியும்படி இறந்துபோகும் புழுக்கள் நிறைந்த தேகத்தினின்று நீங்கி நினது திருவருளில் மறைந்து தேவரீர் இரண்டு திருவடிக்கீழ் இரண்டறக் கலந்து தங்குவது எக்காலம் எ-று

இம்மைதனிற்பாதகனு யிருவினைக்கிடாயெடுத்த
பொய்மைதனைப்போட்டுன்னைப் போற்றிநிற்பதெக்காலம்.

பொ - ரை. இறப்பில்பாவியாக பூர்வஜென்மத்திற் செய்த நல்வினை தீவினைக்குத் தக்கபடி யெடுத்த பொம்மையாகிய இவ்வுடலை நீக்கி விட்டுத் தேவரீரைத்தோத்தரித்துவாழ்வது எக்காலம் எ-று

உப்பிண்டபாண்ட முடைந்துகருக்கொள்ளுமுன்னே
அப்பிட்டவேணியனுக் காட்படுவதெக்காலம்.

பொ - ரை உப்பினையடைத்துவைத்துள்ள பானையுடைந்துப் போவதுபோல நிலையுற்றிராதபடி அழிந்து மறுபடியும் பிறவியெடுப்பதன் முன்னேமே கங்காநதியினைத் தரித்த சடாபாரத்தினையுடைய பரமசிவனுக்கு அடிமையாவது எக்காலம் எ-று 42

சேவைபுரிந்து சிவலிங்கார்ச்சிகண்டு
பாவைதனைக்கழித்துப் பயனடைவதெக்காலம்.

பொ - ரை. ஆலயவழிபாடுசெய்து சிவலிங்கப்பெருமான் திருவுருவத்தினைத் தரிசித்துமாதர் மயக்கத்தினை நீக்கி மோட்ச பிரயோசனத்தை யடைவதெக்காலம். 43

காண்டத்தைவாங்கிக் கருமேகமீண்டதுபோல்
பாண்டத்தைநீக்கிப் பரமடைவதெக்காலம்.

பொ - ரை. சமுத்திரத்தினின்றும். உப்புநீரைக்குடித்துக் கரிய மேகமானது திரும்பி நன்னீரைப் பொழிவதுபோல தேகத்தினின்றும் மலத்துடன் சம்பந்தித்த உயிர் நீங்கித் திருவருளினைப் பொழிந்து மேலான பதத்தினை யடைவது எக்காலம் எ-று. 44

சோற்றுத்துருத்திதனைச் சுமந்தலைந்துவாடாமல்
ஊத்தைச்சடம்போட் டுனையடைவதெக்காலம்.

பொ - ரை. சாதத்தினை யடைத்து வைக்கும் பையாகி உடலைத் தாங்கி யிளைத்துப் போகாமல் அந்நாற்றமுற்ற தேகத்தை விட்டுத் தேவரீரை யடைவதெக்காலம் எ-று. 45

தொடக்கைச்சதமெனவே சுமந்தலைந்துவாடாமல்
உடக்கைகழற்றி உனையறிவதெக்காலம்.

பொ - ரை. நரம்பாதிகளால்கட்டுப்பட்டுள்ள தேகத்தினைநிச்சயமென எண்ணித் தாங்கித் திரிந்து இளைக்காமல் ஒருங்கு கூடியுள்ள தத்துவங்களை நீங்கித் தேவரீரைத் தெரிந்துகொள்வது எக்காலம் எ-று.

ஆசைவலைப்பாசத் தகப்பட்டுமாளாமல்
ஓசைமணித்தீபத்தி லொன்றிநிற்பதெக்காலம்.

பொ - ரை. பிரபஞ்சமென்னும் ஆசையாகிய மாயாவலையில் சிக்கிக்கொண்டழியாமல் நாத தத்துவத்திலே தோன்றும் அழகிய சிவச் சோதியிலிரண்டறக் கலந்து வாழுத லெக்காலம் எ-று. 47

கூறியநால்வேதங் கூப்பிட்டுங்காணாத
பாரரகசியத்தைப் பார்த்திருப்பதெக்காலம்.

பொ - ரை. சொல்லுதற் கருமையான வேதங்கள் முறையிட்டும் அவற்றாற் காணப்படாது சிவாகமங்களா லறியத்தகுந்த பெரிய இரகசியப்பொருளாகிய சிவபெருமானைத் தரிசித்துக் கொண்டிருப்பதெக்காலம் எ-று 48

புல்லாய்விலங்காய்ப் புழுவாய்நரவடிவா
யொப்பிலாப்பிறப்பி னிருளகல்வதெக்காலம்.

பொ - ரை. புல்லாகியும், மிருகமாகியும், புழுவாகியும் மனித வடிவாகியும் மற்ற எல்லா வகையான பிறப்புகளிலேயும் (பிறப்புதற் கேதுவாயுள்ள, ஆணவமலமாகிய இருளினின்று நீங்குவது எக்காலம் எ-று 49

தங்கும்வகைக்கோர்பொருளும் சாராமலேநினைவில்
பக்குவம்வந்துன்னருளைப் பார்த்திருப்பதெக்காலம்.

பொ - ரை. திருவருள் கூடும்விதம் பிரபஞ்சசம்பந்தமான ஒரு பொருளிலும் பற்றுவையாமல், அறிவின் கண்ணே இருவினையொப் படைந்து தேவரீர் திருவருளைத் தரிசித்துகொண்டிருப்பது எக்காலம் எ-று. 50

பருவத்தலைவரொடும் பல்கியின்பங்கொள்வதற்குத்
தெரிவைப்பருவம்வந்து சிக்குவதுமெக்காலம்.

பொ - ரை. ஆன்மபரிபாகக் காலத்திலாட்கொள்ளும் தலைவராகிய பெருமானுடன் கலந்து பேரின்பம் கொள்வதற்கு (இருபத்தாறு வயதிற்கு மேற்பட்ட) தெரிவை யென்னும் வயதடைந்து திருவருளில் மயங்குவதும் எக்காலம் எ-று 51

தெரிவையுறும்பக்குவத்தின் சீராட்டெல்லாமறிந்து
குருவையறிந்தேநினைத்துக் கும்பிடுவதெக்காலம்.

பொ - ரை. தெரிவைப்பெண் தன் வயதில் உலக சீரனைத்தும் அறிந்து அனுபவித்ததுபோல சிறப்பனைத்தும் எனது பக்குவமான காலத்தி லனுபவித்துப் பின்னர் குருநாதனை விசாரித்தறிந்து தியானித்து வணங்குவது எக்காலம் எ-று. 52

வம்படிக்குமாதருடன் வாழ்ந்தாலுமன்னுபுளி
யம்பழமுமோடும்போ லாவதினியெக்காலம்.

பொ - ரை. உபத்திரவம்செய்யும் பெண்களுடன் கூடியிருந்தாலும் மனமானது புளியமோடும் அதனுள் பழமும் எங்ஙனம் பற்றற்றிருக்குமோ அங்ஙனம் வாழ்ந்திருப்பது எக்காலம் எ. று 53

பற்றற்றுநீரிற் படர்தாமரையிலைபோல்
சுற்றத்தைநீக்கமனந் தூரநிற்பதெக்காலம்.

பொ - ரை. பிரபஞ்ச சம்பந்தமான பொருள்களில் ஆசையற்று ஜலத்திலே ததும்பிக்கொண்டிருக்கிற அழகிய தாமரையிலைஅந்நீரிற் பற்றற்றிருப்பதுபோல சுற்றத்தாரினின்று நீங்கி மனம் தாக்கற்று வாழ்தல் எக்காலம் எ-று. 54

சல்லாபலீலையிலே தன்மனைவிசெய்தசுகம்
சொல்லாரக்கண்டெனக்குச் சொல்வதினியெக்காலம்.

பொ - ரை. சரசவார்த்தையுடன் கூடிய கலவிக் காலத்திலே தன்னுடைய நாயகிதந்த இன்பத்தினைப்போல் தேவரீர் திருவருளுடன் கலந்தனுபவித்த பேரின்பத்தினை சொல்லமையைக் கண்டு அடியேனுக்கு எடுத்துச்சொல்வது எக்காலம் எ-று 55

மருவமயற்புருடன் வருநேரங்காணமல்
உருகுமனம்போலெனுள முருகுவதெக்காலம்.

பொ - ரை. தன்னைக்களவாகப் புணரும் வேறு நாயகன் வர வேண்டிய காலத்தில் வரக்காணாதபோது ஒரு நாயகிக்கு இரங்கும் மனம்போல, அடியேனுடைய நெஞ்சு தேவரீரைநோக்கிக் கரைவது எக்காலம் எ-று 56

தன்கணவன்றன்சுகத்திற் றன்மனம்வேறானதுபோல்
என்கருத்திலுன்பதத்தை யேற்றுவதெக்காலம்.

பொ - ரை. தன்னுடைய சொந்த கணவனுடன் சுகத்தையனுபவித்துக்கொண்டிருக்கிற வொருபெண் வேறொரு நாயகன் மீதுள்ள மோகத்தினால் தன்மனம் வேறுபட்டிருப்பதுபோலபிரபஞ்ச போகங்களை யானனுபவிக்கிற காலத்தும் என் மனம் உன்வசமாகவிருந்து உருகுதல் எக்காலம் எ-று. 57

கூடிப்பிரிந்துவிட்ட கொம்பனையைக்காணமல்
தேடித்தவிப்பவன்போல் சிந்தைவைப்பதெக்காலம்.

பொ - ரை. வெகு காலமாகக் கலந்திருந்து திடீரென நீங்கிய தன்மனைவியைக்காணாமல் எங்குந்தேடிச் சஞ்சலப் படுபவன்போலத் தேவரீரிடத்து மனம் வைப்பது எக்காலம் எ-று 58

ஒவ்வணத்தின்மோகம் எப்படியுண்டப்படிபோல்
கவ்வனத்தியானம் கருத்துவைப்பதெக்காலம்.

பொ - ரை. யவ்வர்ண வயதுடைய பெண்ணின் மீது ஆசை எவ்வளவுண்டாமோ அதுபோன்று மனத்தியானத்தில் பரமனை நெஞ்சில் வைத்துதிப்பது எக்காலம் எ-று. 59

கண்ணாலருவி கசிந்துமுத்துப்போலுதிரச்
சொன்னபரம்பொருளைத் தொகுத்தறிவதெக்காலம்.

பொ - ரை. கண்களினால் ஆனந்தக்கண்ணீர் அருவியினைப்போலக்கசிந்து முத்தினைப்போலச்சிந்த வேதாந்த ரசத்தால் புகழப்பட்ட சிவபரம்பொருளை ஆராய்ந்தறிவது எக்காலம் எ-று. 60

ஆகமிகவுருக வண்புருகவென்புருகப்
போகவனுபூதி பொருந்துவதுமெக்காலம்.

பொ - ரை. உடல் புளகிக்க, அன்புமேலிட, என்பு நெக்குவிடச் சிவபோகச் சிவானுபூதி நிலையினைப் பொருந்துவதும் எக்காலம்.

நீரிற்குமிழிபோ னிலையற்றவாழ்வைவிட்டுன்
பேரிற்கருணைவெள்ளம் பெருக்கெடுப்பதெக்காலம்.

பொ - ரை. நீரினிலே யுதித்தொடுங்கும் குமிழினைப்போல நிலையில்லாத வாழ்க்கையை வெறுத்துத் தேவரீர்மீது ஆனந்தவெள்ளம் என்னிடத்துத் ததும்புவது எக்காலம் எ-று. 62

அன்பையுருக்கி யறிவையதன்மேற்கட்டித்
துன்பவலைப்பாசத் தொடக்கறுப்பதெக்காலம்.

பொ - ரை அன்பினைப்பெருக்கி யதன்வழியாக வறிவைச்செலுத்திப் பிரபஞ்சமுகமாகவுள்ள தீமையான மாயாவலையின் சம்பந்தத்தை யொழித்துக்கொள்வதெக்காலம் எ-று. 63

கருவின்வழியறிந்து கருத்தைச்செலுத்தாமல்
அருவிழிசொரிய அன்புவைப்பதெக்காலம்.

பொ - ரை. பிறப்பினுக்கேதுவாகவுள்ள நெறியினைத்தெரிந்து அந்நெறியினில் மனத்தினைச் செலுத்தாமல் விழிகளினின்றும்

அருவி யினைப்போல நீர் வழிய தேவரீரிடத்து அன்பு பாராட்டுவது எக்காலம் எ-று. 64

தெளியத்தெளியத் தெளிந்தசிவானந்தத்தேன்
பொழியப்பொழியமனம் பூண்டிருப்பதெக்காலம்.

பொ - ரை. மனமானது அசைவற அசைவறநின்ற அவசரத்து கலக்கமற்ற சிவானந்தத்தேன் என்னுள் அடிக்கடி சொரிய அதனால் மனம் ஆனந்தங்கொண்டிருப்பது எக்காலம் எ று. 65

ஆதாரமூலத் தடியிற்கணபதியைப்
பாதாரவிந்தம் பணிந்துநிற்பதெக்காலம்.

பொ - ரை. குய்யத்திற்கும் குதத்திற்கும் நடுவேயுள்ள முக் கோணவடிவாகிய மூலாதாரத்தின் மத்தியிலெழுந்தருளி யிருக்கும் ஓங்காரகணபதியின் திருவடித் தாமரையினை வணங்கியிருப்பது எக் காலம் எ-று. 66

மண்வளைந்தநற்கீற்றில் வளைந்திருந்த வேதாவைக்
கண்வளைந்துபார்த்துள்ளே கண்டிருப்பதெக்காலம்.

பொ - ரை. மூலாதாரத்தின் இரண்டு விரற்கடைக்கு மேல் பிருதிவியின் கூறாகிய நாற்கோண வடிவாகிய சுவாதிட்டானத்தினடு வில் எழுந்தருளியிருக்கும் பிரமாவை உன் முகமாகக் கண்ணை வைத் துப்பார்த்து மனத்தே தரிசித்திருப்பது எக்காலம் எ-று. 67

அப்புப்பிறைநடுவே யமர்ந்திருந்தவிட்டுணுவை
உப்புக்குடுக்கையுள்ளே யுணர்ந்தறிவதெக்காலம்·

பொ - ரை. சுவாதிட்டானத்தின்மேல் எட்டுவிரற் கட்டைக்கு மேலுள்ள நாபிக்கமலத்தின் அப்புவின்கூறாகிய மூன்றாம்பிறை வடி

வாகிய (மணிபூரகத்தினடுவில்) எழுந்தருளியிருக்கும் விட்டுணுவை உப்பிட்ட குடுக்கைபோன்ற (நிலையற்ற) தேகத்தினுள்ளே தெரிந்து அறிவது எக்காலம் எ-று. 68

மூன்றுவளையமிட்டு முளைத்தெழுந்தகோணத்தில்
தோன்றுமுருத்திரனைத் தொழுதுநிற்பதெக்காலம்.

பொ - ரை. (மணிபூரகத்தின்மேற் பத்துவிரற்கடை பிரமாணமுள்ள இருசயத்தில்) தேயுவின் கூறாகிய முக்கோண வடிவாகிய (அநாதகத்தினடுவில்) எழுந்தருளியிருந்த உருத்திரமூர்த்தியை வணங்கி நிற்பது எக்காலம் எ-று. 69

வாயுவறுகோணமதில் வாழுமகேச்சுரனைத்
தோயும்வகை கேட்கத் தொடங்குவதுமெக்காலம்.

பொ-ரை (அநாகதத்தின்மேற் பத்து விரற்கடை பிரமாணமுள்ள) கண்டத்தில் வாயுவின் கூறாகிய அறுகோண வடிவாகி விசுத்தியினடுவில் எழுந்தருளியிருக்கும் மகேஸ்வரனை அடையும் விதம் விசாரிக்க வாரம்பிப்பது எக்காலம் எ-று. 70

வட்டவழிக்குள்ளே மருவுஞ்சதாசிவத்தைக்
கிட்டவழி தேடக் கிருபைசெய்வதெக்காலம்.

பொ-ரை.(விசுத்தியின்மேல் பன்னிரண்டுவிரற்கடை பிரமாணமுள்ள லலாடத்தில்) ஆகாயகூறாகிய வட்டவடிவாகிய (ஆஞ்ஞையினடுவில்) எழுந்தருளியிருக்கும் சதாசிவத்தினை நெருங்கும் வழிதேடக் கிருபை புரிவது எக்காலம் எ-று. 71

உச்சிக்கிடைநடுவே யோங்குகுருபதத்தை
நிச்சயித்துக்கொண்டிருந்து நேர்வதினியெக்காலம்.

பொ - ரை. ஆருதாரத்திற்கும் மேற்பட்ட உச்சியின் மேலே விளங்காநின்ற (சிவமாகிய) குருவின் திருவடியை (மனத்தில் தியானஞ் செய்துகொண்டிருந்து) பொருந்துவது எக்காலம் எ-று. 72

பாராகிப்பார்மீதிற் பஞ்சவர்ணந்தானுகி
வேராகிநீமுளைத்த வித்தறிவதெக்காலம்.

பொ - ரை. (முதல்வன் சந்நிதானத்தில் காரியப்படுந்தன்மையால்) பிருதவியாகியும், அப்பிருதிவியுடன் ஐந்து வர்ணங்களோடு கூடிய ஐம்பூதமாகியும் அவற்றையுங் கடந்த வேறு பொருளாகித் தேவரீர் உதித்த காரணத்தினையறிவதெக்காலம் எ-று. 73

கட்டறுக்கவொண்ணுக் கருவிகரணுதியெல்லாஞ்
சுட்டறுத்துநிட்டையிலே தூங்குவதுமெக்காலம்.

பொ - ரை. பிரித்தற்கேளாத புறக் கருவிகளையும் அக்தக் கரணமாதியவற்றையும் காரியப்படாதபடிச் செய்து சிவயோக நிஷ்டையிலே அருட் சுழுத்தியிலே யிருப்பது எக்காலம் எ-று. 74

கள்ளக்கருத்தையெல்லாங் கட்டோடுவேறறுத்திங்
குள்ளக்கருத்தை யுணர்ந்திருப்பதெக்காலம்.

பொ - ரை. (உலகத்தினடிக்கும்) வஞ்சகமான எண்ணத்தினை முழுவதும் அடியோடு நீக்கி இவ்விடத்து சிவபெருமானே தெய்வமெனும்) சத்தியமான கருத்தைத் தெரிந்து வாழ்வது எக்காலம் எ-று.

அட்டகாசஞ்செலுத்து மவத்தைச்சடலத்துடனே
பட்டபாடத்தனையும் பகுத்தறிவதெக்காலம்.

பொ - ரை. வீணான ஆடம்பரங்களை நடத்தும் துன்பத்திற்கேது வாகவுள்ள தேகத்துடனே அனுபவித்த செயலத்தனையையும் பகிர்ந் தாலோசித்து உண்மை யறிவது எக்காலம் எ-று. 76

அறிவிக்கருவியுட னவத்தைபடும்பாட்டையெல்லாம்
பிறியவுடனிருத்திப் பெலப்படுவதெக்காலம்.

பொ- ரை. அறிதற்கேதுவாகவுள்ள தத்துவங்களுடன் துன்பத் தையனுபவிக்கும் செயலையெல்லாம் நீக்கித் திருவருளுடன் விலை பெறச்செய்து ஆதாரப்படுவது எக்காலம் எ-று. 77

பூதம்பொறிகரணம் போந்தவிந்துநாதமுமாய்
பேதம்பலவிதமும் பிறிந்தறிவதெக்காலம்.

பொ-ரை. ஐம்பூதம், ஐம்பொறி, நாற்கரணங்களுடன் சம்மதித்த சிவமும், சத்தியுமாய் பேதப்பட்ட பலவகையனைத்தையும் (உண்மை விசாரித்து வெவ்வேறாகப்பகுத்து நிச்சயந்தெரிவது எக்காலம் எ-று.

தோன்றாசைமூன்றுந் தொடர்ந்துவந்துசுற்றாமல்
ஊன்றாசைவேரையடி யூடறுப்பதெக்காலம்.

பொ-ரை. அவ்வவ்வமயங்களில் உண்டாகாநின்ற மண், பெண், பொன் என்னும் மூன்றாசை தொடர்ந்து வந்து சூழ்ந்து கொள்ளா மல் அங்ஙனம் உண்டாதற்குக் காரணமாயுள்ள மாயை யென்னுந் தத்துவ ஆசையினடியினை முற்றுமொழிப்ப தெக்காலம் எ-று 79

புன்சனனம்போற்றுமுன்னே புரிவட்டம்போகிலினி
யென்சனனமீடேறு மென்றறிவதெக்காலம்.

பொ-ரை. எடுத்த சனனத்திலேயே அடையவேண்டியவற்றை அதிசீக்கிரமடையாமல் காலங்கழித்து வந்து இவ்வற்ப செனனத்

தினை நிலையென வெண்ணிக் காத்துவரு முன்னரே (புரியட்டகமாகிய) சூக்கும தேகம் நீங்கி விடில் இனி யெந்தச் செனனத்தினைக் கொண்டு நித்திய வாழ்வடைதல் என்ன அறிவு எக்காலம் எ-று.

நட்டநடுவினின்று நற்றிரோதாயியருள்
கிட்டவழிகாட்டிக் கிருபைசெய்வதெக்காலம்.

பொ-ரை. ஆன்மாவின் இருதயத்திலே இருந்து பின்னர் அருளை விளைவிக்கும் நல்ல திரோதாயி யென்னுஞ் சத்தியினது, சிவ பெருமான் திருவருளினையடையநெறியினைத் தெளிவித்துக் கருணை புரிவதெக்காலம் எ-று. 81

நானேநானென்றிருந்தேன் நடுவினிற்கட்டழகி
தானேவெளிப்படுத்திக் தருவனென்பதெக்காலம்.

பொ-ரை. ஆன்மாவாகிய நான் பிரமமாகிய நானென்றிருந்தேன் அவ்வமயம் எனதிருதயத்தில் திருவருட்சத்தி வலிய வெளிவந்து எனக்கன்னியமாகிய முதல்வனொருவனைக் கூட்டி வைப்பனென்பதெக்காலம் எ-று. 82

அடர்ந்தமனக்காட்டை யஞ்செழுத்தாம்வாளாலே
தொடர்ந்துதொடர்ந்துவெட்டி சுடுவதினியெக்காலம்.

பொ-ரை. அஞ்ஞானத்தால் நெருங்கியமனமாகிய வனத்தினைப் பஞ்சாக்கர மென்னும் வாளாயுதத்தினாலே அடிக்கடிச்சேதித்து மறுபடியும் தலையெடாதபடி சிவத்தியானத்தால் கொளுத்திவிடுவது எக்காலம் எ-று. 83

ஐந்துபொறிவழிபோ யலையுமிந்தபாழ்மனதை
வெந்துவிழப்பார்த்து விழிப்பதினியெக்காலம்.

பொ - ரை. பஞ்சேந்திரியங்களின்வழியாக சென்றலேந்த விந்த வீண் மனத்தினைத் தலையெடாதபடி யிருக்கக்கண்டு திருவருளினில் பார்த்து சொண்டிருப்பது எக்காலம் எ-று. 84

இனமாண்டுசேர்ந்திருந்தோ ரெல்லோருந்தான்மாண்டு
சினமாண்டுபோகவருள் சேர்ந்திருப்பதெக்காலம்.

பொ - ரை. பிரபஞ்ச சம்பந்தமான இனமனைத்து நீக்க, தன்னுடன் சேர்ந்திருக்கத் தத்துவமனைத்துமொடுங்க, கோபமும் கெட்டுப்போய் திருவருளிற் கலந்திருப்பது எக்காலம் எ-று. 85

அமையாமனதமைபு மானந்தவீடுகண்டங்
கிமையாமனேக்கி யிருப்பதினியெக்காலம்.

பொ - ரை. ஒரு வழியிலும் ஒடுங்காத மனமானது திருவருளினல் கிடைக்கும் சிவானந்த வீட்டினைத் தரிசித்து அவ்விடத்தில் இமை கொட்டாது தரிசித்து வாழ்வது எக்காலம் எ-று. 86

கூண்டுவிடுஞ்சீவன்மெள்ளக் கொட்டாவிகொண்டாற்போற்
மாண்டுவிடுமுன்னேஞன் மாண்டிருப்பதெக்காலம்.

பொ - ரை. தேகத்தினைவிட்டு நீங்கத்தகுந்த சீவனனது மெதுவாக கொட்டாவி விடுதல்போலத் தேகத்தினைவிட்டு நழுவு முன் பிரபஞ்ச சேஷ்டையினின்று நீங்கி மாயையை மறந்திருப்பதெக்காலம்எ-று. 87

ஊனிறைந்தகாய முயிரிழந்துபோகுமுன்னம்
நானிறந்துபோகவினி நாள்வருவதெக்காலம்.

பொ - ரை. மாமிசம் பொதிந்த உடலினின்றும் உயிர் வெளிப்பட்டுப்போகு முன்னர் நான் அகங்காரமற்று வாழ்நாளடைவது எக்காலம் எ-று. 88

கெட்டுவிடுமாந்தர் கெர்விதங்கள்பேசிவந்து
சுட்டுவிடுமுன்னென்னைச் சுட்டிருப்பதெக்காலம்.

பொ - ரை. மாயையாலழியு மனிதர்கள் இறுமாப்பு வார்த்தைகள் பேசிக்கொண்டுவந்து எனதுடலைக் கொளுத்துவிடுமுன்னர் பிரபஞ்சச் சுட்டினை யொழித்து அந்தர் முகமாக உள்ளுட் குறித்து நோக்கிக்கொண்டிருப்பது எக்காலம் எ-று. 89

தோலேணிவைத்தேறித் தூரநடந்தெய்க்காமல்
நூலேணிவைத்தேறி நோக்குவதுமெக்காலம்.

பொ - ரை. தோலினாகிய உடலாகிய எணியினை யாதாரமாகக் கொண்டுபலதேயஞ்சென்று இளையாமல் மெய்கொண்டசாஸ்திரங்களாதாரமாகச்சென்று திருவருளைத் தரிசிப்பது எக்காலம். எ-று 90

வாயோடுகண்மூடி மயக்கமுற்றுநில்லாமல்
தாயோடுகண்மூடி தழுவிநிற்பதெக்காலம்.

பொ - ரை. வாயினையும் கண்களையுமாத்திர மூடிக்கொண்டு மனமடங்காமல் மயக்கத்தினையடைந்து வாழாமல் திருவருட் சத்தியுடன் அறிவாகிய கண்ணைச் செலுத்தி அருளை யனுபவித்து இருப்பது எக்காலம் எ-று 91

காசினியெலாநடந்து காலோய்ந்துபோகாமல்
வாசிதனிலேறி வருவதினியெக்காலம்.

பொ - ரை பிரபஞ்சமுழுது மலைந்து உண்மைதேறாது நடையிளைத்துப்போகாமல் உசுவாச நிசுவாச மென்கிற வாயுவாகிய குதிரையின்மேலிருந்து யதனைத் தன்வசப்படுத்தி வருவது எக்காலம் 92

ஒலிபடருங்குண்டலினை யுன்னியுணர்வாலெழுப்பிச்
சுழுமுனையின்றாள் திறந்து தூண்டுவதுமெக்காலம்.

பொ - ரை. மூலாதாரத்தினின்று மெழும்பிப் பிரகாசத்துடன் விசிரிம்பிக்கும் சுத்தமாயாரூபமாகிய குண்டலி சத்தியைத் தியானித்து அறிவைக்கொண்டு உயரவெழச்செய்து அது சுழுமுனை வரையிற்செல்ல அங்கு மறைவு நீங்கித் திருவருள் தோன்றுவதும் எக்காலம். எ-று 93.

இடைபிங்கலைநடுவே யியங்குஞ்சுழிமுனையில்
தடையறவேநின்று சலித்திருப்பதெக்காலம்.

பொ - ரை. வலது மூக்கின் வழியாக வரும் இடைகலைக்கும் இடது மூக்கின் வழியாகவரும்பிங்கலைக்கும் நடுவேயுள்ள சுழுமுனை நாடியில் சுவாச ரெண்டினையும் விடாது உள்ளேயிழுத்து அசைவற விருந்துகொண்டிருப்பது எக்காலம் எ-று 94.

மூலநெருப்பைவிட்டு முட்டிநிலாமண்டபத்தில்
பாலையிறக்கியுண்டு பசியொழிவதெக்காலம்.

பொ - ரை. மூலாதாரத்திலுள்ள அக்கினியினை எழுப்பிமேலே சந்திர மண்டலத்தில்தாக்கச்செய்து அந்நிலாவிடத்தினின்றும் அமுதத்தினைப் பெய்யச்செய்து உண்டுபசி தீர்ந்திருப்பது எக்காலம்எ-று.

ஆகவெளிக்குள்ளே யடங்காம்புரவிசெல்ல
ஏகவெளியி லிருப்பதினியெக்காலம்.

பொ - ரை. தேகத்தினுள்ளே இருதயாகாசத்தில் கட்டுக்கு அடங்காத வாசி யென்னும் குதிரையானது வெளிபோகாது உள்ளே செல்ல அப்போது அங்குத்தோன்றும் சிதம்பராகாச சொரூபமாயதி லிருப்பது இனி யெக்காலம் எ-று 96.

பஞ்சரித்துப் பேசும் பலகலைக்கெட்டாப்பொருளில்
சஞ்சரித்துவாழ்ந்து தவம்பெறுவதெக்காலம்.

பொ - ரை. மெய்யினை யுணர்த்தாது சொற்சாலமாகவும் விஸ்தாரமாகவும் பேசும்பலவகைப்பட்ட நூல்களுக்கு எட்டாத உண்மைப்பொருளாகிய திருவருளினில் கலந்து வாழ்ந்துவரும் தவமடைவதெக்காலம் எ-று. 97

மலமுஞ்சலமுமற்று மாயையற்றுமானமற்று
நலமுங்குலமுமற்று நானிருப்பதெக்காலம்.

பொ - ரை. உணவினை நீக்குதலினலே மலமும் சலமும்நீங்கி பிரபஞ்ச பற்றுவையா திருத்தலினல் மாயையினின்று நீங்கி, நல்லதென்று சொல்லப்படுகிற சாக்ஷாத்காரமும், சாதியபிமானமும் நீங்கி நான் தனித்திருப்பது எக்காலம் எ-று. 98

ஓடாமலோடி யுலகைவலம்வந்துசுற்றித்
தேடாமலென்னிடமாய்த் தெரிசிப்பதெக்காலம்.

பொ - ரை. அன்பின் வழியே யாத்திரை செய்யாமல், வேடிக்கையாகயாத்திரை புரிந்து பூமிழுழுதும் சுற்றிச் சிவபெருமானைமுன்னிட்டுத் தேடாமல் எனதுசிதாகாசத்துள்ளே தரிசிப்பது எக்காலம்

அஞ்ஞானம்விட்டே யருண்ஞானத்தொட்டு
மெஞ்ஞானவீடுபெற்று வெளிப்படுவதெக்காலம்.

பொ - ரை. பிரபஞ்ச பற்ருகிய அஞ்ஞானத்தினின்று நீங்கித் திருவருளை ஞானத்தினைப்பற்றிஉண்மை ஞானத்தினைப்பயப்பிக்கும் மோட்சத்தினையடைந்து சிவனடியனென வெளி வருவதெக்காலம்.

வெல்லுமட்டும்பார்த்து வெருளியெலாம்விட்டகன்று
செல்லுமட்டுஞ்சிந்தை செலுத்துவதுமெக்காலம்.

பொ - ரை. தத்துவங்களைச் செயிக்கும் வரையில் செயித்துக் கோபயனைத்தினையும் நீங்கித் (திருவருளினை)எட்டும் வரையில்மனத்தினை விடுவதும் எக்காலம் எ-று 101

மேலாம்பதந்தேடி மெய்ப்பொருளையுள்ளிருத்தி
நாலாம்பதந்தேடி நான்பெறுவதெக்காலம்.

பொ - ரை. மேன்பட்ட திருவருணிலையினை விசாரித்து உண்மைபொருளாகிய சிவபெருமானை மனத்திருத்திச் சிவசாயுச்சியத்தினை நாடியதனை யானடைவது எக்காலம் எ-று 102

எண்ணாததூரமெல்லா மெண்ணியெண்ணிப்பாராமல்
கண்ணாடிக்குள்ளொளிபோற் கண்டறிவதெக்காலம்.

பொ - ரை. சிவபெருமானைத் தரிசித்தற்கேது நினைவில் எண்ணாதபடி அறிவிற்கு அதி தூரமாக யிருக்கும் நூல்களை நினைத்து நினைத்து வீணாகப் பாராமல் கண்ணாடிக்குள் ஒளியினைப் போல மனத்தின் கண்ணே சந்தேகமின்றித் தெரிந்து கொள்வது எக்காலம் எ-று. 103

என்னையறிந்துகொண்டே னெங்கோமானோடிருக்கும்
தன்மையறிந்து அமைந்திருப்பதெக்காலம்.

பொ - ரை ஆன்மா வின்னதெனத் தெரிந்து கொண்டு அதன் பின் எமது தலைவனாகிய சிவபெருமானுடன் இரண்டறக் கலந்திருக்கும் தன்மையினைத் தெரிந்து அமைதல் எக்காலம்.எ-று 104

ஆறாதாரங்கடந்த வானந்தப்பேரொளியை
பேறாகக்கண்டுநான் பெற்றிருப்பதெக்காலம்.

பொ - ரை மூலாதாரமுதல் ஆஞ்ஞையீறாகவுள்ள ஆறாதாரங்களையுங் கடந்த சிவானந்த சொரூபமாயுள்ள அருட் பெருஞ்சோதியை நான் அடையும் பாக்கியமாகத் தரிசித்து அதனை யடைந்திருப்பதெக்காலம் எ-று. 105.

ஆணவமாய்த்தா லழிந்துடலம்போகாமுன்
காணாதலாலின்பமற்றுக் கண்டறிவதெக்காலம்.

பொ-ரை. ஆணவ மலத்தின் மயக்கத்தால் தேகம் அழிந்து படுமுன்னே சிவபெருமானைத் தரிசனஞ் செய்தால் பேரின்பமடைந்து உண்மை தெரிவது எக்காலம் எ-று 106.

மும்மலமுஞ்சேர்ந்து முளைத்தெழுந்தகாயமிதை
நிர்மலமாய்கண்டுவினை நீங்கியிருப்பதெக்காலம்.

பொ - ரை. ஆணவாதி மலங்களின் சம்பந்தத்தால் காரியப்பட்டு உருவாகிய இத்தேகத்தினை அத்தேகத்தினுள்ள சிவகரணங்களைச் சிவகரணங்களாக்கிச் சுத்தமா யிருக்கக்கண்டு செயலற்றிருப்பதெக்காலம் எ-று. 107

முன்னைவினைகெடவே மூன்றுவகைகாட்சியினால்
உன்னைவெளிப்படுத்தி யுறுவதினியெக்காலம்.

பொ -ரை. பூர்வபிராரத்துவம் நீங்கவே தத்துவதரிசனம், ஆன்மதரிசனம், சிவதரிசனம் என மூவகைப்பட்ட காட்சிகளினால் தேவரீரை என்னிடத்தினின்றுந்தரிசிக்கவேதுவாகி யடைவது எக்காலம்

கண்ணொளிபாய்ந்ததுவுங் கருத்தறிந்துகொண்டதுவும்
விண்ணிலொளிகண்டதுவும் வெளிப்படுவதெக்காலம்

பொ - ரை. கண்ணினுள்ளே யோர் சிற்றொளி தங்கியிருப்பதும் மனமொன்றை தெரிந்துகொண்டதுவும். ஆகாயத்தில் அருட்சோதியை தரிசித்ததுவும் ஆகிய உண்மை எனக்குப்புலப்படுவது எக்காலம்.

கனவுகண்டாற்போலெனக்குக் காட்டி மறைந்தேயிருந்த
நினைவைப்பரவெளிமேல் நிறுத்துவதுமெக்காலம்

பொ - ரை. கனவுகண்டு உடனே மறந்தாற்போல அடியேனுக்குத் திருவருளினை வெளிப்படுத்தி உடனே மறந்திருந்ததற் கேதுவாகிய எண்ணத்தினை அங்ஙன மறையாதபடி சிதாகாயத்தி னிறுத்துவதும் எக்காலம் எ-று. 110

ஆரென்றுகேட்டதுவு மறிவுவந்து கண்டதுவும்
பாரென்றுசொன்னதுவும் பகுத்தறிவதெக்காலம்

பொ-ரை. தத்துவங்களை யார் யார் என்று விசாரித்துக் கொண்டே போனதும் அவ்விசாரணை முடிவில் அறிவாகிய ஆன்மாவைத் தரிசித்ததும் அவ்வான்மா தனக்கன்னியமாக முதல்வனொருவனுண்டென்று பரமனையாவைப் பாரென்று சொன்னதுவுமாகிய உண்மையினை விசாரித்தறிவதெக்காலம் எ-று. 111

நினைக்குநினைவுதோறும் நிறைந்தபரிபூரணத்தை
முனைக்குமேற்கண்டுகண்ணில் முளைத்தெழுப்பதெக்காலம்

பொ - ரை. எண்ணும் எண்ணங்களிலிருந்து எண்ணுவிக்கும் வியாபகமான பரிபூரணமான பொருளைச் சுழுமுனைக்குமேலே தரிசித்து ஞானக்கண்ணில் தோன்றும்படிச்செய்வதெக்காலம் எ-று.

முப்பாழும் பாழாய் முதற்பாழுஞ் சூனியமாய்
அப்பாழும் பாழா யனபுசெய்வ தெக்காலம்

பொ - ரை. பிரகிருதி, அசுத்தமாயை, சுத்தமாகிய ஆகிய மூன்றும் சூனியமாகிய அதாவது அவைகளின் காரியம் தோன்றாமல் இவைகட்கு முதலாயிருந்த விந்துதத்துவமும் சூனியமாய் அதன்மேலுள்ள நாததத்துவமும் சூனியமாய் இவற்றைக்கடந்த சிவத்தினிடத்தி லன்புபாராட்டுவது எக்காலம் எ-று. 113

சீயென் றெழுந்து தெளிந்துநின்ற வான்பொருளை
நீயென் றுகண்டு நிலைபெறுவ தெக்காலம்

பொ-ரை. பிரபஞ்சத்தினைச் சீயெனவிகழ்ந்து என்னுளுதித்து மனத்தினில் விளங்காநின்ற உயர்ந்த பரம்பொருளை என்னுள்ளத்தில் நிலைத்திட செய்வது எக்காலம் எ-று 114

வவ்வெழுத்து மவ்வெழுத்தும் வாளாகுஞ்சிவ்வெழுத்தும்
யவ்வெழுத் தினுள்ளே யடங்கிநிற்ப தெக்காலம்.

பொ - ரை. சத்திசொரூபமாகிய வகரவெழுத்தும் பலசொரூபமாகிய மகரவெழுத்தும் அஞ்ஞானத்திற்கு ஓர் வாளாயுதம்போன்ற சிவசொரூபமாகிய சிகர வெழுத்தும் ஆன்மசொரூபமாகிய யகரவெழுத்தில் சூக்குமமாக வழங்கிநிற்குந் தன்மை யெனக்குத் தோன்றுவது எக்காலம் எ-று. 115

எழுத்தெல்லாமாண் டிறந்தே யேகமாய்நின் றநிலை
அழுதகமாய்சிந்தைவைத் தன்புகொள்வ தெக்காலம்

பொ - ரை. எழுத்து வடிவாக விளங்குகின்ற அபரஞானமனைத்து நீங்கிப் பரஞானத்தில் தனியேநின்ற சிவத்திலே அசையாதபடி எண்ணம் வைத்து அன்பையடைவது எக்காலம்-எ-று. 116

அருவாகியுருவாகி ஆதியந்தமாகிநின்ற
குருவாகிவந்தெனையாட் கொண்டருள்வதெக்காலம்

பொ-ரை. நிஷ்களமாகிச் சகளமாகி எவற்றிற்கு முதலு முடிவு மாகி நிலைபெற்ற ஆசாரியமூர்த்தியாகி எழுந்தருளி வந்து அடியேனை அடிமையாக வாட்கொள்வது எககாலம் எ-று- 117

நானென்றறிந்தவனை நானறியாக்காலமெல்லாம்
தானென்றுநீயிருந்த தனையறிவதெக்காலம்

பொ-ரை நாமென்பது இன்னதென்று அறிந்துகொண்ட ஆன்மாவை நான் தெரிந்துகொள்ளாத காலத்தில் அந்த ஆத்துமாவே தானுகத் தேவரீர் அத்துவிதமாகவிருந்ததன்மையினை யறிந்துகொள்ளுதல் எக்காலம்.எ-று 118

என்மயமாய்க்கண்டதெல்லா மெண்ணிஎண்ணிபார்த்தபின்பு
தன்மயமாய்க்கொண்டதிலை சார்ந்துநிற்பதெக்காலம்

பொ - ரை. பிரபஞ்ச முழுவதும் ஆன்மசொரூபமாகக் கண்டதெல்லாம் ஆலோசித்து ஆலோசித்துத் திருவருளைமுன்னிட்டுப்பார்த்தபிறகு அவையனைத்தும் சின்மயமாகத்தரிசித்து அதிலே பொருந்திவாழ்த லெக்சாலம்எ.று 119

ஒளியிலொளியா முருப்பிறந்தவாறதுபோல்
வெளியில்வெளியான விதமறிவதெக்காலம்

பொ - ரை. பூதப் பிரகாசத்தில் அருட்பிரகாசமாக வடிவு தோன்றியவாறு பூதாகாயத்தில் சிதாகாய சொரூபமான வகை தெரிவது எக்காலம் எ-று. 120

ஒளியிட்டமெய்ப்பொருளை யுள்வழியிலேயடைத்து
வெளியிட்டுசாத்திவைத்து விடுறுவதெக்காலம்

பொ - ரை. சோதிசொரூபமாயுள்ள உண்மைச் சிவத்தைமனத்தின் கண்ணே வைத்துப் பிரகாசிக்கச்செய்து மவுனத்தி னிறுத்திச் சிவபே றடைவது எக்காலம் எ-று 121

காந்தம்வலித்திரும்பைக் கரந்திழுத்திக்கொண்டதுபோல்
பாய்ந்துபிடித்திழுத்துன் பதத்தில்வைப்பதெக்காலம்.

பொ-ரை. சாந்தமானதுவலிய இரும்பினைத் தன் வசம் பண்ணிக்கொண்டதுபோலத் தேவரீர் அடியேன் பால் வலிய ஆவேசித்துக் கருணையாற் பிடித்திழுத்துத் தேவரீர் பதத்தில் சேர்ப்பது எக்காலம் எ-று 122

பித்தாயங்கொண்டு பிரணவத்தையுடறுத்துச்
செத்தாரைப்போலே திரிவதினியெக்காலம்

பொ - ரை. எதினும் பற்றற்ற பைத்தியத் தன்மை கொண்டு, பிரணவத்தினைத் தியானித்து நடைப்பிணம்போலச் சஞ்சரிப்பதெக்காலம் எ-று 123

ஒழிந்தகருத்தினைவைத் துள்ளெலும்புவெள்ளெலும்பாய்க்
கழிந்தபிணம்போலிருந்து காண்பதினியெக்காலம்

பொ - ரை பிரபஞ்சவாசனை யினின்று நீங்கிய மனத்தினை நிலையாக வைத்து உடலின் கண்ணேயுள்ள எலும்பனைத்தும் வெள்ளையெலும்பாகும்படி இரத்தநீங்கிய நடைப்பிணம்போல் வாழ்ந்து உனைத்தரிசிப்பதெக்காலம் எ-று. 124

ஆதிகபிலர்சொன்ன வாசகத்தின்சொற்படியே
சாதிவகையில்லாமற் சஞ்சரிப்பதெக்காலம்

பொ - ரை. பூர்வகாலத்தில் கபிலதேவர் அகவலாகிய நூலின் படியே சாதிபேதம் பாராட்டாமல் உலாவித் திரிவது எக்காலம் எ-று. 125

சூதுங்களவுந் தொடரா வினையுஞ்சுட்டக்கா
ஊதுந்துருத்தியைப் போட் டுனைபடைவதெக்காலம்.

பொ - ரை. வஞ்சனைச் செயலையும், திருட்டுத் தொழிலினையும், தொடர்ந்து வருகிற வினைகளையும் நீக்கிக்கொண்டால், உலைக்களத்துவைத்து ஊதும் தோற்பையினை யொத்த உடலை நீங்கித் தேவரீரையடைவது எக்காலம் எ-று. 126

ஆசைவலைபாசத் தகப்பட்டுமாயாமல்
ஓசைமணித்தீபத்தி லொன்றிநிற்பதெக்காலம்

பொ - ரை. பிரபஞ்ச ஆசையாகிய வலையென்னும் பாசத்தில் சிக்கிக்கொண்டு அழியாமல் மணியினைப்போலச் சப்திக்கும் நாத தத்துவத்திலே விளங்கும் அருட் சோதியிலே கலந்துநிற்பது எக்காலம் எ-று. 127

கல்லாய்மரமாய் கயலாய்ப்பறவைகளாய்ப்
புல்லாய்பிறந்தசென்மம் போகுமென்பதெக்காலம்

பொ - ரை. கல்லாகியும், மரமாகியும், மச்சமாகியும், பட்சிகளாகியும், புல்லாகியும், இதுகாறும் பிறந்த ஜென்மங்களே போலும் இனிக் கீழிட்ட சென்மங்கள் வேண்டுவதில்லை யென்பது எக்காலம் எ-று. 128

தங்கும்வகைக்கோர்பொருளும் சாராமலேநினைவில்
பக்குவமாநின்னருளைப் பார்த்திருப்பதெக்காலம்

பொ - ரை. அருளானது எனக்கு உண்டாகும் விதமாகப் பிர பஞ்ச சம்பந்தமான ஒரு பொருளினிடத்தும் பொருந்தாமல் மனத் தின்கண்ணே தகுதியாகத் தேவரீர் திருவருளினைத் தரிசித்துக்கொ ண்டிருப்ப தெக்காலம் எ-று. 129

ஆறோடிசைந்து சுழன்றுவருந் தத்துவத்தை
வேறோடிசைந்து விளங்குவதுமெக்காலம்

பொ - ரை. பிரபஞ்ச சேற்றிலழுந்தி எந்நாளும் விஷயங்களில் திரிந்துகொண்டிருக்கிற தத்துவத்தினை அடியோடே கிளர்ந்து நினது திருவருளிலே பிரகாசித்துக்கொண்டிருப்பது எக்காலம் எ-று.

பாசநடுவேறிப் பாய்ந்தெழுந்தசித்திரத்தை
ஏகநடுமூலத் திருத்துவதுமெக்காலம்

பொ - ரை நமசியென்கின்ற வடிவினடுவிலிருக்கிற மகரமென் கிற பாசத்தால் விளைந்த பிரபஞ்ச சித்திரத்தினை வெறுத்துவிட்டு மற்றைய விரண்டினையும் மூலாதாரத்திலே வைத்துத் தியானிப்பது எக்காலம் எ-று. 131

ஓரின்பங்காட்டு முயர்ஞானவீதிசென்று
பேரின்பவீடுகண்டு பெற்றிருப்பதெக்காலம்.

பொ - ரை. ஒப்பற்ற பேரின்பத்தினைக் கொடுக்கும் மேன்மை யான சித்தாந்த ஞானவீதியிலே சென்று மோட்ச வீட்டினைத் தரி சித்துக்கொண்டிருப்ப தெக்காலம் எ-று. 132

காரணமாய்வந்தென் கருத்தினுரைத்ததெல்லாம்
பூரணமாகக்கண்டு புகழ்ந்திருப்பதெக்காலம்.

பொ - ரை. பக்குவக் காரணமாக யெழுந்தருளி வந்து அடியேன் மனத்தில் பதியும்படி உபதேசித்தனவெல்லாம் பூர்த்தியாகா வனுபவித்துத் தேவரீரைத் தோத்தரித்துக் கொண்டிருப்பது எக்காலம் எ-று. 133

ஆயுங்கலைகளெல்லா மாராய்ந்துபார்த்ததற்பின்
நீயென்றுமில்லா நிசங்காணபதெக்காலம்.

பொ - ரை. ஆராயவேண்டிய சாஸ்திரங்களை யெல்லாம் விசாரித்துணர்ந்த பிறகு தேவரீர் எக்காலத்தும் எனக்கு அந்நிய மில்லாத உண்மையினைத் தெரிந்துகொள்வதெக்காலம் எ-று. 184

குறியாகக்கொண்டு குலமளித்தநாயகனைப்
பிரியாமற் சேர்ந்து பிறப்பறுப்பதெக்காலம்.

பொ - ரை. என்னை இலட்சியமாக வாட்கொண்டு சிவனடியாரிற்சேரும் குலமீந்த எனது தலைவனை நீங்காமல் கலந்து என்னுடைய பிறப்பினை யொழித்துக்கொள்ளுதல் எக்காலம் எ-று. 155

மத்தடித்துநின்று மருளாடுவார் போலே
பித்தடித்துநின்னருளைப் பெற்றிருப்பதெக்காலம்.

பொ - ரை. உன்மத்தங் கொண்டிருந்து மருட்சி யுற்றாடுவார்களைப்போல உன்னிடத்தில் மோகங் கொண்டிருத்தலினால் பைத்தியங் கொண்டவனைப்போல நின்று உனது திருவருளினை யடைந்திருப்பது எக்காலம் எ-று. 136

சாவாமல்செத் திருந்து சற்குருவின் பொன்னடிக்கீழ்
வேகாமல்வெந்திருக்க வேண்டுவது மெக்காலம்.

பொ - ரை. உயிர் நீங்கிய பிணமாகாமல் நடைப்பிணம் போலிருந்து உண்மையாச்சாரியர் அழகிய திருவடிக்கீழ் பூதாக்கினியினில் வெந்து போகாமல் ஞானக்கினியால் வெந்திருக்க விரும்புவதும் எக்காலம் எ-று. 137

என்னையறியாம லிருந்தாட்டுஞ் சூத்திரநின்
தன்னையறிந்து தவம்பெறுவ தெக்காலம்.

பொ - ரை. எனக்குச் சிறிதுந் தோன்றாதவண்ணம் பிரபஞ்சத்திலிருந்தும் ஆட்டிவைக்கின்ற கன்மமென்னும் சூத்திரம் தேவரீரைத் தெரிந்துக் கொள்ளும்படி செய்து தவத்தினை யடைவது எக்காலம் எ-று. 138

உள்ளமறியா தொளித்திருந்தநாயகனை
கள்ளமறத்தெளிந்து காணபதினியெக்காலம்

பொ - ரை. திரோதானத்தால் மனமானது அறியாதபடி மறைந்திருந்த எனது தலைவனை கள்ளத்துடன் இதுகாறுமிருந்த அம்மனம் திரோதன நீங்கித் தரிசிப்ப தெக்காலம எ-று. 139

வாசித்துக்காணாமல் வாய்விட்டுப் போகாமல்
பூசித்துநிற்குமொரு பொருள்காண்ப தெக்காலம்.

பொ - ரை. உலக நூல்களில் பலவற்றைப் படித்துப் பார்த்தும் காணாமல், மவுனமாக விருந்தும் பூசித்துவந்தும் எதிர்படா திருக்கும் பொருளைத் தரிசிப்பது எக்காலம். எ-று. 140

பன்னிரண்டுகாற்புரவி பாய்ந்துசில்லந்தப்பாமல்
பன்னிரண்டுசங்கிலிக்குட் பிணைப்பதினியெக்காலம்.

பொ - ரை. வெளியில் பனிரண்டங்குலம் பாயும் வாசியாகிய குதிரை ஆரவாரம்செய்ய வொட்டாமல் உள்ளே நோக்கும் பனிரண்டங்குல சங்கிலியால் கட்டுவது எக்காலம் எ-று. 141

நாட்டுக்காலிரண்டும்விட்டு நடுவக்காலூடேபோய்
ஆட்டுக்காலிரண்டினுள்ளே யமர்ந்திருப்பதெக்காலம்.

பொ - ரை. மூக்கின் வெளியிலே விடுகின்ற இரண்டாகிய இரேசக பூரகங்களை விடாது கும்பத்தின் மூலமாகச்சென்று சுழுமுனையின்கண் முதல்வன் நடனஞ்செய்கின்ற திருவடிகளிரண்டின் மத்தியிலே யிருந்து கொண்டிருப்பது எக்காலம் எ-று. 142

பாற்பசுவைப்பூட்டி பதியில்வைத்துசீராட்டிக்
காற்பசுவையோட்டியதிற் கட்டிவைப்பதெக்காலம்.

பொ - ரை. என்பால் பாசத்தன்மையால் வாய்ந்த பசுத்துவத்தை நீங்கிப் பதித்தன்மையிலிருந்து திருவருட் சீராட்டி வாசியாகிய பிராணவாயுவை யுள்ளே நடத்தி இருதயத்திலே கட்டிவைப்பது எக்காலம் எ-று 143

பலவிடத்தேமனத்தைப் பாயவிட்டுப்பாராமல்
நிலவறையினூடேபோய் நேர்படுவதெக்காலம்.

பொ - ரை. பூமியின் மேலேயிருந்து பல இடங்களிலேயும் மனத்தைச் செலுத்தி விஷயங்களைப் பார்த்துக் கொண்டிராமல் பூமியின் கீழே நிலவறை ஏற்படுத்தி அதனுள்ளிருந்து உனக் கெதிர்படுவது எக்காலம் எ-று 144

காமக்கடல்கடந்து கரையேறிப்போவதற்கே
ஓமக்கனல்வளர்த்தி யுள்ளிருப்பதெக்காலம்.

பொ - ரை. போக வாசையென்கிற சமுத்திரத்தினை நீகித் திருவருள் கரையேறி முத்தியிற் போவதற்கே சிவாக்கினியை உள்ளே மூட்டி உன்னிழலுக்குள் இருப்பது எக்காலம் எ-று. 145

உதயச்சுடர்மூன்று முள்வீட்டிலேகொளுத்தி
இருதயத்திருநடன மினிக்காண்பதெக்காலம்.

பொ - ரை வளர்கின்ற ஆகவனீயும், தட்சணக்கிணியும், காருகபத்தியம் எனு மூன்றக்கினியையும் உடலுக்குள்ளே வளர்த்தி அங் இருதயத்தின் கண்ணே விளையும் நடனத்தினை யினித் தரிசிப்பது எக்காலம் எ-று 146

வேதாந்தவேதமெல்லாம் விட்டேறியேகடந்து
நாதாந்தமூல நடுவிருப்பதெக்காலம்.

பொ - ரை. வேதவேதாந்தங்களை யெல்லாம் விசாரித்துக் கைவிட்டு அப்பாற்சென்று நாததத்துவத்தைக் கடந்து விளங்குகின்ற வீட்டில் தங்குவது எக்காலம். எ-று. 147

பட்டமற்றுக்காற்றிற் பறந்தாற்சூத்திரம்போல்
விட்டுவெளியாக விசுவாசித்ததெக்காலம்.

பொ - ரை. காற்றாடியினை யிழந்து காற்றினிடத்தே அசைந்தாடாநின்ற காற்றினைப்போல பிரபஞ்ச விஷயங்களினின்றும் நீங்கிச் சிதாகாயவெளியில் விரும்பியிரும்பது எக்காலம் எ-று- 148

அட்டாங்கயோகமதற் கப்பாலுக்கப்பாலாய்
கிட்டாப்பொருளதனைக் கிட்டுவதுமெக்காலம்.

பொ - ரை. சிவராஜ யோகத்தினைச் செய்யாது எட்டுவிதமான யோக மார்க்கங்களைச் செய்ய அவற்றிற்கிட்டாது அதீதப்பட்டுத் தற்போத அறிவிற்கு எட்டாத வஸ்துவை அடைவது எக்காலம் என்றவாறு. 149

ஒட்டாமலொட்டிநிற்கு முடலுமுயிரும்பிரித்தே
எட்டாப்பழம்பதிக்கிங் கேணிவைப்பதெக்காலம்.

பொ - ரை. திருவருட் சம்பந்தப்படாமல் தத்துவங்களால் சம்பந்தப்பட்டிருக்கும் உடலும் அதனுள்ளிருக்கும் ஆன்மாவும் வேறு பிரிந்து தற்போதத்தாலெட்டக்கூடாத அனாதியாகிய சிவபதத்திற்குத் திருவருளாகிய ஏணியினை யடைவது எக்காலம் எ-று. 150

பாசத்தைநீக்கிப் பசுவைப்பதியில்விட்டு
நேசத்தினுள்ளே நினைந்திருப்பதெக்காலம்.

பொ - ரை. மலசம்பந்தமாகிய பாசங்களை யொழித்து ஆன்மாவை பதியிற் கலக்கச்செய்து சிவநெறியினுள்ளே எண்ணியிருப்பது எக்காலம் எ-று. 151

ஆசாரநேய வனுட்டானமும்மறந்து
பேசாமெஞ்ஞானநிலைப் பெற்றிருப்பதெக்காலம்.

பொ - ரை பிரபஞ்ச முகமாகவிருந்து செய்துவரும் சீலம், உறவு அனுட்டான முதலிய தானே நழுவிவிட மவுனமாகிய சிவஞான நிலையினை யடைந்திருப்பது எக்காலம் எ-று. 1[illegible]

பல்லாயிரங்கோடிப் பகிரண்டமும்படைப்பே
அல்லாதுவேறிலையென றறிவதினியெக்காலம்.

பொ - ரை. எண்ணிக்கைக்கு அளவுபடாத பகிரண்ட மனைத்தும் ஒரு முதல்வனால் காரியப்படுவதே யல்லாமல் நிலையாக விருப்பதன்று என்னும் உண்மையறிவது இனி எக்காலம் எ-று. 153

ஆதிமுதலாகிநின்ற அரியென்றவட்சரத்தை
ஓதியறிந்துள்ளே யுணர்வதினியெக்காலம்.

பொ - ரை. எழுத்துகளுக்கு முதலாகநின்ற அரியென்ற எழுத்தினைச் சொல்லி அதன் அதிட்டான மூர்த்தியாகிய விஷ்ணுவைத் தெரிசித்து மணிபூரகமென்னும் மூன்றாவது ஆதாரத்திலே தியானிப்பது எக்காலம் எ-று. 154

சாத்திரத்தைச்சுட்டுச் சதுர்மறையைப்பொய்யாக்கிச்
சூத்திரத்தைக்கண்டு துயரறுப்பதெக்காலம்.

பொ - ரை சாத்திரங்களைத்தையும் படித்துப் பார்த்து நான்கு வேதங்களும் முதல்வனைக் குறித்துத் தீர்மானமாகச் சொல்லாதகனால் அவற்றை நீக்கி சிவஞானபோத சூத்திரத்தினை ஆராய்ந்து உண்மை தெளிந்து முந்திய வாசனையின் துன்பத்தினை யொழித்துக்கொள்ளுவதெக்காலம் எ-று. 155

அல்லும்பகலுமென்ற னறிவையறிவாலறிந்து
சொல்லுமுறைமறந்து தூங்குவதுமெக்காலம்.

பொ - ரை. இரவும் பகலும் என்னுடைய அறிவினை திருவருளால் தெரிந்து வாய்ப்பேச்சினை விட்டு யோகநித்திரையி லிருப்பதும் எக்காலம் எ-று. 156

இபங்குஞ்சராசரத்தி லெள்ளுமெண்ணெயும்போல
முயங்கிவந்தவேத முடிவறிவதெக்காலம்.

பொ-ரை. இயங்கியற்பொருளாகிய சரபதார்த்தங்களிலும், அசரபதார்த்தங்களிலும்எள்ளுக்குள் எண்ணெயைப்போலத் தங்கியிருக்கும் அத்தவேதாந்த பொருளையறிவது எக்காலம் எ-று. 157

ஊனாகியூனி லுயிராகியெவ்வுலகுந்
தானாகிநின்ற தனையறிவதெக்காலம்.

பொ-ரை. காரியப்படுத்தலினால் உடலாகி அறிவித்தலால் அவ்வுடலில் உயிராகி எங்கும் வியாபித்தலால் உலகமனைத்துமாகி யிருந்த முதல்வன் தனையறிவது எக்காலம் எ-று. 158

என்னைவிட்டுநீங்காம லென்னிடத்துநீயிருக்க
உன்னைவிட்டுநீங்கா தொருமைப்படுவதெக்காலம்.

பொ-ரை. எக்காலத்தும் என்னைப்பிரியாது அத்துவிதமாக என்னிடத்து தேவரீர் கலந்திருக்க அவ்வுண்மை தெரிந்து தேவரீரினின்றும் நானீங்காமல் கலந்திருக்க எண்ணுவது எக்காலம்எ-று 159

இன்னதென்றுசொல்லவொண்ணா வெல்லையற்றவான்பொருளைச்
சொன்னதென்றுநானறிந்து சொல்வதினியெக்காலம்.

பொ-ரை சொல்லாலே இத்தகையதென்று சொல்லக்கூடாத அளவற்ற உயர்பொருளையே ஆசாரியர் எனக்கு உபதேசித்ததென்று தெரிந்துகொண்டு தியானிப்பது எக்காலம் எ-று 160

மனதையொருவில்லாக்கி வான்பொறியைநாணாக்கி
எனதறிவையம்பாக்கி யெய்வதினியெக்காலம்.

பொ-ரை. என்னுடைய மனதை வில்லாகவளைத்து அதற்குப் பெரிய இந்திரியத்தினை நாணாகப்பூட்டி அவ்வில்லினாடே என்னுடைய அறிவினை அம்பாக வைத்து ஆணவாதி மலங்களின்மேல் பிரயோகிப்பது எக்காலம் எ-று 161

*என்னையிறக்கவெய்தே யென்பதியைபீடழித்த*
*உன்னைவெளியில்வைத்தே யொளித்துநிற்பதெக்காலம்*

பொ-ரை. என்னைப் பேசவொட்டாமல் அடங்கச்செய்து நான் ஆதாரமாகக் கொண்டிருந்த என்பிரபஞ்சத்தைத் தோன்றாமற் செய்த தேவரீரைச் சிதாகாயத்தில் வைத்து உன்னுடன் கலந்து நிற்பது எக்காலம் எ-று 162

*கடத்துகின்ற தோணிதனைக் கழைகள்குத்திவிட்டாற்போல்*
*நடத்துகின்றசித்திரத்தை நானறிவதெக்காலம்.*

பொ - ரை மீகாமனால் கடலில் செலுத்துகின்ற தோணியை அத்தோணியிலுள்ள சரக்காகிய மூங்கில்கள் அத்தோணியைத் துளை செய்து விட்டாற்போல ஆன்மாவில் உலகில் செலுத்துகின்ற உடலினை அவ்வுடலிலுள்ள வினைகள் அவ்வுடலைக் கெடுத்துவிட்ட விசித்திரத்தினை நான் தெரிந்து கொள்வது எக்காலம் எ-று 163

*நின்றநிலை பேராம நினைவிலொன்றுசாராமல்*
*சென்றநிலைமுத்தியென்று சேர்ந்தறிவதெக்காலம்.*

பொ - ரை தியானித்தி லிருக்கும் நிலையிலிருந்து அசையாமல் மனதில் பிரபஞ்ச விஷயங்களொன்றும் பொருந்தாமல், சித்தாந்த வழியே சென்றநிலையானது மோட்சமென்று திருவருளைக்சேர்ந்தறிவது எக்காலம் எ-று 164

*பொன்னும்வெள்ளியும்பூண் பொற்பதத்தையுள்ளமைத்து*
*மின்னுமொளிவெளியே விட்டடைப்பதெக்காலம்.*

பொ - ரை. வேதங்களையே பொன் வெள்ளிச் சிலம்புகளாகத் தரித்திருக்கிற அழகிய பதத்தினை மனத்தின் கண்ணேவைத்து அவ்விடத்தும் பிரகாசிக்கின்ற சோதியாகிய சிதாகாயத்திலே என்னை உட்புகுத்துவது எக்காலம். எ-று, 165

கூட்டிலடைப்பட்டபுழு குளவியுருக்கொண்டதுபோல்
வீட்டிலடைப்பட்டருளை ¹வண்டுவதுமெக்காலம்.

பொ-ரை. குளவியினுற் கட்டப்பட்ட கூண்டில் அடைப்பட்ட புழுவானது குளவி வடிவினைப் பெற்றதுபோல, உடலிலடைப்பட்ட உயிர் திருவருளுருவமாக அடைவது எக்காலம் எ-று. 166

கடலிலொளித்திருந்த கனலெழுந்துவந்தாற்போல்
உடலிலொளித்தசிவ வொளிசெல்வதெக்காலம்.

பொ-ரை. சமுத்திரத்தில் மறைந்திருந்த வடவாமுகாக்கினி வெளிவந்தாற்போல, தேகத்தில் இதுகாறும் அத்துவிதமாக விருந்து திரோதானத்தால் மறைந்திருந்த சிவம் வெளிப்பட்டொளிர்வது எக்காலம் எ-று. 167

அருணப்பிரகாச மண்டமெங்கும் போர்த்ததுபோல்
கருணைத்திருவடியிற் கலந்துநிற்பதெக்காலம.

பொ-ரை. சூரியப் பிரகாசமானது உலகமெங்கும் வியாபித்ததுபோல திருவருள் வியாபகத்தில் (வியாப்பியமாக) திருவடியில் இரண்டறக் கலந்து இருப்பது எக்காலம் எ-று. 168

பொன்னிற்பலவிதமாய் பூஷணமுண்டானதுபோல்
உன்னிற்பிறந்ததுன்னி லொடுங்குவதுமெக்காலம்.

பொ-ரை. பொன்னினிடத்தினின்றும் பலவிதமான ஆபரணங்கள் தட்டானுல் காரியப்பட்டதுபோல, உன்னிடத்துள்ள பரிக்கிரக சத்தியாகிய மாயையினின்றும் (நின்னுல் காரியப்பட்டு) மறுபடியும் நின்னுடைய மாயையில் ஒடுங்குவதும் எக்காலம் எ-று. 169

நாயிற்கடைப்பிறப்பாம் நான்பிறந்ததுன்பமற
வேயிற்கனலொளிபோல் விளங்குவதுமெக்காலம்.

பொ - ரை. நாயினும் கடையாகிய பிறப்பாகும் நான் எடுத்த சன்மமொழிய, மூங்கிலிலிருந்து உண்டாகிய அனல் அம்மூங்கிலினை அவ்வனல் மயமாக ஆக்கிவிடுவதுபோல் என்னுடலிலிருந்து அருள் வெளிவந்து என்னுடலை அருள்மயமாக விளக்குவது எக்காலம் எ-று.

சூரியகாந்திவெளி சூழ்ந்துபஞ்சைசுட்டதுபோல்
ஆரியன்றோற்றத் தருளைப்பெறுவதெக்காலம்.

பொ-ரை. சூரியனுடைய ஒளியானது கண்ணாடிமூலமாகப் பஞ்சினைக் கொளுத்தியதுபோல, ஆசாரியன் பார்வையால் உடல் மூலமாக மலத்தினைக் கொளுத்த திருவருள்பெறுவதெக்காலம் என்றவாறு. 171

இரும்பிற்கனல்மூட்டி யில்வுருபோயவ்வுருவாய்க்
கரும்பிற்சுவைரசத்தைக் கண்டறிவதெக்காலம்.

பொ - ரை இரும்பினிடத்தில் அக்கினியை மூட்ட இவ்விரும்புருவமாறி அவ்வக்கினி யுருவமாய் விளங்குதல்போலத் திருவருளை உடலில் மூட்ட இவ்வுடல் அத்திருவருளுருவாய் விளங்க அக்காலத்தில் விளையும் கரும்பினிடத்தினின்றும் உண்டாகிற சுவையுடன் கூடிய இரசத்தினை யொத்த சிவத்தினைத் தெரிந்துகொள்வது எக்காலம் எ-று. 172

கருக்கொண்டமுட்டைதனைக் கடலாமைதானினைக்க
உருக்கொண்டவாறதுபோ லுனையடைவதெக்காலம்.

பொ - ரை. கடலாமையானது தன்னிடத்துற்பவித்த தன்னுடைய முட்டையினை கடற்கரையிலிட்டு மறுபடியும் ஒருக்கால் நினைக்க அம்முட்டை உருக்கொண்டதுபோல, ஆச்சாரியர் என்னை நினைக்க யான் அருளுருவமடைவதும் எக்காலம் எ-று. 173

வீடுவிட்டுப்பாய்ந்து வெளியில்வருவார்போல்
கூடுவிட்டுப்பாயுங் குறிப்பறிவதெக்காலம்.

பொ - ரை. தாம் வாழ்கின்ற வீட்டினைவிட்டு நீங்கி வெளிவரு வார்களைப்போல உடலைவிட்டுநீங்கி வெளிவரும் நாளின் குறிப்பி னைத் தெரிந்துகொள்வது எக்காலம் எ-று, 174

கடைந்தவெண்ணெய் மோரிற் கலவாதவாறதுபோல்
உடைந்துதமியேனுனைக்காண்பதெக்காலம்.

பொ-ரை. தயிரினின்றும் கடைந்து எடுத்த வெண்ணையானது மறுபடியும் மோரிற்கலவாததுபோல, மலத்தினின்றும்வெளிப்பட்ட நான் மறுபடியும் அம்மலத்திற் கலவாதபடி தேவரீரைத் தரிசிப்பது எக்காலம் எ-று 175

இருளைவெளிவிழுங்கி யேகவுருக்கொண்டாற்போல்
அருளைவிழுங்குமிருளகன்றுநிற்பதெக்காலம்.

பொ ரை. பூதவிருளினைச் சூரியவொளிக்கெடுத்து ஒளிமயமாக விருந்ததுபோல, அருளினால் ஆணவ விருள் அழிய அவ்வருண்மய மாக நிற்பது எக்காலம் எ-று. 176

மின்னெழுந்துமின்னொடுங்கி விண்ணிலுறைந்தாற்போல்
என்னுள்நின்றதென்னுள்ளே யானறிவதெக்காலம்.

பொ-ரை. மின்னலானது ஆகாயத்தினின்றும் உண்டாகி அம் மின்னல் ஆகாயத்திலொடுங்கித் தங்கியதுபோல, என்னிடத்துமறை ந்துகிடக்கும் அருளானது என்னிடத்தினின்றும் வெளிப்பட்டு மறு படியும் என்னிடம் தங்குவது எக்காலம் எ-று. 177

கண்டபுனற்குடத்திற் கதிரொளிகள்பாய்ந்தாற்போல்
கொண்டசுரூபமதைக் கூறறிவதெக்காலம்.

பொ-ரை. வடிவுடன்கூடிய சலநிறைந்த பாண்டங்கள்தோறும் சூரியவொளி பிரகாசித்தாற்போல, பிரபஞ்ச பதார்த்தங்கள்தோறும் மாயை கலந்திருக்கும் மாயா சொரூபத்தின் வழியினை (என்னி னின்றும்) பிரித்தறிவது எக்காலம் எ-று 178

பூணுகின்றபொன்னணிந்தாற் பொன்சுமக்குமோவுடலைக்
காணுகின்றவென்கருத்திற் கண்டறிவதெக்காலம்.

பொ - ரை. ஆபரணங்களாகப் பொன்னினைப் பூண்டால் அப் பொன் உடலைப் பொன் சுமக்குமோ (சுமக்காது பொன்னினை யுடலேசுமக்கும் அதுபோல) திருவருளினைப்பெறுகின்ற என் மனத்தில் திருவருள் என்னைத்தாங்காமல் நான் திருவருளைத் தாங்குமாறு தெரிந்து கொள்வது எக்காலம்எ-று 179

செம்பிற்களிம்புபோற் சிவத்தைவிழுங்குமிக
வெம்பிநின்றமும்மலத்தை வேறுசெய்வதெக்காலம்.

பொ - ரை. செப்பினைக் களிம்பு மறைந்துக்கொண் டிருப்பது போல் சிவம் தோன்றுதவாறுபோல என்னைமறைத்து துன்பத்துடனின்ற மும்மலங்களை என்னிடத்தினின்றும் பிரிப்பது எக்காலம்.

ஆவியுங்காயமும்போ லாத்துமத்துநின்றதனைப்
பாவியறிந்துமனம் பற்றிநிற்பதெக்காலம்.

பொ-ரை. உயிரும் உடலும் அபேதமாக கலந்திருத்தல்போலத் (தேவரீர்) என் ஆன்மாவினிடத்து அபேதமாக அத்துவிதத் தன்மையிற் கலந்திருத்தலைப் பாவியாகிய நான் தெரிந்து மனம் பற்றுக் கொண்டு வாழ்வது எக்காலம்எ-று. 181

ஊமைக்கனுக்கண் டுரைக்கவறியாவின்பமதை
நாமறிந்துகொள்வதற்கு நாள்வருவதெக்காலம்.

பொ-ரை. ஒரு ஊமையானவன் ஒரு உத்தமமான கனவினைக் கண்டு (அதனைப் பிறருக்குச்) சொல்லவகையற்று தானே சந்தோஷிக்கும் இன்பத்தினையொக்க நாமுன்னையறிந்துகொண்டு வெளியிடக்கூடாத சுகத்தை யனுபவித்தற்குப் பாக்கியம் வருவது எக்காலம் எ-று.

சாகாசிவனடியைத் தப்பாதாரெப்போதும்
போகாவுடலகன்று போவரென்பதெக்காலம்.

பொ - ரை. எக்காலத்தும் அழியாத சிவபெருமானின் றிருவடியினைத் தியானித்தினின்றும் நீங்காதார் எக்காலத்தும் (மண்ணில்வீழ்ந்து அழியாத உடலுடனே பூமியினின்றும்) நீங்கி மோட்சமடைவரென்பதனை யறிவதெக்காலம் எ-று. 183

நிட்டைதனைவிட்டு நினைவறிவுகப்பவிட்டு
வெட்டவெளியில் விரவிநிற்பதெக்காலம்.

பொ - ரை. உபாசனை பூர்த்தியாகும் வரையில் நிஷ்டைகூடிப் பின் அந்நிஷ்டையினை மறந்து (முன்னிலைச்சுட்டாக) எண்ணும் எண்ணத்தையு நீங்கிச் சிதாகாயத்தில் கலந்து நிற்பது எக்காலம் எ-று.

வெட்டவெளிதன்னில் விளைந்தவெம்பாசத்தை
திட்டமுடன்கண்டு தெளிவதினியெக்காலம்.

பொ - ரை. திருவருள் வியாபகத்தி லிருந்துகொண்டு எனக்கு அநாதியாகவுண்டாகிய ஆணவமலத்தின் உண்மையினைத் தெரிந்து அதனினின்று நீங்கியிருப்பது எக்காலம் எ-று 185

எங்கும்பரவடிவா யென்வடிவுநின்வடிவாய்க்
கங்குல்பகலின்றியுனைக் கண்டிருப்பதெக்காலம்.

பொ-ரை. எவ்விடத்தும் சிவமயமாய், என்னுடைய சீவசொரூபம் சிவசொரூபமாய், சகலமும் கேவலமற்று உன்னைத் தரிசித்துக் கொண்டிருப்ப தெக்காலம் எ-று. 186

உண்டதுவுமாதருடன் கூடிச்சேர்ந்தின்பங்
கண்டதுவுநீயெனவே கண்டுகொள்வதெக்காலம்.

பொ -ரை. பிரபஞ்சபோக மனுபவித்ததும் பெண்களுடன் கலந்து சிற்றின்பத்தினை நுகர்ந்ததும் (என்னுடைய) கன்மத்திற்குத் (தகுந்தபடி) தேவரீரே கூட்டிவைத்தீரென்று (உண்மையினைத்) தெரிந்துகொள்வது எக்காலம் எ-று. 187

ஈமென்றுகேட்டதுவு மென்னுள்ளேநின்றதுவும்
ஓமென்றுசொன்னதுவு முற்றறிவதெக்காலம்.

பொ - ரை. (நான் நிஷ்டைகூடி யிருந்தகாலத்தில்) என் காதினிடத்து ஈம்என்ற நாதமுண்டானதும் பின்னரென்னுள்ளத்தில் (ஓம்) குண்டலிசத்தி நிலையுற்றதும் அது ஓங்காரத்துடன் சப்தித்ததுவும் ஆகிய விஷயங்களின் உண்மை நிலையுறச் சிந்தித்தறிவது எக்காலம்.

சத்தம்பிறந்தவிடந் தன்மயமாய்நின்றவிடஞ்
சித்தம்பிறந்தவிடந் தேர்ந்தறிவதெக்காலம்.

பொ-ரை. நாதோற்பத்திக்குக் காரணமாகவுள்ள மூலாதாரத்தையும், சுட்டின்றித் தான் திருவருள் மயமாகநின்ற அவசரத்தையும் மனோவிருத்திக்கு ஆதாரத்தையும் விசாரித்தறிவது எக்காலம் எ-று.

போக்கும்வரவும் புறம்புள்ளுமாகிநின்றும்
தாக்குமொருபொருளைச் சந்திப்பதெக்காலம்.

பொ-ரை. சகலவடிவினையுற்று ஆன்மாக்களின் அனுக்கிரகநிமித்தமாக,காட்சிகொடுத்தருளுதலும் மறைந்தருளுதலும்செய்து (நிஷ்களவடிவினையுற்று) எங்கும் வியாபகமாகி பிரபஞ்சத்தில் அதிஷ்டித்துக்கொண்டிருக்கும் ஒப்பற்றவஸ்துவைத்தரிசிப்பது எக்காலம்எ-று

நானெனவுநீயெனவு நாமிரண்டுமற்றொன்றும்
நீயெனவேசிந்தைதனி னேர்படுவதெக்காலம்.

பொ - ரை. சுதந்தரமாக நானென்னு மொருவனிருப்பதாகவும் எனக்கு அன்னியமாக நீயொருவனிருப்பதாகவும் சொல்லும் நாம் அப்பேதத்தன்மை யிரண்டு நீங்கி என்னிடத்தில் அனன்னியமாகப் பொருந்தியிருப்பது தேவரீர் எனவே என்மனத்தில் உதயமாவது எக்காலம்

அறிவையறிவாலறிந்தே யறிவுமறிவுதனில்
பிரிவுபடநில்லாமல் பிடிப்பதினியெக்காலம்.

பொ-ரை ஆன்ம அறிவை திருவருளை முன்னிட்ட அறிவினா ல் தெரிந்து அங்ஙனமறிந்த அறிவினில் வேறுபட்டு நில்லாமல் அத் திருவருள்மயமாக சம்மதிப்பது எக்காலம் 192

நீடும்புவனமெல்லாம் நிறைந்துசிந்தூரமதாய்
ஆடுந்திருக்கூத்தை யறிவதினியெக்காலம்.

பொ-ரை பெரியபுவனமனைத்தும் வியாபித்து அப்புவனமுழு வதும் பஸ்மமாகும்படி (சர்வசங்காரகாலத்தில்) நடனம் செய்யும் அழகிய கூற்றின் உண்மையினைத் தெரிந்துகொள்வது எக்காலம்.

தித்தியென்றகூத்துத் திருச்சிலம்பினோசைகளும்
பத்தியுடனேகேட்டுப் பணிவதினியெக்காலம்.

பொ-ரை. தித்தியென்றதான வொத்துடன் நடக்கும் திருக்கூ டத்தில் திருவடியிலுண்டாகிற (அழகிய) வேசச்சிலம்பின் சப்தங் களையும் பக்தியுடனே அடியேன் கேட்டுத் (தில்லைச்) சிற்றம்பலத்தி லே வணங்குவது எக்காலம் எ-று. 194

நயனத்திடைவெளிபோய் நண்ணும்பரவெளியில்
சயனித்திருந்து தலைப்படுவதெக்காலம்.

பொ-ரை. இரண்டு நேத்திரங்கட்கும் மத்தியிலுள்ள கோதண் டத் தானத்தில் தியானங்கூடியிருந்து அங்குத் தோன்றும் சிதா காயவெளியில் திருவருட் சுழுத்தியில் கூடியுன்னுடனே வாழ்தல் எக்காலம் எ-று.

அருவிபலநடுவே யாயிரக்கால்மண்டபத்தில்
திருவிளையாடற்கண்டு தெரிசிப்பதெக்காலம்.

பொ-ரை. அமிர்த தாரையாகிய அருவியோடிவருகின்ற சந் திரமண்டல மேருவினிடையிலுள்ள அநேகமாயிரமான நரம்புகளா கிய கால்களாலே தாங்கப்பெற்ற பிரமாந்திரமண்டபத்தில் தெய்வத் திரு விளையாட்டினைத் தரிசிப்பது எக்காலம்எ-று- 196

மீனைமிகவுண்டுநக்கி விக்கிநின்றகொக்கதுபோல்
தேனைமிகவுண்டுநக்கி தெகிட்டிநிற்பதெக்காலம்.

பொ - ரை. மீன்களை அதிகமாக பிடித்துண்டு விக்கிக்கொண்டு நின்ற கொக்கினைப்போல சிதானந்தத்தேனைத் திருப்தியாகவுண்டு ஆனந்தித்துக்கொண்டு இருப்பது எக்காலம் எ-று 197

பொல்லாதகாயமதை போட்டுவிடுக்குமுன்னே
கல்லாவின்பால்கறக்கக் கற்பதினியெக்காலம்.

பொ-ரை. தீவினையாலாகிய உடலினைப் பூமியிலே கிடத்திவிடு முன்னேயே (அவ்வுடலின் கண்ணேயுள்ள) கற்றபசுவாகிய (ஆன்மா வினின்றும் ஞானப்) பாலினைக் கறந்தடைவதற்கு (வேண்டிய சாத னங்களை) தெரிந்து கொள்ளுதலினி யெக்காலம் எ-று. 198

வெட்டவெளிக்குள்ளே விளங்குஞ்சதாசிவத்தைக்
கிட்டவரத்தேடிக் கிருபைசெய்வதெக்காலம்.

பொ - ரை. சிதாகாயவெளியிலே பிரகாசித்துக் கொண்டிருக் கும் (அருவுருவமாகிய) சதாசிவமூர்த்தியினைச் சமீபத்தில் தரிசனம் செய்யும்படி வாவிசாரித்து அதனால் கருணையடைவது எக்காலம்எ-று

பேரறிவிலேமனதை பேராமலேயிருத்தி
ஓரறிவிலென்னாளு மூன்றிநிற்பதெக்காலம்.

பொ - ரை. பெரிய திருவருள் மயமான வறிவினிடத்தேமனதி னை அசையாதபடி நிறுத்தி ஒப்பற்ற அந்த அறிவின்கண்ணே எந்நா ளு நிலையுற்றுத் தங்குவது எக்காலம் எ-று. 200

அத்துவிதம்போலுமென்ற ஞக்ஞமத்தினுள்ளிருந்து
முத்திதாநின்ற முறையறிவதெக்காலம்.

பொ - ரை. ஒன்று இரண்டென்னப் பிரித்தறிதற்கு வாராததாகிய அத்துவிதத் தன்மைபோல என்றனுடைய ஆன்மாவின்கண்ணே கலந்திருந்து மோட்சத்தை யான் அடையபரிபக்குவ காலத்தினை நோக்கிக் கொண்டிருக்கிற தன்மையினை அறிந்துகொள்வது எக்காலம்.

நானின்றபாசமதி ஞனிருந் தமாளாமல்
நீநின்றகோலமதில் நிறைவிநிற்பதெக்காலம்.

பொ-ரை நானழுந்திக்கிடக்கிற மலத்திலேயே நான் தங்கியிருந்து அழியாமல் தேவரீர் வியாபகமாகவுள்ள திருவருள் மயத்தில் கலந்து இருப்பதெக்காலம் எ-று. 202

எள்ளுங்கரும்பு மெழுமலரும்காயமும்போல்
உள்ளும்புறம்பு நின்ற துற்றறிவதெக்காலம்.

பொ - ரை. எள்ளில் எண்ணெயைபோலவும், கரும்பில் இரசம்போலவும், புட்பிக்கின்ற புட்பத்தில் வாசனைபோலவும், உடலில் உயிரைப்போலவும் எனது அகத்தும்புறத்தும் கலந்த தன்மையினைச் சூழ்ந்து தெரிந்துகொள்ளுத லெக்காலம் எ-று. 203

அன்னம்புனலை வகுத்தமிர்தைபுண்டதுபோல்
என்னைவகுத்துன்னை யினிக்காண்பதெக்காலம்.

பொ-ரை. அன்னபட்சியானது நீரினின்றும் பாலினைப்பிரித்து உண்ணுமாறுபோல் (நானே நீயென்னும் அஞ்ஞானத்தினின்று) நீங்கி அடியேனை (ஆண்டானாகிய) உனக்குவேறாக (அடிமையெனக்) கண்டபதி ஞானத்தால் தேவரீரை தரிசிப்பதெக்காலம் எ-று. 204

அந்தரத்தினீர்பூத் துமலர்ந்தெழுந்ததாமரைபோல்
சிந்தைவைத்துக்கண்டு தெரிசிப்பதெக்காலம்.

பொ - ரை. ஆகாய கங்கையிலிருந்து பூத்து மலர்ந்த தாமரைப் புட்பத்தினைப்போல திருவருட்ப்ரகாசத்தில் மனம்நாட்டி, இருதய தாமரை மலரக்கண்டு தரிசிப்ப தெக்காலம் எ-று. 205

பிறப்புமிறப்புமற்றுப் பேச்சுமற்றுமூச்சுமற்று
மறப்புநினைப்புமற்று மாண்டிருப்பதெக்காலம்.

பொ - ரை. பிறப்பதற்கும் இறப்பதற்கும் மேதுவாயுள்ள சுக துக்கங்களை யொழித்து, மவுனமோடிருந்து பிராணவாயு தயங்க வொட்டாமல் தடுத்துக்கொண்டு, சகல கேவலங்கடந்து தற்போதங் கெட்டிருப்பது எக்காலம் எ-று. 206

மன்னும்பரவொளியை மனவெளியிலடைத்தறிவை
என்னுமொருநினைவை யெழுப்பிநிற்பதெக்காலம்.

பொ - ரை. நிலைபெற்ற சிதாகாய வெளியினை மனவிருதயாகாயத்திலடக்கி அறிவினைப் (பிரபஞ்சமுகமாகப் பலவழியிலும் விடாது திருவருளையே சிந்திக்கும்) ஒரு நினைவிலேயே நாட்டி நிற்பது எக்காலம் எ-று. 207

ஆசைகொண்டமாத ரடைகனவுநீக்கியுன்மேல்
ஓசைகொண்டுநானு மொடுங்குவதுமெக்காலம்.

பொ - ரை. மோகத்தினை வாய்ந்த மாதர்களைக் காண்கின்ற கனவாதினை வரவொட்டாமல் நீக்கித் தேவரீரின்மீது தியானம் வைத்து அடியேனும் ஒடுங்கியிருப்பது யெக்காலம் எ-று. 208

தன்னுயிரைகொண்டு தானிருந்தவாறதுபோல்
உன்னுயிரைக்கொண்டிங் கொடுங்குவதுமெக்காலம்.

பொ-ரை. தனது ஆத்ம சுதந்தரத்தினால் தான் உலகத்திற் சஞ்சரித்து வாழுதல்போல், தேவரீர் திருவருளினை யாதாரவாகக் கொண்டு இவ்வுலகில் சீவன் முக்தனாகத் திரிந்து வருதல் எக்காலம் என்றவாறு. 209

சேற்றிற்கிளைநாட்டுந் திடமாமுடலையினிக்
காற்றினுழல்சூத்திரமாய்க் காண்பதினியெக்காலம்.

பொ-ரை. சேற்றினிடத்தே யொருவிருட்சத்தின் கிளையினை நடுதலினால் பலங் கொண்டிராததுபோல, தேகத்தினை யினிமேல் பிராணவாயுவாகிய காற்றிலே சஞ்சரிக்கின்ற காற்றாடியென வண்மையறிவது எக்காலம் எ-று. 210

என்வசமுங்கெட்டிங் கிருந்தவசமும்மழிந்து
தன்வசமுங்கெட்டருளைச் சார்ந்திருப்பதெக்காலம்.

பொ-ரை. உடலின் சுதந்தரமுநீங்கி, உலகின் சுதந்தரமுநீங்கி ஆன்மாவின் சுதந்தரமுநீங்கித் திருவருளின் சுதந்தரத்தில் வாழ்ந்திருப்ப தெக்காலம் எ-று. 211

தன்னைமறந்து தலத்துநிலைமறந்து
கன்மமறந்து கதிபெறுவதெக்காலம்.

பொ-ரை. உடற்செய்கைகளை யிழந்து, பிரபஞ்ச காரியங்களை யிழந்து, கன்மத்தால் விளையும் போகங்களையிழந்து மோட்சமடைவது எக்காலம் எ-று. 212

என்னையென்னிலே மறைந்தே யிருந்தபதியும்மறந்து
தன்னையுந்தானேமறந்து தனித்திருப்பதெக்காலம்.

பொ - ரை. உடலினை யென்னிடத்தே மறந்து, இதுகாறும் வாழ்ந்துவந்த பூமியையுமறந்து, ஆன்மாவாகிய தன்னையும் தானே மறந்து தனித்துவாழ்வது மெக்காலம் எ-று. 213

தன்னையுந்தானேமறந்து தலைவாசற்றாழ்போட்டே
உன்னைநினைந்துள்ளே யுறங்குவதுமெக்காலம்.

பொ - ரை. ஆன்மாவாகிய தன்னையும் ஆன்மா காரணமாகவே மறந்து, பிரபஞ்சவாசனை நுழைதற் கேதுவாகவுள்ள மனவாசனையடைத்துத் தேவரீரை தியானித்துக்கொண்டு சிவயோக நித்திரையிலிருப்பது எக்காலம் எ-று. 214

இணைப்பிரிந்தபோதலறி யின்பமுறுமன்றிலைப்போல்
துணைபிரிந்தபோதருணூல் தொடர்ந்துகொள்வதெக்காலம்.

பொ - ரை. உற்றதுணையாகவிருந்த ஆண்பட்சியாகிலும் பெண் பட்சியாகிலும் ஒன்றைவிட்டு ஒன்று நீங்கியபோது கூச்சலிட்டுப் பழையபடி விருப்பத்தினை நாடும் அன்றிற் பட்சிகளைபோல தனக்கு உற்ற உதவியாகவிருந்த ஆசிரியரைப் பிரிய நேரிட்டபோது வேறு சிந்தனையன்றி ஞான சாத்திரங்களாகிய (மெய்கண்ட) நூல்களை ஆராய்ச்சியாக வைத்துக்கொள்வது மெக்காலம் எ-று. 215

ஆட்டமொன்றுமில்லாம லசைவுசற்றுங்காணமல்
தேட்டமற்றவான்பொருளைத் தேடுவதுமெக்காலம்.

பொ - ரை. சலனமென்பது சிறிதுமில்லாமல், சோர்வென்பது சிறிதுந்தோன்றமல், கவலையற்ற உயர்ந்த திருவருளினை யாராய்வதுமெக்காலம் எ-று. 216

முன்னைவினையாலறிவு முற்றுமற்பின் மறைந்தால்
அன்னைதனைத்தேடி அமுதுண்பதெக்காலம்.

பொ - ரை. பூர்வ சென்மாந்திர வினையின்படி அறிவு அழுந்தாமல் ஒருக்கால் திரோதான சத்தியால் மறைந்தாலும் திருவருட்சத்தியினைநாடி ஞானமிர்தம் உண்பது எக்காலம் எ-று. 217

கள்ளுண்டவர்போற் களிதருமானந்தமதாற்
றள்ளுண்டுநின்றாடித் தடைபடுவதெக்காலம்.

பொ - ரை. கள்ளினைக் குடித்தவர்போலச் சந்தோஷத்தினை விளைவிக்கும் சிவானந்தந் தன்னால் அசைதல்பெற்று ஆனந்தக்கூத்தாடிப் பிரபஞ்சம் தோன்றாதபடி திருவருள்புரிதல் எக்காலம் எ-று

தானென்றவாணவமுந் தத்துவமுங்கெட்டொழிந்தே
ஏனென்றபேச்சமிலா திலங்குவதெக்காலம்.

பொ - ரை. தான் என்று செருக்காகிய ஆணவமலமும், தத்துவங்களின் காரியப்பாடும் நீங்க ஏன் என்கிற சொல்லுமில்லாதபடி மவுனமுற்றிருப்பதும் எக்காலம் எ-று. 219

நானவனுய்க்காண்பதெல்லா ஞானவிழியாலறிந்து
தானவனுய்நின்று சரணடைவதெக்காலம்.

பொ - ரை. (ஆன்மாவாகிய) நான் முதல்வனுடைய (பிரேரகத்தாலேயே) எல்லாவற்றையும் காணுவனென்னும் உண்மையினையெல்லாம், ஞான நேத்திரத்தாற் றெறிந்து தான் (சிவோகம்பாவனையில்) முதல்வனாகவேயிருந்து திருவடியினை யடைவது எக்காலம் என்றவாறு. 220

தானந்தமில்லாத தற்பரத்தினூடுருவி
ஆனந்தங்கண்டே யமர்ந்திருப்பதெக்காலம்.

பொ - ரை. ஆன்மாவாகிய தான் முடிவில்லாத சிவபெருமானின் (திருவருளில்) இளைத்து சிவானந்த மனுபவித்தே பொருந்தியிருப்பது எக்காலம் எ-று. 221

உற்றவெளிதனிலே உற்றுப்பார்த்தந்தரத்தே
மற்றமறமாய்கை மாள்வதினியெக்காலம்.

பொ - ரை. பொருந்திய சிதாகாயவெளியிலே ஞானநோக்காற் பார்த்து அவ்வெளியிலே (அம்மயமாயிருந்து) வேற்று மாய்கையானது நீங்குவது எக்காலம் எ-று. 222

ஏடலர்ந்தபங்கயமு மிருகருணைநேத்திரமுந்
தோடணிந்தகுண்டலமுந் தோன்றுவதுமெக்காலம்.

பொ - ரை. பிறவிதழ் அவிழப்பெற்ற தாமரையினைப் போன்ற திருமுகமும், கருணைவழியாநின்ற இரண்டு கருணைநேத்திரங்களும், வளையந்தரித்த குண்டலங்களுடன்கூடிய (செவிகளும்) தேவரீர் எனக்குமுன்னே தரிசனம் கொடுத்தருளுவதும் எக்காலம் எ-று.

ஐயாறுமாறு மகன்றுவெறுவெளியில்
மையிருளில்நின்றமன மாள்வதினியெக்காலம்.

பொ - ரை. முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து சிதாகாயத்தில் (கலந்து) ஆணவ மயக்கத்திலிருக்க மனமொடுங்குவதினி யெக்காலம் எ-று. 224

காட்டுமருண்ஞானக் கடலிலன்புகப்பல்விட்டு
மூட்டுங்கருணைக்கடலின் மூழ்குவதுமெக்காலம்.

பொ - ரை. (ஆசாரியமூர்த்தி) காட்டும் திருவருளாகிய ஞான சமுத்திரத்தில் அன்பாகிய கப்பலினை நடத்திவைக்கும் அக்கருணை சமுத்திரத்தி னுள்ளிருப்பது எக்காலம் எ-று. 225

நாஞரோநீயாரோ நன்ருய்பரமான
தாஞரோவென்றுணர்ந்து தவமுடிப்பதெக்காலம்.

பொ - ரை. நான் என்னும் தன்மைச்சுட்டினுக்கும், நீயென்னு முன்னிலைச் சுட்டிற்கும், நல்ல ஞானபரவெளியா விருக்கிற தான் என்னும் படர்க்கைச் சுட்டிற்கும் இடையில் எவரோவென ஆராய்ந்து தவத்தினை முடிப்பது எக்காலம் எ-று. 226

எவரெவர்களெப்படிகண் டெந்தப்படிநினைத்தார்
அவரவர்க்கப்படிநின்ரு னென்பதெக்காலம்.

பொ - ரை. ஆன்மாக்கள் தங்கள் கன்மத்திற்குத் தக்கபடி எவ்வெவர்கள் முதல்வனை எந்தவிதமாகத் தரிசித்து எவ்விதமாக எண்ணினரோ, அவ்வவர்கட்கு அந்தவிதமாக காட்சி கொடுத்தருளுவன் என்னு முண்மையறிவது மெக்காலம் எ-று. 227

உற்றுற்றுப்பார்க்க வொளிதருமானந்தமதை
நெற்றிக்குநேர்கண்டு நிலைப்பதினியெக்காலம்.

பொ - ரை. இலக்காக மனத்தைவைத்து நோக்க அவ்விடத்துத் தோன்றும் அருட்பெருஞ் சோதியினை இருபுருவங்கட்கு மத்தியிலுள்ள (கோதண்டதானத்தில்) நேரே தரிசித்து நிலைத்திடுவது எக்காலம் எ-று. 228

விளங்குகின்றதாரகையை வெய்யோன் மறைத்தாற்போல்
களங்கமறவுன்காட்சி கண்டறிவதெக்காலம்.

பொ - ரை. பிரகாசிக்கின்ற நட்சத்திரக் கூட்டங்களை சூரியன் மறைத்தாங்கு அடியேன் மாயாசம்பந்தமான காரியங்களெல்லா மறைய ஞானமூர்த்தியினைத் தரிசிப்பது எக்காலம் எ-று. 229

என்னையேநானறியே னிந்தவண்ணஞ்சொன்னதெல்லா
முன்னையோர்கைக்கொள்ள முன்பணிவதெக்காலம்.

பொ - ரை. ஆன்மாவாகிய தன்னையே இன்ன இலக்ஷண முடையதென வறியேன் என்று சொன்ன யாவும் சிவஞானிகள் சம்மதப்படும்படி தெரிந்துகொண்டு பெருமான் சந்நிதானத்திலே பணிவது எக்காலம் எ-று. 29

ஐஞ்சுகரத்தானையடியிணையைப் போற்றிசெய்து
நெஞ்சிற்பொருந்தி நிலைபெறுவதெக்காலம்.

பொ - ரை. ஐந்து திருக்கரங்களுடன் கூடிய விநாயகக் கடவுளின் இரண்டு திருவடிகளைத் தோத்திரஞ்செய்து அவர் திருவுருவத்தினை மனதிற்பதித்து திருவருள் நிலயடைவது எக்காலம் எ-று

மெஞ்ஞானப் புலம்பல் இடையூரின்றி முடிதற்பொருட்டும் முடிந்ததின் பொருட்டும் முதலிலும் கடையிலும் மூத்த பிள்ளையார் வணக்கம் கூறினாரயினர்.

---

இம்மெய்ஞ்ஞானப் புலம்பலுக்கு, அறுபான் மும்மை நாயன்மார்களி லொருவராகிய வாயிலார் நாயனார் பரம்பரையில் வந்தவரும் சுத்தாத்துவித சித்தாந்த வைதிக சைவபிரவர்த்தகாசாரியரும், மதுரைத் தமிழ்ச்சங்கத்து மகா வித்துவான்களிலொருவருய, சென்னை மெய்கண்ட சந்தானசபை அக்ராசனாதிபதியுமாகிய சித்தாந்தசரபம்

அஷ்டாவதானம் பூவை-கலியாணசுந்தரர் இயற்றியது.

ஞானர்த்த தீபவுரை.

முற்றியது.

ஓம்.